# இராமேசுவரம் கோயில்

முனைவர் கு. சேதுராமன்





முனைவர் கு. சேதுராமன்

இராமேசுவரம் கோயில் என்னும் இந்நூல் மூர்த்தி, தலம், தீர்த்தம் என்ற சிறப்பினை இத்தலம் எவ்வகையில் பெற்று விளங்குகிறது என்பதை விரிவாகக் கூறுகிறது. இந்து சமயப் பிரபஞ்சத்தில் தென்முதுகோடியாய் இத்தலம் பெறுகின்ற சிறப்பு விளக்கப்பட்டுள்ளது. காலந்தோறும் இக்கோயிலுக்கு மன்னரும் பிறரும் அளித்துவந்த கொடைகளும், கட்டட வளர்ச்சியில் அவர்கள் செய்த பணிகளும் முதன்மைச் சான்றுகள் கொண்டு நிறுவப்பட்டுள்ளன. கட்டடக்கலையும், சிற்பக்கலையும் மிக விரிவாகவும், விளக்கமாகவும் ஆராய்ந்தறியப்பட்டிருக்கின்றன. இவற்றில் இதுவரை வெளிவராத, இவ்வாசிரியரின் புதிய கண்டுபிடிப்புகள் இடம் பெற்றுள்ளன. இங்கு நடைபெறும் பூசைகள், திருவிழாக்கள் மற்றும் நிர்வாக முறை பற்றிய புதிய செய்திகளை இந்நூல் தாங்கியுள்ளது.

முனைவர் கு. சேதுராமன் மதுரை காமராசர் பல்கலைக்கழக கலை வரலாற்றுத்துறையில் பேராசிரியராகப் பணியாற்றி வருகின்றார். கடந்த இருபத்தி மூன்று ஆண்டுகால ஆசிரியப் பணி மற்றும் ஆய்வுப் பணியின் விளைவாக நாற்பதுக்கும் மேற்பட்ட ஆய்வுக் கட்டுரைகளை பல ஆய்வு இதழ்களில் வெளியிட்டுள்ளார். ஆய்வுக் கருத்தரங்குகளில் பல கட்டுரைகளைச் சமர்ப்பித்துள்ளார். கலை வரலாறு, சமுதாயம் மற்றும் பண்பாட்டியலில் அதிக ஆர்வம் கொண்டுள்ள இவரது பிற படைப்புகள்

- Facets of Indian Art and Culture
- Ramesvaram Temple - History, Art and Architechture
- Museology
- Virudhunagar District - An Archaeological Source Book (as co-author)
- History of China and Japan
- தமிழ்நாட்டு சமுதாயப் பண்பாட்டுக் கலை வரலாறு



J. J. Publications
Madurai (Estd. 1981)

# இராமேசுவரம்
# கோயில்

Rameswaram Koil.

முனைவர் கு. சேதுராமன் M.A.,M.Phil.,Dip.Arch.,Ph.D.,
பேராசிரியர்
கலை வரலாறு, முருகியல் மற்றும் நுண்கலைத்துறை
மதுரை காமராசர் பல்கலைக்கழகம்,
மதுரை – 21.



J. J. Publications
(Estd. 1981)
29, Karpaga Vinayagar Complex,
K. Pudur, Madurai - 7.

இராமேசுவரம் கோயில்
முனைவர் கு.சேதுராமன்



முதல் பதிப்பு : 2001




இந்நூல் திருமலை திருப்பதி தேவஸ்தானத்தின் சமயநூல் வெளியீட்டு நிதிஉதவித்திட்டத்தின் கீழ் வெளியிடப்பட்ட



திருமலை திருப்பதி தேவஸ்தானத்திற்கு நன்றி




Printer : *S.P.M. Offset Printers,* Madurai – 4

அன்று முதல் இன்றுவரை
இராமேசுவரம் கோயில்வளர்ச்சிக்காகப்
பாடுபட்ட அனைவருக்கும் இந்நூல்
சமர்ப்பணம்

# நூன்முகம்

*இராமேசுவரம் கோயில்* என்னும் இந்நூல் எனது பத்தாண்டுகால ஆய்வின் வெளிப்பாடு. இந்தியத்துணைக் கண்டத்தில், எத்தகைய சிறப்பிடத்தினை இராமேசுவரமும் அதன் திருக்கோயிலும் தீர்த்தங்களும் பெற்றுள்ளன என்பதை இது விளக்குகிறது. இந்தியாவின் தென்கோடியில் அமைந்துள்ள இராமேசுவரம், கட்டடக்கலை வளர்ச்சியிலும், சிற்பக்கலை சிறப்பிலும், பூசை மற்றும் திருவிழாக் கொண்டாட்டத்திலும் தனக்கென ஒரு தனியிடத்தைப் பெற்றுள்ள புனிதத்தலம் என்பதனை எடுத்துக்கூறுகிறது.

இந்நூலின் முன்னுரைப்பகுதி இராமேசுவரத்தின் புவியியலமைப்பு, அங்குவாழும் மக்களின் நிலை, இவ்வாய்வுக்குத் துணைபுரிந்த சான்றுகள் பற்றிக் கூறுகிறது. முதல் இயல் இந்துசமயப் பிரபஞ்சத்தில் இராமேசுவரம் பெற்றிருக்கும் சிறப்பிடத்தினை இயம்புகிறது. மேலும் இத்திருத்தலம் நீத்தார்கடன்செய்வோர்க்கு எவ்வாறு ஏற்றதாய் உள்ளது என்பதை விரிவாக ஆய்வு செய்கிறது. இரண்டாவது இயல் இராமேசுவரம், இராமநாதசுவாமி கோயிலின் வரலாற்றுப் பின்னணியையும், காலந்தோறும் மன்னரும் மற்றவரும் அளித்த கொடைகள் பற்றியும் விவரிக்கிறது. கோயில் வளாகத்தில் உள்ள சன்னதிகள், மண்டபங்கள், தீர்த்தங்கள் ஆகியவற்றின் அமைவிடங்கள் பற்றி மூன்றாவது இயல் விளக்குகிறது. நான்காவது மற்றும் ஐந்தாவது இயல்கள் முறையே இராமேசுவரம் கோயிலின் கட்டடக்கலை, சிற்பக்கலை குறித்தவையாகும். இவை ஒப்புநோக்கில் ஆராயப்பட்டுள்ளன. காலவாரியாக இல்லாமல் கலைச்சிறப்பின் அடிப்படையில் வரிசைப்படுத்திக் கூறப்பட்டுள்ளன. ஆறாவது இயலில் பூசைகள், திருவிழாக்கள் பற்றி ஜேம்ஸ் பார்கஸின் தொகுப்பினடிப்படையில் எழுதப்பட்டிருக்கிறது. ஏழாவது இயல் இக்கோயில் நிர்வாகம், இது தொடர்பான சிக்கல்கள் மற்றும் வழக்குகள் பற்றியது. இங்கு கலைவரலாற்றுடன் நிர்வாக

வரலாறும் இணைக்கப்படுவதற்குக் காரணம், நிர்வாகம் பற்றிய சுவையான செய்திகளைத் தரவேண்டும் என்பதும், இந்நூல் ஒரே ஒரு கோயில் ஆய்வு என்பதால் அதன் முழுமையான வரலாறு எழுதப்பட வேண்டும் என்பதும் ஆகும். இறுதியாக உள்ள எட்டாவது இயலில் இராமேசுவரம் கோயில் தீர்த்தங்களில் நீராடுவதால் கிடைக்கப்பெறும் நற்பேறுகள், பயன்கள் பற்றிய கருத்துக்கள் புராணங்களின் வழியாகத் தொகுத்து ஆய்வுசெய்து அளிக்கப்பட்டுள்ளன.

இந்நூலுக்கானத் தரவுகளைச் சேகரிக்குங்காலத்தில் எனக்குப் பேருதவியும், ஆலோசனையும் நல்கிய எனது பேராசிரியர்கள் முனைவர் **ஆர். வெங்கட்ராமன்**, முனைவர் **கு.இராஜய்யன்**, முனைவர் **டி.ஆர்.இராஜேசுவரி** ஆகியோருக்கு நான் பெரிதும் கடமைப்பட்டுள்ளேன். அவ்வப்போது உடனிருந்து ஆலோசனை நல்கிய எனது நண்பர்கள் முனைவர் **வெ.வேதாசலம்**, முனைவர் **இராசகாளிதாசு**, முனைவர் **சாலமன் பெர்னாட்சா** ஆகியோருக்கு என் நன்றியைப் புலப்படுத்துகிறேன். இந்நூலில் சொல்லப்பட்டுள்ள கருத்துக்களுக்குத் துணைபுரிந்த **நூலாசிரியர்கள், பதிப்பகத்தார், கோயில் நிர்வாகிகள், குருக்கள்** முதலிய அனைவருக்கும் நான் நன்றியுடையேன் ஆவேன். என்னை எப்போதும், எழுதத் தூண்டிக்கொண்டேயிருக்கும் எனது மாணவ நண்பர்கள் **திரு.சு.கண்ணன்**, அருட்தந்தை, முனைவர் **எப். ஆரோக்கியசாமி**, முனைவர் **லோ.மணிவண்ணன்** மற்றும் இந்நூல் அச்சுப்பிரதிகளைத் திருத்திக்கொடுத்த பேராசிரியை **அ.கலாவதி** அவர்களுக்கும் என் நன்றி உரித்தாகுக. இந்நூல் வெளிவருவதற்குக் காரணமாக இருந்த பேராசிரியர் **எஸ். ஜானகிராமன்** (கணிதத்துறை, தமிழ்நாடு பாலிடெக்னிக்) அவர்களுக்கும் இதனை நல்லமுறையில் வெளியிட்ட மதுரை **ஜே.ஜே. பதிப்பகத்தாருக்கும்**. சிறப்பாக அச்சிட்ட **குரு சிஸ்டம்ஸ்** நிறுவனத்திற்கும் எனது மனமார்ந்த நன்றியைத் தெரிவித்துக்கொள்கிறேன்.

**கு. சேதுராமன்.**

# பொருளடக்கம்

# முன்னுரை

## முச்சிறப்பு

இராமேசுவரம் நீண்ட காலமாகப் புனிதப் பயணிகளையும் சுற்றுலாப் பயணிகளையும் கவர்ந்து வந்துள்ளது. புனிதப் பயணம் என்பது ஒரு புனிதத் தலத்தினை நோக்கி ஒரு முக்கிய நோக்கும் நிறைவேற வேண்டிச் செல்வதாகும். எந்த ஓர் இடமும் அல்லது கோயிலும் தீர்த்தத்தலமாயிருப்பின் அது புனிதத் தலமாய் கருதப்படுகிறது. இவ்வகையில் இராமேசுவரம் மூர்த்தி, தலம், தீர்த்தம் என்னும் மூன்று சிறப்புகளைக் கொண்டுள்ளது. இன்றும் இது பாரதத்தின் முக்கிய புனிதத்தலங்களில் ஒன்றாகத் திகழ்கின்றது என்பதில் எள்ளளவும் ஐயமில்லை.

*"மூர்த்தி, தலம், தீர்த்தம் முறையாய்த் தொடங்கினார்க்கோர்*
*வார்த்தை சொல சற்குரு வாய்க்கும் பராபரமே"*

என்கின்றார் தாயுமானசுவாமிகள். அவர்தம் இன்சொல்லிற் கிணங்க முப்பெரும் நலன்களும் ஒருங்கே அமையப்பெற்ற புண்ணியமான தலமாக, தேவை நகரம் என்னும் பெயரில் இராமேசுவரம் விளங்கிவந்துள்ளது.

இங்கு மூர்த்தியாகச் சிவபெருமானும் தலமாக சேதுஸ்தலம் என்னும் இராமேசுவரமும் தீர்த்தமாக அக்னிதீர்த்தம் என்னும் கடலும் ஒன்றை ஒன்று விஞ்சிய சிறப்புப் பெற்றனவாய் அமைந்திருப்பதாக மக்களிடம் நம்பிக்கை நிலவுகின்றது. இந்தியா முழுவதிலும் உள்ள புனிதத்தலங்கள் பலவற்றிலும் சிவபெருமானே கோயில் கொண்டுள்ளார்[1]. இவற்றில் சிவபெருமான் உறைந்து, மெய்மையை வெளிக்காட்டு பவராகவும், யோகியாகவும் இருந்து அருள்புரிகின்றார் எனப் பலர் கருதுகின்றனர்[2]. அவ்வகையில் இராமேசுவரமும் சிறந்த சிவத்தலங்களில் ஒன்றாகக் கருதப்பட்டு வரப்பெறுகின்றது.

## ஜோதிலிங்கம்

பெரும்பாலான சைவக் கோயில்களில் சிவபெருமான் இலிங்க வடிவில் காட்சியளிக்கின்றபோதும் . அவற்றில் பன்னிரண்டு இடங்களில் உள்ள இலிங்கங்கள் ஜோதிலிங்கப் பீடங்களாகக் கருதப்படுகின்றன. அறிவின் வடிவமான இறைவனை அருட்பெருஞ்சோதியாகக் காட்டுவது, மரபாகப்

பின்பற்றப்பட்டு வருகின்றது இதனைப் பத்தொன்பதாம் நூற்றாண்டில் வாழ்ந்த ஸ்ரீராமலிங்க அடிகளாரின் பாடல்களமூலம் அறியலாம். இந்தியாவில் அமைந்துள்ள ஜோதிலிங்கத் தலங்கள சோமநாதம் (குஜராத்), மல்லிகார்ஜுனம் (ஆந்திரா), திரியம்பகம் (நாசிக்குக்கு அருகில்), மகாகாளம் (மத்தியப் பிரதேசம்), ஓங்காரம் (உஜ்ஜயினி அருகில்), பீமசங்கரம் (பூனாவுக்கு அருகில்), குஸ்ரேசுவரம் (எல்லோராவுக்கு அருகில்), நாகநாதம் (நாகேசம்), வைத்தியநாதம் (பீஹார்-பாட்னா சந்திப்பு), கேதாரேசுவரம் (இமாலயம்), விஸ்வேசுவரம் (காசி) மற்றும் தென்கோடியிலுள்ள இராமேசுவரம் ஆகியனவாகும்.

## பண்பாடுகளை இணைக்கும் பாலங்கள்

இங்கு புனிதப் பயணமாக வந்த காவிய மற்றும் புராண நாயகர்கள் பற்றி பிற்கால இலக்கியங்கள் எடுத்துரைக்கின்றன. ஆனால், வரலாற்று அடிப்படையில் நோக்கும்போது இந்தியாவில் முதன்முதலில் அசோகர் காலத்தில் தான் (கி.மு. 3 - 2 நூற்றாண்டுகளில்) பௌத்த சமயத்துப் புனிதத் தலங்களுக்குப் பயணம் மேற்கொள்ளப்பட்டதை அறியமுடிகின்றது. எனவே மரபுவழிச் செய்திக்கும், வரலாற்று உண்மைக்கும் மிகுந்த வேறுபாடு உண்டு. இருப்பினும் மரபுவழிச் செய்திகள் உண்மையென நம்பப்பட்டு, இன்றும், தங்களது சமயப் பிரிவுகளுக்கிடையே காணப்படும் வேறுபாடுகளை மறந்து இத்திவுக்கு மக்கள் கூட்டம் கூட்டமாக வந்தவண்ணமிருப்பதைக் காண முடிகின்றது. இந்துக்கள் தங்கள் முன்னோர்களது சொற்களுக்குக் கட்டுப்பட்டு இன்றும் காசியையும் இராமேசுவரத்தையும் தங்களது வேறுபாடுகளைக் கடந்து பண்பாடுகளை இணைக்கும் பாலங்கள் என்றும், ஆன்மீகம் மற்றும் உணர்வுப் பூர்வமான ஒருமைப்பாட்டை உருவாக்கும் பாலங்கள் எனவும் கருதுகின்றனர்.

இராமேசுவரம் சென்ற ஒருவர் காசிக்குச் சென்றுவர வேண்டுமெனவும், காசிக்குச் சென்றவர்கள் இராமேசுவரம் செல்ல வேண்டுமெனவும் மரபுவழி நம்பிக்கை மக்களிடையே நிலவி வருகின்றது. இராமேசுவரத்தில் இராமபிரான் சிவபெருமானை வணங்கியதாகக் கருதும் மக்கள் அதற்கு அடையாளமாகக் காசியில் சப்தரிசி பூசையின்போது வில்வ இலையில் 'இராம' என்ற சொல்லை எழுதி இறைவனுக்கு அர்ப்பணித்து வருகின்றனர். இன்றும் காசியிலிருந்து

மேசுவரத்துக்குக் கங்கை நீர் எடுத்து வருவதும், மேசுவரத்திலிருந்து காசிக்குக் கோடித்தீர்த்தம் கொண்டு வதும் வழக்கமாயுள்ளது. சிவபெருமானை மகாவிஷ்ணு அவதாரமான இராமனே வணங்கிய தலம் இராமேசுவரம் கருத்தினைச் சைவ சமயத்தவர்கள் மக்கள் மனத்தில் ன்றச் செய்தமையால் சைவருக்கும், வைணவருக்கும் இது நுவான புனிதத்தலமாய் விளங்கி வருவதைக் காணலாம். ால் வடக்கையும் தெற்கையும், சைவத்தையும் எவத்தையும் இணைக்கின்ற தேசிய ஒருமைப்பாட்டுச் மாக இத்தலம் கருதப்பட்டுவருகின்றது. தொன்மையான னைக் கொண்டுள்ள இராமேசுவரம் கோயிற்கலையானது தமான கலைப் பாணிகளைக் கொண்டு விளங்கிவருகின்றது. கையில் இராமேசுவரம் இந்திய சமய மற்றும் சமுதாயப் ாட்டு மையங்களில் ஒன்றாகச் செயல்பட்டு வந்திருக் து. கிழக்கு நோக்கி அமைந்துள்ள புகழ்வாய்ந்த இராமநாத பி கோயில் ஊரின் கிழக்குப் பக்கத்தில் இருக்கிறது. இது தவிர ஈபுராணத்தில் குறிப்பிடப்பட்டுள்ள கந்தமாதனபர்வதம், த இராமேசுவரம், நம்பிநாயகியம்மன் கோயில், தங்கச்சி சீதாகுண்டம், அதற்குக் கிழக்கேயுள்ள வில்லூணிதீர்த்தம், னில் உள்ள கபிதீர்த்தம், பைரவதீர்த்தம் மற்றும் கோதண்ட கோயில் ஆகியவை இத்தீவில் உள்ள குறிப்பிடத்தக்க சமயச் ங்களாகும்.

## த்தம்

புண்மைக்காலக் கண்டுபிடிப்புகள் இப்பகுதி கி.பி. நாம் நூற்றாண்டு வரை சிறந்த பௌத்தமையமாக புள்ளதைத் தெரிவிக்கின்றன. இராமேசுவரத்துக்கு அருகில் ஙகுண்டு என்ற இடத்தில் ஒன்பதாம் நூற்றாண்டைச் ந கல்லாலான புத்தர் உருவம் ஒன்று கிடைத்துள்ளது. ப் சுமார் ஏழாம் நூற்றாண்டைச் சார்ந்த புத்தர் மற்றும் சத்துவரின் உலோகச் சிற்பங்கள் இரண்டும் தமிழ்நாடு லியல் துறையால் கண்டறியப்பட்டன. இவற்றில் தெற்கு க் கலை நுட்பத்தைக் காணமுடிகின்றது. இதேபோன்ற ப்புடைய உலோக புத்தர் சிற்பம் ஒன்று ஸ்ரீ நகர் ஸ்ரீ பிரதாப்சிங் ஙாட்சியகத்தில் உள்ளது. இது கி.பி. ஆறாம் நூற்றாண்டின் தியைச் சார்ந்ததெனவும், வடமேற்கு இந்தியாவில், குறிப்பாக ரத்தில், கிடைத்திருக்கக் கூடுமெனவும் கருதப்படுகின்றது.

## அமைவிடமும் மக்களும்

இராமேசுவரம் இன்றைய இராமநாதபுரம் மாவட்டத்தில் இராமநாதபுரத்திற்குக் கிழக்கே முப்பத்திமூன்று மைல் தொலைவில் அமைந்துள்ளது. இத்தீவு வடக்கே 9°10' இலிருந்து 9° 21' வடக்கு விரிவகலம் வரையும், 79° 12' கிழக்கிலிருந்து 79° 25' கிழக்கு நிறைகோடு வரையிலும் நீண்டுள்ளது. இதன் மொத்தப் பரப்பளவு 51.8 சதுரகிலோமீட்டர் (முப்பத்தி நான்கு சதுர மைல்கள்) ஆகும். இத்தீவின் நிலஅமைப்பு விஷ்ணுவின் கையில் இருக்கும் பாஞ்சசன்யம் என்னும் சங்கு போன்று தோன்றுவதால் சமயவாதிகள் இதன் புனிதத்தன்மையை பெரிதெனக் கருதுகின்றனர். இதனைப் பிரதான நிலப்பகுதியிலிருந்து பிரிப்பது பாம்பன் கால்வாயாகும். இது கி.பி 1480 இல் பிரிக்கப்பட்டதெனக் கருதப்படுகின்றது[5]. பதினைந்தாம் நூற்றாண்டின் இறுதியில் மதுரையின் கிருஷ்ணப்ப நாயக்கரால் இணைப்புப்பாதை ஒன்று கட்டப்பட்டது எனவும் அதன்பின் புயலில் அடித்துச் செல்லப்பட்டுவிட்டது என்ற ஒரு கருத்தும் நிலவி வருகின்றது[6]. ஆனால் மதுரை நாயக்கர்களின் ஆட்சி கி.பி. 1529 இல் தான் ஏற்பட்டது என்பது வரலாற்று உண்மையாகும்.

இராமேசுவரத்தில் பொதுவாக மிதமான சீதோஷ்ணநிலை காணப்படும். ஏப்ரல் மாதம் முதல் ஜூன் மாதம் முடிய கோடையின் வெப்பம் அதிகம். கோடையில் இங்கு குறைந்த வெப்பநிலை 46° செல்சியசாகவும் அதிக வெப்பநிலை 48° செல்சியசாகவும் இருக்கின்றது. மழைக்காலங்களில் அதிகபட்சம் 30° யாகவும் குறைந்த பட்சம் 25°யாகவும் இருக்கின்றது. ஊரின் பெரும்பாலான பகுதிகளில் புளியமரங்கள் அடர்ந்து காணப்படுகின்றன. ஒரு காலத்தில் புனிதத்தன்மை கருதி இம்மண்ணில் மண்வெட்டி வைத்து வெட்டவோ, ஏர் உழவோ மாட்டார்கள்.

இராமேசுவரத்தின் முக்கிய தொழில்களில் ஒன்று மீன்பிடித்தலாகும். ஒரு காலத்தில் இவ்வூர் முத்துக்களுக்குப் பெயர்பெற்ற இடமாயிருந்துள்ளது. கோயில் நிர்வாகத்தின் பொறுப்பில் சில படகுகள் வைத்திருந்ததாகக் கூறப்படுகிறது. சங்குத் தொழிலும் இங்கு சிறப்புப் பெற்று விளங்கி வந்துள்ளது. இங்கு சங்குச் சிப்பிகள் சேகரிக்கப்படுகின்றன.

இராமேசுவரத்தின் பிரதானப் பகுதிகளில் பெரும்பாலும் பிராமணர்கள் வசிக்கின்றனர். அவர்கள் கோயில் பணியாளர்

ளாகவும், அவர்தம் வாரிசுகளாகவும் உள்ளனர். கலை ால்லுநர்களும், வணிகர்களும் கணிசமாக வாழ்கின்றனர். டற்கரையோரப் பகுதிகளில் கிருத்தவ சமயத்தைச் சேர்ந்த னவர்கள் வசிக்கின்றனர். அரேபிய வணிகர்களின் வழியில்வந்த மசமியர்களும் இத்தீவில் வசித்து வருகின்றனர். இவர்களை யல்லாம் தவிர கோயில் வழிகாட்டிகள், பொருள் விற்பனை ாளர்கள் போன்றோரும் இங்கு வசித்து வருகின்றனர். இங்குள்ள பருபான்மையோரின் பொருளாதார வாழ்க்கை கோயிலை புடிப்படையாகக் கொண்டே அமைந்துள்ளது.

## ூய்விற்குரிய ஆதாரங்கள்

இராமேசுவரம் மற்றும் இராமநாதசுவாமி கோயில் வரலாறு ற்றும் கலை ஆகியவை பற்றி அறிவதற்கு முதன்மைச் ான்றுகளாக கல்வெட்டுகள், இலக்கியங்கள், ஆவணக்காப்பக வணங்கள் ஆகியன பெரிதும் துணைபுரிகின்றன. இவற்றிற்குத் ணையாக அமைவது களஆய்வு ஆகும். களஆய்வுத் தரவுகளை ற்ற சான்றுகளுடன் ஒப்பிட்டுப் பார்த்து தோராயமான உண்மை ரலாற்றை அறியலாம்.

## ல்வெட்டுகள், செப்பேடுகள்

கல்வெட்டுச் சான்றுகள் பெரும்பாலும் தென்னிந்தியக் ல்வெட்டுச் சாசனங்கள், புதுக்கோட்டைச் செப்பேடுகள், ருமலை திருப்பதி தேவஸ்தான கல்வெட்டுத் தொகுதிகள், ருவாங்கூர்த் தொல்லியல் தொகுதிகள், எபிகிராபியா இண்டிகா, பிகிராபியா கர்நாடிகா, இந்தியன் ஆன்டிகொரி, கல்வெட்டுகள் ற்றிய ஆண்டறிக்கைகள், சென்னை மாநில வரலாற்றுச் சிறப்பு க்க கல்வெட்டுகள், சென்னை மாநிலக் கல்வெட்டுகள் பற்றிய டக்கிடப்பியல் அட்டவணை போன்றவற்றில் வெளிவந்தவை ாகும். இராமேசுவரம் கோயில் பற்றி அக்கோயிலில் டைக்கின்ற கல்வெட்டுச் சான்றுகள் சிலவேயாகும். பல ல்வெட்டுகள் அழிந்து போயுள்ளன. ஆனால் இக்கோயில் பற்றி வெளியில் கிடைக்கும் கல்வெட்டுச் செய்திகள் மிகவும் யனுடையதாகவுள்ளன. ஏற்கனவே பதிப்பிக்கப்பட்டுள்ள ல்வெட்டுகள் மற்றும் செப்பேடுகள் தவிர இராமநாதபுரம் மஸ்தான அரண்மனையிலும் சில செப்பேடுகள் வைக்கப் ட்டிருந்தன. அவை இன்று தமிழ்நாடு அரசுத் தொல்லியல் றையின் பொறுப்பில் உள்ளன. தவிர, சில வெளியிடப்படாத சப்பேடுகள் இராமநாதபுரம் சேதுபதி மன்னர்களின் ாரிசுகளிடமும் மற்றவர்களிடமும் உள்ளன.

மேற்கூறப்பட்ட கல்வெட்டுச் சான்றுகள் வரலாறு மற்றும் அரசியல் செய்திகளைக் கூறுவதோடு இக்கோயில் கட்டுமானத் திறகும், பராமரிப்பிற்கும், பூசை மற்றும் திருவிழாக்கள் நடத்துவதற்கும் பொருள்வசதி செய்து கொடுத்த மன்னர்கள் மற்றும் தனிப்பட்டோர் ஆகியோரின் பணிகள் பற்றியும் தெரிவிக்கின்றன. கல்வெட்டுகள் பற்றிய ஆண்டறிக்கைகள் (ARE reports) சிலவற்றில் காலக்கணக்கீடு தவறாகக் குறிக்கப் பட்டுள்ளன. இதற்குக் காரணம் ஒரு குறிப்பிட்ட கோயிற் பணியை வெவ்வேறு காலத்தைச் சேர்ந்த இருவர் தாமே செய்வித்ததாக உரிமை கொண்டாடுவதாகும். எடுத்துக்காட்டாக அம்மன் சன்னதிக்கு முன்புள்ள கொடிமரத்தின் ஒரு பகுதியில் அதனை ஏற்படுத்தி உலோகக்கவசம் அமைத்ததாக விஜயநகர மன்னர்களது அமைச்சர் ஒருவர் ஒருகல்வெட்டு மூலம் தெரிவிக்கின்றார். அதே கொடிமரத்தில் மற்றொரு பக்கத்தில் சேதுபதி மன்னர்களின் அதிகாரி ஒருவர் தாமே இப்பணியை மேற்கொண்டதாக எழுதியுள்ளார். பின்னவர் முந்தைய கல்வெட்டைப் பார்க்கவில்லை எனத்தெரிகின்றது. இதுபோன்று வேறு சில உதாரணங்களும் கூறலாம். எனவே செய்திகளைச் சேகரிக்கும் போதும் அவற்றை முறைப்படுத்தும் போதும் மிகுந்த கவனம் செலுத்தப்பட்டது. ஜேம்ஸ் பர்கஸ் என்பார் Indian Antiquary தொகுதி XII இல் பத்தொன்பதாம் நூற்றாண்டின் இறுதிப் பகுதியில் இராமேசுவரம் கோயிலில் நடைபெற்றுவந்த தினசரிபூசை பற்றி எழுதியுள்ளார். இன்றளவும் அம்முறை சிறிது மாற்றங்களுடன்மட்டும் நடைபெற்றுவருவது இங்கு குறிப்பிடத்தக்கது.

## புராண, இலக்கிய ஆய்வு

இலக்கியங்களில், மரபுவகை இலக்கியங்களான தமிழ் மற்றும் வடமொழி நூற்கள் இவ்வாய்வுநூல் எழுத பெரிதும் பயன் படுத்தப்பட்டுள்ளன. ஆனால் அவற்றை வரலாற்றுச் சான்று களாக ஏற்றுக் கொள்வதற்குமுன் மிகுந்த கவனம் செலுத்தப்பட வேண்டியதுள்ளது. ஏனெனில் ஒவ்வொரு இலக்கியப் படைப்பும் ஒரு துவக்கத்தைக் கொண்டுள்ள போதும் தொடர்ந்து வந்த நூற்றாண்டு காலங்களில் அவை வெவ்வேறு புதிய செய்தி களையும் தமக்குள் (interpolation) உள்வாங்கிக் கொள்கின்றன. இத்தகைய இடைச்செருகல்கள் இந்திய இலக்கிய மரபில் புனிதத்தன்மையைப் பாழாக்குவன அல்லது தவறானவை என்று கருதப்படவில்லை. இம்மாதிரியான இடைச் செருகல்கள்

எதிர்க்கப்படவோ அல்லது மறுக்கப்படவோ வேண்டும். இதற்கு மாறாக அவை முதன்மை நூலுக்குச் சமமான மதிப்பைப் பெற்றுள்ளன. சில நேரங்களில், எந்த நூலில் அவை சேர்க்கப் பட்டனவோ, அவற்றிற்கு மதிப்பைத் தேடித்தருவனவாகவே அவை அமைந்து விடுகின்றன. இதற்கு முக்கிய உதாரணமாக வேதங்களைச் சொல்லலாம். அவற்றில் பிற்காலத்தில் கவிதைச் செருகல்கள் ஏற்பட்டிருப்பதை அறிஞர்உலகம் அறிந்த ஒன்றே. வடமொழிக் காப்பியங்களான இராமாயணமும் மகாபாரதமும் மற்றும் அவற்றிற்குப்பிந்திய புராண இலக்கியங்களும் தமிழ்இலக்கியங்களைக் காட்டிலும் அதிகமான அளவு இடைச்செருகல்களைப் பெற்றுள்ளன. தங்களால் வணங்கப்படும் இறையுருவே மற்றவற்றைக் காட்டிலும் முதன்மையானது என்று காட்ட விழைவோர்க்கு இப்படிப்பட்ட இடைச்செருகல் மிகவும் அவசியமான ஒன்றாகவே அமைந்து விடுகிறது. இவ்வகையில் எப்பொழுதெல்லாம் சைவர்கள் சிவபெருமானை உயர்வாகக் கருதி விஷ்ணுவை அவரது அடியவராக ஆக்க விரும்பினரோ அவ்வப்பொழுதெல்லாம் அதற்குத் தகுந்தாற்போல் தொன்மைக் கதைகளை எழுதி அவற்றை வடமொழிப் புராணங்களில் சேர்க்கலாயினர். இதுபோன்ற ஒருவரையொருவர் கீழ்ப்படி யாக்குகின்ற போக்கின் தொடக்கத்தினை தமிழகத்தில், கி.பி. ஏழாம் நூற்றாண்டில், சைவ நாயன்மார்களின் பாடல்களில் காணமுடிகின்றது. இதுவே பிந்திய தமிழ் இலக்கியங்களில் தாக்கம்பெற்றுள்ளது. முந்தைய வடமொழி இலக்கியங்களில் பின்னாளில் சேர்க்கப்பட்ட இடைச்செருகல், மக்கள் மனத்தில், மகாவிஷ்ணுவின் அவதாரமான ஸ்ரீஇராமனே சிவபெருமானை வணங்கி அவருக்காக இராமேசுவரத்தில் கோயில் எழுப்பினார் என்றும் எனவே அவ்வூர் இராமனது ஈசுவரம் என்ற வகையில் இராமேசுவரம் ஆனது என்றெல்லாம் ஆழமாகப் பதியும்படி செய்ய வழிவகுத்தது என்று உணர முடிகின்றது. இருப்பினும் கி.பி. ஏழாம் நூற்றாண்டிலிருந்து அண்மைக்காலத் துவக்கம்வரை வெளிவந்த தமிழிலக்கியங்களிலும், வடமொழிப் புராணங் களிலும், இலக்கியங்களிலும் காணப்படும் இராமேசுவரம் பற்றியுள்ள செய்திகளை முற்றிலும் உண்மையானவை என்று அப்பட்டமாக ஏற்றுக்கொள்ளவோ அல்லது முற்றிலும் கற்பனையும் பொய்மையும் கலந்தவை என்று ஒதுக்கிவிடவோ முடியவில்லை. அன்னப்பறவை பாலையும் தண்ணீரையும் பிரித்தெடுப்பது போன்று கையாளவேண்டிய நிலை உள்ளது.

கிடைத்திருக்கின்ற இலக்கியச் சான்றுகளை 1. மரபுவழித் தமிழ்இலக்கியங்கள் 2. காப்பியங்கள், புராணங்கள், ஆகமங்கள் மற்றும் சிற்பசாத்திரங்கள் (வடமொழியிலும் வெளிவந்தவை) எனப் பாகுபடுத்தலாம். மரபுவழித் தமிழ் இலக்கியங்களில் சங்க இலக்கியங்களில் ஒன்றான அகநானூறு[7] சேது மற்றும் இராமேசுவரத்தின் தொன்மையை அறியக்கிடைக்கும் மிகப் பழமையான சான்றாகும். தமிழ்நாட்டில் கி.பி. ஆறாம் நூற்றாண்டு முதல் பத்தாம் நூற்றாண்டு வரை பாடப்பட்ட சமயப்பாக்கள் கி.பி. பதினோராம் நூற்றாண்டில் 'பன்னிரு திருமுறை' என்ற தலைப்பில் நம்பியாண்டார் நம்பி[8] என்பவரால் தொகுக்கப் பட்டன. அவை தமிழ்ச் சைவத்தைப் பற்றிக் கூறுவதோடு இராமேசுவரம் கோயில் பற்றியும் தெரிவிக்கின்றன. ஏழாம் நூற்றாண்டில், சமகாலத்தில், வாழ்ந்த திருஞானசம்பந்தர், திருநாவுக்கரசர் மற்றும் ஒன்பதாம் நூற்றாண்டில் வாழ்ந்த சுந்தரமூர்த்தி நாயனார் ஆகிய மூன்று சைவ சமயக் குரவர்களும் இராமேசுவரம் இராமநாதசுவாமியைப் போற்றிப் பதிகங்கள் இயற்றியுள்ளதாகக் கருதுகின்றனர். ஆனால் சுந்தரமூர்த்தி நாயனார் இராமேசுவரம் கோயில்பற்றி எழுதிய பதிகங்கள் எதுவும் தற்போது கிடைத்தில. மற்ற இரண்டு சைவக் குரவர்களும் இக்கோயில் எவ்வாறு அல்லது எப்படி உருவானது என்று குறிப்பிடுகின்றனர். இம்மூன்று நாயன்மார்களும் இராமேசுவரம் சென்று வழிபட்டதாக கி.பி. பன்னிரண்டாம் நூற்றாண்டில் வாழ்ந்த சேக்கிழார் பெருமான் தனது 'பெரியபுராணம்' என்னும் திருத்தொண்டர்புராணத்தில் குறிப்பிடுகின்றார்.

பதினான்காம் நூற்றாண்டில் விஜயநகரவேந்தர் குமார கம்பணரின் மனைவியான கங்காதேவி எழுதிய 'மதுரா விஜயம்' என்ற வடமொழி நூல் தெற்கே இருந்த கோயில்களுக்கு முகமதியர் ஆட்சியால் ஏற்பட்ட இன்னல்களைக் கூறுகின்றது. பதினைந்தாம் நூற்றாண்டில் வாழ்ந்த அருணகிரிநாதர் அருளிச்செய்த 'திருப்புகழ்' இராமேசுவரம் கோயிலில் எழுந்தருளியுள்ள முருகப் பெருமானைப் புகழ்ந்துரைக்கின்றது. பதினேழாம் நூற்றாண்டில் வாழ்ந்த தாயுமானவர் சுவாமிகள் இராமேசுவரத்துக் கோயிலில் குடிகொண்டுள்ள மலைவளர்காதலி என்ற பர்வதவர்த்தினி யம்மனைப் புகழ்ந்து பாடியுள்ளார். அதே காலகட்டத்தைச் சேர்ந்த இராமப்பையன் அம்மானை என்னும் சிற்றிலக்கியம் இக்கோயிலைச் சுற்றியிருந்த அரசியல் சூழலை விவரிக்கின்றது

பலபட்டடைச் சொக்கநாதக் கவிராயர் இயற்றிய தேவையுலா (பதினெட்டாம் நூற்றாண்டு) இராமேசுவரம் கோயிலில் உறைந்திருக்கும் இறைவனைப் புகழ்ந்துரைப்பதோடு, கோயிலில் இருக்கின்ற தீர்த்தங்களின் மகிமையையும், திருவிழாக்கள் பற்றியும் விரித்துரைக்கிறது. அருணாச்சலக்கவிராயரின் (பதினெட்டாம் நூற்றாண்டு) சேது பர்வத வர்த்தினிப் பிள்ளைத் தமிழ் மற்றும் சங்கர இராமேசுவர கொன்றைவிடு தூது ஆகியவை இக்கோயில் இறைவன், இறைவி ஆகியோரின் சிறப்புக்களைத் தொகுத்துக் கூறுகின்றன. இம்மரபுவழி இலக்கியங்கள் தவிர ஏராளமான தனிப்பாடல்களும் இக்கோயில் சிறப்புக்களை எடுத்துக் கூறுகின்றன.

## புராணங்கள்

புராணங்கள்[8] அல்லது மரபுவழிக் கதைகள் இராமேசுவரக் கோயிலின் தோற்றம் பற்றியும் பல்வகை இறையுருவங்கள் பற்றியும் விவரிக்கின்றன. ஆனால் அவற்றில் இக்கோயிலில் உள்ள சிற்பங்கள் பற்றிய தனிச்சிறப்புச் செய்திகள் அருகிய அளவில் உள்ளன. சிவபுராணத்தில், இராமபிரானால் உருவாக்கப் பட்டதாக நம்பப்படுகின்ற இராமேசுவரம் பற்றிய சிறப்புப்பற்றிக் கூறுகின்ற தனிஇயல் ஒன்று அமைந்துள்ளது. இலிங்கபுராணத்தில் இராமேசுவரக் கோயிலில் உறைந்திருக்கும் இறைவனின் பெருமைகள் கூறப்பட்டுள்ளன. அக்னிபுராணம், பாகவதபுராணம், பத்மபுராணம், மார்க்கண்டேயபுராணம், மத்சயபுராணம், ஸ்காந்த புராணம், கந்தபுராணம்[9], சேதுபுராணம், மற்றும் கூர்மபுராணம் ஆகியவை சேது, இராமேசுவரம் மற்றும் தனுஷ்கோடியின் அருமை பெருமைகளைப் பற்றிப் பேசுகின்றன. இவற்றில் கந்தபுராணத்தில் சேதுமகாத்மியம் பற்றிய தனி ஒரு இயல் உள்ளது. கந்தபுராணத்தில் இராமேசுவரத்து கந்தமாதனபர்வத மலை பற்றிய செய்தி காணப்படுகிறது. நிரம்பவழகிய தேசிகரின் சேதுபுராணம் சேது மற்றும் இராமேசுவரத்தின் புனிதத் தன்மையைப் பற்றிப் பகர்வதோடு, கோயில் மற்றும் அதனைச் சுற்றியும் உள்ள புனிதத்தீர்த்தங்களைப் பற்றிய சிறப்புக்களை இயம்புகின்றது. அதிவீரராமபாண்டியனின் கூர்மபுராணத்தில் இராமேசுவரத்திற்கென தனிஇயல் ஒன்று ஒதுக்கப்பட்டுள்ளது. எனவே சில புராணங்கள் இத்தலம் மற்றும் இங்கு உறைந்துள்ள இறைவனைப் பற்றிய செய்திகளைக் கூறுகின்றன. வேறுசில புராணங்கள் இத்தலப்பெருமையையும், தீர்த்தயாத்திரைச் சிறப்பினையும் வெகுவாக விளக்குகின்றன எனலாம்.

## ஆகமங்கள்

பொதுவாக, ஆகமங்கள் கோயில் வழிபாடு, பூசைகள், மற்றும் திருவிழாக்கள் பற்றியே அதிகம் பேசுகின்றன. அவற்றில் சிற்பங்கள் செய்யும் முறைகள், அவற்றின் அளவுகள், மற்றும் கட்டடக்கலை நுணுக்கங்கள் ஆகியவை பற்றி ஏராளமான செய்திகளைக் காணலாம். மகுடாகமம், காமிகாகமம், மற்றும் காரணாகமம் ஆகியவை பூசைகள் மற்றும் திருவிழாக்கள் பற்றிய விரிவான விளக்கங்களைத் தருகின்றன. கோயில் அர்ச்சகர்களுக்கு வேண்டிய தகுதிகள் மற்றும் அவர்தம் பணிகள் பற்றியும் அவை குறிப்பிடுகின்றன. இக்கோயில் வழிபாட்டு முறைகளைப் பற்றி ஆய்ந்தறிவதற்குப் பல்வகை ஆகமங்களிலிருந்து ஆதாரங்கள் எடுத்தாளப்படுகின்றன. இவற்றில் நித்தியபூஜா லச்சன சங்கிரஹம், ஸ்ரீபரார்த்த நித்திய பூஜாவிதி போன்றவை குறிப்பிடத்தக்கவை.

## சிற்ப சாத்திரங்கள்

இவை கோயில்களின் பல்வேறு கூறுகளான விமானம், மண்டபம், கோபுரம், தூண்கள் மற்றும் இறையுருவங்கள் போன்றவற்றின் அமைப்பு மற்றும் அளவுமுறைகள் பற்றி விளக்குகின்றன. மானசாரம், மயமதம், விஸ்வகர்ம வாஸ்துசாத்திரம் போன்றவை கட்டடக்கலை நுணுக்கங்கள் பற்றி அறியக்கிடைக்கும் கருவூலங்களாகும். சரஸ்வதீய சித்திரகர்ம சாத்திரம், அகஸ்திய சகலதிகாரம், காசியப சிற்பசாத்திரம் போன்றவை சைவ இறையுருவங்களின் அமைப்புமுறை, அளவுமுறை போன்றவற்றைக் கூறுவனவாகும். வைணவ இறையுருவங்களின் அமைப்பு மற்றும் அளவுகளைப்பற்றிக் கூறும் தனிச்சிறப்புநூல் பிராமீய சித்திரகர்ம சாத்திரமாகும். கேரளத்து ஸ்ரீகுமாரனின் சிற்பரத்தினமும், மைசூர் கிருஷ்ணராஜாவின் ஸ்ரீதத்வநிதியும் இறையுருவ அமைப்பு முறைகளை அழகுற விளக்குகின்றன. இந்தச் சிற்பசாத்திரங்கள் இந்துக் கடவுளரின் இறையுருவங்களின் அமைப்பிடம் பற்றி வரலாற்று நோக்கில் அறிவதற்கு உதவுகின்றன.

## அரசு ஆவணங்கள்

தொன்மைச் சான்றுகள் மட்டுமின்றி நவீனகால அரசு ஆவணங்கள் இக்கோயில் நிர்வாகம் மற்றும் ஆட்சிமுறையில் இருந்து வந்த பிரச்சினை அல்லது சிக்கல்கள் பற்றித் தெரிந்துகொள்ள பெரிதும் உதவுகின்றன. சென்னையில் உள்ள தமிழ்நாடு அரசு ஆவணக்காப்பகத்தில் பாதுகாத்து வைக்கப்

பட்டுள்ள மதுரை மாவட்ட ஆவணங்கள் இராமேசுவரம் கோயில் நிர்வாகத் தொடர்பாக இருந்த சச்சரவுகள் பற்றிய விரிவான செய்திகளைக் கொண்டு நிர்வாகம் பற்றிய தனியொரு இயலை எழுத இந்நூலாசிரியரைத்தூண்டியது. இருபதாம் நூற்றாண்டின் துவக்க ஆண்டுகளில் அரசு பிறப்பித்த ஆணைகள், எவ்வாறு இக்கோயில் அரசால் நிர்வகிக்கப்பட எடுத்துக் கொள்ளப்பட்டது என்பதை விவரிக்கின்றன.

## பிற ஆதாரங்கள்

இவை தவிர, சமகாலச் செய்தித்தாள்களும் பெரிதும் துணைபுரிகின்றன. 1894–95 இல் ஆங்கில வாரப்பத்திரிகையாக, சனிக்கிழமை தோறும், வெளிவந்த மதுரா மெயில் (Madura Mail) மதுரை பிரம்மஞானசபை நூலகத்தில் (Theosophical Society library) பாதுகாக்கப்பட்டு வருகிறது. இப்பத்திரிகை இராமேசுவரம் கோயில் நிர்வாகப் பிரச்சனைகள் மற்றும் நீதி மன்ற நடவடிக்கைகள் பற்றிய செய்திகளைக் கூறுகிறது. இராமநாதசுவாமி தேவஸ்தான அலுவலக ஆவணங்களும் இந்நூலாய்வுக்குப் பெரிதும் பயன்பட்டன. இவற்றையெல்லாம் விட மிகவும் உறுதுணையாய் இருந்தது இந்நூலாசிரியரின் களப்பணியாகும். களப்பணியடிப்படையிலும் ஒப்புநோக்கு ஆவணச் செய்திகளின் அடிப்படையிலும் கட்டடக்கலை, சிற்பக்கலை, வழிபாட்டுமுறைகள், திருவிழாக்கள் ஆகியவை பற்றித் தெளிவான முடிவுக்கு வரமுடிந்தது.

மாவட்டக் கையேடுகள் (manuals) மற்றும் கருப்பொருள் களஞ்சியம் (Gazetteers), ஆட்தொகைக் கணக்கு அறிக்கைகள் (census reports) மற்றும் சில முக்கிய பிரமுகர்களை நேர்கண்டு உசாவுதல் போன்றவை இரண்டாம் தரச்சான்றுகளாக அமைந்தன. இவற்றிற்குத் துணை நிற்பனவாக, வெளியிடப் பட்டுள்ள ஆய்வு நூல்கள், செய்தித்தாள்கள், மற்றும் கடிதங்கள் ஆகியவை அமைந்துள்ளன. பெரும்பாலும் இராமேசுவரம் கோயில் பற்றிய குறைவான செய்திகளையே கூறுவன வாயிருப்பினும் அவை ஒப்பீட்டு நோக்கில் இக்கோயில் கலை வரலாற்றை அறியக்கிடைக்கும் தரவுகள் என்பதில் ஐயமில்லை.

இராமேசுவரம் மற்றும் இராமேசுவரம் கோயில் பற்றிய இந்நூல் கே.வி. சௌந்தரராஜன் அவர்களது நூலில் (Glimpses of Indian Culture - Architecture, Art and Religion *(1981)* கூறப்பட்டுள்ள மூன்று 'O' க்களின் - அதாவது Organ வரலாறு, கலை மற்றும் கட்டடக்கலை பற்றிய ஆய்வு, Organism வழிபாடு மற்றும் திருவிழாக்கள் பற்றிய ஆய்வு மற்றும் Organisation*(நிர்வாக அமைப்பு முறை ஆய்வு)* என்ற அடிப்படையில் எழுதப்பட்டுள்ளது.

## குறிப்புகள்

1. S.M Bharwaj, (1973), **Hindu Places of Pilgrimage in India, p.225.**
2. E.Alan Morinis, (1982), **Pilgrimage in Hindu Tradition, p.27**
3. இராமேசுவரம் கோயிலின் முதலாவது பிரகாரத்தில் விசாலாட்சி அம்மன் சன்னதிக்குப்பக்கத்தில் கோடிதீர்த்தம் அமைந்துள்ளது. தொன்மம் அல்லது புராணக் கதையின்படி, தன்னால் உருவமைக்கப்பட்ட இராமலிங்கத்திற்கு பூசை செய்யவேண்டி தனது வில்லின் ஒருமுனையால்(கோடியினால்) குத்தி ஸ்ரீஇராமனால் உருவாக்கப்பட்டது என்று இன்றும் நம்பப்பட்டு வருகிறது.
4. Susan L.Huntington, (1993), **Art of Ancient India, pl.17.5, p.356**
5. *கி.பி. 1480* இல் இராமேசுவரம், பாம்பன் கால்வாயால் பிரதான தரைப்பகுதியிலிருந்து பிரிக்கப்பட்டு தீவானது என்று கருதப்படுகிறது. (Tamilnadu District Gazetteers, Ramanathapuram District, 1972, p.456 )
6. N.Vanamamalai Pillai, (1929), **The Setu and Ramesvaram, p.32**
7. *அகநானூறு, பாடல் 70. சேது* என்பது தொன்மையான வடமொழிச் சொல்லாகும். இதன் பொருள் நீரோட்டத்தின் குறுக்கே அமைக்கப் பெறுகின்ற பாலம் என்பதாகும். இதுவே காலவெள்ளத்தில் ஸ்ரீஇராமனால் அமைக்கப்பட்டதாக நம்பப்படுகின்ற கடற்பாலத்தினைக் குறிக்கும் பெயர்ச் சொல்லாக மாறிவிட்டது.
8. *புராணங்கள் – பிரம்ம, பத்ம, விஷ்ணு, வாயு, பாகவத, நாரதிய, மார்க்கண்டேய, அக்னி, பவிஸ்ய, பிரம்மவைவர்த்த, இலிங்க, வராஹ, ஸ்கந்த, வாமன, கூர்ம, மத்சய, கருட மற்றும் பிரமாண்ட புராணங்கள்* என பதினெட்டுப் படைப்புகளாகும். பல அறிஞர்கள் இவ்வெண்ணிக்கையில் சிவபுராணத்தையும் சேர்ப்பர். சில அறிஞர்கள் வாயு புராணத்தையே சிவனுக்குரியதாகக் கொள்வர். வாயு புராணத்தில் புராணங்களின் எண்ணிக்கை பத்தெனக் குறிப்பிடப்பட்டுள்ளது.(J.L.Shastri,(1973),ed., **The Linga Purana**, pp.xvi-xvii)
9. கந்தபுராணத்தின் காலம் அறிஞர்கள்மத்தியில் சர்ச்சைக்குரிய ஒன்றாயுள்ளது. எம். சீனிவாச ஐயங்கார் **(Tamil Studies, p.214)** *கி.பி. 950-1200* என்றும், கெ.சுப்பிரமணியபிள்ளை **(History of Tamil Literature,** Part III,p.*335*) *கி.பி. 11 அல்லது 12* ஆம் நூற்றாண்டு என்றும், எம். அருணாச்சலம் **(History of Tamil Literature,** p.88) *கி.பி. 1400* க்கு சற்று முந்தியது எனவும், எஸ். வையாபுரிப்பிள்ளை **(Epic Age in the History of Tamil Literature,** p.36) *கி.பி. 1500 முதல் 1850* எனவும், தெ.பொ.மீனாட்சிசுந்தரம் **(AHistoryofTamilLiterature,**p.120) பதினேழாம் நூற்றாண்டு எனவும் கந்தபுராணத்திற்குக் காலக்கணக்கீடு செய்துள்ளனர்.



இராமேசுவரம் தீவு

# 1. இந்துசமயப் பிரபஞ்சத்தில் இராமேசுவரம்

மனிதன் ஒரு சமயம்சார்ந்த உயிரினமாவான். எல்லாவற்றிலும் அவன் புனிதத்தைக் காண விழைகின்றான். ஆனால் அவற்றில் சிலவற்றை அதிகப் புனிதம் வாய்ந்தவை எனவும் அவன் நம்புகின்றான். கி.பி. 1917 இல் ருடாப் ஆட்டோ என்பவர் எழுதிய நூலில் (DasHeilige)கடவுள் மற்றும் மதம் பற்றிய கருத்துக்களை ஆராயாது மனிதனின் சமய அனுபவங்களின் தன்மையை அலசி ஆராய்கின்றார். இறையியல் வல்லுநராகவும், சமயவரலாற்றாளராகவும், உளவியல் அறிஞராகவும் விளங்கிய அவர் சிக்மன்ட்பிராய்டு மற்றும் யுங் ஆகிய அறிஞர்களின் கருத்துக்களால் பெரிதும் கவரப்பட்டிருந்தார். இதனால் மனித இனத்தின் சமய அனுபவங்களில் குறிப்பிடத்தக்க இயல்புகள் மற்றும் பொருளடக்கம் ஆகியவற்றினை உறுதிப்படுத்துவதில் அவர் வெற்றிகாண முடிந்தது. மனிதனின் கற்பனைத்திறன் மற்றும் பகுத்தறிவு ஆகியவற்றிற்கு அப்பாற்பட்ட ஒன்றுண்டு அதுவே மறைபொருளாகும் (mystery) என்று அவர்கண்டார். நமது மொழிகளும் இதனடிப்படையிலேயே மனித அனுபவங்களைப் பற்றி விளக்குகின்றன. மனிதனின் இயற்கையான அனுபவங் களுக்கு அப்பாற்பட்ட எதனையும் மனிதனால் வெளிப்படுத்த இயலாது[1]. இதுவே மறைபொருளாகும். இதைத்தான் புனிதத்துவம் (sacred) என்றும் தெய்வநிந்தனை (profane) க்கு மாறுபட்டது என்றும் கருதுகின்றனர்.

தொன்மையான சமுதாயத்தைச் சார்ந்த மனிதர்கள் சமயச் சார்புடையவராக இருந்துள்ளனர். அவர்கள் ஒவ்வொரு இயற்கைப் பொருளிலும் ஏதோ ஒரு முக்கியத்துவம் உண்டு என்று நம்பினர். முடிந்தவரை புனிதத்தன்மை வாய்ந்த இடத்திலோ அல்லது இறைவனைப் பிரதிஷ்டை செய்த இடத்திலோ (உதாரணமாக கோயில்) வாழவே ஆசைப்பட்டனர். இதற்குக் காரணம், புனிதத்தன்மை என்பது ஏதோ ஒரு சக்தியைத்தரும் இயல்பானது என அவர்கள் எண்ணினர். இன்றைய அறிவியல் சார்ந்த அறிவுசார் மனிதனோ புனிதத்தன்மை என்பதில் நம்பிக்கை கொள்ளாது பிரபஞ்சம் இயற்கையானது என்று கருதத்தலைப்பட்டான். அவனுக்கு உணவு, காமம், பணிசெய்தல் போன்றவையனைத்தும் உடற்கூறு அடிப்படையிலேற்படும் இயல்பான செயல்களாகும். ஆனால், நாம் முன்னர்

கண்டதுபோல், சமயச்சார்புடைய தொன்மைச்சமுதாய மனிதனுக்கோ அவையனைத்தும் புனிதமானவை, புனிதச்சடங்கு மற்றும் இறைவனோடு தொடர்புடையதாகும்.

எனவே வரலாற்றுப் போக்கில் நோக்கும்போது மனிதன் புனிதத்தன்மை (sacred) அல்லது புனிதமற்றதன்மை (profane) ஆகிய இரண்டு சூழலின் ஊடே வாழ்ந்து கொண்டிருப்பதை உணரலாம். அதாவது ஒருசாரார் எல்லாவற்றிலும் புனிதம் காண்பதிலும் மற்றொருசாரார் அனைத்திலும் அறிவியல் உண்மைகளை அறிவதிலும் ஈடுபட்டுக் கொண்டிருப்பதைக் காணலாம். சமயச்சார்புடைய ஒருவருக்கு இவ்வுலகத்தின் அல்லது பிரபஞ்சத்தின் வெளியானது (space) ஒரேசீரானது அல்ல, மாறாகத் தரத்தினடிப்படையில் ஒன்றைவிட மற்றொன்று மாறுபட்டதாகும். சமயச் சார்புடையோருக்கு சில பகுதிகள் புனிதமானவை, வேறுசில பகுதிகள் சாதாரணமானவை. இந்த ஒருசீரற்றதன்மை இன்றைய நவீன மனித சமுதாயத்தாலும் அனுபவிக்கப்பட்டிருப்பதைக் காணலாம். எடுத்துக்காட்டாக இன்றைய மனிதனுக்குக் குறிப்பாக ஒரு கிருத்துவருக்கு, ஒரு நகரத்திலிருக்கும் திருச்சபையானது புனிதவெளியாகும் (sacred space)[2]. எனவே மனித ஆன்ம உணர்வுகளே தெய்வ நிந்தனையிலிருந்து புனிதத்தன்மையைப் பிரித்தெடுக்கின்றன[3].

தமிழில் தலபுராணங்கள் பல வெளிவந்துள்ளன. அவை தமிழ் நாட்டிற்கே உரிய பண்பாகக் கருதப்படுகின்றன. இந்தியா முழுவதற்கும் உரித்தான தொன்மக் கதைகள் பலவற்றைத் தமிழகத்திலேயே நடைபெற்ற இறைவனின் திருவிளையாடல்கள் என (localization of myths) அவை வர்ணிப்பதைக் காணலாம். புனித வெளி எனும் கருத்தை அவை வெளிப்படுத்துகின்றன.

அவற்றில் பிரபஞ்சவெளியின் புனிதத்தன்மையானது ஒரு குறியீட்டு (symbol)[4] மூலமோ அல்லது ஒரு விலங்கின் மூலமோ (குறிப்பாக பசு) எடுத்துக்காட்டு காட்டி விளக்கப்பட்டிருப்பதைக் காணலாம். ஒரு இருப்பிடத்தையோ அல்லது கோயிலையோ கட்டுவதில் புனித இடத்தினை வெளிப்படுத்துவதென்பது சமயம்சார்ந்த மனிதன் புனிதச்சூழல் தவிர்த்த பிற இடங்களில் வாழும் மனம் படைத்தவனாக இல்லையென்பதைக் காட்டு கின்றது. ஏனெனில் அம்மனிதனுக்குப் "புனிதம் என்பது வாழ்க்கை மற்றும் இனப்பெருக்கம் ஆகியவற்றின் ஒப்புயர்வற்ற மூலக்கருத்தாகும்".[5]

இந்த அடிப்படையில் தான் புனித இடத்தைக்கட்டுவது அல்லது அதன் திசையமைப்பு ஆகியவற்றின் தொழில்நுட்ப

விரிவாக்கம் ஏற்பட்டிருக்க வேண்டும். பெரும்பாலான தலபுராணங்களில் "புனித இடம்" என்பதை அடையாளம் காண்பது திராவிடர்களுக்கு முந்திய குலமரபுக் குழுவுடன் தொடர்புபடுத்தப்படுகிறது. அம்மரபினர் உழுதல், பயிரிடுதல் ஆகிய தொழிலைக் கொண்டவர் ஆவர். புனிதக் கட்டடங்களைக் கட்டுதல் மற்றும் அவற்றின் திசையமைப்பு ஆகியவைகள் பிராமண புரோகிதர்களோடு தொடர்புபடுத்தப்படுகின்றன. இவ்வகையில் காசியின் புனிதமரபை நோக்கும் போது, இங்கே இந்த இரண்டு வகுப்பினரும் கலந்திருப்பதை உணரலாம். இங்கு பிராமணர்கள் கோயில் சடங்குகளோடு தொடர்பு கொண்டுள்ளனர். திராவிடர்க்கு முந்திய குழுமரபினர் இறந்தோரைப் புதைக்கும் பணியில் ஈடுபடுகின்றனர். இந்த இரண்டு வெளிகளுமே அல்லது பணிகளுமே காசியின் புனிதத்தன்மையில் பங்குபெறுகின்றன.

மரபுவழிச் சமுதாயங்களின் குறிப்பிடத்தக்க பண்புகளில் ஒன்று அவர்கள் வாழ்கின்ற பகுதியான உலகம் அல்லது பிரபஞ்சமே முறைமைப்படுத்தப்பட்ட ஒன்று என்றும் அதற்கு அப்பாற்பட்ட அனைத்தும் ஆவிகளும் அசுரர்களும் வாழும் குழப்பம் மிக்கபகுதிகள் (chaotic space)[6] எனவும் கருதுவதாகும். இவ்வகையில் ஆரியவர்த்தம் என்னும் கருத்தமைவை உற்று நோக்கினர். ஆரியவர்த்தம் வேதகால ஆரியர்களின் புனிதத் தலமாகவும் அதைச் சுற்றியிருந்த அல்லது அதற்கு வெளியிலிருந்த பகுதிகள் அசுரர்கள் வாழ்ந்த இடமாகவும் கருதப்பட்டுவந்ததை உணரலாம். இந்தக் கருத்து பற்றிய விரிவாக்கத்தைப் பெரும்பாலும் இந்தியக் காப்பியங்களான இராமாயணத்திலும், மகாபாரதத்திலும் காணலாம். இக்காவியங்கள் இந்தியா முழுவதும் பிராமணியப் பண்பாட்டு விரிவாக்கத்தில் பெரும் பங்கு கொண்டுள்ளன. மேலும் இவை இந்தியாவையே ஒரு பிரபஞ்சமாக (cosmicization of India) ஆக்கும் முயற்சியினைத் தொடங்கின. இப்பணி புராண காலத்தில் (கி.பி. 5 ஆம் நூற்றாண்டு முதல் 10 ஆம் நூற்றாண்டு வரை) ஓரளவு பூரணமாகியது. வேதச் சடங்குகள் மூலமாக இந்தியா முழுவதுமே பிராமணீய புனித நிலப்பரப்பிற்குள்ளே (Brahmanical sacred geography) கொண்டு வரப்பட்டது[7] இச்சடங்குகள் தமிழகத்தில் கிருத்துவ சகாப்தத்தின் தொடக்கத்தில் பல்யாகசாலை முதுகுடுமிப் பெருவழுதி என்ற பாண்டிய மன்னனாலும், சேர அரசர்களாலும் ஆதரிக்கப் பட்டன[8]. வடமொழியில் காவேரி மகாத்மியம் (காவிரி ஆற்றின்

புனிதத்துவம் பற்றியது), தாமிரபரணி மகாத்மியம் போன்றவை வெளிவரலாயின. இந்தச் செயல்முறையானது கி.பி. ஐந்தாம் நூற்றாண்டிலிருந்து மிகவேகமாக அரசர்களால் நடைமுறைப் படுத்தப்பட்டது. சிவனுக்கும் விஷ்ணுவுக்கும் கோயில்களைக் கட்டத்தொடங்கினர். வேதகாலத்தில் சிறு தெய்வங்களாகக் கருதப்பட்ட இவ்விருவரும் பிராமணர்களால் இதிகாச, புராண காலத்தில் முன்னிலைக்குக் கொண்டு வரப்பட்டனர்[9]. இக்கோயில் பண்பாடானது "பிரபஞ்சமயமாக்குதல்" என்ற பணியை முழு நிறைவுபடுத்தியது. அதற்குத் தமிழகத்திலும் ஆன்மீக அறிவொளியாளர்களின் ஆதரவு கிடைத்தது. அதன் தொடர்ச்சியே நாயன்மார்களால் பாடப்பட்ட தேவாரமும், ஆழ்வார்களால் படைக்கப்பட்ட பிரபந்தங்களும் ஆகும்.

இவ்வாறு காசியை (வாரணாசி) பண்பாட்டுப் பிரபஞ்சத்தின் மையமாகக் கொண்டு பிராமணீயப் புனிதப்பிரபஞ்சம் என்னும் கருத்து விரிவுபடுத்தப்பட்டது. இந்துப் பண்பாட்டு விரிவாக்கத் தின் மூன்று முக்கிய மார்க்கங்களில் யோக, ஞானமார்க்கமோ அல்லது பக்திமார்க்கமோ முதன்முதலில் பயன்படுத்தப்பட வில்லை. மாறாக பண்பாட்டு விரிவாக்கம் கர்மமார்க்கமென்னும் சடங்காச்சாரத்தின் மூலமே எளிதாகச் செயல்படுத்தப்பட்டது. இருப்பினும் இதற்கு மாறுபட்ட அலை ஒன்று தெற்கிலிருந்து வடக்கே வீசத்தொடங்கியது. அவ்வலையே தமிழ் சமயக்குரவர் களால் தொடங்கப்பட்ட பக்திமார்க்கமும் ஆதிசங்கரரால் பரப்பப்பட்ட ஞானமார்க்கமுமாகும். இவ்விரண்டலைகளும் இந்தியாவின் பண்பாட்டு ஒருமைப்பாட்டைப் பலப்படுத்தின.

பிராமணர்களால் கர்மமார்க்கத்தின்மூலம் கொணரப்பட்ட பண்பாட்டு ஒருமைப்பாடு சைவம், வைணவம் மற்றும் சாக்தம் என்னும் பல்வகை சமய வழிபாட்டு மரபினரால் உடனடியாகப் பின்பற்றப்பட்டது. சைவ புனித நிலப்பரப்பு அமைப்பானது இமாலயத்தில் கேதார்நாத்தையும், கிழக்கே விசுவநாதத்தையும், மேற்கே சோமநாதத்தையும், தெற்கே இராம்நாத்தையும் (இராமேசுவரத்தையும்) முக்கியப் பண்பாட்டு எல்லைகளாகக் கொண்டது[10]. இங்கு இந்த வழிபாட்டு மரபுகள் பெரும்பாலும் ஞான அல்லது பக்தி மார்க்கத்தைவிட புதிய கர்மமார்க்கமெனும் கோயில்வழிபாடு மற்றும் புனிதப்பயணம் ஆகியவற்றிலேயே அதிக நம்பிக்கை கொண்டிருந்தன.

மேலே கண்ட கருத்தின்படி இந்தியாவின் தென்கோடியில் பண்பாட்டு மையமாக இராமேசுவரம் எழுச்சிபெற்றதை உணர

முடியும். இம்மையம் இறந்த ஆன்மாக்களுக்குச் செய்யப்படும் சிராத்தம் (நீத்தார்கடன்), சைவக்கோயில் வழிபாடு மற்றும் இவ்விரண்டோடும் ஸ்ரீஇராமனைத் தொடர்பு படுத்துவது ஆகிய பல்வகைப்பண்பாட்டுக் கூறுகளையும் ஒருங்கிணைத்துக் கொண்டிருப்பதைக் காணலாம். இராமேசுவரத்தின் முக்கியத்துவம் காசிக்கு அடுத்தப்படியானதே என்பது இங்கு குறிப்பிடத் தக்கதாகும்.

இந்நூலின் மையக்கருத்தான ஸ்ரீஇராமநாதசுவாமிகோயில் முக்கியத்துவத்தை எடுத்துக் கூறுவதற்கு முன், இறந்தவர்களின் ஆன்மா சாந்தியடையப் பெறுவதற்கான (வீடுபேறடைதல்) புனிதத்தலமாக எவ்வாறு இராமேசுவரம் விளங்குகிறது என்பதை இங்கு எடுத்தியம்புவது பொருத்தமான ஒன்றாகும். ஆன்மா சாந்தியடைவதின் (வீடுபேறடைவதில்) அவசியம் என்ன என்பதுபற்றி ஒவ்வொருவர் மனத்திலும் கேள்வி எழத்தான் செய்யும். அதற்கான காரணங்களை ஆராய வேண்டும்.

பௌத்தசமயமும் சமணசமயமும் இவ்வுலகவாழ்வு நீங்கிய பின் உள்ள மறுவாழ்வில் நம்பிக்கை கொண்டுள்ளன. கௌதமபுத்தர் துவக்கித்தில் பல பிறவிகளை எடுத்ததாக புத்த ஜாதகக்கதைகள் கூறுகின்றன. இந்துக்களும் இவ்வுலக வாழ்வுக்குப் பின்புள்ள வாழ்க்கை பற்றி அதீத நம்பிக்கை கொண்டுள்ளனர். அவர்கள் இதனைத் தங்களது உள்மனதில் ஆழமாகப் பதித்துள்ளனர். அவர்தம் மண்ணுலக வாழ்க்கையைப் பற்றி அறிந்துகொள்ள அவர்களது திருமணச்சடங்குகள், குறிப்பாக மணப்பெண்ணைச் சார்ந்த பழக்கவழக்கங்கள் மற்றும் நம்பிக்கைகள் ஆகியவற்றைப் பார்க்க வேண்டும். ஆனால் இவ்வுலக வாழ்வுக்கு அப்பால் உள்ள வாழ்வைப் பற்றிய இந்து சமயக் கருத்தினைப் புரிந்துகொள்ள இந்துக்களின் இறப்புச் சடங்குகளை, குறிப்பாக பிராமணர்களால் பின்பற்றப்படும் இறப்பு மற்றும் அதன் தொடர்புடைய சடங்குகளைப் பற்றி அறியவேண்டும். ஏனெனில் சடங்குகளின் மீது தணியாத ஆசைகொண்ட மற்றும் இந்தியாவின் பலபகுதிகளோடும் பண்பாட்டுத் தொடர்புகொண்ட அவர்கள் ஏராளமான பிராமணரல்லாத குலமரபினரின் சடங்காச்சாரங்களையும், கடவுள் வழிபாட்டுமுறையையும் இறப்புச் சடங்குகளையும் ஏற்றுக்கொண்டு பின்பற்றினர். அவற்றை முறைப்படுத்தி வைதீகசமயப் போர்வையிட்டனர்.

ஏராளமான பழங்குடியினர் மற்றும் வட்டாரப் பண்புகளை உள்ளடக்கிய பின்னல் போன்ற அமைப்புக் கொண்ட இந்துசமயம் இறப்புக்குப் பின்னால் வாழ்வு என்பதுபற்றி மிகவும் சிக்கலான (எளிமையற்ற) கருத்தினைக் கொண்டுள்ளது. இது வெளிநாட்டவர்களை மட்டுமின்றி உள்நாட்டவர்களையும் குழப்பமடையச் செய்கிறது. ஒரு மனிதன் இறந்தபின் உடனடியாக அவன் மறுபிறவி எடுப்பதாக சாதாரணமக்கள் நம்புகின்றனர். மேலும் ஒரு பொதுக் காரணத்திற்காக வீரதீரச்செயலில் ஈடுபட்டு இறந்துபடுகின்ற மனிதனும் அவனோடு உடன்கட்டை ஏறுகின்ற அவனது மனைவியும், அவர்களுக்காக அவர்தம் குடிமக்களால் எழுப்பப்படும், நடுகல் அல்லது சதிக்கல்லில் நிரந்தரமாக உறைகின்றனர் என்றும் அம்மக்கள் நம்புகின்றனர். இந்த நம்பிக்கைகள் மிகவும் எளிமையானவையாகும். ஆனால் கற்றவர்கள்மத்தியில் சிக்கலான கற்பனையும் நம்பிக்கையும் நிலவிவருகின்றது. அவர்களில் சில நல்ல ஆன்மாக்கள் சுவர்க்கத்திற்கும் கெட்ட ஆன்மாக்கள் நரகத்திற்கும் செல்லும்; அங்கே தற்காலிகமாகத் தங்கி பின் மறுபிறவி எடுக்கும் என்று நம்புகின்றனர். வேறுசிலர், நல்ல ஆன்மாக்கள் மோட்சம் அல்லது முக்தியை அடைந்து பின் மறுபிறவியே எடுப்பதில்லை என்று கூறுகின்றனர். அவர்களுக்கு சுவர்க்கம் என்பது ஒரு தற்காலிக வானுலகம் ஆகும். அவர்கள் அங்கு தங்குகின்ற காலம் மண்ணுலகில் அவர்கள் செய்த நன்மைகளின் தரம் மற்றும் அளவைப் பொறுத்ததாகும்.

வேதகாலத்துப் போர்க்கடவுளான இந்திரனின் தலைமையில் அமைந்துள்ள சுவர்க்கம் (வீரசுவர்க்கம்), மற்றும் ஞானத்தினால் அடையப்பெறுகின்ற வீடுபேறு ஆகியவற்றிற் கிடையே பலசுவர்க்கங்கள் அல்லது விண்ணுலகங்கள் இருப்பதாக நம்பப்படுகின்றது. இவ்வகையில் சிவபெருமானின் 'கைலாசம்', விஷ்ணுவின் 'வைகுந்தம்', ஒப்புயர்வற்ற தாய் தெய்வத்தின் 'மணித்துவீபம்' போன்றவற்றைக் குறிப்பிடலாம். இந்த விண்ணுலகங்கள் வேதகாலச் சுவர்க்கத்தோடு தொடர்பு கொண்ட அனைத்து இன்பங்களையும் கொண்டதாகும். ஆனால் அவை வேதாந்தகாலத்து மோட்சத்தைப் பின்பற்றவில்லை. இந்த மோட்சமானது பௌத்த சமண சமயத்தினால் தத்தம் கருத்துக்களுக்கேற்ப ஏற்றுக்கொள்ளப்பட்டுள்ளது. ஆன்மாவுக்கு என்ன ஏற்படுகின்றது என்பது பரிசோதிக்கக் கூடியதாக இல்லாததால் அது பற்றிய யூகங்கள் பலவாறாக வரம்புகடந்து செல்கின்றன. இறந்தவரின் பிள்ளைகள் இப்பிரச்சனையைச் சாதாரணமாக எடுத்துக் கொள்ள முடியாது. ஏனெனில்

உயிரோடு வாழ்ந்து கொண்டிருப்பவரின் நல்வாழ்வு மறைந்து போன ஆன்மாவின் நல்லநிலையோடு தொடர்புபடுத்தப் படுகிறது. ஒரு குடும்பத்தில் ஏற்படுகின்ற தோல்விகள், நோய்கள் மற்றும் இன்னல்கள் போன்றவை இறந்துபோனவரின் ஆன்மாவின் வருத்தத்தின் காரணமாகவே ஏற்படுகின்றது என்று ஆழமாக நம்பப்படுகிறது. பிரார்த்தனையின் மூலமாகவோ அல்லது புனிதப்பயணம் செய்வதன் மூலமோ அல்லது சடங்குகளின் மூலமோ அல்லது தானங்கள் செய்வதன் மூலமோ அல்லது இவையனைத்தையும் ஒருங்கே செய்வதோடு தமது மூதாதையரின் ஆன்மாவைச் சாந்தியடையச் செய்வது அல்லது வீடுபேறடையச் செய்வது மண்ணுலகில் வாழ்ந்து கொண்டிருப்போரின் கடமையாகும். இங்குதான் இராமேசுவரம் பிற சமய மையங்களைவிட தரத்தில் வேறுபட்டு முக்கியமான புனிதப்பயணத்தலமாக விளங்குகின்றது. மற்ற தலங்களுக்குச் செல்லும் புனிதப்பயணமானது அவரவருடைய வீடுபேற்றி காகச் செய்யப்படுவதாகும். ஆனால் இராமேசுவரத்திற்குச் செல்லும் புனிதப்பயணம் இறந்த ஆன்மா வீடு பேறு அடைவதற்காகச் செய்யப்படுவதாகும். ஏனெனில் இறந்தவர்கள் தங்களுக்காகப் பிரார்த்தனை செய்யவோ, சடங்குகள் செய்யவோ அல்லது புனிதப்பயணம் மேற்கொள்ளவோ முடியாது. காரணம் அவர்கள் பிரேத ஆவி நிலையில் உள்ளனர். பிரேதம் என்பது அடுத்தவுலகிற்குப் பயணமாகும் ஆவியாகும். அதாவது அங்குமிங்கும் அலைந்து கொண்டு தங்களுக்கென சரியான இடத்தைத் தேடிக்கொண்டிருக்கும். ஆகவே அவை தங்களுடைய முயற்சியின் மூலமாக அமைதியினைப் பெற முடியாது.

இந்த பிரேதம் என்னும் கருத்து பொதுவாக இந்துக்களின், குறிப்பாக பிராமணர்கள், நீத்தார்கடன் முறையைப் பெரிதும் கவர்ந்துள்ளது. நாட்டுப்புற மக்களின் நீத்தார்கடன் சடங்கு முறைகள் மிக எளிதாக இருக்கின்றன. ஆனால் பிராமணர்தம் சடங்குமுறைகள் சிக்கலான சடங்குகளைக் கொண்டுள்ளன. நாட்டுப்புற மக்களின் சடங்குகள், பெரும்பாலும், இறந்த சடலம் வீட்டிலிருந்து இடுகாடுக்குச் செல்லும் இறுதிப் பயணத்தோடு முடிகின்றன. இந்தப்பயணம் ஒரு எளிமையான ஒன்றல்ல என்று நம்பப்படுகின்றது. உள்ளூரில் இருக்கும் ஆவிகள், குறிப்பாக சடலப்பயணம் நடைபெறும் சாலையின் இருமருங்கிலும் இருக்கும் மரங்களில் வசிக்கும் ஆவிகள், இப்பயணத்திற்குத் தடையாக இருக்கின்றன. எனவே சடலம் எடுத்துச் செல்லப்படும் போது, இறந்தவரின் உறவினர்கள் அனைத்துப் பக்கங்களிலும் தானியங்களை வீசி ஆவிகளைத் திருப்திப்படுத்துகின்றனர். சில இடங்களில் பொதுமக்கள், தங்கள் வீட்டின் வாயில் வழியாகச் சடலம் கடந்தபின் வாயிலில் தண்ணீர் ஊற்றி ஆவிகளைச்

சந்தோசப்படுத்துவது வழக்கமாயுள்ளது. ஆவிகளின் தாகம் இவ்வகையில் தீர்ந்துவிடுவதால் அவை வீடுகளுக்குள் நுழையாது என்ற நம்பிக்கை உள்ளது.

பிரேதம் பற்றிய பிராமணர்களின் பயவுணர்வு பற்றி இங்கு விளக்கப்பட வேண்டியுள்ளது. ஏனெனில் அந்த உணர்வுதான் தீர்த்தம் என்பதன் முக்கியத்துவத்தையும், அதன் பொருட்டு இராமேசுவரத்தின் சிறப்பினையும் உயர்த்துகின்றது. பிராமணர் களின் நம்பிக்கையின்படி இறந்த உடனேயே மனிதனின் ஆன்மா ஸ்தூல சரீரத்தினை (உடல்) இழந்துவிடுகின்றது. இலிங்க சரீரமாக, அதாவது கைப்பெருவிரல் அளவு ஆவியாக[11] ஆனால் அஞ்ஞனத்து உணர்வுகளும் ஆசைகளும் கொண்டதாக விளங்குகின்றது. அதற்கு அபரிமிதமான பசியும் தாகமும் இருக்கின்றபோதும், அது, வாழ்ந்து கொண்டிருக்கின்ற தனது உற்றார் உறவினரின் உதவியின்றி தாமே சாப்பிடவோ, அருந்தவோ முடியாது.

எந்த ஒரு மனிதனும் மண்ணுலகில் ஒரு குறிப்பிட்ட காலம்வரைதான் வாழமுடியும். குறிப்பிட்ட காலம் வரும்போது அவன் இறந்தே ஆகவேண்டும். மனிதன் தான் விரும்பும்வரை சாகமாட்டான் என்று கூறமுடியாது. ஆனால் மகாபாரதத்தில் பீஷ்மர் தான் விரும்பும்போது சாகும் வரத்தைப் பெற்றதாகச் சொல்லப்படுகின்றது. ஆனால் இது அனைவருக்கும் பொருந்தும் கருத்து அல்ல. மனிதனின் இறப்பு இரண்டு வகைப்படும். ஒன்று குறிப்பிட்ட காலம் முடிந்ததும் இயற்கையாக இறப்பது, அல்லது விபத்திற்குள்ளாகி இறப்பது; மற்றொன்று காலம் முடிவதற்குள் தானே தன்னை மாய்த்துக்கொள்வது ஆகும். முன்னதில் பிரேதத்தின் நிலை பயங்கரமானதாக இருப்பினும், பின்னதில் ஆயிரம் மடங்கு பயங்கரம் காணப்படும். ஒருவனது காலம் முடிந்து இயற்கையான மரணம் ஏற்பட்டால் அவனது இலிங்க சரீரமானது, சில நாட்கள், அவனது வீட்டுக் கதவில் தங்கி நிற்கும். இந்தக் காலஅளவு இனத்திற்கு இனம் மாறுபடுவதாக நம்பப்படுகின்றது. இந்த சரீரம், பின்பு இறப்புக் கடவுளான இயமனின் இரண்டு பயங்கரமான தூதுவர்களால் இறந்தோர் உலகிற்கு எடுத்துச்செல்லப்படும். இதன் வழி 99000 லீக் தூரமாகும். இது கரடுமுரடாகவும், இருட்டாகவும் இருக்கும்[12]. இவ்வழியில் முட்புதர்க்காடுகளும், தீப்பொறிகளும், மங்கலான சூழலும் காணப்படும். இங்கே இரத்தமும் அசுத்தமும் கலந்த வைதரணி என்னும் ஆறும் ஓடும். இந்த பிரேதத்தின் அல்லது இலிங்க

சரீரத்தின் பயங்கரமான பயணம் எடுத்துக்கொள்ளும் காலம் ஓராண்டாகும். இவ்வோராண்டு காலமும் அந்தக் குடும்ப உறுப்பினர்கள் அனைவரும் விரதம் மேற்கொண்டும், வழிபாடு செய்தும், சடங்குகள் மூலம் ஆன்மாவின் பயணத்திற்கு உதவுவர். பிராமணர்களின் அனைத்து சம்ஸ்காரங்களும் (சடங்குகள்) இந்த நம்பிக்கையின் அடிப்படையில் எழுப்பப்பட்டவையேயாகும்.

சம்ஸ்காரங்களின் மூலம் அவர்கள் முன்கை அளவான யதன (ஈடுகட்டும்) சரீரம் (compenstory body) ஒன்றை உருவாக்கி அதன் மூலம் இலிங்க சரீரத்தை மூடி, அதனைப் பாதுகாப்பாக இயமனது உலகிற்கு உடனிருந்து எடுத்துச் செல்லும்படி மந்திரங்கள் மூலமாக விஷ்ணுவை வேண்டுவர்[13]. இந்த ஈடுகட்டும் உடலை ஏற்படுத்தவில்லையெனில் பிரேதம் பிசாசாக மாறிவிடும். இதுவே அலைந்து திரிந்துகொண்டிருக்கும் ஆவியாகும். இது இறந்தவரின் குடும்பத்திற்கு மட்டுமின்றி அந்த கிராமத்திற்கே இன்னல் விளைவிக்கும். எனவே இறந்த சடலத்தை, தூய்மை கருதி, புதைப்பதோ அல்லது எரிப்பதோ மட்டுமின்றி, ஆன்மாவின் அமைதியான பயணத்திற்கான ஏற்படுகளையும் செய்வது இறந்தவரின் பிள்ளைகளின் சமூகக் கடமையாகும். இதன்மூலம் அவர்கள் தம் குடும்பத்தை மட்டுமின்றி தமது கிராமத்தையே ஆவிகளின் இன்னல்களிலிருந்து காக்கும் உத்தரவாதமளிக்கின்றனர்.

வாழ்வின் குறிப்பிட்ட காலத்திற்குமுன் தற்கொலை மூலமோ அல்லது விபத்து மூலமோ இறப்பவர்கள் பிரேதநிலைக்கு வராமல் பிசாசாக மாறுகின்றனர்[14]. இந்த பிசாசுகளின் இன்னல்கள் பற்றி ஏராளமான நாட்டுப்புறக் கதைகள் நிலவுகின்றன. அவர்களில் கொடூரமானவை தக்கினிகள்[15], பிரம்மராட்சசர்கள்[16] மற்றும் முனிகள்[17] ஆவர். சத்திரிய இளவரசன் ஸ்ரீஇராமன், விஷ்ணுவின் அவதாரமாயிருந்தபோதும், ஆவிகளின் துன்புறுத்தலால் அவதிப் பட்டான் என நாட்டுப்புற மக்கள் நம்புகின்றனர். இதன் முடிவாகத்தான் ஸ்ரீஇராமன் பிரம்மராட்சசனான இராவணனை வதைத்தான். எனவே பிரம்மராட்சசனைக் கொன்ற பாவத்தினைத் தொலைப்பதற்காக ஸ்ரீஇராமன் இராமேசுவரத் தீவிலுள்ள தனுஸ்கோடியில் தீர்த்தமாடி, சிவலிங்க பிர்திஷ்டை செய்து வழிபட்டான் என்று மக்களிடையே வழிவழியாக நம்பப்பட்டு வருகின்றது.

இதன் பின்னணியில் ஒரு புனிதப்பயணத் தலமாக இராமேசுவரத்தின் முக்கியத்துத்தைக் காணவேண்டும். மற்ற

கோயில் தலங்களுக்குச் செல்லும் புனிதப்பயணம் பக்தி வயப்பட்டதும், இறைவனுக்கு நன்றி செலுத்துவதாகவும் அமைவதாகும். ஆனால் இராமேசுவரம் செல்லும் தீர்த்த யாத்திரையானது இறந்தவர்கள், பிரேதம் மற்றும் பிசாசு பற்றிய பயத்தினைப் போக்கிக் கொள்வதற்கானதாகும். இராமேசு வரத்தை இரண்டு சிறப்புக்களுக்கு இருப்பிடமானதெனக் கொள்ளலாம். ஒன்று இறந்தவர்களுக்கு உதவும் தீர்த்தத்தலம் மற்றொன்று சிவபிரானுக்குப் புனிதமான வழிபாட்டுத்தலம் என்று சொல்லலாம். எனினும் முந்திய கருத்தே பிந்தியதைவிட மேம்பட்டு நிற்கின்றது.

## நிபந்த இலக்கியங்களும், பிராயச்சித்தமும்

எழுத்து வடிவம் பெறுவதற்கு முன்பு, வால்மீகி இராமாயணம் ஒரு கதைப் பாடலாகவே இருந்து வந்தது. இது சூதர்கள் எனப்படுவர்களால் சாதுக்கள் மற்றும் அரசர்களின் அவைகளில் பாடப்பட்டு வந்தது. விரைவிலேயே பல்வகைச் செய்திகள் அவற்றில் சேர்க்கப்பட்டன. அந்தந்தப் பகுதி மக்களின் விருப்புக்களுக்கும் எண்ணங்களுக்கும் இயைந்தே இம்மாதிரி இடைச்செருகல்கள் ஏற்பட்டன. இதன்விளைவாகப் பல புனிதத் தலங்கள் பற்றிய அருமை பெருமைகள் இவற்றில் சேர்க்கப்பட லாயின. இம்மாதிரியான இடைச்செருகல்களுக்கு முக்கிய உதாரணமாகக் கருதத்தக்கது மகாபாரதத்தில் வனப்பருவம் என்னும் இயலில் உள்ள தீர்த்தயாத்திரைச் சருக்கம் ஆகும்.

புனிதத்தலங்களின் அருமை பெருமைகளைப் பெரிது படுத்திக் காட்டும்[18] இந்த மரபு, புராண இலக்கியங்களிலும் தர்மசாத்திர விளக்கவுரைகளிலும் கி.பி.ஐந்தாம் நூற்றாண் டிலிருந்து தொடரப்பட்டது. இவை அனைத்திலுமே, ஒரு புனித நதியிலோ அல்லது தீர்த்த தலத்திலோ மூழ்கி எழுந்தால் மனிதன் தனது பாவத்திலிருந்து விடுபடுகின்றான் என்று கூறப்பட்டுள்ளது.

பல்வேறு குற்றங்களுக்கும் பாவங்களுக்கும் பிராயச்சித்த மாகப் புனிதத் தலங்களையும் தீர்த்தங்களையும் தரிசிக்க வேண்டுமென ஏராளமான நிபந்தங்களில் (தர்மசாத்திர விளக்கவுரைகளில்) சொல்லப்பட்டிருப்பதைக் காணலாம். கி.பி.12 ஆம் நூற்றாண்டில் இசுலாமியப் படையெடுப்பின் தொடர்ச்சி யாகத் தோன்றிய நிபந்தஇலக்கியங்கள் பல வட்டாரப் பள்ளிகளைக் (regional schools) கொண்டிருந்தன. அவை வங்காளப்பள்ளி[19], மிதிலைப்பள்ளி[20], காமரூபப்பள்ளி[21], வாரணாசிப்பள்ளி[22] மற்றும் ஓரிஸ்ஸாபள்ளி[23], விஜயநகரப்

பள்ளி போன்ற பல தென்னிந்தியப் பள்ளிகளாகும். அவை இருநூறு ஆண்டுகால இசுலாமிய துன்புறுத்தல் அல்லது தாக்குதல்களுக்கு எதிரான இந்தியப் பண்பாட்டுக் கூறுகளின் தொகுதிகளாகும்.

விஜயநகரப்பள்ளி சில சிறப்புவாய்ந்த நிபந்த வல்லுநர்களை உருவாக்கியுள்ளது. அவர்களில் குறிப்பிடத்தக்கவர் மாதவாச் சாரியார் ஆவார். துறவியான இவர் இந்நகர அரசினை உருவாக்கிய மன்னர் முதலாம் ஹரிஹரரின் அமைச்சராவார். அவர் எழுதிய நூல்கள் (கி.பி.1359) பராசர மாதவியா (பராசரசம்ஹிதத்தின் விளக்கவுரை), காலநிர்ணயம் ஆகியவை யாகும். இவை இந்தியா முழுவதும் சிறப்பாகப் பேசப் படுபவையாகும். எனினும், மாதவருக்கு சுமார் தொண்ணூறு ஆண்டுகளுக்கு முன் ஹேமாத்ரி (கி.பி.1270) என்பவர் வாழ்ந்தார். அவர் தேவகிரியின் யாதவ அரசர்களின் அமைச்சராக விளங்கினார். சதுர்வர்க்கசிந்தாமணியான ஹேமாத்ரி தீர்த்தங்கள் (புனித யாத்திரைகள்) மற்றும் பிராயச்சித்தம் ஆகியவற்றிற்கு அதிக முக்கியத்துவம் கொடுத்தார். இதுவே பித்ருக்களின் விமோசனத்திற்கு கயா போன்ற புனிதப் பயணத்தலமாக ஒரு தனிச்சிறப்பிடத்தினை இராமேசுவரத்திற்கு ஈட்டித்தந்தது. இந்நூலின் அச்சிடப்பட்ட பகுதியில் பாதிமட்டும் சுமார் ஆறாயிரம் பக்கங்களைக் கொண்டது என்னும் செய்தியிலிருந்து இதன் சிறப்பை உணரமுடிகின்றது. இதில் குறிப்பிடப்பட்டுள்ள விரதம், பிராயச்சித்தம், தானம் ஆகியவை தெற்கிலும் வடக்கிலும் பிரபலமாயின. இந்த நூல் மாதவாச்சாரியாரால் அடிக்கடி மேற்கோள் காட்டப்பட்டுள்ளது.

இசுலாமியரின் செல்வாக்கு இந்துக்களைப் பெரிதும் தூண்டியதோடு தங்களது தர்மத்தைக் காக்கும் ஆர்வத்தைக் கொடுத்தது. இந்து அரசர்கள் தங்களது சமயத்து நம்பிக்கை களையும் வழக்காறுகளையும் பழக்க வழக்கங்களையும் காப்பது தங்களது புனிதக்கடமையென ஏற்றுக்கொண்டு செயல்பட்டனர். நிபந்த இலக்கியங்களின் பெருக்கத்தாலும் அரச பரம்பரையினர் தீவிர சமயவாதிகளை ஆதரித்ததாலும், பிராயச்சித்தம் (தவம்), இந்து தர்மம் மற்றும் பண்பாட்டின் முக்கிய தூண்களில் ஒன்றாகப் பரிணமித்தது.

சமய இலக்கியங்களின் அடிப்படையில்[24] பிராயச்சித்தம் செயல்படுத்தப்பட வேண்டிய காலமாவது குறிப்பிட்ட செயலைச் செய்ய தவறியதாலும் அல்லது பாவங்கள் செய்ததாலும் ஆகும். இது நான்கு வர்ணங்களுக்கும் பொருந்தும். நிபந்தங்களில் செய்யப்படவேண்டிய கடமைகள், தவிர்க்கப்பட வேண்டிய

தவறுகள், ஆகியவை வரிசைப்படுத்திக் காட்டப்பட்டுள்ளன. இது மக்கள் மத்தியில் அதிக பயபக்தியை ஏற்படுத்தின. விரைவில் இந்து சமுதாயத்தில் பிராயச்சித்தம் மிகமுக்கியமான நம்பிக்கை யாக ஆனது. சுவர்க்கம் மற்றும் நரகம் பற்றிய தொன்மக் கதைகளின் அமைப்பு, மண்ணுலகிலிருந்து நரகத்திற்குச் செல்லும் வழியில் ஆன்மா அடையும் துன்பங்கள் பற்றிய கருடபுராணத்துச் (கி.பி 12 ஆம் நூற்றாண்டு) செய்திகள் போன்றவை பிராயச்சித்தக் கருத்துக்கு முன்னுரிமையளித்தன. அத்தோடு இறந்தவர்களுக்குப் பதிலாக இருப்பவர்கள் பிராயச்சித்தத்தைத் தேடலாம் என்பதை வலியுறுத்தின. அதாவது இறந்தவர்களுக்குப் பதிலாக அவரது வாரிசுகள் தவமிருத்தலாகும். நிபந்தஇலக்கியங்களும் கருட புராணமும் எவ்வாறு ஒன்றுக்கொன்று கருத்துப் பரிமாற்றம் செய்து கொண்டன என்பது மேலும் ஆய்வுக்குரிய ஒன்றாகும். கருடபுராணத்தில் கி.பி. 18 ஆம் நூற்றாண்டு வரை பிற்காலச் செய்திகள் இடைச்செருகலாக இருக்கின்றன. ஏற்கனவே தவத்திற்கும் நரகங்களுக்குமிடையே தொடர்புள்ளது என்பது பற்றி தர்மசாத்திரங்களில் தீவிர நம்பிக்கையாகக் கூறப் பட்டுள்ளது. யஜ்ஞவல்கிய சம்ஹிதத்தின்படி[25] தவமேற் கொள்ளாத ஒருவன் நரகத்திற்கே செல்வான். நரகங்கள் இருபத்தொரு வகைப்படும் எனவும் அந்நூல் கூறுகின்றது[26]. சுவர்க்கம் மற்றும் நரகங்கள் மீது அவநம்பிக்கை கொள்வதும் பாவச்செயல் எனவும் அதற்கு பிராயச்சித்தம் அவசியம் எனவும் இந்நூல்கள் குறிப்பிடுகின்றன.

பாவம், நரகம் மற்றும் பிராயச்சித்தம் ஆகிய கருத்துக்கள் மனுதர்ம சாத்திரகாலத் (கி.பி. 3 ஆம் நூற்றாண்டு) தினைச் சேர்ந்ததாகவோ அல்லது அதற்குச் சற்று முந்தியதாகவோ இருப்பினும் தவம் பற்றிய சடங்குகள் காலத்திற்குக் காலம் மாறுபட்டவையாகும். தொன்மையான காலத்தில் வேதகாலச் சடங்குகளும், வேதபாராயணமும் (recital) தவங்கள் எனக் குறிப்பிடப்பட்டன.[27] புராணகால இலக்கியங்களில் நெருப்புக்குள் புகுந்து தற்கொலை செய்து கொள்ளுதல் அல்லது வில்வித்தையாளரின் குறியிலக்காக இருக்க ஏற்றுக்கொள்ளல் போன்றவை தவமெனச் சொல்லப்பட்டன.[28] பிற்காலத்தில் விரதமிருத்தல், கோயில்களில் நந்தா விளக்கேற்றுதல், புனிதத் தலங்களுக்குச் சென்று தரிசித்துவரல் ஆகியவையே பிராயச் சித்தமெனக் கருதப்படலாயிற்று. இவை நிபந்த இலக்கியங்களில் இடம்பெற்றுள்ளன.

## இராமேசுவரம் – தீர்த்தத்தலம்

மேலே சொல்லப்பட்ட பிராயச்சித்தப் பரிணாம வளர்ச்சியில் சில புனிதத்தலங்கள் மிகவும் பிரபலமடைந்தன. அதற்குக் காரணம் அவை பற்றிய செய்திகள் பல நூல்களிலும் இடம்பெற்றதாகும். அவற்றில் குறிப்பிடத்தக்க ஒரு புனிதத்தலமே அல்லது தீர்த்தத்தலமே இராமேசுவரம் ஆகும். இது சிவபெருமானின் கோயில் தலம் என்பதைவிட தீர்த்தத்தலம் என்ற சிறப்பைப்பெற்று விளங்குகின்றது.

பிராயச்சித்தம் என்பது இரண்டு அடிப்படைக் கூறுகளைக் கொண்டுள்ளது. அதாவது புனித நீராடுதல் மற்றும் அதனைத் தொடர்ந்து சில குறிப்பிட்ட சம்ஸ்காரங்களைச் (சடங்குகள்) செய்தல் என்பதாகும். ஸ்மிருதி இலக்கியங்களில் இவ்விரண்டுமே பிரிக்கமுடியாதவை எனக் கூறப்பட்டுள்ளன. சம்ஸ்காரங்கள் ஸ்மிருதி அடிப்படையிலான சடங்குகளாகும்.[29] அவை யாகங்கள் போன்ற வேதச் சடங்குகளுக்கு மாறுபட்டவை. யாகங்கள் கடவுள் வணக்கத்துடன் தொடர்பு கொண்டவை. சம்ஸ்காரங்களோ மனித உடல், பிறப்பு, மொட்டையடித்தல், உணவு ஊட்டல், தீட்சைபெறுதல் (initiation), திருமணம், இறப்பு போன்றவற்றுடன் தொடர்பு கொண்டதாகும். சம்ஸ்காரங்களின் எண்ணிக்கை பன்னிரண்டிலிருந்து பதினெட்டு வரை என மாறுபட்டுக் கூறப்படுகின்றது. இதன் எண்ணிக்கை பதினாறு எனில் மிக உத்தமம் என்பர். எளிமையான மறு பரிசீலனையற்ற நம்பிக்கையின் அடிப்படையில், சாதாரண மனிதனின் மனத்தில் தோன்றிய, இச்சம்ஸ்காரங்கள் இந்தியா முழுவதும் பிரபல மடையலாயின. பல மாயவித்தைகளும் தடைகளும் இந்த சம்ஸ்காரங்களோடு தொடர்புபடுத்தப்படுகின்றன. இவை தேவர்கள், பூதகணங்கள் மற்றும் பிரேதங்கள் ஆகியவற்றைக் கட்டுப்படுத்த வேண்டி உருவாக்கப்பட்டதென நம்பப்படுகிறது.

ஒரு இந்துவுக்கு அந்த்யேஸ்தி அல்லது இறப்புச் சடங்குதான் இறுதியான சம்ஸ்காரமாகும். இதன் மூலமே இறந்த ஆன்மா தனது இறுதிப் பயணத்தின் போது ஏற்படும் இன்னல்களைக் கடந்து மறு உலகத்தை வெற்றி காணமுடியும். இறந்தவரின் மகன் மறுஉலகில் தனது தந்தைக்கென ஓரிடத்தைப் பெற்றுத்தர ஏற்பாடு செய்தல் வேண்டும். இறுதிச் சடங்குகளைச் செவ்வனே செய்தல் மூலம் கடவுளரையும் திருப்திப்படுத்த வேண்டும்.

அவ்வாறு செய்யவில்லையெனில் இறந்தவரின் ஆன்மா எப்பொழுதும் துன்பப்பட்டுக் கொண்டிருக்கும் என்பது மட்டுமின்றி அவரது மகனும் பிந்திய வாரிசுகளும் துன்பத்தையே அனுபவிப்பர். இதனால் குடும்ப விருட்சம் தொடர்ந்து வளர்ச்சியடைவது தடைப்படும் என்றும் அஞ்சுகின்றனர்.

### பிராயச்சித்த-சம்ஸ்கார மையம்

மேற்கூறப்பட்ட அனைத்து நம்பிக்கைகளின் விளைவாக ஏராளமான தீர்த்தத்தலங்கள், இந்தியாவின் பலபகுதிகளிலும், சபிநித்க்கரணத்திற்குப் புனிதமாக (இறந்தோரைத் தென்புலத் தாரோடு (manes) இணைப்பது) வேண்டி உருவாயின. அப்படிப் பட்ட ஆறு தலங்களில் வடக்கே காசியும் தெற்கே இராமேசுவரமும் மிகவும் சிறப்பு வாய்ந்த பிராயச்சித்த - சம்ஸ்கார மையங்களாக உருவாயின.

பிராமணீயப் பண்பாட்டு விரிவாக்கத்தில் பல படிநிலைகளை நாம் காணலாம். தொடக்கத்தில் காசியே பிராமணீயத்தின் சிறப்புமிக்க மையமாயிருந்தது. அது வேதஇலக்கியம், வேதாந்தம் மற்றும் புராணச் சடங்குகளோடு தொடர்புபட்டிருந்தது. சடங்குகளின் எண்ணிக்கைகள் பெருகளாயின. அவற்றில் சில தேவர்களைச் சார்ந்தவை, வேறுசில பித்ருக்களைச் சார்ந்தவை. இந்நிலையில் காசி பித்ரு தொடர்பான சடங்குகளுக்கான தனியொரு மையமாயிருந்தது. அதே சமயத்தில் இவ்வழக்கிலிருந்து காசி முழுவதுமாக ஒதுங்கிவிடவில்லை. ஆரியவர்த்தம் அல்லது பிராமணீயப் பிரபஞ்சம் என்பது வட இந்தியாவை மட்டும் கொண்டதாக இருந்தவரை இந்நிலையே தொடர்ந்தது. ஆனால், மூன்றாவது படிநிலையில் தெற்கு நோக்கி பண்பாட்டு விரிவாக்கம் ஏற்பட்டபோது, அதாவது விந்தியம், கோதாவரி, மற்றும் காவேரிக்கு அப்பால், தென்கோடியிலுள்ள இராமேசுவரம் தீவு பித்ரு தொடர்பான முக்கிய புனிதப்பயணத்தலமாக உருவெடுத்தது. தெற்குத் திசையானது இயமனுடைய திசையெனக் கொள்ளப்படுகின்றது. அதனால்தான் இறந்தவரின் சடலத்தைப் புதைக்கும் பொழுதோ அல்லது எரிக்கும் பொழுதோ சடலத்தின் தலையை தெற்கு நோக்கி வைப்பது இன்றும் நம்மிடையே வழக்கமாக உள்ளது. திருக்குறளிலும் இறந்தோர் தென்புலத்தார் என்று சுட்டிக் காட்டப்பட்டுள்ளனர். அத்தோடு அவர்களின் அறவழி வாழ்தலின் அவசியமும் கூறப்பட்டிருக்கின்றது.

*தென்புலத்தார் தெய்வம் விருந்தொக்கல் தானென்றாங்கு*
*ஐம்புலத்தாறு ஓம்பல் தலை - குறள் 43*

இராமேசுவரத்தில் உள்ள தோணித்துறை வைதரணி ஆறு எனக் குறிப்பால் உணர்த்தப்படுகின்றது. இது ஒருவேளை அனைத்திந்திய மரபின் பித்ருலோகம் என உருவகப்படுத்தப் பட்டிருக்கக்கூடும்.

ஆனால் தமிழ்மரபுப்படி இது தமிழ் நிலத்திற்கும் ஈழத்திற்கும் இடையிலான ஒரு பாலமாகும். இது சிவபெருமான் உறைகின்ற புனிதத்தலங்களில் ஒன்றாகும். பிரபலமான தொன்மக்கதைகள் ஸ்ரீஇராமனை சிவவழிபாட்டோடு தொடர்புபடுத்துவதாலும், இராவணனைக் கொன்ற பாவம் தீர்க்க இத்தலத்திற்கு ஸ்ரீஇராமன் வந்து வழிபட்டதாகக் கருதுவதாலும் இத்தலம் மேலும் சிறப்பினைப் பெறுகின்றது.

இன்று வடக்கிலிருந்தும் தெற்கிலிருந்தும் ஏராளமான புனிதப்பயணிகள் இராமேசுவரம் வந்தவண்ணமுள்ளனர். அவர்கள் பெரும்பாலும் இங்குள்ள சிவன்கோயிலில் வழிபாடு செய்வதைவிடத் தங்களது மூதாதையர்களுக்கு சிராத்தம் செய்யவே வருகின்றனர். இந்த நம்பிக்கையை வலுப்படுத்து வதற்காகக் கோயிலுக்குள் ஏராளமான புனிதக்கிணறுகள் அல்லது தீர்த்தக் கிணறுகளை வெட்டியுள்ளனர். இன்று புனிதப்பயணிகள் கோயிலுக்குள் சென்று இந்தத் தீர்த்தங்களில் சடங்குகளோடு நீராடி (ritual bath) தங்களது முன்னோர்கள், தாங்கள் மற்றும் தங்களது வாரிசுகள் அமைதி பெறவேண்டிப் பிரார்த்திக்கின்றனர்.



சிராத்தம் – சடங்கு நடைபெறுகிறது
நன்றி : சுற்றுலாத்துறை

இவ்வாறு இராமேசுவரம் இந்து சமயத்தின் சிறப்புவாய்ந்த தலங்களில் ஒன்றாக ஓங்கி வளர்ந்துள்ளது. பரந்த பிரபஞ்சம் என்னும் இந்து சமய உலகில் அனைத்து நிலைகளையும் ஒருங்கே பெற்றுள்ள ஒரு சிறு (microcosm) பிரபஞ்சமாக விளங்குகின்றது.

## குறிப்புகள்

1. Mircea Eliade, (1959), **The Sacred and the Profane**, p.9
2. அப்பொழுது அவர் (கர்த்தர்) : இங்கே கிட்டிச்சேராயாக; (மோசே) உன் கால்களில் இருக்கிற பாதரட்சையைக் கழற்றிப் போடு: நீ நிற்கிற இடம் பரிசுத்த பூமி என்றார்". - யாத்திராகம் 3:5.
3. "ஒவ்வொரு புனிதவெளியும் மறைமெய்களை விளக்குவதை உணர்த்துகின்றது. புனிதத்தின் தீவரப் பிரவேசமானது சூழ்ந்துள்ள பிரபஞ்சத்திலிருந்து ஒருபகுதியைப் பிரிக்கின்றது. அதனைத் தரத்தளவில் வேறுபடுத்திக்காட்டுகின்றது. (M.Eliade, **op.cit.**, p.26)
4. பெரும்பாலும் இரத்தமே குறியாகக் காட்டப்படுகின்றது. விவசாயி நிலத்துநீரை வற்றச் செய்யும்போது இரத்தம் வெளிப்படுகின்றது. மேலும் ஆய்வு செய்யும்போது இலிங்கம் வெளிவருகின்றது. இலிங்கத்தின் புனிதத்தன்மையானது சில நேரங்களில் அதன் அருகில் நின்றுகொண்டிருக்கும் பசு சுரந்துவிடும் பாலுடன் தொடர்புபடுத்தப்படுகின்றது.
5. M.Eliade, **op.cit.**, p.28.
6. *மேலது, ப.29*
7. Vide, **Satapatha Brahmana**, VII, 1.1.1.4. இதன்படி யாகபீடம் அமைப்பது கடவுள் உலகத்தோடு தொடர்புகொள்வதற்கான உறுதி ஏற்பாடாகும். யாகபீடத்தின் வெளி மற்றும் பகுதியானது புனிதவெளி அல்லது பிரபஞ்சமாகின்றது.
8. பதிற்றுப்பத்து.
9. கி.மு. 6-7 நூற்றாண்டுகளைச் சேர்ந்த ருத்ரம், புருஷசூக்தம், நாராயண சூக்தம். பிந்தியது வேத இலக்கியத்தில் இணைக்கப்பட்டது. இவையே இவ்வகையில் ஏற்பட்ட துவக்ககால முயற்சிகளாகும்.
10. சாக்த சமயம் 52 புனிதத்தலங்களைக் கொண்டுள்ளது. அவை இந்தியா முழுவதும் சற்று அதற்கு அப்பாலும் உள்ளன. அவை சக்தி பீடங்கள் என அழைக்கப்படுகின்றன. வைணவ சமயம் வடக்கே பதரிநாத்தையும், தெற்கே திருவரங்கத்தையும், மேற்கே துவாரகையையும், கிழக்கே அயோத்தியையும் சிறந்த எல்லைகளாகக் கொண்டுள்ளது.
11. **Brahmavaivartha Purana, Prakrtikhanda**, 32.28 – 30
12. **Garuda Purana**, XI, 229 – 330.
13. மேலது, XII, 421.ff.
14. பிரேதம் என்பது அடுத்த உலகிற்குப் பயணமாகின்ற ஆவியாகும். பிசாசு என்பது தீய எண்ணங்களோடு அலைந்துதிரியும் ஆவியாகும்.
15. இது ஒரு பெண்ணின் ஆவியாகும். இப்பெண் குழந்தைப் பிறப்பின் போது பல நிறைவேறாத ஆசைகளுடன் இறந்துபட்டதாகும்.

இந்த ஆவி கற்றறிந்த பிராமணனுடையதாகும். இது கைவிடுவது மற்றும் துன்புறுத்துவது பற்றிய பலவழிகளைத் தெரிந்ததாகும்.

இது ஒரு யோகி அல்லது ஞானி அல்லது ஒரு சித்தரின் ஆவியாகும். இது பிரம்மராட்சசனைவிட வன்முறையானதாகும்.

விளக்கவுரையாளர்களில் குறிப்பிடத்தக்கவர்கள் மனுவைப் பற்றி எழுதிய காஷ்மீரத்தைச் சேர்ந்த மேதாதிதே (9 ஆம் நூற்றாண்டு), யஜ்னவல்கியர் பற்றி மிதக்ஸரத்தை (கி.பி. 1120) எழுதிய விஜ்னனேஸ்வரர் மற்றும் மனு பற்றிய எழுதிய குல்லுகபட்டர் (கி.பி. 1300) ஆகியோராவர்.

இப்பள்ளியைச் சேர்ந்த ஆன்றோர்களில் சிலர் - கோவிந்தராஜர் (பன்னிரண்டாம் நூற்றாண்டு), பவதேவபட்டர், (பன்னிரண்டாம் நூற்றாண்டு, கி.பி. 1120). இவர் யஜ்னவல்கியர் மற்றும் குல்லுகர் பற்றி எழுதியவர்), ஸ்ரீநிவாசா (சுத்த தீபிகையின் ஆசிரியர், 12 ஆம் நூற்றாண்டு),சூலபாணி (பிராயச்சித்த விவேகத்தின் ஆசிரியர், 15 ஆம் நூற்) ஆவர்.

இப்பள்ளி ஏராளமான நிபந்தங்களை உருவாக்கியது. விழாக்கள் மற்றும் பிராயச்சித்தம் பற்றி ஏழுநூல்களைப் படைத்த தத்தோபாத்தியாயர் (கி.பி. 1300) இப்பள்ளியின் தலைசிறந்த ஆசிரியர் ஆவார். இப்பள்ளி கி.பி. 15 ஆம் நூற்றாண்டில் எண்ணற்ற நிபந்தங்களை உருவாக்கியது. அக்காலத்து குறிப்பிடத்தக்க ஆசிரியர் வசஸ்பதி மிஸ்ரா ஆவார்.

பீதாம்பர சித்தாந்தவாகீசர் (கி.பி. 1600) இத்துறையில் தலைசிறந்த நிபுணராயிருந்த போதும் தாமோதர மகாமிஸ்ரா (கி.பி. 1435) எழுதிய கங்காஜலம் என்றநூல் வடக்கு வங்காளத்திலும், அஸ்ஸாமிலும் இன்னும் சிறந்த படைப்பாகக் கருதப்படுகின்றது.

கன்யகுப்ஜாவின் கஹத்வால அரசரான கோவிந்தச் சந்திரரின் (12 ஆம் நூற்றாண்டு) தலைமையமைச்சரான பட்டலெட்சுமிதரர் பல நிபந்தங்களைப்படைத்த சிறந்த ஆசிரியராவர்.

வித்யாகர வாஜபேயின் (கி.பி.1450) இப்பள்ளியின் சிறந்த நிபுணராவார்.

- **Manu, XI, 44, and Yagnavalkya, III, 219.**
- **Yagnavalkya Samhita, III, 221.**
- மேலது, III, 222224. இது Manu IV, 88 – 2 மற்றும் **Vishnu Purana, II**, 6.32 ஆகியவற்றோடு பெரிதும் ஒத்துள்ளது.
- **Manu – XI 75–77.** அவற்றில் ஒன்று அஸ்வமேதயாகமாகும்.
- உதாரணமாக, **Vishnu Purana**, XXXIV, 1-2,
- முதன் முதலில் சம்ஸ்காரங்களை விளக்குகின்ற முறைப்படுத்தப்பட்ட முயற்சி கிர்ஹயசூத்திரங்களில் (கி.மு.மூன்றாம் நூற்றாண்டு) ஏற்பட்டது. ஆனால் அவை நேரடியாக சம்ஸ்காரம் என்ற சொல்லைப் பயன்படுத்தவில்லை. **Vide. Asvalayana, Apasthumbha and Baudhayanagrihaya sutras.**

## 2. வரலாற்றுப் பின்னணி

இந்தியாவின் புகழ்பெற்ற இதிகாசமான இராமாயணத்தோடு தொடர்புடைய தலமாக இராமேசுவரம் விளங்குகிறது. இலங்கைக்கு இங்கிருந்து இராமனின் ஆணையின் பேரில் வானரசேனைகள் சேது என்ற பாலத்தினை அமைத்தன. இலங்கைக்கு இராமன் செல்வதற்கு முன்பாக சேதுக்கரையில் சிவனை வழிபட்டுச் சென்றான் என்று இராமாயணம் கூறுகிறது.[1] இடைக்காலத்தின் பிற்பகுதியைச் சார்ந்த ஆனந்தராமாயணம் விநாயகரையும் நவக்கிரகத்தினையும் இராமேசுவரத்தைச் சுற்றிப் பிரதிஷ்டை செய்ததாகத் தெரிவிக்கிறது.[2] இராமன் இலங்கைக்குச் சென்று இராவணனை வெற்றிகண்டான். பின்னர் சீதாப்பிராட்டியை மீட்டு இராமேசுவரம் வந்தான். இராமேசுவரத்தில் சிவவழிபாடு செய்து இராவணனைக் கொன்ற பாவத்தைப் போக்க எண்ணினான். இதற்காக காசியிலிருந்து சிவலிங்கம் ஒன்றினைக் கொண்டுவர தனது பக்தனான அனுமனுக்குக் கட்டளையிட்டான். அனுமன் சிவலிங்கத்தினை எடுத்துக் கொண்டு இராமேசுவரம் வருவதற்குக் காலதாமதம் ஏற்பட்டது. இதனால் இராமேசுவரத்தில் சேதுவின் தொடக்கத்தில் மணலில் இலிங்கம் செய்து சீதாப்பிராட்டியோடு சிவனை வழிபட்டான். அதன் பின்பு அனுமன் காலதாமதமாகக் கொண்டுவந்த சிவலிங்கத்தினைத் தான் இராமேசுவரத்தில் பிரதிஷ்டைசெய்த சிவலிங்கத்தின் அருகில் பிரதிஷ்டை செய்தான். தனது வில்லினால் பூமியைக் கீறி கோடிதீர்த்தம் என்ற புனிதத் தீர்த்தத்தை உண்டாக்கினான். தனது பாவம்தீர அதில் நீராடினான். இராமேசுவரத்திலுள்ள சேதுமாதவனையும் வழிபட்டான் என்று ஆனந்தராமாயணம் கூறுகிறது.[3]

இடைக்காலத்தினைச் சார்ந்த மற்றொரு நூலான அத்தியாத்ராமாயணம் சேதுவின் (பாலம்) தொடக்கத்திலுள்ள இராமேசுவரத்தில் 'இராமேசுவரர்' என்ற சிவனது வடிவத்தைப் பிரதிஷ்டை செய்து இராமன் வழிபட்டான் என்கிறது. அதன்பின்னர் கங்கையிலிருந்து புனிதநீர் கொண்டுவந்து இராமலிங்கத்தினை நீராட்டி வழிபடுகின்றவர்களின் பாவம் தீர்ந்து முக்தியும் அடைவர் என்று உலகத்தினர் அனைவருக்கும் இராமன் அறிவித்ததாகவும் அத்தியாத்மராமாயணம் கூறுகிறது[4]. சிவபுராணம் இராமன் இலங்கைக்குச் செல்வதற்கு முன்னர்

இராமேசுவரத்தில் சிவனைப் பிரதிஷ்டை செய்து வழிபட்டான். இராவணனை வெல்வதற்கு வரமும் பெற்றான் என்று கூறுகிறது[5]. இலிங்கபுராணமோ இலங்கையில் இராவணனைக் கொன்று திரும்பிவந்த பிறகு இராமேசுவரத்தில் சிவலிங்கத்தினை இராமன் பிரதிஷ்டை செய்து வழிபட்டதாகக் கூறுகிறது[6]. எவ்வாறு இருந்தபோதும், இராமன் இராமேசுவரத்தில் சிவலிங்கத்தினைப் பிரதிஷ்டை செய்து தனது பாவந்தீர வழிபட்டான் என்பதை பத்மபுராணம்[7] நாரதபுராணம்[8] அக்னிபுராணம்[9], கூர்மபுராணம்[10] கந்தபுராணம் [11] முதலிய புராணங்களின் மூலம் அறிய முடிகிறது. ஐந்தாம் நூற்றாண்டில் ஆட்சிபுரிந்த வாகாடக அரசன் இரண்டாம் பிரவரசேனன் (கி.பி. 410-440) பிராகிருத மொழியில் இயற்றிய சேதுபந்தம் என்ற இராவணவத மகாகாவியத்தில் இராமனும் அவனது படையினரும் சேது என்ற அணை கட்டியதையும், இராமன் இராவணனோடு செய்த யுத்தத்தையும் விரிவாகக் கூறியுள்ளான். ஆனால் இராமேசுவரத்தில் இராமன் சிவலிங்கத்தினைப் பிரதிஷ்டை செய்து வழிபட்டதைக் குறிப்பிடவில்லை[12].

எம்.எஸ். பூரணலிங்கம்பிள்ளை அவர்கள் இராமன் இராவணனை வெற்றிகொள்வதற்கு முன்பாகவே இராமேசுவரத்தில் பழைய சிவாலயம் இருந்தது என்றும் அதனை இராமன் வழிபட்டான் என்றும் கருதுகின்றார்.[13] ஆனால் புகழ்பெற்ற தொல்லியில் அறிஞர். எச்.டி.சங்காலியா அவர்கள் பாறைகளற்ற மணல் நிறைந்த இப்பகுதியில் ஏராளமான கற்களைக் கொண்டு நீண்டதூரமுள்ள இலங்கைக்குப் பெரிய பாலம் ஒன்று அமைத்திருக்க முடியாது என்று கூறுகின்றார்[14].

சங்கவிலக்கியமான அக்நானூற்றில் இராமேசுவரம் தீவிலுள்ள தனுஷ்கோடி இராமனோடு தொடர்புபடுத்திக் கூறப் படுகிறது. இது அகநானூற்றில் 'தொன்முதுகோடி' என்று குறிப்பிடப்படுகிறது. பாண்டியர்க்குரிய இத்தொன்முது கோடியில் உள்ள கடற்கரையில் இராமன் தங்கி ஆலோசனை செய்தபோது அங்கிருந்த ஆலமரத்தின் ஆரவார ஒலியை அடக்கினான் என்ற புதியசெய்தி ஒன்று அகநானூற்றில் குறிப்பிடப்படுகிறது[15].

*"வென்வேற் கவுரிலர் தொன்முது கோடி*
*முழங்கிரும் பௌவம் இரங்கும் முன்துறை*
*வெள்போர் இராமன் அருமறைக்கு*

*பல்வீழ் ஆலம் போல*
*ஒலி அவிந்தன்று"*

எனவே சங்ககாலத்திலிருந்து இராமனை இராமேசுவரத்துடன் தொடர்புபடுத்திக் காட்டும் தொடர்ச்சியான போக்கு காணப்படுகிறது. சைவப் புராணங்களும் இலக்கியங்களும் இச்செய்தியை திரும்பத் திரும்ப எடுத்துக் கூறுகின்றன. ஆனால் வைணவ மரபில் வந்த இலக்கியங்களில் அல்லது புராணங்களில் இச்செய்தி குறிப்பிடப்படவில்லை. ஒருவேளை சைவர்கள் தங்களது இறைவனது பேராண்மையை எடுத்துக் கூறுவதற்காகத் தங்களது இலக்கியங்களிலும் புராணங்களிலும் இச்செய்தியை பெரிதுபடுத்திக்கூறி மக்கள் மனத்தில் இம்மரபைப் பதிய வைப்பதில் வெற்றி கண்டிருக்க வேண்டும் எனத் தோன்றுகிறது.

## தென்னிந்தியாவில் இராமநாதசுவாமி கோயில்கள்

தென்னிந்தியாவில் பல இடங்களில் இராமேசுவரம் என்ற பெயரிலும் இராமநாதன் என்ற இறைவன் பெயரிலும் சிவன்கோயில்கள் எடுப்பிக்கப்பட்டுள்ளமை குறிப்பிடத்தக்கது. இராமேசுவரத்தின் செல்வாக்கு தென்னிந்தியா முழுமையும் ஆழமாகப் பதிந்திருந்தது என்பதை இது காட்டுகிறது. திருச்சி மாவட்டத்து ஸ்ரீநிவாசநல்லூரில் முதலாம் பராந்தகசோழன் காலத்துச் சிவன்கோயில் இராமநாதசுவாமி கோயில் என் றழைக்கப்பட்டிருக்கிறது[16]. வேதாரண்யம் சிவன்கோயில் வளாகத்தில் கி.பி. பத்தாம் நூற்றாண்டிற்கு முந்தையகாலத்து இராமநாதீசுவரர் கோயில் ஒன்று இருக்கிறது[17]. கும்பகோணத்திற்கு அருகில் திருவிராமேசுவரம் என்ற பெயரில் கோயில் உள்ளது. பாபநாசத்திற்கு அருகிலுள்ள அரையபுரம் என்ற ஊரில் இராமலிங்கேசுவரர் கோயிலும்[18] மன்னார்குடி வட்டத்தில் இராமநாதேசுவர் கோயிலும்[19] (மதனமஞ்சரிச் சதுர்வேதி மங்கலத்தில்) உள்ளன. செங்கல்பட்டு மாவட்டத்து இருங்குன்றப் பள்ளியிலுள்ள கல்வெட்டு அவ்வூர் மடவிளாகத்தில் இராமநாதசுவாமி கோயில் ஒன்று இருந்ததைத் தெரிவிக்கிறது[20]. சிவகங்கை மாவட்டத்துத் திருப்பத்தூருக்கு அருகில் இராமநாதீசுவரம் என்ற பெயரில் சிவன்கோயில் ஒன்று உள்ளது[21].

கேரளாவிலுள்ள கொல்லத்திலும் இராமேசுவரர் கோயில் உள்ளது. இது பொதுமக்களால் இராமேசுவரத்துக்கோயில் என்று அழைக்கப்படுகிறது. இங்கு தமிழ்மொழியில் எழுதப்பட்ட வட்டெழுத்துக் கல்வெட்டுகள் உள்ளன[22]. கி.பி. 1102 ஆம் ஆண்டைச் சார்ந்த கல்வெட்டு ஒன்று ஆரியர்களோடு கொண்ட பகைமையால் ஏற்பட்ட பாவத்தை ஒழிப்பதற்காக திருநாள் ஒன்று

ஏற்பாடு செய்ததைக் கூறுகிறது.[23] இச்செய்தி பாபத்தைப் போக்கும் இராமேசுவரத்தோடு கொண்ட தொடர்பைக் காட்டுகிறது.

ஆந்திரமாநிலத்து கடப்பா மாவட்டத்திலும் இராமனால் பிரதிஷ்டை செய்த இராமலிங்கசுவாமி கோயில் ஒன்று உள்ளது.[24] இம்மாநிலத்து பதஞ்சேரு (Patancheru) என்ற ஊரிலுள்ள (கி.பி. 13 ஆம் நூற்றாண்டைச் சார்ந்த) வடமொழிக் கல்வெட்டில் இராமநாததேவர் கோயில் ஒன்று குறிப்பிடப் படுகிறது[25]. கருநாடக மாநிலத்திலுள்ள முடனூர் சிவன்கோயில் இறைவன் அங்குள்ள கி.பி. 12-13 ஆம் நூற்றாண்டு கல்வெட்டுக்களில் இராமேசுவரர் என்றும் இராமநாதர் என்றும் குறிப்பிடப்படுகின்றார்.[26] இம்மாநிலத்திலுள்ள குண்டுக்கல்லுக்கு அருகில் அமைந்த கம்தொள்ளி கிராமத்தில் இராமேசுவரர் கோயில் உள்ளது. இக்கோயிலில் அமைந்துள்ள இலிங்கத்தினை இராமன் பிரதிஷ்டை செய்ததாக நம்புகின்றனர்.[27] இம்மாநிலத்து மட்டகேரியிலும் இராமேசுவரர் கோயில் இருக்கிறது. இக்கோயில் முதலாம் குலோத்துங்கசோழன் (கி.பி. 1070 - 1120) காலத்ததாகும்.[28]

எல்லோராவிலுள்ள சாளுக்கியர் காலத்துக் குடைவரைக் கோயில் ஒன்று இராமேசுவரர் கோயில் என்று அழைக்கப்பட்டு வரப்படுகிறது.[29] இலங்கையிலுள்ள கொழும்பு அருங்காட்சியகத்தில் பாதுகாத்து வைக்கப்பட்டிருக்கும் சோழர் கல்வெட்டு சோழர்கள் இலங்கையில் திருவிராமேசுவரம் என்ற பெயரில் சிவன்கோயில் கட்டியுள்ளதைக் கூறுகிறது.[30] ஆனால் இக்கோயில் இலங்கையில் தற்போது எங்குள்ளது எனத் தெரியவில்லை.

மேற்கண்ட செய்திகள் இராமன் பெயரில் அமைந்த சிவன்கோயில்கள் தென்னிந்தியாவில் பல இடங்களில் இருந்துள்ளதைக் காட்டுகின்றன. இதிகாசத்திலும் புராணங்களிலும் கூறுகின்றபடி இராமனால் எடுக்கப்பட்ட கோயில் இராமேசுவரத்தில் உள்ளது என்ற மரபு தோன்றியபின்னர் இராமேசுவரம், இராமநாதேசுவரம், இராமலிங்கேசுவரர் என்ற பெயரில் பல இடங்களில் கோயில்கள் எடுக்கப்பட்டிருக்க வேண்டும். போக்குவரத்து வசதி குறைவான அக்காலத்தில் இராமேசுவரம் செல்ல இயலாத மக்கள் தங்கள் ஊரிலும் இதேபெயரில் கோயில்கட்டி வழிபாடு செய்துள்ளனர். இராமனைப் போன்று தங்கள் பாவத்தைப் போக்கிக்கொள்ள முற்பட்டனர். இம்முடிவை உறுதிப்படுத்துகின்ற முறையில் சோழர் காலத்தில் செங்கல்பட்டு மாவட்டம் ஆர்ப்பாக்கத்திற்கு

அருகில், கி.பி. 12 ஆம் நூற்றாண்டில், எதிரிலி சோழ சம்புவராயனால் திருவிராமேசுவரம் என்ற பெயரில் கோயில் எடுப்பிக்கப்பட்டிருக்கிறது. இக்கோயில் இராமேசுவரத்தில் தங்கி கொள்ளையிட்ட இலங்கைப் படையினை வெற்றிகண்டதன் நினைவாக எடுக்கப்பட்டதாகும்.[31] இக்காலத்திலும் இதுபோன்று புகழ்பெற்ற கோயிலின் பெயரினால் பல இடங்களில் கோயில்கள் எடுப்பிக்கப்பட்டுள்ளன.[32] திருப்பதி வேங்கடாசலபதியின் பெயரில் தமிழ்நாட்டில் பல இடங்களில் கோயில்கள் எடுக்கப்பட்டுள்ளன.

## இராமேசுவரத்தின் தனிச்சிறப்பு

இராமேசுவரம் கோயில் போன்று மிகப் புனிதமான கோயில்கள் பல இருந்தபோதிலும் சாமர்செட் பிளைனி (Somerset Playne) என்பவர் இந்தியாவிலேயே அதிகஅளவு போற்றத்தக்க புனிதம் வாய்ந்த கோயிலாக இராமேசுவரம் கோயில் விளங்குகிறது என்று கூறியுள்ளார்.[33] சிவபுராணம் இதனை மிகவும் பெருமைவாய்ந்த தலமாக விரித்துக் கூறுகிறது. அழிவில்லாத இன்பத்தையும் முக்தியும் தரும் இராமேசுவரம் உலகிலேயே ஒப்பற்ற அற்புதம் வாய்ந்த தலம் என்று புகழ்ந்துரைக்கிறது.[34] மத்சயபுராணம் கோடித்தீர்த்தத்தின் முக்கியத்துவத்தை எடுத்துரைக்கிறது. இதில் நீராடுகின்றவர்கள் ஐயமில்லாமல் அரசப்பதவியை அடைவார்கள். இராமேசுவரத்தில் அறக்கொடை புரிந்தோர் அளவற்ற பேறு பெறுவார்கள் என்று கூறுகிறது.[35] சேதுபுராணமும் இதன் பெருமையைப் பலவாறு எடுத்துரைக்கிறது.

புராண இதிகாசத் தலைவர்களும் முனிவர்களும் தேவர்களும், தெய்வங்களும் இப்புனிதத் தலத்திற்கு வந்து வழிபட்டனர் என்று புராணங்கள் கூறுகின்றன. அகத்தியர்,[36] பரசுராமர்,[37]விஷ்ணு, பிரம்மா[38] தர்மராஜன்[39] அசுவத்தாமன் ஆகியோர் இத்தலத்தை வழிபட்டது இத்தலத்தின் பெருமையை மக்களுக்கு எடுத்துக் கூறுவதாக அமைந்துள்ளது. காஷ்மீரத்தைச் சார்ந்த புகழ்பெற்ற புலவரான பில்ஹனர் இராமேசுவரம் கோயிலுக்கு வந்து வழிபாடு செய்துள்ளார் என்பது வரலாற்றுண்மையாகும்[40].

இந்து சமய சாத்திரங்கள் கடலில் ஒருசில குறிப்பிட்ட நாட்கள் மட்டுமே நீராட வேண்டும் என்று கூறுகின்றன. கடற்கரையிலுள்ள திருவனந்தபுரம், கோகர்ணம், பூரி போன்ற

இடங்களில் குறிப்பிட்ட நாட்களிலேயே மக்கள் கடல் நீராடுகின்றனர். ஞாயிறு, திங்கள், வெள்ளி போன்ற வார நாட்களில் நீராடுவதில்லை. ஆனால் குறிப்பிட்டநாள் என்று இல்லாமல் இராமேசுவரத்தில் எல்லா நாட்களிலும் நீராடுவது ஏற்றுக் கொள்ளப்படுவது[41] இத்தலத்தின் பெருமையை உணர்த்துகிறது.

இச்செய்திகள் எல்லாம் பழங்காலத்திலிருந்தே இராமேசுவரமும் அங்குள்ள கோயிலும் ஆன்மீகத்தின் மையங்களாகக் கருதப்பட்டு வந்ததையும் இதற்கான முயற்சி காலந்தோறும் எடுக்கப்பட்டு வந்துள்ளதையும் காட்டுகிறது. இதற்கு முக்கியக் காரணமாக அமைந்தது இராமபிரான் இத்தலத்தோடு கொண்ட தொடர்பேயாகும். இங்குள்ள ஏராளமான புனிதத் தீர்த்தங்களுக்குக் கொடுக்கப்படும் முக்கியத்துவமும் இங்கு கடலில் எப்போதும் தீர்த்தமாடலாம் என்ற விதிவிலக்கும் இராமேசுவரத்தைச் சிறப்புவாய்ந்த புனித யாத்திரை மையமாக மாற்றியது என்று கூறலாம்.

## வரலாற்றில் இராமேசுவரம்

தமிழ்நாட்டில் கிடைக்கும் இலக்கியங்களில், கி.பி. ஏழாம் நூற்றாண்டைச் சார்ந்த அப்பர், ஞானசம்பந்தர் ஆகியோரின் தேவாரத்திலேயே முதன்முதலில் இராமேசுவரம் கோயில் பற்றிய குறிப்புகள் கிடைக்கின்றன. சுந்திரமூர்த்தி நாயனார் இத்தலத்தைப் பாடியதாக பெரியபுராணம் கூறினாலும் அவரது இராமேசுவரம் குறித்த தேவாரப்பாடல்கள் கிடைக்கவில்லை[42]. அப்பர் தமது பதிகத்தில் இக்கோயிலைப் 'பூங்கோயில்' என்று குறிப்பிடுகின்றார்[43]. ஞானசம்பந்தர் தமது பதிகத்தின் எல்லாப் பாடல்களிலும் 'கோயில் இராமேசுவரம்' என்று அழைக்கின்றார்[44]. சேக்கிழார் இராமேசுவரத்து இறைவனைச் சங்கரர் என்று குறிப்பிட்டு அங்குள்ள இறைவனைத் திருமால் வழிபட்டதாகத் தெரிவிக்கின்றார்.

கி.பி. பதினைந்தாம் நூற்றாண்டில் வாழ்ந்த அருணகிரிநாதர் தமது திருப்புகழில் இராமேசுவரம் கோயில் வளாகத்தில் உறையும் முருகப்பெருமானைப் புகழ்ந்து பாடியுள்ளார். முருகனைத் திருமால் மருகன் என்று குறிப்பிட்டு, திருமால் இராமேசுவரம் இறைவனை வழிபட்டதாகக் கூறுகின்றார்[45]. தாயுமானவர் இராமேசுவரத்து இறைவியாக விளங்கும் பர்வதவர்த்தினியம்மன் மீது எட்டுப் பாடல்கள் பாடியுள்ளார். இவ்வம்மனை மலைவளர்

காதலி என்று குறிப்பிட்டுகின்றார். இராமேசுவரத்திற்கு தேவை என்று பெயர் இருந்துள்ளதை இவரது பாடல் உணர்த்துகிறது. முற்காலப்பாண்டியர் காலத்தின் தொடக்கத்தில் இராமேசுவரம் கோயில் வழிபடத்தக்க கட்டடக் கோயிலாக இருந்தது என்பதை அப்பர், ஞானசம்பந்தர் பாடல்கள் தெரிவிக்கின்றன. தொடர்ந்து சைவ அடியார்கள் அண்மைக்காலம் வரை இதனைப் பாடிச் சிறப்பித்துள்ளனர். அப்பர் இதனைப் 'பூங்கோயில்' என்று குறிப்பிடுவதால் அவரால் குறிப்பிடப்படும் கோயில் அமைப்புக்களில் இதுவும் ஒன்றாக இருக்க வேண்டும். தொடர்ந்து வந்த அரச மரபினரின் ஆதரவோடு இது பெருங்கோயிலாக மாறியது.

## சோழர் காலம்

தமிழ்நாட்டில் கி.பி. ஒன்பதாம் நூற்றாண்டிற்கும் பதிமூன்றாம் நூற்றாண்டிற்கும் இடையில் ஆட்சிபுரிந்த சோழப் பேரரசர்கள் இராமேசுவரம் கோயில் வளர்ச்சிக்குத் துணைபுரிந்திருக்கின்றார்கள். முதலாம் பராந்தகசோழன் காலத்தில் கி.பி. 930 இல் வெளியிடப்பட்ட திருத்தணிக்கு அருகிலுள்ள வேலஞ்சேரியில் கிடைத்த செப்பேடு முதன்முதலில் சோழ மன்னர் இராமேசுவரத்திற்கு அளித்த அறக்கொடை பற்றிக் கூறுகிறது. இராமாநாதசுவாமிக்குப் பராந்தகசோழன் துலாபாரதானம் செய்தான் என்ற அரிய செய்தியை இச்செப்பேடு தெரிவிக்கிறது[46]. பராந்தகசோழன் 'மதுரையும் ஈழமும் கொண்ட கோப்பரகேசரி' என்று அழைக்கப்பட்டவன். ஆவான். பாண்டிய நாட்டையும் இலங்கையையும் வென்றபின் தனது வெற்றிக்குக் காணிக்கையாக இராமேசுவரம் இறைவனுக்குத் துலாபாரம் செய்திருக்க வேண்டும்.

## இராட்டிரகூடர்

முதலாம் பராந்தகசோழன் காலத்தில் இராட்டிரகூட அரசன் மூன்றாம் கிருஷ்ணன் சோழர்களை முறியடித்து தென்னாட்டில் திக்விஜயம் செய்து இராமேசுவரம் வரை வந்து அங்கு தனது வெற்றியின் அடையாளமாக வெற்றித் தூண் ஒன்றினை நாட்டினான். இதனை கி.பி. 959 இல் வெளியிட்ட, அவனது கர்ஹாடு (Karhad) செப்பேடு தெரிவிக்கின்றது.[47] அதுவே அவன் இராமேசுவரத்தில் மேலும் இரண்டு கோயில்கள் கட்டியதாகக் கூறுகிறது.[48] மூன்றாம் கிருஷ்ணனுக்கு முன்னர்

ஆட்சிபுரிந்த மூன்றாம் கோவிந்தன் (கி.பி. 794- 814) என்ற இராட்டிடரகூட மன்னனும் இராமேசுவரம் வரை சென்று வெற்றி கண்டவனாகத் தன்னைக் கூறிக் கொள்கின்றான்.[49]

## பிற்காலச்சோழர் காலம்

கி.பி. 12 ஆம் நூற்றாண்டில் பிற்காலச்சோழர் காலத்தில் இராமேசுவரம் இலங்கை மன்னரின் படையெடுப்புக்காளாகி அவதிப்பட்டது. இராமேசுவரத்தைக் கைப்பற்றிய இலங்கைப் படையினர் அங்கு பூசைகள் நடைபெறாமல் தடுத்தனர். அனைத்து அர்ச்சகர்களையும் தங்கள் பொறுப்பில் வைத்தனர். இச்செய்தியினை இரண்டாம் இராஜாதிராஜனின் (கி.பி. 1163-1178) ஆர்ப்பாக்கம் கல்வெட்டு மூலம் அறியமுடிகிறது[50]. முதலாம் பராந்தகசோழன் காலத்திற்கும் இரண்டாம் இராஜாதிராஜன் காலத்திற்கும் இடைப்பட்ட காலத்தில் ஆட்சிபுரிந்த பிற சோழ மன்னர்கள் இராமேசுவரத்திற்கு அளித்த அறக்கொடைகள் பற்றி அறியமுடியவில்லை. ஆனால் சோழர்காலத்தில் கட்டப்பட்ட சோழர் கலைப்பாணியுடன் விளங்கும் கோவில்கள் சில இராமேசுவரத்தில் உள்ளமை குறிப்பிடத்தக்கது. மேலும் இராமேசுவரம் கோயிலில் சோழர்காலத்தினைச் சார்ந்த செப்புத்திருமேனிகளும் உள்ளன.

## போசளர் தொடர்பு

கருநாடகத்தினை ஆண்ட போசள மன்னர்கள் இராமேசுவரம் வரை வெற்றிகண்ட வீரராகத் தம்மைக் கூறிக்கொண்டனர். அங்கு வெற்றித்தூணும் நட்டதாக (சேதுமூல ஜெயஸ்தம்பம்) பெருமையுடன் சொல்லிக் கொள்கின்றனர். போசள மன்னர் மரபில் முதலாவது வந்த விஷ்ணுவர்த்தனன் (கி.பி. 1108-1152) பாண்டியரை வெற்றி கண்டு இராமேசுவரம் வரை சென்றதாகப் பெருமை கொள்கின்றான்[51]. இச்செய்தியை உறுதிப்படுத்துவதற்குத் தெளிவான ஆதாரம் கிடைக்கவில்லை. எனினும் போசளமன்னன் இரண்டாம் நரசிம்மனின் (கி.பி. 1220-38) கி.பி. 1223, கி.பி.1224, கி.பி. 1227[52] ஆண்டுகளைச் சார்ந்த கல்வெட்டுகள் அவன் இராமேசுவரம் வரை வெற்றிகண்டு அங்கு வெற்றித்தூண் நட்டதை உறுதிப்படுத்துகின்றன. இரண்டாம் நரசிம்மனின் படைத்தலைவர்களாக விளங்கிய போசையதண்டநாயகனும் மல்லையதண்டநாயகனும் கி.பி. 1237 இல் இராமாநாதசுவாமி முன்பாகப் பிராமணர்களுக்கு

நிலக்கொடை அளித்துள்ளனர்[53]. போசளமன்னன் மூன்றாம் நரசிம்மனின் (கி.பி. 1254-92) ஆவணமும் இராமேசுவரத்தில் வெற்றித்தூண் நாட்டியதாகக் கூறுகிறது[54]. மூன்றாம் வீரவல்லாளனும் (கி.பி. 1291-1342) கி.பி. 1342 இல் இராமேசுவரத்தில் வெற்றித்தூண் நட்டதாகக் கூறிக்கொள்கின்றான்[55].

## பிற்காலப்பாண்டியர் ஆதரவு

முற்காலப்பாண்டியர் இராமேசுவரத்திற்கு அளித்த அறக்கொடைகள் பற்றிய ஆதாரங்கள் கிடைக்காவிட்டாலும் கி.பி. 13 ஆம் நூற்றாண்டிலிருந்து பிற்காலப்பாண்டியர் பணி பற்றிய செய்திகள் கிடைக்கின்றன. பெரிய நாயனார் குலசேகர பாண்டியனின் ஆணையின் பேரில் இராமேசுவரத்தில் இருந்த சுந்தரபாண்டியன் மடத்தில் பரதேசிகளுக்கு உணவளிப்பதற்காக நிலமளிக்கப்பட்டிருக்கிறது.[56] இதனை இரண்டாம் மாறவர்மன் சுந்தரபாண்டியனின் (கி.பி. 1238-55) கல்வெட்டு தெரிவிக்கிறது. இத்தானத்திற்குரிய ஆணையை அளித்தவன் இரண்டாம் குலசேகரபாண்டியனாக (கி.பி. 1237-66) இருக்க வேண்டும்.[57]

இராமேசுவரம் கோயிலில் முதல் பிரகாரத்திலுள்ள வீரபாண்டியன் கல்வெட்டு அவன் காலத்தில் இக்கோயிலில் திருவிளக்கு எரிப்பதற்கு நெய் தானமாகத் தந்ததைக் கூறுகிறது. இக்கல்வெட்டில் குறிப்பிடப்படும் அரசன் இலங்கை மன்னரை வெற்றிகண்ட, கி.பி. 1253 இல் தனது ஆட்சியைத் தொடங்கிய, சடையவர்மன் வீரபாண்டியனாக இருக்க வேண்டும்[58]. மற்றொரு மன்னன் பெயர்தெரியாத சிதைவுற்ற பிற்காலப்பாண்டியர் கல்வெட்டும் இக்கோயிலுக்குத் திருவிளக்கு எரிப்பதற்குக் கொடை அளித்ததைத் தெரிவிக்கின்றது. இத்தானம் ஏதோ ஒரு மன்னனின் பதினைந்தாவது ஆட்சியில் வழங்கப் பட்டிருக்கிறது[59]. இக்கோயிலிலுள்ள மற்றொரு பாண்டியர் கல்வெட்டின் செய்தி என்ன என்பதை அறியமுடியவில்லை. இக் கல்வெட்டு முழுமையாக இல்லை. இதில் குறிப்பிடப்படும் மன்னன் பொன்வேய்ந்த பெருமாள் முதலாம் சடையவர்மன் சுந்தரபாண்டியனாக (கி.பி. 1251-1271) இருக்க வேண்டும்.[60]

மாறவர்மன் ஸ்ரீ வல்லபன் (கி.பி. 1402-1439) என்ற பாண்டிய மன்னன் இராமேசுவரம் கோயில் கோபுரத்திற்குப் பொன் வேய்ந்துள்ளான்[61]. பாண்டிய குலோதயம் என்ற வடமொழி நூலில் குறிப்பிடப்படும் இம்மன்னனின் கல்வெட்டுகள் பாண்டிய

*நாட்டில் தேவதானம் போன்ற ஊர்களில் காணப்படுகின்றன[62]. இம்மன்னன் ஆகவராமன் என்று அழைக்கப்பட்டுள்ளான். இப்பெயர் இராமேசுவரம் கல்வெட்டிலும் குறிப்பிடப்படுகிறது.*

## *சிங்களர் படையெடுப்பு*

*பன்னிரண்டாம் நூற்றாண்டில் பாண்டியநாட்டில் அரசுரிமைக்காக திருநெல்வேலியில் இருந்த பாண்டியர் மரபினருக்கும் மதுரையில் இருந்த பாண்டியர் மரபினருக்கும் இடையில் பூசல்கள் நடைபெற்றபோது இலங்கை மன்னர்கள் அவர்களில் ஒரு பிரிவினருக்கு ஆதரவாகப் பாண்டிய நாட்டிற்குள் படையெடுத்து வந்துள்ளனர். கி.பி. 1169 இல் சிங்களப்படை இராமேசுவரத்தைக் கைப்பற்றி மதுரை நோக்கி வந்துள்ளது[63]. இக்காலத்தில் கி.பி. 1169 க்கும் 1189 க்கும் இடையில் இராமேசுவரம் சிங்களர் படைவசம் இருந்துள்ளது[64]. இலங்கையிலுள்ள தம்புலா* (Dambula) *கல்வெட்டு பராக்கிரமபாகு (கி.பி. 1153-1188) என்ற சிங்களமன்னன் இராமேசுவரத்தில் நிசங்கேசுவரர் கோயில் என்ற பெயரில் கோயில் எடுப்பித்துள்ளதைத் தெரிவிக்கிறது[65]. இந்நிகழ்ச்சி கி.பி.1172 க்கும் கி.பி. 1177 க்கும் இடையில் சடையவர்மன் குலசேகர பாண்டியன் காலத்தில் நடைபெற்றிருக்க வேண்டும். பராக்கிரமபாகு இராமேசுவரம் கோயிலின் கருவறையை கி.பி. 1173 இல் கட்டியதாகக் கருதுகின்றனர்[66]. தற்போது இராமேசுவரத்தில் நிசங்கேசுவரர் என்ற பெயரில் எந்தக் கோயிலும் இல்லை. ஒருவேளை இராமேசுவரம் கோயிலுக்குப் பராக்கிரமபாகு இப்பெயரினை இட்டிருக்க வேண்டும். சிங்களர் படை இராமேசுவரத்தினை விட்டு அகன்றதும் காலப்போக்கில் அப்பெயர் மறைந்திருக்கலாம்[67].*

*நிசங்கமல்லன் என்ற சிங்கள மன்னன் இலங்கையில் கி.பி. 1187 இல் ஆட்சிபீடம் ஏறியவன் ஆவான். அவன் பாண்டிய நாட்டைக் கைபற்றியவனாகத் தன்னைக் கூறிக்கொள்கின்றான்[68]. ஆனால் இதற்கு முரண்பாடாகச் சோழர் கல்வெட்டுகள் உள்ளன.[69] இருந்தபோதிலும் நிசங்கமல்லன் இராமேசுவரத்தினை வென்றதாகத் தனது ஆவணம் எதிலும் குறிப்பிடவில்லை. ஏனென்றால் அவனது ஆட்சியின்போது இராமேசுவரம் சிங்களர் ஆட்சியில் இருந்தது. தனது ஆட்சிகாலத்தில் இம்மன்னன் இராமேசுவரத்திற்குத் தனது படையினைக் காண வந்திருக்கலாம். இராமேசுவரம் கோயிலின் கொடிமரத்திற்கு அருகிலுள்ள*

பலிபீடத்திலுள்ள சிங்களமொழியில் அமைந்த இவனது கல்வெட்டு இதனை உறுதிப்படுத்துகிறது. இக்கல்வெட்டு நிசங்கமல்லன் பாண்டிய நாட்டில் மூன்று மாதங்கள் தங்கி பாழடைந்த கோயிலைப் புதுப்பித்தான் என்று கூறுகிறது.[70] அவனது மற்றொரு கல்வெட்டு புதிய தேவாலயம் ஒன்றைக் கட்டியதாகவும், மேலும், நலிந்தோர் தங்குவதற்கும் உண்பதற்கும் இடம் ஒன்றினை இராமேசுவரத்தில் எடுப்பித்து அதற்காக கிராமம் ஒன்றினைத் தானமாக அளித்ததாகவும் கூறுகிறது[71]. ஆனால் நிசங்கமல்லன் கல்வெட்டு குறிப்பிடுவது போன்று இராமேசுவரத்தில் தான் தங்கியிருந்த குறுகிய காலமான மூன்று மாதத்திற்குள் புதிய கோயில் ஒன்றினை எடுப்பித்திருக்க முடியாது என்று தோன்றுகிறது.

## யாழ்ப்பாணத்துடன் தொடர்பு

சிங்களப் படையெடுப்புகள் இராமேசுவரத்தின் மீது நடைபெற்ற போதும் இராமேசுவரத்திற்கும் யாழ்ப்பாணத்திற்கும் இடையே மற்றொருபுறம் உறவுகள் இருந்து வந்துள்ளன. யாழ்ப்பாணத்துப் பரராஜசேகரன் மற்றும் அவனது மகனது கல்வெட்டுகள் இராமேசுவரம் கோயிலில் காணப்படுகின்றன. கி.பி.1414 இல் பரராஜசேகரன் இராமேசுவரம் கோயிலின் ஒரு பகுதியைத் திருப்பணி செய்துள்ளான். இதற்காகத் திரிகோண மலையிலிருந்து கற்களை எடுத்து வந்துள்ளான்[72]. யாழ்ப்பாணத்தில் இவர்கள் வெளியிட்ட காசுகள் இராமேசுவரத்தோடு இவர்கள் கொண்டிருந்த தொடர்பை வெளிப்படுத்தும் முறையில் 'சேது' என்ற வாசகம் பொறித்து வெளியிடப்பட்டுள்ளன. மேலும் இவர்கள் 'சேதுக்காவலர்' எனவும் அழைக்கப்பட்டனர்[73]. இவர்கள் பாண்டியர்களுக்குக் கட்டுப்பட்டு ஆண்ட மன்னர்களாக இருக்க வேண்டும்[74]. மேலே கண்டவாறு எல்லா அரச குலத்தினரும் இராமேசுவரத்தோடு தொடர்புகொண்டு ஆதரவளித்தவர்களாகக் காணப்படு கின்றனர். பாண்டிய நாட்டின் தென் எல்லையாக இலங்கைக்குச் செல்லும் வழியில் அமைந்த இராமேசுவரத்தை இராட்டிரகூடரும் போசளரும் வெற்றி கண்டதாகப் பெருமிதம் கொள்கின்றனர். இவ்விரு குலத்தினரும் பாண்டிய நாட்டை வெற்றிகண்ட போதெல்லாம் இராமேசுவரத்தினையும் சேர்த்துக் கூறுவது வழக்கமாக இருந்துள்ளது. இதற்குக் காரணம் பாண்டிய நாட்டின் ஒரு தென் எல்லையாகவும் யாத்திரிகர்கள் வந்து குவியும் மிக முக்கியமான புனிதத் தலமாகவும் இராமேசுவரம் விளங்கியது என்று கூறலாம். வைதீக சமயத்தினைப் பின்பற்றிய

இத்தென்னிந்திய அரசர்கள் மாலிக்காபூரைப் போன்று இராமேசுவரத்தில் அறக்கொடைகளாகக் குவிந்து கிடக்கும் செல்வத்தினை எண்ணி அங்கு செல்லவில்லை. இதனைப் பக்தி விஜயமாக எண்ணிச் சென்றிருக்கிறார்கள். திக்கு விஜயமாக கர்வத்துடன் அவர்கள் அங்கு செல்லவில்லை எனலாம்.

## இஸ்லாமியர் படையெடுப்புகள்

பதினான்காம் நூற்றாண்டின் தொடக்கத்தில் டெல்லியில் சுல்தானாக இருந்த அலாவுதீன் (கி.பி.1296 - 1316) தென்னிந்தியாவின் இந்து அரச மரபினரை அடக்கி ஒடுக்குவதற்கும் பெருஞ்செல்வத்தைப் பெறுவதற்கும் தனது படைத்தலைவன் மாலிக்காபூரை கி.பி.1309 இல் பெரும்படையுடன் தெற்குநோக்கி அனுப்பினான்[75]. தேவகிரி, வாரங்கல், துவாரசமுத்திரம் முதலிய இடங்களில் ஆட்சிசெய்த யாதவர், போசளர், காகதீயர்கள் ஆகியோரை வெற்றிகண்டு பாண்டிய நாட்டு மதுரைப் பகுதியில் கி.பி.1311 ஏப்ரல் மாதம் நுழைந்தான்[76]. மதுரையிலிருந்து மாலிக்காபூர் புறப்பட்டு இராமேசுவரம் வரை சென்று அங்குள்ள கோயிலைக் கொள்ளையிட்டு திருவுருவங்களை அழித்ததாகச் சொல்லப்படுகிறது[77]. ஆனால் வரலாற்று ஆய்வாளர் இது எந்த அளவு உண்மையாக இருக்கும் என ஐயப்படுகின்றனர். பெரிஷ்டா (Ferishta) என்பவர் அரபிக் கடற்கரையிலுள்ள சித்பந்த் இராமேசரில் (Sitband Ramesar) பள்ளிவாசல் கட்டியதாகக் கூறுகின்றார்[78]. அவரே விஜயநகரத்திலிருந்து தெற்கே அறுநூறு குரோ (kuroh) தூரத்தில் (1200 மைல்) இவ்விடம் இருந்ததாகக் கூறுகின்றார். மேலும் அவர் முஜாகித்ஷா (Mujakid Shah) இவ்விடத்திற்கு விஜயம் செய்து டெல்லி சுல்தான் அலாவுதீன் அதிகாரிகள் கட்டிய பள்ளிவாசலைப் பழுது பார்த்ததாகத் தெரிவிக்கின்றார்.[79] பெரிஷ்டாவின் இச்செய்திகள் முரண்பாடாக உள்ளன. ஆய்வாளர் சித்பந்த் இராமேசரையும் சேதுபந்தம் இராமேசுவரத்தையும் ஒன்றாகக் கருதுகின்றனர். சொற்களின் ஒற்றுமையை வைத்து இம்முடிவிற்கு வந்துள்ளனர். ஆனால் பரணியோ அல்லது இசாமியோ (Isami) மாலிக்காபூரின் இராமேசுவரம் படையெடுப்பைப் பற்றிக் கூறவில்லை[80]. இவ்விருவரையும் மாலிக்காபூருடன் உடன் சென்றவர்களாக நம்புகின்றனர்.

அமீர்குஸ்ருவால் சொல்லப்பட்டுள்ள 'பாண்டிய குரு' என்பவர் இராமேசுவரம் கோயிலையும் அதனைச் சுற்றியுள்ள பிற

கோயில்களையும் நிருவகித்தார் என்று என்.வேங்கட்ட ரமணய்யாவும் கே.ஏ.நீலகண்ட சாஸ்திரியாரும் கருதுகின்றனர்[81]. துவாரசமுத்திரத்தை ஆண்ட வல்லாளன் பற்றிக்கூறும் 'வல்லாள இராவண யுத்தம்' என்ற கன்னட கதைப்பாடல் நேமிகான் அல்லது நேமிமுல்க் என்று அழைக்கப்பட்ட டெல்லி சுல்தானின் படைத்தலைவன் பாண்டியரை வெற்றிகண்டு இராமேசுவரம் வரை சென்று அதனைத் தனது கட்டுப்பாட்டிற்குள் கொண்டு வந்தான் என்று கூறுகிறது.[82] ஏ.எல்.பாஸம் என்ற வெளிநாட்டு இந்திய வரலாற்று ஆசிரியர் 'மாலிக்காபூர் படையெடுப்பு இராமேசுவரம் வரை சென்றது என்பது ஐயப்பாட்டிற்குரியதாக உள்ளது. பலர் கருதுவது போன்று ஒருவேளை மாலிக்காபூர் இராமேசுவரத்தினைக் கொள்ளையிட ஒரு படைப்பிரிவை அனுப்பியிருக்க வேண்டும் என்று வேண்டுமானால் கொள்ளலாம்' என்று கூறுகின்றார்[83].

இவ்வாறு முரண்பட்ட தகவல்கள் மாலிக்காபூரின் இராமேசுவரம் படையெடுப்பு குறித்துக் காணப்பட்டாலும் மதுரை வந்த மாலிக்காபூர் இராமேசுவரம் வரை செல்ல வாய்ப்புள்ளது. மாலிக்காபூரின் நோக்கம் நிலப்பரப்பைக் கவர்வதாக இருக்கவில்லை. அளவற்ற செல்வத்தைக் கொள்ளை கொண்டு செல்லவேண்டும் என்ற ஆசை படைத்ததாகவே இருந்தது. இதனைக் கருத்தில் கொள்வோமானால் செல்வவளம் படைத்த இராமேசுவரத்தின் மீது அவன் படையெடுத்துச் சென்றிருக்க வேண்டும் என்றே தோன்றுகிறது. இதனை இராமேசுவரம் கோயில் தலவரலாறும் உறுதிப்படுத்துகிறது. இசுலாமியர் படை இராமேசுவரம் கோயிலுக்கு வந்து கொள்ளையிட்டு அக்கோயிலை அழித்துக் கொண்டிருந்தபோது அக்கோயிலில் உள்ள நந்தியின் உருவம் பெரியதாக வளர்வதைக் கண்டு அச்சத்தால் அகன்றதாகத் தலபுராணம் கூறுகிறது.[84] ஆனால் இராமேசுவரத்தில் மாலிக்காபூர் அலுவலர்கள் பள்ளிவாசல் கட்டியதாகக் கூறும் செய்தி நம்ப முடியாததாக உள்ளது. மாலிக்காபூர் தனக்குக் கிடைத்த குறுகிய காலத்தில் இதனைச் செய்திருக்க முடியாது. மாலிக்காபூர் மதுரைக்கு கி.பி.1311 ஏப்ரல் மாதம் 13 ஆம் தேதி வந்தான் என்று தோன்றுகிறது. கி.பி.1311 இல் ஏப்ரல் மாதம் 24 ஆம் தேதி மீண்டும் அவன் டெல்லி திரும்பினான் என்று ஈஸ்வரிபிரசாத் என்ற வரலாற்றாசிரியர் கருதுகின்றார். கும்பகோணம் என்.சேதுராமன் அவர்களோ

கி.பி.1311[85] இல் அக்டோபர் 18 ஆம் தேதி டெல்லி திரும்பியதாகக் கூறுகின்றார். எனவே இக்குறுகிய காலத்தில் இராமேசுவரத்தில் பள்ளிவாசல் ஒன்றைக் கட்டியிருக்க முடியாது. பின்னால் வந்த வேறு இஸ்லாமியப் படையெடுப்பாளர்கள் இதனைச் செய்திருக்க வேண்டும். மாலிக்காபூரைத் தொடர்ந்து குஸ்ருகான், [86] முகமது பின் துக்ளக்[87] ஆகியோரது படையெடுப்புகள் பாண்டிய நாட்டின் மீது நடந்தாலும் இவை இராமேசுவரம் வரை செல்லவில்லை. அதன் பின்னர் மதுரையில் பதினான்காம் நூற்றாண்டில் ஏற்பட்ட சுல்தான்கள் ஆட்சியால் இராமேசுவரம் எவ்விதப் பாதிப்பிற்கும் உள்ளாகவில்லை. இதற்குரிய சான்றுகளும் இல்லை.

## விஜயநகரவேந்தர் காலம்

தென்னிந்தியாவில் இந்துப் பண்பாட்டைக் காக்க எழுந்த. விஜயநகரப் பேரரசு கி.பி.1336 இல் தோன்றியது. இதன் தாக்கம் இராமேசுவரம் வரை பரவியது. விஜயநகர மகாமண்டலேசுவரர் குமாரகம்பணர் மதுரை மீது படையெடுத்துவந்து பக்ருதீன் முபாரக்ஷாவைக் கொன்று மதுரை சுல்தான்கள் ஆட்சியை கி.பி.1371 இல் ஒழித்தார்[88]. அதன்பிறகு பாண்டிய நாட்டின் தென்பகுதிக்குச் சென்றார். இராமேசுவரம் சென்று புனிதநீராடி பல கொடைகளைக் கோயிலுக்கு அளித்தார். கம்பணரின் கல்வெட்டுகள் திருப்புல்லாணி ஜெகந்நாதசுவாமி கோயிலில் காணபடுகின்றன[89].

கி.பி.1377 முதல் 1400 வரை இரண்டாம் அரிகரரின் மகன் விருப்பண்ணவுடையார் (முதலாம் விருபாக்சர்) தமிழ்நாட்டின் மகாமண்டலேசுவரராக இருந்தார்[90]. அவரது அரியூர், சோரைக்காவூர் செப்பேடுகள் இராமநாதசுவாமிக்குத் தனது எடைக்கு நிகராகத் தங்கம் அளித்து துலாபாரதானம் செய்தார் என்று தெரிவிக்கின்றன[91]. அவரது ஆலம்பூர்ச் செப்பேடு துண்டிர, சோழ, பாண்டிய, சிங்கள நாடுகளை வெற்றி கண்டதாகக் கூறுகிறது[92].

விருப்பண்ணவுடையார் இவ்வெற்றிக்கு நன்றியாகவே இராமநாதசுவாமி முன்பாகத் துலாபாரம் செய்தார்[93]. ஆனால் அ.கிருஷ்ணசாமி இவ்வெற்றியை ஐயப்பாடுடையதாகக் கருதுகின்றார். ஏனெனில் படைவீட்டு சம்புவராயரும் மதுரை சுல்தான்களும் அவரது காலத்திற்கு முன்பே வெற்றி கொள்ளப் பட்டவர்கள் ஆவார்கள்.[94] எனவே இராமேசுவரத்தின் புனிதப்

பயணத்தை அடிப்படையாகக் கொண்டு இப்பகுதியில் மீண்டும் விஜயநகரவேந்தரின் ஆளுமையை நிலைநாட்டச் சென்ற வேளையில் இவர் துலாபாரதானம் செய்திருக்க வேண்டும்.

இரண்டாம் தேவராயர் காலத்தில் (கி.பி.1426-46) இராஜமுந்திரி, கோவா, இராமேசுவரம் என்று மூன்று திக்குகளிலும் உள்ள தென்னிந்தியாவின் பெரும்பகுதி விஜயநகர வேந்தர் ஆட்சிக்குக்கீழே வந்தது.[95] இராமேசுவரம் பர்வத வர்த்தினியம்மன் சன்னதி கொடிக் கம்பத்திலுள்ள, தமிழிலும் கிரந்தத்திலும் உள்ள, கல்வெட்டு அதனை கி.பி.1468 இல் கோபதிப்பா என்பவர் தாமிரத் தகடு போர்த்தி நட்டதாகக் கூறுகிறது.[96] கிரந்தக் கல்வெட்டு கோபதிப்பா என்ற திருமலையதேவ மகாராஜா பெயரினைக் குறிப்பிடுகிறது. இவர் தென்னாட்டில் மண்டலேசுவரராக கி.பி.1453 முதல் 1468 வரை இருந்தவர். திருவரங்கம், திருவானைக்காவல் கோயில்களுக்கு அதிக அளவு கொடைகள் அளித்தவர் ஆவார்.[97] சாளுவ நரசிம்மர் காலத்தில் (கி.பி.1486 - 1492) இராமேசுவரம் முதல் ஆந்திராவிலுள்ள இராஜமுந்திரிவரை விஜயநகரப் பேரரசின் ஆட்சி நிலவியது[98]. நரசநாயக்கர் (கி.பி.1491 - 1503) பாண்டிய நாட்டின் மீது படையெடுத்து வந்து பல எதிர்ப்புகளை அடக்கி அவர்களது ஆதிக்கத்தினை ஒழித்து இராமேசுவரம் வரை சென்றார்.[99] இராமேசுவரத்தில் சோடசமகாதானங்களைச்[100] செய்த போது அவருடன் அத்வானியைத் (தற்காலத்தில் அதோணி) சார்ந்த கச்சப்ப நாயக்கரும் உடன் சென்றார்[101]. கி.பி.1528 ஆம் ஆண்டைச் சார்ந்த உதயம்பாக்கம் கிருஷ்ண தேவராயர் செப்பேடு நரசநாயக்கர் இராமேசுவரத்தில் செய்த தானங்களை உறுதிப்படுத்துகிறது[102].

நரசநாயக்கரின் மகனான வீரநரசிம்மரும் (கி.பி.1505 - 09) வேங்கடாத்திரி, சிதம்பரம், இராமேசுவரம் போன்ற புண்ணிய தலங்களுக்குச் சோடசமகாதானங்கள் செய்துள்ளார்[103]. சோடச மகாதானங்கள் என்பது பதினாறு வகை தானங்களை உடையது. பிரம்மதானம், விசுவ சக்கரம், கதை, மகாபூடகம், இரத்தின தனுசு, சப்தம் போதி, கல்பகை திருகலதிகம், காஞ்சன் காமதேனு, சுவர்ணாக்சமம், ஹிரண்ய வதம், துலாபுருசர், கோசகஸ்ரம், ஹோமாஸ்வம், ஹேமகர்ப்பம், கனககரிரதம், பாஞ்சாலங்களி ஆகியவற்றைக் கொண்டதாகும்[104].

விஜயநகரவேந்தரில் தலைசிறந்து விளங்கிய கிருஷ்ண தேவராயர் (கி.பி.1509 - 1529) 1513 இல் அக்டோபர் மாதம் இராமேசுவரத்திற்கு வந்தார். தனது வெற்றியால் ஏற்பட்ட இரத்தக்கரை படிந்த தனது வாளை இராமேசுவரத்தில் புனித நீராட்டினார். சேதுவில் ஸ்நானம் செய்து துலாபுருசதானம் முதலிய பல அறக்கொடைகளைத் தந்தார். இருபத்து நான்கு தீர்த்தங்களாடி இராமநாதரை வழிபட்டார். இறைவன் முன் மூன்று வகையான துலாபாரங்களைச் செய்தார். பிராமணர் களுக்குத் தானங்கள் அளித்தார். நவரத்தினங்கள் பதித்த ஆபரணங்களை அம்மனுக்குத் தந்து மூன்று நாட்கள் இராமேசுவரத்தில் தங்கி கோடித்தீர்த்தமாடி இராமநாத சுவாமியிடம் விடை பெற்று விஜயநகரத்திற்குத் திரும்பினார்[105].

கிருஷ்ணதேவராயரின் 1511 மற்றும் 1522 ஆம் ஆண்டைச் சார்ந்த ஆவணங்கள் அவர் இலங்கையை வெற்றி கண்டதாகக் கூறுகின்றன[106]. இலங்கை வெற்றிக்குப் பின்னர் இராமேசுவரத்தில் கிருஷ்ணதேவராயர் தனது உடைவாளை நீராட்டியிருக்க வேண்டும். திருப்பதியிலுள்ள கிருஷ்ணதேவராயர் கல்வெட்டு "அவர் இராமேசுவரம் போன்ற பல புண்ணிய தலங்களில் படித்த பண்டிதர்களும் அறிவாளிகளும் சூழ்ந்திருக்க சாத்திரங்களில் சொல்லப்பட்ட முறைப்படி பதினாறு வகையான தானங்களைச் செய்வதன்மூலம் மூவுலகிலும் தன்னை மேலும் பெருமை கொண்டவராக ஆக்கிக் கொண்டார்" என்று கூறுகிறது[107].

அச்சுததேவராயர் காலத்தில் கி.பி.1539 இல் வரிசையூரைச் சேர்ந்த வீரப்பனான அச்சுதராய தும்மிச்சி நாயக்கர் (இராயசம்) மும்முடிச்சாத்தனான சேதுக்குவாய்த்த நல்லூரைத் தேவதானமாக அச்சுதராயரின் ஒப்புதலோடு அளித்துள்ளார்[108]. கே.வி.இராமன் அவர்கள் அச்சுதராயரின் மருமகனாக விளங்கிய சாளுக்கதிம்மா திருவடி இராச்சியப் படையெடுப்பின்போது இராமேசுவரத்திற்குச் சென்றார் என்று கூறுகின்றார்[109]. இலங்கையை வென்றதாகக் கூறும் அச்சுததேவராயரும் இராமேசுவரத்திற்கு வந்திருக்கலாம்[110]. விஜயநகரவேந்தர் காலத்தில் இந்தியாவின் பல பகுதிகளிலிருந்தும் நடைபயணமாக இராமேசுவரம் வரும் புனிதப்பயணிகள் தங்குவதற்கும் உண்பதற்கும் ஆங்காங்கே அன்னதானச் சத்திரங்கள் ஏற்படுத்தப் பட்டுள்ளன. யாத்திரிகர்களுக்குப் பாதுகாப்பு அளிக்கப் பட்டுள்ளது. விஜயநகர வேந்தர்களது காலத்தில்

படைத்தலைவராகவும் புலவராகவும் திகழ்ந்த மத்திலி குமார அனந்தராஜர் என்பவர் பல இடங்களில் அன்னதானச் சத்திரங்களை ஏற்படுத்தியுள்ளார்[111]. வடக்கே பத்திரியிலிருந்து இராமேசுவரத்திற்கு வரும் பயணிகளுக்கு உதவும் வகையிலும் இது அமைந்திருந்தது.

## போர்ச்சுக்கீசியர் தலையீடு

வெளிநாட்டார் தொடர்பு இராமேசுவரம் பகுதியில் ஏற்பட்டமையால் கோயில் வளர்ச்சியிலும் நிர்வாகத்திலும் சில பாதிப்புகள் ஏற்பட்டு அரசின் தலையீட்டால் அவை அகற்றப்பட்டன. கிருஷ்ணதேவராயர் போர்ச்சுக்கீசியரோடு கொண்ட நல்லுறவின் காரணமாக தென்னிந்தியாவில் அவர்களது வாணிபம் நிலைகொண்டு வளர்ச்சியடையத் தொடங்கியது[112]. தென்னிந்திய கடற்கரைப் பகுதியில் தங்கிய போர்ச்சுக்கீசியர் கிருத்துவ சமயத்தினைப் பரப்பும் செயலிலும் ஈடுபட்டனர். இராமேசுவரத்திலிருந்து கன்னியாகுமரி வரையிலுள்ள கடற்கரை ஊர்களில் இருந்த பரதவர்கள் கிருத்தவர் களாக மாற்றப்பட்டு போர்ச்சுக்கீசியருக்கு ஆதரவாக மாறினர்[113]. இச்சமயத்தில் கோவாவில் போர்ச்சுக்கீசியரின் ஆளுநராக இருந்த மார்ட்டின் அல்போன்ஸா டிசோசா என்பவர் கடற்கரையில் இருந்த பொன்னும் பொருளும் மணியும் நிறைந்த செல்வவளமிக்க கோயில்களைக் கொள்ளையிடத் திட்டமிட்டார்[114]. வர்த்தகம் செய்த போர்ச்சுக்கீசியர் அரசியல் ஆதிக்கம் பெறவும் முற்பட்டனர். இராமேசுவரத்திற்கு அருகில் நடைபெற்ற போரில் சிங்களரையும் அவருடன் சேர்ந்திருந்த இந்தியர்களையும் கி.பி.1538 இல் போர்ச்சுக்கீசியர் தோற்கடித்தனர்.[115]

இராமேசுவரத்திற்கு அருகில் அமைந்த வேதாளையில் மண்கோட்டை ஒன்றை போர்ச்சுக்கீசியர் கட்டினர். கி.பி. 1549 இல் அக்கோட்டையில் ஜோவோ பெர்ணான்டஸ் தலைமையில் ஆயுதங்களுடன் நாற்பது படைவீரர்கள் இருந்தனர். இராமேசுவரம் செல்லும் வழியில் இருந்த இக்கோட்டையை ஒட்டி அகழி ஒன்றையும் தோண்டினர். அவ்வழியாகச் சென்ற இராமேசுவரத்துப் பயணிகளிடம் வரி வசூலித்தனர். இதனால் இராமேசுவரம் வரும் புனிதப் பயணிகளின் வரவு தடைபட்டு அங்கிருந்த அர்ச்சகரது வருமானம் படிப்படியாகக் குறைய லாயிற்று. இதனால் அவர்கள் விஜயநகர மண்டலாதிபதி விட்டலராயரிடம் இது குறித்து முறையிட்டனர்[116]. விட்டல

தேவராயர் இதனால் ஆறாயிரம் வீரர்களுடன் வேதாளை நோக்கிப் படையெடுத்துச் சென்று போர்ச்சுக்கீசியரை வென்று அவர்களது கோட்டையைக் கைப்பற்றி மீண்டும் அப்பகுதிகளில் பழைய நிலைமையைத் தோற்றுவித்தார்[117]. கி.பி.1550 ஆம் ஆண்டைச் சார்ந்த கல்வெட்டு விட்டலதேவராயர் திருப்பாச்சேத்தி கிராமத்தினைப் பிராமணருக்கு வழங்கியதோடு இராமேசுவரத்தில் இலட்சுமண தீர்த்தத்திற்குச் செல்லும் பயணிகளிடமிருந்து வரிவசூல் செய்வதைத் தடுத்தார்[118] என்று தெரிவிப்பது இங்கு குறிப்பிடத்தக்கதாகும்.

பதினேழாம் நூற்றாண்டில் மீண்டும் நிலைமை மாறியது. திருமலை நாயக்கர் தளவாய் சேதுபதியை அடக்குவதற்காகவும் இராமேசுவரத்தில் இருந்த அவரை வெல்வதற்காகவும் போர்ச்சுக்கீசியரின் உதவியை நாடினார். இவ்வுதவிக்காக அவர்களுக்கு மீண்டும் இராமேசுவரம் செல்லும் வழியிலும் அப்பகுதியிலும் உரிமை வழங்குவதாக உறுதியளித்தார்.[119] கி.பி.1639 ஆகஸ்ட் மாதம் இராமப்பையன் கோவாவிற்குச் சென்றார். அங்கு சேதுபதியை வெற்றி கொள்வதற்காகச் செய்த உதவிக்காக நன்றி கூறியதோடு சில சலுகைகளையும் நாயக்க அரசு போர்ச்சுக்கீசியருக்கு வழங்குமென உறுதி அளித்தார்[120]. இதனைப் பயன்படுத்திக் கொண்ட போர்ச்சுக்கீசியர் மீண்டும் இராமேசுவரம் பகுதியில் தம்மை நிலைப்படுத்திக் கொண்டு வலியவர்கள் ஆனார்கள். அவர்களுக்குச் சாதகமாக விஜயநகரப் பேரரசும் படிப்படியாக வீழ்ச்சியடைந்தது.

இந்த நிலையில், கி.பி.1662 இல்[121], தத்துவப்புலவர் தாயுமானவர் இராமேசுவரம் கோயில் கோபுரங்களில் போர்ச்சுக்கீசியர் கொடிகள் பறப்பதையும் அதனால் ஏற்படக்கூடிய கொடிய விளைவுகளையும் மறவர் நாட்டுத் தலைவர்களுக்கு எடுத்துரைத்தார். உடனே இராமநாதபுரம் திருமலை சேதுபதி முப்பதாயிரம் வீரரர்களுடன் போர்ச்சுக்கீசியர் வசமிருந்த இராமேசுவரத்திற்குச் சென்றார். அங்கிருந்த போர்ச்சுக்கீசியர் தளபதி சேதுபதியிடம் சரணடைந்தார். போர்ச்சுக்கீசியரும் அவர்களது படைகளும் இதனால் இராமேசுவரத்தை விட்டுச்செல்ல அனுமதிக்கப் பட்டனர்[122]. இவ்வாறு இராமேசுவரம், போர்ச்சுக் கீசியரிடமிருந்து, தாயுமானவரின் முயற்சியால் காக்கப்பட்டது. ஆனால் இலங்கையில் இருந்த திருக்கேதீசுவரம், கோனேசுவரம், முனீசுவரம், நகுலேசுவரம் ஆகியவை போர்ச்சுக்கீசியரின் அழிவுக்கு ஆளாயிற்று என்று சி.எஸ்.நவரத்தினம் கருதுகின்றார்.[12.1]

நாயக்கர் காலம்

நிர்வாக வசதிக்காக விஜயநகர ஆட்சிப்பரப்பு மூன்று நாயக்கர்களின் கீழ் மூன்று பெரும் பிரிவாகப் பிரிந்தது. இப்பிரிவினர் தஞ்சை, செஞ்சி, மதுரை நாயக்கர்கள் என்று அழைக்கப்பட்டனர். மதுரையை ஆண்ட நாயக்கர் ஆட்சியில் இராமேசுவரம் இருந்தது. இப்பகுதியில் இருந்த சேதுபதிகள் மதுரை நாயக்கர்களுக்குக் கட்டுப்பட்டு இராமேசுவரத்தைக் காத்து வந்தனர். மதுரை நாயக்கர் ஆட்சியில் இராமேசுவரம் பல வளர்ச்சிகளைக் கண்டது.

இராமேசுவரம் கோயிலிலுள்ள கி.பி. 1580 ஆம் ஆண்டைச் சார்ந்த கல்வெட்டு சந்திரசேகர உடையாரின் சீடரான சர்வேசுவர குருக்களும் கோயிலில் பூசை செய்யும் குருக்களும் சேர்ந்து எழுநூறு பொன்னைக் கொண்டு பூசை நடத்தும் பொறுப்பேற்றுக் கொண்டனர்.[124] சோழ மண்டலத்தில் இருந்த பெத்தானபுரம் என்ற ஊரில் இருந்த இரண்டுவேலி நிலம் கி.பி. 1582 இல் மதுரை நாயக்கர் அரசின் முதல் அரசனான விசுவநாதநாயக்கர் பெயரால் பொல்லப்ப நாயக்கரால் இராமேசுவரம் கோயிலுக்குத் தானமாகத் தரப்பட்டது.[125]

விசுவநாதநாயக்கர் மற்றும் அவரது மகன் கிருஷ்ணப்ப நாயக்கர் உருவச்சிலைகள் நந்திமண்டபத்தில் நந்தியின் முன்பாகக் காணப்படுகின்றன. இது இவர்கள் இக்கோயிலில் செய்த திருப்பணிகளைக் காட்டுகிறது. கிருஷ்ணப்பநாயக்கர் (கி.பி. 1564-72) இலங்கைப் படையெடுப்பின் போது இங்குள்ள உருவத்தினைச் செய்வித்திருக்க வேண்டும்[126]

இரண்டாம் கிருஷ்ணப்பநாயக்கர் (கி.பி. 1595 - 1601) காலத்தில் இராமேசுவரம் கோயிலின் நிர்வாகத்தில் இருந்த இராமநாத பண்டாரம் அங்கு பல திருப்பணிகளைச் செய்தார். இவற்றை மதுரைநாயக்கர் மன்னர்களின் ஆதரவுடன் இவர் செய்திருக்க வேண்டும். கி.பி. 1598 இல் இராமநாதபண்டாரம் நடை மண்டபத்திதைக் கட்டினார்.[127] இவரே கி.பி. 1608 இல் கோடித்தீர்த்த மண்டபத்தைக் கட்டுவித்தார்.[128] அதே ஆண்டில் இவர் கோயில் திருப்பணியை நிறைவேற்றி முடித்தார். இவரை அப்பணியைச் செய்யுமாறு ஆணையிட்ட அரசன் கல்வெட்டில் வீரபூபதி என்று குறிப்பிடப்படுகிறான்.[129] வீரபூபதி என்று குறிப்பிடப்படும் அரசர் முதலாம் முத்துவீரப்ப நாயக்கனாக (கி.பி. 1609-23) இருக்கலாம். இவனது தந்தை முத்துக்கிருஷ்ணப்ப

*நாயக்கன் (கி.பி. 1601–09) ஆட்சியில் இளவரசனாக இருந்த முத்துவீரப்பநாயக்கன் என்ற வீரபூபதி இராமநாத பண்டாரத்திற்கு ஆணை வழங்கியிருக்க வேண்டும். கி.பி. 1618 ஆம் ஆண்டைச் சார்ந்த மற்றொரு கல்வெட்டு இராமநாதபண்டாரம் இராமேசுவரம் கோயிலின் பிரகாரத்தினைப் புதுப்பித்து நடைமாளிகை மண்டபத்தினைக் கட்டியதைத் தெரிவிக்கிறது*[130].

*முத்துகிருஷ்ணப்பநாயக்கர் காலத்தில் மறவர்நாடு குழப்பமான நிலையில் இருந்தது. இராமேசுவரம் செல்லும் பயணிகளுக்குப் பாதுகாப்பற்ற நிலை கி.பி.1605 ஆம் ஆண்டில் இருந்துள்ளது*[131]. *இதனால் இராமேசுவரம் செல்லும் பயணிகள் தங்களுக்கு ஏற்பட்ட தொல்லையையும் பாதுகாப்பற்ற நிலையையும் நாயக்க அரசர்களிடம் எடுத்துக்கூறி முறையிட்டனர். இதனால் முத்துக்கிருஷ்ணப்பநாயக்கர் சடைக்கத் தேவன் உடையான் சேதுபதியை பயணிகளைப் பாதுகாக்க நியமித்தார்*[132]. *அதன்பின்னர் உடையான்சேதுபதி இராமேசுவரத்திற்குப் பயணிகள் பாதுகாப்பாகச் செல்லும் வழியை வகுத்து அவ்வழியாக பாதுகாப்பு வீரர்களுடன் பயணிகளை அனுப்பும் பணியைச் செய்தார்.இதற்காக இராமநாதபுரத்திலும் புகளூரிலும் கோட்டையை அமைத்து திறமையான நிர்வாகம் செய்தார்*[133]. *அதுமுதல் சேதுபதிகள் இராமேசுவரம் செல்லும் வழியின் அரசுக் காவலர்களாக மாறினர்*[134]. *இம்மரபு சேதுபதிக்கு பழங்காலத்திலிருந்தே இருந்து வந்துள்ளது என்றும் கூறுகின்றனர். கி.பி.1616 ஆம் ஆண்டைச் சார்ந்த செப்பேடு ஒன்று திருமலைநாயக்கரும், தளவாய்சேதுபதி ஒருபுறமும் இராமேசுவரம்கோயில் குருக்கள் மற்றொரு புறமுமாக இருந்து செய்துகொண்ட ஒப்பந்தம் பற்றி தெரிவிக்கின்றது. இதன்படி கோயில் குருக்கள் தவறாது பூசை நடத்துவதற்கும் திருவிழாக்கள் நடத்துவதற்கும் ஒப்புக்கொண்டனர்.*[135] *இந்த ஒப்பந்தமானது திருமலைநாயக்கரின் மூத்த சகோதரரான முதலாம் முத்துவீரப்பநாயக்கர் காலத்தில் (கி.பி.1609 – 23) செய்யப்பட்டிருக்கிறது. அப்போது அவர் தனது தம்பி திருமலைநாயக்கரை தனது சார்பாக அனுப்பி வைத்திருக்க வேண்டும். திருமலைநாயக்கரே இரண்டாம் திருச்சுற்றினைக் கட்டும் பணியைத் தொடங்கி வைத்ததாகவும்*[136] *திருச்சுற்றினை மேற்பார்வையிட்டு திருமலை இரகுநாதசேதுபதி முடித்து வைத்தார் என்றும் கூறுகின்றனர். திருமலைநாயக்கர் காலம்வரை*

இராமேசுவரம் கோயில் நிர்வாகம் மதுரைநாயக மேலாண்மையில் இருந்தது என்பதை இது காட்டுகிறது.

திருமலை நாயக்கரின் மேலாண்மையைச் சேதுபதி ஏற்றுக்கொண்டு இராமநாதபுரம், இராமேசுவரம் பகுதிகளை ஆட்சிநடத்தி வந்தனர் என்பதை வெம்பங்குடி கல்வெட் உறுதிப்படுத்துகிறது. இக்கல்வெட்டு திருமலைநாயக்கருக்கு புண்ணியமாகச் சேதுபதி மரபினர் தானம் அளித்ததா கூறுகிறது.[137] முதலில் தளவாய்சேதுபதி திருமலைநாயக்கை எதிர்த்தார். பின்னர் தனது தவறினை உணர்ந்தார். அவருக்கு பின்னர் வந்த திருமலை ரகுநாதசேதுபதியோ திருமல நாயக்கரை மதித்து அவருக்குத் தேவைப்படும்போதெல்லா படை உதவியும் அளிக்க ஒப்புக்கொண்டார். ஆனா திருமலைநாயக்கருக்குப் பின்னர் இச்சேதுபதி தனிவுரிமை படைத்த மன்னராக மாறி இராமேசுவரத்தைச் சேதுபதிக்ளின் கட்டுப்பாட்டின் கீழ் கொண்டு வந்தார்.

## தஞ்சை நாயக்கர்

தஞ்சை நாயக்க மன்னரான விஜயராகவநாயக்கர் மதுரை சொக்கநாதநாயக்கரின் (கி.பி.1659–82) சமகாலத்தில் தஞ்சையை ஆண்டவர். இவர் தஞ்சை நாட்டின் வழியாக இராமேசுவரத் திற்குச் செல்லும் பயணிகளுக்குப் பாதுகாப்பு அளித்தார் புதுக்கோட்டை அரசரையும் இதற்கு உதவச் செய்தார்[138]. கி.பி.1658 இல், தனது ஆன்மீககுரு குமாரதத்தாச்சாரியின் இறப்பிற்குப் பின் விஜயராகவநாயக்கர் இராமேசுவரத்திற்குப் புனிதயாத்திரை மேற்கொண்டார். அங்கு இராமநாதசுவாமி முன்பாக தனது மனைவியுடன் இணைந்து எடைக்கு எடை பொன்னை நிறுத்துத் துலாபாரதானம் செய்தார்[139].

## பிற நாயக்கர்கள்

திருப்பரங்குன்றத்தில் காணப்படும் இரண்டு செஞ்சி நாயக்க மன்னர்தம் கல்வெட்டு செஞ்சி நாயக்கமன்னர்களில் வையப்பநாயக்கர் மற்றும் கிருஷ்ணப்பநாயக்கர் என்ற இருவர் இராமேசுவரம் கோயிலுக்குப் புனித யாத்திரை மேற்கொண்டனர் என்று கூறுகின்றன[140]. அடையாளம் அறிய முடியாத அச்சுதப்ப நாயக்கர் என்பவர் கி.பி.1733 இல் இராமேசுவரம் கோயிலுக்குச் செட்டிக்குறிச்சி, குட்டிப்பாறை, மழவராயனேந்தல் மற்றும் புளியம்பட்டியைத் தானமாக அளித்ததாக இரண்டு

செப்பேடுகள் கூறுகின்றன[141]. தானமளித்த இவர் ஒருவேளை சேதுபதியின் கீழிருந்த அலுவலராக இருக்கலாம்.

## சேதுபதிகள்

நாயக்க மன்னரை அடுத்து சேதுக்காவலர்கள் என்று அழைக்கப்பட்ட சேதுபதிகளின் பங்கு இராமேசுவரம் கோயிலின் வளர்ச்சியில் மிகவும் குறிப்பிடத்தக்கதாகும்[142]. சேதுபதியின் நிர்வாகத்தில் இராமேசுவரம் கோயிலின் மிகப்பெரிய மண்டபங்கள், கோபுரங்கள், பிரகாரங்கள் விரிவடைந்தன. அறக் கொடைகளால் ஆக்கம்பெற்றது. இராமேசுவரம் யாத்திரை யானது இராமேசுவரம் சென்று வந்ததோடு மட்டும் நிறைவடையாது, சேதுபதி மன்னர்களின் தரிசனம் கண்டால் தான் நிறைவடையும் என்ற அளவிற்குச் சேதுபதிகளின் நிலை உயர்ந்தது. இராமேசுவரம் கோயிலோடு மிகுந்த ஈடுபாடும் ஒட்டுதலும் கொண்ட இவர்கள் இராமபிரானின் வழி வந்தவர்களாகக் கருதப்பட்டனர். இராமநாதசுவாமி கோயிலின் அடியார்களாகவே இவர்கள் விளங்கினர்.

சடையக்கத் தேவர் உடையான்சேதுபதி (கி.பி.1605 – 22) இராமேசுவரம் யாத்திரை மேற்கொள்வோருக்கு மிகுந்த பாதுகாப்பு அளித்தவர் ஆவார். தனது கொடைகள் மூலமாகவும் கட்டடத் திருப்பணி மூலமாகவும் இராமேசுவரம் கோயிலை விரிவடையச் செய்தார். கி.பி.1607 இல் ஐந்து கிராமங்களைக் கோயில் வழிபாட்டுச் செலவினங்களுக்காக அளித்தார்[143]. இதே ஆண்டில் கள்ளிக்குளம், கரிசங்குளம், வேலாங்குளம், பொட்டக்குளம், வேடாந்தைக்கண்ணி, படுவனமுட்டம், ஸ்ரீகுளம் முதலிய ஊர்களில் இருந்த பாசனக்குளங்களின் கீழிருந்த நிலங்களை இராமேசுவரம் கோயிலுக்குத் தானமாகத் தந்தார்[144]. இவரே இக்கோயில் கொடைகளின் அறங்காவலராக இருந்து கோயிலில் பூசைசெய்யும் பட்டர்களுக்கும் திருமடைப்பள்ளியில் வேலை செய்வோருக்கும் பணியூதியமாக நிலக்கொடைகள் அளித்தார்[145]. மேலும் கி.பி.1608 இல் கருங்குளம், கன்னிக்குளம், வெங்குளம், பொட்டல்குளம், விடந்தைக்கண்ணன், கரிசல்குளம் புதுவல முட்டம் மற்றும் ஸ்ரீகுளம் போன்ற பல ஊர்களை கோயிலுக்கு அளித்தார். [146]

உடையான்சேதுபதியின் மகனான கூத்தன்சேதுபதி என்று அழைக்கப்பட்ட தளவாய்சேதுபதி கி.பி.1616 இல் மருதங்கநல்லூர் என்ற ஊரை இராமேசுவரம் கோயில் பூசைக்குத் தந்தார்[147] இவரே குளம், வேங்கிட்டக்குறிச்சி முதலிய ஊர்களை இராமநாத சுவாமிக்குத் தானமாகத் தந்தார்[148]. இவர் கி.பி.1623- 24 இல் முதல் பிரகாரத்தில் நடைமாளிகை மண்டபம், அர்த்தமண்டபம் முதலியவற்றைக் கட்டினார்[149]. கி.பி.1624 இல் கோயில் நிர்வாகத்தையும் சொத்துக்களையும் நிருவகிக்கும் அறங் காவலராக, இராமநாதபண்டாரம் தளவாய்சேதுபதியால் அமர்த்தப்பட்டார். கோயில் நிர்வாகத்தில் தவறு செய்பவர் களைத் தண்டிக்கும் பொறுப்பும் இவரிடம் அளிக்கப்பட்டது.[150] கி.பி.1627 இல் இராமநாதபுரம் அரச நிர்வாகத்தால் வழங்கப்பட்ட அறக்கட்டளையிலிருந்து நாள்தோறும் பாலும் மலரும் கொண்டு அர்த்தசாமபூசை நடத்துவதற்கு இராமநாதபண்டாரத்திற்கு ஆணையிட்டார்[151].

இரண்டாம் சடையக்கதேவரே (கி.பி.1636-45) இராமேசுவரத்தில் சொக்கநாதசுவாமி சன்னதியைக் கட்டிய தாகக் கூறப்படுகிறது[152]. கிழக்கு கோபுரத்தின் கட்டுமானம் இவர் காலத்தில் தொடங்கப் பெற்றது.[153] இவரது காலத்திற்கு முந்திய மற்றொரு (கி.பி.1092) கல்வெட்டு, நாகவாவியைச் சேர்ந்த நானூறு மகாஜனங்களும் அவ்வூரைச் சார்ந்த வணிகர்களும் இராமேசுவரம் கோயிலில் இருந்த அனைத்து துணையாலயங் களுக்குத் தேவையானவற்றைச் செய்யவும் கிழக்குகோபுரத் திருப்பணி செய்யவும் கட்டளை ஏற்படுத்தியதாகத் தெரிவிக்கிறது.[154] இதனால் இரண்டாம் சடையக்கத் தேவர் காலத்திற்கு முன்பிருந்தே கிழக்குக் கோபுரம் இருந்துள்ளது என்றும் அதில் ஏற்பட்ட பழுதை நீக்கும் பராமரிப்புப் பணியையே இச்சேதுபதி செய்தார் என்றும் கூறலாம். மூன்றாம் திருச்சுற்றில் வடகிழக்கு மூலையில் இருக்கும் சபாபதிகோயில் இரண்டாம் சடையக்கத்தேவர் காலத்ததாகும்[155]. கி.பி.1702 இல் இரண்டாம் சடையக்கத்தேவர் இக்கோயிலைக் கட்டிமுடித்தார் என்று என். வானமாமலை கூறுகின்றார்[156]. ஆனால் இச்சேதுபதியின் காலம் கி.பி.1645 ஆம் ஆண்டோடு முடிவடைகிறது. இவரே அனுமார் கோயிலைக் கட்டிப் பாணலிங்கத்தைப் பிரதிஷ்டைசெய்து சாயல்குடிப் பகுதியிலிருந்துவந்த வருமானத்தை அளித்தார்

என்று கருதப்படுகிறது. இக்கட்டுமானத்திற்காக சுங்கமாக வாங்கப்பட்ட வருமானம் பயன்படுத்தப்பட்டது என்றும் கருதுகின்றனர்.[157]

திருமலை இரகுநாத சேதுபதி (கி.பி.1645 - 1670) இராமநாதபண்டாரத்திற்கு, அரசு நிர்வாகத்திலிருந்து ஒதுக்கப் பட்ட பணத்திலிருந்து இராமேசுவரம் கோயில் வழிபாட்டுச் செலவுகளைச் செய்ய வேண்டும் என்றும் பிறர் அளித்த பணத்திலிருந்து செய்ய வேண்டாம் என்றும் ஆணை வழங்கியுள்ளார்.[158] இவரே நவராத்திரி உற்சவத்தை சங்கர குருக்களும் அவரைச் சார்ந்தவர்களும் நடத்துவதற்காக கி.பி. 1658 இல் தானம் வழங்கினார்[159]. இத்தோடு மராட்டிய குருக்களின் சபையார் இக்கோயிலில் பூசை செய்வதற்குரிய சில உரிமைகளைத் தந்து இராமநாதசுவாமி பர்வதவர்த்தினி மடப்பள்ளிக் காரியங்கள் செய்வதற்கு ஆணை அளித்தார்.[160] கி.பி.1667 ஆம் ஆண்டைச் சார்ந்த திருமலைசேதுபதியின் செப்பேடு குரிச்சாத்தன் சேர்வைக்காரன் திருச்சுழிக்கு அருகிலுள்ள சென்னிலக்குடி என்ற ஊரை அறக்கட்டளைக்காக தானமாக அளித்ததாகக் கூறுகிறது[161]. இவன் இச்சேதுபதியின் அலுவலராக இருக்க வேண்டும்.

திருமலைநாயக்கர் தொடங்கிய இரண்டாம் பிரகாரத்தின் தென்பகுதியை முடித்துவைத்தவர் திருமலைசேதுபதி ஆவார்[162]. இதனை அம்மண்டபத்துக்குத் தென்புறம் செல்லும் வழியில் அமைந்த இவரது உருவச் சிலையும் இவரது மகன் இரகுநாதசேதுபதியின் உருவச்சிலையும் உறுதிப்படுத்துகின்றன. இதனை உறுதிப்படுத்தும் கல்வெட்டுச் செய்திகள் இல்லை. கி.பி.1648 இல் திருமலை சேதுபதி முகிழ்தகம் என்ற கிராமத்தினை இராமேசுவரம் கோயிலுக்குத் தானமாகத் தந்துள்ளார்[163]. திருமலை சேதுபதி காத்தத் தேவரால் கி.பி.1640 இல் புளியங்குடி, கருமல், குமாரக்குறிச்சி போன்ற ஊர்கள் தானமாகத் தரப்பட்டுள்ளன[164]. கி.பி.1678 இல் கிழவன் சேதுபதி என்று அனைவராலும் அழைக்கப்பட்ட புகழ்பெற்ற சேதுபதியான இரகுநாதசேதுபதி தீயனூர் கிராமத்தை அக்கோயிலுக்கு அளித்தார்.[165] இவரே கி.பி.1679 இல் மேலும் சில ஊர்களை இக்கோயிலுக்கு வழங்கினார்.[166] சேதுபதியின் இளவரசியான பங்காரு நாச்சியார் கி.பி. 1680 இல்தேர்ப்போகி என்ற கிராமத்தைத்

தானமாகத் தந்தார்[167]. இராமேசுவரம் கோயிலுக்கு கி.பி.1682 இல் இரகுநாதசேதுபதி காத்தத்தேவர் நம்புதாழை, ஆதனூர் முதலிய கிராமங்களை அளித்தார்.[168] இராசசிங்கமங்கலம் பகுதியில் மேலும் சில நிலங்களை கி.பி.1687 இல் இவரே அளித்தார்.[169] இவரே 1691 இல் நல்லுக்குறிச்சி என்ற ஊரை அன்னதானச் சத்திரச் செலவிற்காக அளித்தார்.[170] இரகுநாதசேதுபதியின் மனைவி காதலிநாச்சியார், கி.பி. 1693 இல், அறக்கட்டளைக்காக மாலச்சுதை என்ற ஊரைத் தந்தார்.[171] கி.பி. 1707, 1709, ஆகிய ஆண்டுகளில் ஏற்றுமதி இறக்குமதி ஆகியவற்றின் மூலம் வந்த வரியிலிருந்து ஒரு பகுதியை இராமேசுவரம் கோயிலுக்கு இரகுநாதசேதுபதி அளிக்கச் செய்தார்.[172]

கி.பி. 1713 இல் விஜயரகுநாதசேதுபதி (கி.பி. 1710-1720) கோவிலுக்குள் நடத்திவந்த அன்னதானச் சாலைக்காக சில இடங்களை அளித்தார்.[173] கி.பி. 1714 இல் விளத்தூர், சமஞ்சூர், சின்னத் தொண்டி முதலிய ஊர்களையும் மேலும் சில ஊர்களின் நிலங்களையும் இராமநாதசுவாமி கோயிலுக்கு அளித்தார்.[174] மேலும் கோயிலுக்காகத் தங்கத்தேரையும் செய்து தேரோட்டத் திருவிழா நடத்துவதற்கும் ஏற்பாடு செய்தார்.[175] இதில் கி.பி. 1714 இல் இராமேசுவரக் கோயிலில் வெள்ளிக்கிழமை பூசைக்காக சில வருமானத்தை அளித்தார்[176]. ஒருமுறை முத்துக்குளிப்பில் கிடைத்த முத்துக்கள் அனைத்தும் இராமநாதசுவாமியை அலங்கரிக்க வேண்டும் என்று விஜயரகுநாதசேதுபதி உறுதியளித்ததாகக் கூறப்படுகிறது.[177] விஜயரகுநாதசேதுபதி அடிக்கடி இராமேசுவரம் சென்று கோயில் காரியங்களை மேற்பார்வையிட்டு வந்தார். பயணிகளுக்கு வேண்டிய வசதிகளைச் செய்துகொடுத்து அவர்களுக்கு வேண்டும் உதவிகளையும் செய்துமுடிப்பதையும் வழக்கமாகக் கொண்டிருந்தார். தனது மகள்கள் இருவரை மணமுடித்துக் கொடுத்த மருமகனைப் பாம்பனிலிருந்து இராமேசுவரத்திற்கும் தனுஷ்கோடிக்கும் செல்லும் பயணிகளைக் கவனிக்கும் பொறுப்பில் ஈடுபடுத்தினார்[178]. இச்சேதுபதி கி.பி. 1723 இல் மாலன்குடியையும் கி.பி. 1728 இல் அன்ன வாசலையும் இராமேசுவரம் கோயிலுக்குத் தானமாகத் தந்தார்.[179]

குமாரமுத்து விஜயரகுநாதசேதுபதி (கி.பி.1729-35) மிகவும் மதிப்பு வாய்ந்த அறக்கொடைகளைக் கோயிலுக்கு அளித்தார். கீழக்கரை, திருப்புல்லாணி, திருவுத்திரகோசமங்கை முதலிய ஊர்களையும் கோயிலுக்குக் கொடுத்தார்.[180] கி.பி. 1733 இல் இராமேசுவரம் சபாபதி ஆலயத்திற்கு குளத்தூர்க் கிராமத்தைத் தானமாகத் தந்தார்.[181] கி.பி. 1742 ஆம் ஆண்டைச் சார்ந்த இரண்டு ஆவணங்கள் பாக்குடி, சித்தார்கோட்டை, புதுப்பட்டனம் முதலிய ஊர்கள் இரகுநாதசேதுபதி காத்தத்தேவரால் அளிக்கப் பட்டுள்ளன.[182] இதேயாண்டில் விஜயரகுநாதசேதுபதியால் பதினைந்து ஊர்கள் தானமாக இராமேசுவரம் கோயிலுக்குக் கொடுக்கப்பட்டுள்ளன.[183] முத்துக்குமார விஜயஇரகுநாத சேதுபதியால் கி.பி. 1748 இல் பூதாண்டிக்கிராமம் இக்கோயிலுக்குத் தானமாகத் தரப்பட்டுள்ளது.[184]

இராமேசுவரம் கோயிலுக்குச் சிவகங்கைப் பகுதியில் இருந்த இல்லக்கல்வனேரி, மாயவாரி, கண்டுகொண்டமாணிக்கம், சம்பந்தனேந்தல், முத்துராமலிங்கபுரம், புள்ளங்குடி, புதுவயல், அன்னவாசல், முதலிய ஊர்கள், கி.பி. 1750 இல், விஜயகோபால சேதுபதியால் அளிக்கப்பட்டன[185]. கி.பி. 1760 இல் செல்லத்தேவர் (1749-62) சொக்கப்பன்கரை, சேதுக்கு வாய்த்தான், நெடுங்கரை முதலிய ஊர்களைத் தானமாகத் தந்தார்.[186] கி.பி. 1764 இல் முத்துராமலிங்க விஜயரகுநாத சேதுபதி நிலமழகியமங்கலம் என்ற ஊரையும் அதிலிருந்த இரண்டு ஏரிகளையும் தனது அமைச்சர் பெயரால் அளித்தார்[187]. கி.பி. 1770 இல் இச்சேதுபதி இராமேசுவரத்தில் யாத்திரிகர்களின் உணவிற்காகவும் தண்ணீர்ப்பந்தலுக்காகவும் சில நிலங்களைத் தானமாகத் தந்தார்.[188] இராமேசுவரம் கோயிலின் மூன்றாவது பிரகாரம் கி.பி.1769 ஆம் ஆண்டில் இவரால் முடிக்கப்பெற்றதாக எண்ணுகின்றனர். இவரது அமைச்சர்களான முத்திருளப்பபிள்ளையும் கிருஷ்ணஐயங்காரும் இப்பணியை மேற்பார்வையிட்டனர்.[189] இப்பணி முடிப்பதற்கு இருபத்தொன்பது ஆண்டுகள் ஆயின என்று கூறுகின்றனர்[190]. எனவே இப்பிரகாரம் கட்டும்பணி அனேகமாக கி.பி. 1740 இல் சிவகுமார முத்துவிஜய இரகுநாதசேதுபதியால் தொடங்கப்பட்டிருக்க வேண்டும்.

இம்மூன்றாம் பிரகாரத்திலுள்ள மண்டபங்களில் கிழக்கிலும் மேற்கிலுமாக உள்ள உருவச்சிலைகள் முத்துராமலிங்க விஜய இரகுநாதசேதுபதியும் அவரது இரு அமைச்சர்களுமாக இருக்க வேண்டும் என்று கருதுகின்றனர். கி.பி. 1772 ஆம் ஆண்டிற்கும் கி.பி. 1830 ஆம் ஆண்டிற்கும் இடையில் இராமேசுவரம் கோயிலுக்குச் சேதுபதிகள் அறக்கொடைகள் வழங்கியதாகத் தெரியவில்லை.

இக்காலம் இராமநாதபுரம் சேதுபதிகளின் வரலாற்றில் குழப்பமும் போராட்டமும் நிறைந்த காலமாகும்.

இராமசாமிசேதுபதி (கி.பி. 1829–30) இராமேசுவரம் கோயிலுக்கு அதிக அளவு அறக்கொடைகள் அளித்தார்.[191] மீண்டும் கி.பி. 1846 வரை சேதுபதி வரலாற்றில் பின்னடைவு ஏற்பட்டது. பொன்னுச்சாமித்தேவர் (கி.பி. 1862–73) இராமேசுவரம் செல்லும் பக்தர்களுக்கு வழிப்பறி, கொள்ளை போன்ற தொல்லைகளிலிருந்து பாதுகாப்பு அளித்தார்.[192] கி.பி. 1863 இல் இவரது அமைச்சர் பெரியநாயகம்பிள்ளை அம்மன்கோயில் கொடிமரத்தைப் பழுது பார்த்துத் திருப்பணி செய்தார்[193]. சேதுபதிகள் இக்காலத்தில் தங்களது அதிகாரத்தை இழந்தாலும் இராமேசுவரம் கோயிலுக்குத் தொடர்ந்து தங்களது அறப்பணிகளைச் செய்தனர்.

இசுலாமிய ஆட்சியாளர் தொல்லை இருந்தாலும் வரலாற்றில் இராமேசுவரம் கோயில் கி.பி. 14 ஆம் நூற்றாண்டின் தொடக்கத்திலிருந்து அதாவது விஜயநகரப் பேரரசின் எழுச்சிக் காலத்திலிருந்து அதிகஅளவு அறக்கொடைகள் பெற்று வளர்ச்சியடைந்தது. விஜயநகரவேந்தர் காலத்தின் பெருங் கட்டட வளர்ச்சியைக் கண்டது. பூசைகளும் திருவிழாக்களும் திருத்தியமைக்கப்பட்டுப் புதிய திருவிழாக்களும் உண்டாக்கப்பட்டன. பக்தியுடன் வாழ்ந்த விஜயநகர வேந்தர்களும் அவர்களுக்குக் கட்டுப்பட்டு ஆண்ட மதுரை மன்னர்களும் இராமேசுவரம் கோயிலுக்குப் பெருமளவில் ஆதரவு தந்து புத்தொளியும் புத்துயிர்ப்பும் அளித்தனர்.

இராமநாதபுரம் பகுதியில் சேதுபதிகளின் அரசு ஏற்பட்டது இராமேசுவரம் கோயிலுக்கு பெரும் அருட்செல்வமாக அமைந்தது. மதுரை நாயக்க மன்னர்களால் சேதுவைக் காக்க உருவாக்கப்பட்ட இவர்கள் பக்தர்களைப் பாதுகாக்கும் பணியிலும் ஈடுபட்டனர். காலப்போக்கில் கோயிலைக் காத்து அதன் வளர்ச்சிப் பணியில் ஈடுபட்டனர். எனவே கி.பி. 17 ஆம் நூற்றாண்டு இராமேசுவரம் வளர்ச்சியில் மற்றொரு முக்கிய காலகட்டமாகும். கோயிலின் பெரும்பகுதியான கட்டடங்கள், நாயக்கர் மற்றும் சேதுபதிகளின் காலத்திலேயே அவர்கள் ஆதரவுடன் திருத்திக் கட்டப்பட்டன.

சேதுபதிகளின் வரையாது வழங்கிய அளவற்ற கொடைகள் மூலமாக கோயில் விரிவடைந்து அதன் செல்வமும் பெருகியது.

இசுலாமிய ஆட்சியாளர் தொல்லை இருந்தாலும் கூட அது சிறிதளவு காலமே நிலவியது. நாயக்கமன்னர்களும் சேதுபதிகளும் கோயிலின் பாரம்பரியப் பெருமையைக் காக்கும் பராமரிப்புப் பணிகளைச் செய்துள்ளனர்.

## குறிப்புகள்

1. **Valmiki's Ramayana, Yuddhakanda,** Saruga:126, vv.20-1 இது தென்னிந்தியப் பிரதிகளில் புகுத்தப்பட்ட இடைச் செருகல்களாக இருக்க வேண்டும்.
2. தற்போது உப்பூரில் இவ்விநாயகர்கோயில் உள்ளது. தேவிபட்டனத்தில் ஒன்பது தூண்களாக நடப்பட்ட நவக்கிரகங்கள் வழிப்பாட்டில் உள்ளன.
3. *ஆனந்தராமாயணம், காண்டம் 10.5, 28, 122, 140.* சேதுமாதவனின் சன்னதி புண்ணியநிதி என்ற பாண்டியமன்னனால் ஏற்படுத்தப்பட்டதாகக் கூறப்படுகிறது.
4. *ஆனந்தராமாயணம், யுத்த காண்டம்.*
5. **Siva Purana**, II, ch.42, vv.46–7.
6. **Linga Purana**, II, ch.11, v.38.
7. **Padma Purana**, Sristikanda, canto.38
8. **NaradiyaPurana**, Uttara kanda, ch.76.
9. **Agneya purana**, Bhuvanakosavarnanai, Kshetramahatmyam.
10. *கூர்ம புராணம், பூர்வகாண்டம்*
11. *கந்தபுராணம், சேதுமகாத்மியம், காண்டம் 43.*
12. Radhagovinda Basak, ed., (1959), **Pravarasena's Ravanavadha Mahakavyam (Sethu bandha)**, pp. v-viii
13. M.S.Purnalingam Pillai, (1945), **Tamil India,** p.53., இவ்வாசிரியர், தென்னிந்தியாவில் திராவிட கலாச்சாரம் பற்றி எழுதிய முக்கிய வரலாற்று முன்னோடி. ஆனால் இவரது ஆய்வுநெறி ஒருதலை பட்சமாகவுள்ளது.
14. Shashti Asthana, (1976), **History and Archaeology of India's contacts with other countries from earliest times to 300 BC**, p.143.
15. *அகநானூறு, பா.70.*
16. ARE 586 A/1905
17. ARE 484 /1905
18. SII., XIX. No.64; ARE 478/1922
19. ARE 125, 126, 127, 129, 134/1911
20. ARE 617/1904;
21. P. Sambandam, (1948), **Siva Shrines in India and Beyond** (Tamil) pl.v, p.11
22. ARE 261, 262, 263, 264/1985.
23. Travancore Archaeological Series, V, p.40.
    R. Vasudeva Poduval, (1941), **Tranvancore Inscriptions - A Topographical list**, p.183.
24. P. Sambandam, op.cit., p.14
25. ARE 52/1961–62.

26. ARE 518 – 525/1960 – 61
27. A. Sundara, (1973), **"The Ramesvara temple in Kamdolli and Bracket figures, in Srikanthika,"** (Dr.S.Srikantha Sastri Felicitation Volume), pp.29 – 35.

    SII., Vol.XXI.Nos.312, 313.
28. G.Kuppuram (1983) **"Chola Temples in Karnataka; Vignettes from Art and Architecture"** (Heritage of the Tamils), p.385
29. T.V. Pathy, (1980), **Elura Art and Culture,** p.59.
30. Archaeological Survey of Ceylon, Annual Report, 1908, pp. 28 –30.
31. S.R.Balasubramaniyan, (1979), **Later Chola Temples** (AD.1070-1280), pp.274-275.
32. *தற்போது கேரளத்திலுள்ள ஐய்யப்பன்கோயிலீ தமிழ்நாட்டில் மக்களால் மிகவும் போற்றப்படுகின்றது. பல நாட்கள் விரதமிருந்து கடினமான பயணம் மேற்கொண்டு இக்கோயிலுக்குச் செல்கின்றனர். இக்கோயிலுக்குச் செல்ல இயலாத நிலையில் தமிழ்நாட்டிலேயே அவரை வழிபட ஏராளமான கோயில்கள் தற்போது தோன்றியுள்ளன.*
33. Arnold Wright, ed., (1914–15), **Southern India, Its History, People, Commerce and Industrial Resource,** p.472.
34. **Siva Purana,** III, ch.42, 1.49
35. **Matsayapurana,** pt.II., ch.*191*

    *இப்புராணம் இராமேசுவரம் கோயிலைப்பற்றிக் கூறும்போது பிராமணனைக்கொன்ற பாவம் இவ்வாலயத்துறையும் ஈசனால் அழிக்கப்படும் என்கிறது.*
36. *சேதுபுராணம், அகஸ்தியர் தீர்த்தச் சருக்கம்.*
37. *மேலது, இலட்சுமிதீர்த்தச் சருக்கம்.*
38. *மேலது, சிவதீர்த்தச் சருக்கம்.*
39. *மேலது, இராமதீர்த்தச் சுருக்கம்*
40. G.Buhel, ed., (1875), **Vikramankadevacharita,** Introduction.
41. P.V.Jagadisa Ayyar, (1982), **South Indian Shrines,** p.493
42. *பெரியபுராணம், கழற்றறிவார்நாயனார் புராணம், 1974,* பக்.603–604.
43. *அப்பர் தேவாரம், 4.91.1*
44. *திருஞானசம்பந்தர் தேவாரம், மூன்றாம் திருமுறை*
45. *திருப்புகழ் பக். 993, 994.*
46. R. Nagaswamy, ed. (1979), **Tiruttani and Velanjeri Copper Plates,** State Dept. of Archaeology, Tamilnadu, p.2

    *துலாபாரம் என்பது தானம்கொடுக்கும் மனிதர் எடைக்குஎடை ஏதாவது ஒரு பொருளைக் கொடுப்பதாகும். பெரும் மன்னர்கள் தங்கள் எடைக்கு நிகராகத் தங்கத்தினையே இராமேசுவரம் கோயிலுக்குக் கொடுத்துள்ளனர். இவ்வாறு தானம் செய்யும்போது தானம் தருபவர் துலாக்கோலின் இடதுதட்டில் அமரவேண்டும். தானம் கொடுக்கப்படும் பொருள் வலது தட்டில் இருக்கவேண்டும்.*
47. **Epigraphia Indica,** (EI), IV, *289.*

48. R.Nagaswamy, (1978), **Ramanathapuram An Archaeological Guide,** p.8 *ஆனால் கே.ஏ.நிலகண்டசாஸ்திரியார் இச்செய்தியின் உண்மைத் தன்மையை மறுக்கின்றார்.* (K.A.N.Sastri, **The Colas, p.132.**)
49. EI, II, p.126
50. SII; IV; No.456; ARE 20/1899
51. EI.,XXXII, p.192
52. ARE 119, 123/1900; **Epigraphia Carnatica**, (EC), IX, p.20 EI.,XXXI p.99; EC, V. p.15; EC. VI, p.129, SII, XII, p.x
53. ARE 14/1938
54. S.Krishnaswamy Iyengar, (1940), **A History of the Holy Shrines of Sri Venkatesa in Tirupathi**, I, p.397.
55. EC., III, p.100.
56. ARE 197/1943 – 44
57. N.Sethuraman, (1978), **The Imperial Pandyas**, p.39.
58. ARE 435/1906; ARE 402/1907
59. SII., VIII, No.390; ARE.104/1903; ARE 9/1915
60. SII., VI, No.455; ARE 19/1899.
61. ARE 72/1909
62. *பாண்டிய குலோதயம் - பக். 215 – 8*
63. EI.,XXXVI,p.27
64. N.Sethuraman, (1979) **"Dates of some of the Pandyas and some of their temples"**, (presented to International Souvenir of "Indian Epigraphy", bearing on Art History), Varanasi, December, 18–20, p.3
65. I.A.,I. p.196; Robert Sewell, (1884), **List of Inscriptions and Sketch of the Dynasties of Southern India**, p.24.
66. *இராமேசுவரம் தேவஸ்தானம் அலுவலகத்திலுள்ள ஆவணம்.*
67. *நிசங்கமல்லன் சிங்கபுரத்துச் செயகோபனுக்கும் பார்வதி மகாதேவிக்கும் பிறந்தவன். பராக்கிரமபாகுவால் இவன் இலங்கைக்கு அழைக்கப்பட்டவன். பராக்கிரமபாகு இவனைத் தனது மருமகன் என்று குறிப்பிடுகின்றான்.*
68. EI., XXXVI, pp.22–32.
69. SII., III. p.212; ARE.170/1902; ARE 288/1907
70. ARE 90/1905
71. EI., XXXVI, pp.22-32.
72. SII., IV., pp.56-57
    K.K.Pillai, *(1975)*, **South India and Sri Lanka**, p.22. *யாழ்ப்பாணத்து அரசர்கள் இராமேசுவரத்தில் இருந்த பிராமணர்கள் அல்லது சத்திரியர்களோடு மணவுறவு, கி.பி. 12 ஆம் நூற்றாண்டளவில், வைத்துக்கொண்டார்கள். இவர்கள் ஆரியச்சக்கரவர்த்தி என்று அழைக்கப்பட்டதாக பிள்ளை அவர்கள் கருதுகின்றார்.*
73. C.S. Navaratnam, 1964, **A Short History of Hinduism in Ceylon and three Essays on Tamils,** pp 31-32.
74. C.Sivaratnam, (1968), **The Tamils in Early Ceylon,** p.31
75. Iswari Prasad, 1972, **History of Medieval India,** pp.231-236

76. Elliot and Dowson, 1970, **History of India as told by its own Historians**, p.91.
77. Iswari Prasad, **op.cit.,** p.235.
78. R.C. Majumdar, ed., 1967, **History and Culture of the Indian people**, VI, p.36.
79. *மேலது, ப.37.*
80. *மேலது, பக். 36–37*
81. N.Venkataramanayya and K.A.N.Sastri, 1942, **Early Muslim Expansion in South India**, p.44
82. *மேலது, ப.70.*
83. A.L. Basham, ed., (1975), **A Cultural History of India**, p.253.
84. *சோமலே, (1972), இராமநாதபுர மாவட்டம் ப.292. இதேபோன்ற தலவரலாறு மதுரைக்கோயில் பற்றியும் உள்ளது.*
85. Iswari Prasad, **op.cit,,** p.235; N.Sethuraman, **op.cit.,** p.181.
86. Elliot and Dowson, **op.cit.**, p.219
87. I.A., 1914, p.4
88. *இதுதொடர்பாக பல கருத்து முரண்பாடுகள் உள்ளன. பின்வரும் வரலாற்றாசிரியர்கள் பின்வரும் காலங்களைக் கொடுத்துள்ளனர்.*
    1. S. Krishnaswamy Iyengar, (**Ancient India**, p.28) – between AD. 1344 and 1356
    2. K.A.N.Sastri, (**The Pandyan Kingdom**, pp. 243-244) A.D. 1365 or a little earlier.
    3. Rev.Father Heras (**The Aravidu Dynasty of Vijayanagar**, pp.104 – 107) AD. 1371.
    4. A.Krishnaswami, (**The TamilCountry under Vijayanagar**, p.34) AD. 1371.
89. ARE106 and 111/1903
90. EI., VIII, p.300
91. *மேலது, பக். 298-302*
92. *மேலது*, III, *பக்*.225-8
93. C.Sivarathnam, **op.cit.,** p.31
94. A.Krishnaswami, **op.cit.,** p.71
95. P.B. Desai, ed., (1970), **A History of Karnataka**, p.362.
96. ARE 89/1905
97. Burgess and Natesa Sastri, **Tamil and Sanskrit Inscriptions**, p.59
98. A Krishnaswami, **op.cit.,** p.131; P.B.Desai **op.cit.,** p.362
99. N. Venkataramanayya, and. K.A.N. Sastri, ed., 1940, **Further Sources of Vijayanagar History**, p.159.
100. **Tirumalai Tirupati Devasthanam Epigraphical Report**, (TTDER), pp.153-154.
101. ARE 719/1917.
102. EI., XIV, (1917-18), p.174
103. **Ibid.**, XIV, pp.231 – 240.
104. TTDER, p.150

105. **Ibid**; p.179 Fn
106. ARE 146/1903
107. TTDER., p.152
108. ARE198/1943-44
109. K.V.Raman, (1975), **"Historical Glimpses of Rameswaram"** (in Saga of Rameswaram temple), p.306
110. ARE. 40/1897, ARE 222/1924.
111. TTDER, p.322.
112. KAN.Sastri, **op.cit.,** p.278
113. N.Venkataramanayya, **Further Sources, op.cit,**, pp.244-46.
114. *மேலது ப.44*
115. D.Bailey Sydney, (1952), **Ceylon,** p.41
116. Rev. Fr.Heras, **op.cit.,**56; இக்காலத்தில் சேதுபதிகள் அதிகாரப்பூர்வமாக இராமேசுவரம் சேதுக்காவலர்களாக இருந்திருக்கவில்லை.
117. *மேலது, ப.159*
118. ARE 72/1928
119. T.V.Mahalingam, (1977), **Readings in South Indian History,** p.188.
120. F.C. Danver's Report on the Portuguese Records Relating to the East India, 1892, pp.43-44
121. *தாயுமானவர் இறந்த ஆண்டு பற்றி மாறுபட்ட கருத்துக்கள், அதாவது கி.பி. 1659, கி.பி. 1734, கி.பி. 1736 என்று கூறப்படுகின்றன.* (K. Seshadri, Setupatis of Ramnad, (unpublished Ph.D. thesis, M.K. University, p.225)
122. N.Kandasamy Pillai, **"Thayumanavar"** pub. in the Hindu, dated 18, March 1962.
123. C.S. Navaratnam, **op.cit.,** p.48
124. ARE 98/1903; ARE 340/1918; *இங்கு கொடுக்கப்பட்ட சக ஆண்டிற்கு இணையான ஆங்கில ஆண்டு 1578 ஆகும். ஆனால் இதில் கொடுக்கப்பட்ட விக்கிரம ஆண்டிற்கு இணையான ஆங்கில ஆண்டு 1580 ஆகும். இத்தானம் விசுவநாத நாயக்கரின் பேரன் வீரப்ப நாயக்கர் (கி.பி. 1572–1595) காலத்தில் கொடுக்கப்பட்டிருக்கிறது. ஆனால் தொல்லியல்துறை அறிக்கை விசுவநாத நாயக்கரின் மகன் வீரப்பநாயக்கர் என்று கூறுகிறது.*
125. *ஒரு வேலி என்பது சுமார் 6.66 ஏக்கராகும்.* ARE 97/1903.
126. *சிங்களதீவிபகதா கிருஷ்ணப்பநாயக்கரின் படையெடுப்பு பற்றி விரித்துரைக்கிறது.* R.Sathyanatha Aiyar, (1980), **History of the Nayaks of Madura,** Rep. pp. 49-51.
127. ARE 99/1903.
128. ARE 100/1903
129. ARE 102/1903
130. ARE 103/1903
131. W.Taylor, (1862), **Oriental Historical Manuscripts,** II Appendix, pp.48-50.
132. R.Sathyanatha Aiyar, **op.cit.,** p.68.
133. I.A., XLV, pp.102.5
134. Pharoach, **Gazetteer of South India,** p.392
Nelson, (1868), **The Madura Country,** III, pp.111-112

135. ARE 24, 1946-47.
136. A.S.S.I.R., 1910-11, pp.54-55
137. ARE 120/1910
138. R.Nagaswamy, **Ramanathapuram-An Archaeological Guide**, p.59.
139. Father J.Bertrand, (1850), **La Mission du Madura**, III, pp.60-64.
140. ARE 860, 861/1917.
141. இராமநாதபுரம் சமஸ்தானத்தில் உள்ள இந்த இரண்டு செப்பேடுகளின் படிகள் சேதுபதிகளின் வழிவந்த இராமநாதபுரம் திரு. மங்கலநாததுரை சேதுபதி அவர்களிடமிருந்து பெறப்பட்டன.
142. A.S.S.I.R., IV, p.107
143. *மேலது, ப.69.*
ARE *89/1911,* இராபர்ட்சீவல் தனது செப்பேடுகளின் தொகுதியில் தவறுதலாக சகம் *1521 (கி.பி. 1599)* என்று ஆண்டைக் குறிப்பிட்டுள்ளார். செப்பேட்டில் சகம் *1529 (கி.பி. 1607)* என்று குறிக்கப்பட்டுள்ளது.
144. A.S.S.I.R., IV, p.70
145. *மேலது, ப.72*
146. MER., 1911., C.P. No.12 (No.12 of Appendix. A)
147. இச்செப்பேடு நேரில் ஆய்வு செய்யப்பட்டது. மாநில அரசு தொல்லியல் துறையில் உள்ளது. "Saga of Rameswaram Temple" நூலில் பக் *c. 4-142* வெளியிடப்பட்டுள்ளது. ARE 31/1946-47.
148. ARE. 26/1946-47.
149. Burgess and Natesa Sastri, **Tamil and Sanskrit Inscriptions, p.60.**
150. ARE *34/1946-47* சகம் *1531 (கி.பி.1609)* என்று தவறுதலாக ஆண்டு குறிப்பிடப்பட்டுள்ளது. இதில் வரும் இரக்தாட்சி வருடம் கி.பி. *1624* இல் வருகிறது. தளவாய்சேதுபதியின் ஆட்சியாண்டு கி.பி.*1623* இல் தொடங்குவதால் கி.பி. *1624* என்பதே பொருத்தமாகும்.
151. ARE. 39/1946-47
152. K.Seshadri, **op.cit.**, p.33.
153. Fergusson, (1972), **History of Indian and Eastern Architecture**, p.383.
154. K.V.Raman, **op.cit.**, p.303.
155. T.Rajaram Rao, ed., (1933), **Ramnad Manual**, pp.162-168.
156. N.Vanamamalai Pillai, (1929), **The Sethu and Rameswaram**. p.68.
157. Somalay, ed., Saga of Rameswaram Temple, p.177.
158. ARE *36/1946-47;* இங்கு சகம் *153 (கி.பி.1653)* என்று குறிப்பிடப்பட்டுள்ள ஆண்டு பொருத்தமற்றதாகும்.
159. Burgess and Natesa Sastri, **op.cit.**, pp. 72-74.
160. *மேலது, பக். 70-74*
161. ARE 12/1935-36. Appendix - A.
162. T.Rajaram Rao, **op.cit.**, pp.162-168.
163. இதன்படிகள் இராமநாதபுரம் சமஸ்தானத்தில் உள்ளன.
164. *மேலது.*
165. *மேலது.*
166. Burgess and Natesa Sastri, **op.cit.**, pp. 79-80.

167. இதன்படிகள் இராமநாதபுரம் சமஸ்தானத்தில் உள்ளன.
168. மேலது.
169. ARE 2/1940–41. இங்கு *1609* என்ற ஆண்டிற்கு இணையாக கி.பி.*1668* என்று குறிப்பிடப்பட்டுள்ளது. ஆனால் கி.பி.1687 என்பதே சரியாகும்.
170. Somalay **op.cit.**, pp. c-78-79 (Copper Plate No.29)
171. இதன்படிகள் இராமநாதபுரம் சமஸ்தானத்தில் உள்ளன.
172. Mysore Archaeological Report (MAR), 1912, p.55.
173. ARE 32/1946-47.
174. Burgess and Natesa Sastri, **op.cit.**, pp.,83 - 87. Robert Sewell, **List of Antiquarian Remains in the Presidency of Madras**, I, pp.300 - 301.
175. தேவையுலா, பா.*129*.
176. ARE 1946–47.
177. I.A., 1917, XLVI; pp. 209 – 211.
178. T.Rajaram Rao, **op.cit.**, p.236.
179. இராமநாதபுரம் சமஸ்தானத்தில் இதன்படிகள் உள்ளன.
180. K.Seshadri, **op.cit.**, p.97.
181. Burgess and Natesa Sastri, **op.cit.**, Setupati Copper Plate, No.13
182. இதன்படிகள் இராமநாதபுரம் சமஸ்தானத்தில் உள்ளன.
183. துட்டியேந்தல், கலங்கபள்ளி, தீயக்காவன்சேரி, இலாந்தை, துட்டக்குடி, வாகைக்குளம், ஓடைக்கல், குலமாணிக்கம், கடம்பனேந்தல், வேங்கிட்டான்குறிச்சி, மும்முடிச்சாத்தன் மற்றும் பிற ஊர்கள் இங்கு குறிப்பிடப்படவில்லை.
184. இதன்படிகள் இராமநாதபுரம் சமஸ்தானத்தில் உள்ளன.
185. மேலது.
186. மேலது.
187. ARE 29/*1946-47*, செப்பேடு *31* இல் (Saga of Rameswaram Temple) கி.பி. *1758* என்று ஆண்டு குறிப்பிடப்பட்டுள்ளது. இது தவறானதாகும். முத்துராமலிங்க விஜயரகுநாதசேதுபதி கி.பி. *1762* இல் தான் ஆட்சிக்கு வந்தார்.
188. ARE. 7/1911. Appendix - A.
189. மு. இராகவையங்கார், *1938*, ஆராய்ச்சித் தொகுதி, பக்.*13–14*.
190. மேலது, பக்.*11-15*
191. The Collectorate Records of Madurai District AD, 1830, Vol.4578, pp. 126-129; Revenue Consultations, 1830 Vol.355. p.22-83.
192. K.Seshadri, **op.cit.**, pp.153.
193. Burgess and Natesa Sastri, **op. cit.**, pp.57 - 60.

## 3. கோயிலமைப்பு

வரலாற்றுச் சிறப்புமிக்க இக்கோயிலின் அமைப்பானது இதன் தொடர்ச்சியான வளர்ச்சியினைக் காட்டுகின்றது. மன்னர்களின் தொடர்ந்த ஆதரவின் காரணமாக சிறுகோயிலாகத் தொடங்கிய இதன் கட்டட அமைப்பானது காலப்போக்கில் ஒரு பெருங்கோயில் வளாகமாக மாறியுள்ளது. தமிழகத்தில் உள்ள பெருங்கோயில்களான மதுரை, திருவரங்கம், சிதம்பரம், காஞ்சிபுரம் போன்றவை ஒரே ஆண்டிலோ, அல்லது ஒரே நூற்றாண்டிலோ வளர்ச்சிபெற்றவை அல்ல. அவை பல நூற்றாண்டுகாலப் பரிணாம வளர்ச்சியின் விளைவுகளாகும். அவ்வகையில் அமைந்ததுதான் இத்திருக்கோயிலுமாகும். 13.6. ஏக்கர் நிலப்பரப்பில் 6 மீட்டர் உயரமான சுற்றுச்சுவருக்குள் இக்கோயில் அமைந்துள்ளது. சுற்றுச்சுவர் கிழக்கு மேற்காக 259.50 மீட்டர் நீளமும், தெற்கு வடக்காக 197.10 மீட்டர் அகலமும் கொண்டதாகும். பல சன்னதிகளைத் தன்னுள் கொண்டுள்ள இக்கோயிலில் இன்று இராமநாதசுவாமி சன்னதியும், பர்வத வர்த்தினி அம்மன் சன்னதியும் சிறப்புடன் விளங்குகின்றன. இங்குள்ள மற்ற பிற சன்னதிகள் மிகவும் தொன்மையானவை யாயிருந்த போதும் இன்று அவை முக்கியத்துவம் பெற்று விளங்கவில்லை. இக்கோயிலுக்கு நான்கு திசைகளிலும் வாயில்கள் உள்ளன. இதனைச் சர்வதோபத்ர அமைப்புமுறை என்பர். இவைதவிர, மதுரை மீனாட்சிசுந்தரேசுவரர் திருக்கோயிலில் உள்ளது போன்று கிழக்குப்பக்கத்தில் அம்மன் சன்னதிக்கு என்று மற்றுமோர் வாயில் அமைக்கப்பட்டுள்ளது. கோயிலின் வெளிச்சுவருக்கு அப்பால், இரு பிரதான சன்னதிகளுக்கு முன்பு, இருமுகப்புகள் உள்ளன.

கடற்கரைக்கு அருகே மேடான பகுதியில் அமைந்துள்ள இக்கோயில் மூன்று பிரகாரங்களைக் கொண்டுள்ளது. மூன்றாவது பிரகாரத்திற்கும் சுற்றுச்சுவருக்கும் இடையே, திருவாயில்கள் தவிர்த்த மற்றபகுதிகளில் பூந்தோட்டங்கள் இருக்கின்றன. இவற்றிலிருந்து தினப் பூசைக்கான பூக்கள் சேகரிக்கப்படுகின்றன. தோட்டங்கள் இருக்கும் பகுதியையும், கிழக்குப் பக்கத்தில் மூன்றாம் பிரகாரத்திற்கும் சுற்றுச் சுவருக்கும் இடையேயுள்ள

*பெரிய மண்டபத்தையும் தனித்தனிப் பிரகாரங்களாகப் பிரித்துக் காட்டி, இங்கு ஐந்து பிரகாரங்கள் இருப்பதாக எம்.ஏ. அனந்தாழ்வாரும் அலெக்ஸாண்டர் ரீயும் கூறுகின்றனர்[1]. ஆனால் பெர்குஷன், ஹேவல், ஜேம்ஸ் பர்கஸ், பெர்ஸி பிரவுன் போன்ற பிற கலை வல்லுநர்கள் மூன்று பிரகாரங்கள் என்பதைத் திட்டவட்டமாக ஒப்புக் கொள்கின்றனர்[2]. கோயிலின் உள்ளே இருபத்திரண்டு புனிதத்தீர்த்தக்கிணறுகள்[3], மற்றும் குளங்கள் உள்ளன. 1910-11 ஆம் ஆண்டிற்கான தொல்லியல் அறிக்கையில் இத்தீர்த்தங்களின் எண்ணிக்கை பதினான்கு எனத் தவறாகக் குறிக்கப்பட்டுள்ளது.[4] இத்தீர்த்தங்கள் ஒவ்வொன்றும் ஏதேனும் ஒரு சன்னதியை ஒட்டியே அமைந்திருப்பதைக் காணலாம். இராமேசுவரம் கோயிலின் மேன்மை இத்தீர்த்தங்களுடன் தொடர்பு படுத்தப்பட்டிருப்பது பற்றி முன்னமே கண்டோம். இதன் காரணமாக கோயில் அமைப்புமுறையில் இத்தீர்த்தங்கள் சிறப்பிடம் பெறுகின்றன.*

## *முதல் பிரகாரம்*

*முதல் பிரகாரத்தில் ஏராளமான சன்னதிகள் உள்ளன. அவற்றில் இராமநாதசுவாமி மற்றும் பர்வதவர்த்தினி அம்மன் சன்னதிகள் முக்கியமான இடத்தைப் பெறுகின்றன. இராமநாத சுவாமி சன்னதி 57.43 மீட்டர் நீளமும் 36.5 மீட்டர் அகலமும் கொண்டதாகும். சுவாமி சன்னதி 0.90 மீட்டர் உயரமான கல்மேடையின் மீது கட்டப்பட்டுள்ளது. இப்பிரகாரத்தின் நான்கு பக்கங்களிலும் உயரமான கல்மேடை உள்ளது. இதில் பரிவார தேவதைகளின் சிலைகள் உள்ளன. இந்த இரண்டு கல்மேடைகளுக்கும் இடையிலுள்ள திருச்சுற்றுப்பாதை இராஜபாதை மற்றும் வாமனபாதை என்றும் அழைக்கப்படுகின்றது. இது ஆரிய நகர அமைப்பு அடிப்படையில் எழுந்ததாகும்.[5] இப்பகுதி, மங்கலவீதி எனவும் அழைக்கப்படுகின்றது. இப்பிரகாரத்தில் அம்மன் சன்னதி இருக்கின்ற பகுதி 40.38 மீட்டர் நீளமும் 18.7 மீட்டர் அகலமும் கொண்டதாகும். இப்பிரகாரத்தில் காசி விசுவநாதர் சன்னதி, விசாலாட்சியம்மன் சன்னதி, நடராஜர் சன்னதி, பர்வதவர்த்தினியம்மன் சன்னதி, சோமஸ்கந்தர், இராமர் சன்னதிகள் உள்ளன. 1920 – இல் இப்பிரகாரம் திருப்பணி செய்யப்பட்டது. நாற்பதடி நீளமுள்ள பிரமாண்டமான மற்றும்*

*வேலைப்பாடுகளுடன் கூடிய கற்பலகைகள் வாயில்களிலும், கூரைப் பகுதிகளிலும் பயன்படுத்தப்பட்டுள்ளன. இப்பிரகாரத்தில் அலங்காரத்துடன் கூடிய அணியொட்டித் தூண்களும் ஒன்றோடு ஒன்று பிணைக்கப்பட்ட பெருந்தூண்களும் நிறுத்தப்பட்டுள்ளன.*




**இராமநாதசுவாமி கோயில் வளாகத் தரைப்படம்**
**(நன்றி : George Michell, Architecture and Art of Southern India, 1995)**

## *இராமநாதர் சன்னதி*

*இராமநாதர் சன்னதி கிழக்கு நோக்கி அமைந்துள்ளது. மூன்று தளமுள்ள விமானத்தின் கருவறை 10.30 .× 10.30 மீட்டர் அளவுள்ளது. இதன் பிரஸ்தரம் வரையான கல்காரப்பகுதியின் உயரம் 4.30 மீட்டர் ஆகும். கருவறையையும் அர்த்த மண்டபத்தையும் ஒரு சிறு அந்தராளம் பிரிக்கின்றது. இதற்கு முன்புள்ள மகாமண்டபம் தூண்களை உள்ளடக்கிய மிகப் பெரியது; 40.76 ×26.23 மீட்டர் அளவுடையது. இங்கிருந்துதான் பொதுமக்கள் வழிபாடு செய்வது வழக்கம். இதற்கு அப்பால் அவர்கள் அனுமதிக்கப்படுவதில்லை. அர்த்தமண்டபத்தின் வாயிலுக்கு மேலே கஜலட்சுமியின் உருவம் பொறிக்கப்*

பட்டுள்ளது. இதன் துவக்கத்தினைப் பௌத்தக் கலையின் தொடக்ககாலச் சிற்பங்களிலேயே காணலாம். வாயிலின் இருபக்கங்களிலும் துவாரபாலகர்கள் உள்ளனர். கருவறையின் மத்தியில் மூலபேரமாக, இராமனாலும் சீதாதேவியாலும் நிர்மாணிக்கப்பட்டதாகக் கூறப்படும் சிவலிங்கம் உள்ளது. சிவலிங்கத்தின் மீது, தலபுராணத்தின் கதைக்கேற்ப, அனுமனின் வால் பதிந்த தடம் மூன்று கோடுகளாகத் தென்படுகின்றது[6]. இராமலிங்கம் மென்மையான கல்லால் ஆனது. கருங்கல்லால் செய்யப்படவில்லை[7]. கருவறையினுள் மற்றொரு, ஸ்படிகத் தாலான, சிவலிங்கம் உள்ளது. மரபுப்படி இந்த ஸ்படிக லிங்கத்திற்கே முதற்பூசை மரியாதைகள் நடைபெற்று வருகின்றன.

## காசிவிசுவநாதர் சன்னதி

இராமநாதர் சன்னதிக்கு அருகே வடப்புறம் காசிவிசுவநாதர் சன்னதி உள்ளது. இச்சதுரவடிவ சன்னதி 5.20 × 5.20 மீட்டர் அளவு கொண்டதாகும். இதனுள் இருக்கும் சிவலிங்கம் காசியிலிருந்து அனுமனால் கொண்டு வரப்பெற்றதென மரபுவழிச் செய்திகள் கூறுகின்றன. இச்சன்னதியின் சுவர்கள் அழகான சிற்ப வேலைப்பாடுகளைக் கொண்டுள்ளன. பிரஸ்தரம் வரையுள்ள கல்காரப்பகுதி 3.80 மீட்டர் உயரமுடையது. இது இராமநாதர் சன்னதியின் மகாமண்டபத்திலேயே இடம் பெற்றிருக்கின்றது. இதன் வாயிலிலுள்ள துவாரபாலகர் உருவங்கள் உலோகத்தால் வடித்து வைக்கப்பட்டுள்ளன.

## சோமஸ்கந்தர் சன்னதி

இராமநாதர் சன்னதிக்குத் தென்புறம் 4.90 × 4.90 மீட்டர் அளவுள்ள சதுரவடிவ சோமஸ்கந்தர் சன்னதி உள்ளது. இதன் அர்த்தமண்டபத்தின் அளவு 1.25 × 1.25 மீட்டர் ஆகும். பிரஸ்தரம் வரையுள்ள கல்காரத்தின் உயரம் 3.80 மீட்டராகும். இதன் சுவர்கள் அழகுமிகு வேலைப்பாடுகளைக் கொண்டுள்ளன. இதனுள் சோமஸ்கந்தர் செப்புத்திருமேனி வைக்கப்பட்டுள்ளது. பிரஸ்தரத்தின் மீதுள்ள, கிரீவம், சிகரம், ஸ்தூபி என்னும் விமானத்தின் மேற்பகுதிகள் இச்சன்னதியில் கட்டப்படவில்லை. இது மிகவும் பிற்காலத்தில் கட்டப்பட்ட ஒன்றாகத் தெரிகின்றது.

இவைதவிர மகாமண்டபத்தில் இராமன், இலக்குவன், சீதை, அனுமன் ஆகியோரின் செப்புத்திருமேனிகள் வைக்கப் பட்டுள்ளன. இவை சிறு கூடாரத்திற்கடியில் வைக்கப் பட்டுள்ளன. இம்மண்டபத்தில் இராமநாதர் சன்னதிக்கு

இருபுறமும், அகஸ்தீசுவரலிங்கம் மற்றும் கந்தமாதனேசுவரலிங்கம் என்னும் இரு சதுரவடிவ கல்லிங்கங்கள் கூடாரங்களுக்கடியில் வைக்கப்பெற்றுள்ளன.

பிரகாரத்தின் இப்பகுதியில் மேலும் பல இலிங்கங்களும்[8] சிறு சன்னதிகளும், சிற்பங்களும் உயரமான மேடையின் மீது காணப்படுகின்றன. வடமேற்கு மூலையில் விநாயகர் சன்னதியும், அதற்கருகே, மேற்குச் சுவரையொட்டி, சந்திரசேகரர், கௌரியம்மன், கஜலட்சுமி, சுப்பிரமணியர், அர்த்தநாரீசுவரர், சங்கரநாராயணர், மனோன்மணி, வஜ்ரேசுவரி, போன்ற திருவுருவங்களும் உள்ளன. இவை ஒவ்வொன்றும் ஓரடி உயரம் கொண்டவை. இவற்றிற்கு அருகே பிச்சாடனமூர்த்தியின் செப்புத்திருமேனி உள்ளது.

தெற்குப்பக்கத்தில் ஒரு முனிவரின் உருவம் உள்ளது. இது பெரியபுராணம் இயற்றிய சேக்கிழாரின் சிற்பமெனக் கருதப்படுகின்றது. எனினும் இதன் அடையாளம் மேலும் ஆய்வுக்குரியதாகும். இவருக்கு அருகே,கூம்பு வடிவ, சிலிண்டர் வடிவ மற்றும் வட்ட வடிவ எட்டுச் சிவலிங்கங்கள் வைக்கப்பட்டுள்ளன. எழுபத்தியிரண்டு சைவ நாயன்மார்களின் கற்சிலைகளும்[9] அறுபத்திமூன்று நாயன்மார்களின் செப்புத்திருமேனிகளும் இங்குள்ளன. இவை ஒவ்வொன்றும் ஓரடி உயரம் கொண்டவை.

## நடராஜர் சன்னதி

இப்பிரகாரத்தின் வடக்குப்பக்கத்தில் இரண்டு சிறு நடராஜர் சன்னதிகள் உள்ளன. தெற்கு நோக்கிய இவை அம்பலவாணர் சன்னதி மற்றும் சிதம்பரேசுவர் சன்னதிகளாகும். இவற்றில் ஆடலரசரின் செப்புத்திருமேனிகள் சிவகாமியம்மையுடன் இடம்பெற்றுள்ளன.

## விசாலாட்சியம்மன் சன்னதி

வடக்குப்புற பிரகாரத்தின் நடுவில் விசாலாட்சியம்மன் சன்னதி உள்ளது. இது காசிவிசுவநாதர் சன்னதியை நோக்கி அமைந்துள்ளது. இதன் பெரும்பகுதி இரண்டாவது பிரகாரத்துடன் இணைக்கப்பட்டுள்ளது. இந்த ஏகதள விமானத்தின் மேற்பகுதியில் நவீனகாலக்கலையழகைக் காணமுடிகின்றது. இதற்கருகே கோடித்தீர்த்தமண்டபம் உள்ளது இங்கிருந்துதான் காசிக்குச் செல்வோர் தீர்த்தம் எடுத்துச்

செல்கின்றனர். இங்கு நர்மதேசுவரர் மற்றும் ஏகாதச ருத்ரர்கள் (பதினோரு இலிங்கங்கள்) உருவங்களைக் காணலாம்.

பிரகாரத்தின் கிழக்குப் பக்கத்தில் இராமநாதர் சன்னதிக்கான பிரதான நுழைவாயில் அமைந்துள்ளது. இது மெருகூட்டப்பட்ட கருங்கல்லால் அமைக்கப்பட்டுள்ளது. வாயிலின் இரு பக்கங்களிலும் உயரமான கல்மேடையில் சூரியன், சந்திரன், ரோகிணி, கிருத்திகா, உஷா, பிரத்யுஷா சிற்பங்கள் காணப்படுகின்றன. இவை பரிவாரதேவதைகள் அமைக்கும் முறையும் இக்கோயிலில் பின்பற்றப்பட்டுள்ளது என்பதற்கு ஆதாரமளிப்பதாய்த் தோன்றுகின்றன. மகாமண்டபத்தின் தென்கிழக்குப் பகுதியில் சர்வதீர்த்தம் எனும் புனிதக்கிணறு உள்ளது. இப்பிரகாரத்தின் மற்றொரு பகுதி, இரண்டு நடராஜர் சன்னதிகளுக்கும் நடுவிலுள்ள நடைமாளிகை மண்டபமாகும்.

## நந்திமண்டபம்

முதலாவது பிரகாரத்தின் முகப்புப் பகுதியில் அமைந்துள்ள மண்டபம் நந்திமண்டபம் எனப்படுகின்றது. இது முப்பத்தெட்டுத் தூண்களைக் கொண்டது. இங்கு மிகப்பெரிய நந்தி உள்ளது. கோயில் ஆவணங்களின்படி மதுரையின் விசுவநாதநாயக்கரும், அவரது மகன் கிருஷ்ணப்பநாயக்கரும் இந்நந்தியை அமைத்ததாகத் தெரிகின்றது. சுதையாலான இதன் நீளம் 6.90 மீட்டர், அகலம் 3.60 மீட்டர் மற்றும் உயரம் 5.25 மீட்டராகும். இதற்கு அருகில் ஒரு மனித உருவம் பாதி பூமிக்குள் பதிந்த நிலையில் அமைக்கப்பட்டுள்ளது. இதற்கு மரபுவழிக் கதை ஒன்று வழங்கி வருகின்றது. இதன்படி இந்து அல்லாத ஒரு கோயில் நிர்வாகி இங்கு குருடாகி கல்லாகச் சமைந்து விட்டதாக நம்பப்படுகின்றது. இது ஒருவேளை இந்துக்கள் தவிர பிறர் இக்கோயில் நிர்வாகத்தில் ஈடுபடக்கூடாது என்ற எண்ணத்தை வலியுறுத்தவே உருவாக்கப்பட்ட கதையாகத் தெரிகின்றது. மேலும், சமயப்பொறையுடைமையின் சின்னமான இத்திருத்தலத்தில் ஒரு காலகட்டத்தில் சமயப்பூசல் நிலவியிருக்க வேண்டுமென்னும் கருத்தும் இதன்மூலம் வெளிப்படுகின்றது. நந்தியின் உருவத்தை ஒருபக்கம் பார்த்தால் நந்தி போன்றும் மற்றொருபக்கம் பார்த்தால் ஆஞ்சனேயர் போன்றும் தோற்றமளிப்பதைக் கண்கூடாய்க் காணலாம். இதற்குப் பின்னால் பலிபீடமும் கொடிமரமும் (துவஜஸ்தம்பம்) உள்ளன. பலிபீடத்தில் சிதைந்த சிங்களக் கல்வெட்டு ஒன்று பொறிக்கப்பட்டுள்ளது. நந்திக்கு அருகில் தென்புறத்தில் சிவதீர்த்தம் என்னும் சதுரமான குளம் உள்ளது. இம்மண்டபத்தின் இராமநாதர் சன்னதிக்குச் செல்லும்

நுழைவாயிலின் இருமருங்கிலும் விநாயகர் மற்றும் முருகன் சன்னதிகள் உள்ளன. நவீன கலைக்கூறுகளைக் கொண்ட இவை ஏகதள விமானங்களாகும். முருகன் சன்னதிக்குப் பக்கத்தில் நவக்கிரஹமண்டபம், உயர்ந்த பீடத்தின் மேல் அமைந்துள்ளது.

## பர்வதவர்த்தினியம்மன் சன்னதி

முதலாவது பிரகாரத்தின் மற்றொரு பிரிவில், கிழக்குநோக்கி, பர்வதவர்த்தினியம்மன் சன்னதி உள்ளது. பொதுவாக பிரதான அல்லது சுவாமிசன்னதியின் இடதுபுறம். மகாமண்டபத்தை யொட்டி, அம்மன் சன்னதிகள் அமைக்கப் பெற்றிருக்கும். இம்மாதிரியமைப்பு ஆகமங்களில் கூறப்பட்டுள்ளன. பிற்காலச் சோழர் மற்றும் பாண்டியர் கோயில்களிலும் இம்மரபு பின்பற்றப்பட்டிருப்பதைக் காணலாம். ஆனால் இம்மரபு விஜயநகர் மற்றும் நாயக்கர்காலத்தில் கட்டப்பட்ட கோயில்களில் மாற்றியமைக்கப்பட்டிருக்கின்றன. இவர்களது கோயில்களில் வலதுபுறம் அம்மனும் (daksine bhagine) இடதுபுறம் சுவாமியும் (vamabhagine) இருப்பர். எனவே இக்காலத்தில் அம்மன் கோயில்கள் கோயிலின் வடமேற்குப் பகுதியில், சுவாமி சன்னதிக்கு வலப்புறம், கட்டப்பட்டன. இதனை இராமேசுவரம், மதுரை, திருநெல்வேலி, குற்றாலம், போன்ற பல கோயில்களிலும் காணலாம். இன்னும் திருமணத்தின்போது மணப்பெண் வலப்பக்கமும் மணமகன் இடதுபக்கமும் அமர்ந்திருப்பது இங்கு நோக்கத்தக்கதாகும். இதன் கருத்தமைவாவது, திருமணம் முற்றுப்பெறும் வரையில் தனது மணமகனைவிட மணப்பெண்ணுக்கு முன்னுரிமை வழங்குதல் என்பதாகும்[10].

அம்மன்சன்னதி அமைந்துள்ள பிரகாரத்தின் பகுதி 40.38 மீட்டர் நீளமும், 18.7 மீட்டர் அகலமும் கொண்டதாகும். அம்மன்சன்னதியும் அதனோடு இணைக்கப்பட்டுள்ள அர்த்தமண்டபமும் சேர்ந்த நீளம் 10.10 மீட்டரும் அகலம் 4.55 மீட்டரும் ஆகும். விமானத்தின் பிரஸ்தரம் வரையான உயரம் 3.90 மீட்டராகும். கருவறையின் உள்ளே அம்மன் நின்ற கோலத்தில் காட்சியளிக்கின்றாள். இங்குள்ள தூண்கள் கலையழகு மிக்கவையும் சிற்ப வேலைப்பாடு கொண்டவையுமாகும்.

பிரகாரத்தின் வடமேற்கு மூலையில் மதுரை மீனாட்சியம்மன் சன்னதியில் உள்ளது போன்று சிறிய இரட்டை விநாயகர் சன்னதி உள்ளது. மரபு வழியாக இது சந்தான சௌபாக்ய கணபதி சன்னதி என்றழைக்கப்படுகின்றது[11]. வடமேற்கு மூலையில் முருகன் சன்னதிக்குப் பதிலாக அனந்தன் மேல் சயனங்கொண்டிருக்கும் அண்ணலின் சன்னதி உள்ளது. இங்கு மகாவிஷ்ணு தலையை உயர்த்தாமல் நேராக சவசயனம்

போன்று காட்டப்பட்டுளார். சிவன் கோயில்களில் மரபு வழியாக அமைக்கப்படும் முருகனுக்குப்பதில் விஷ்ணுசன்னதி இங்கு காணப்படுவது சமய ஒற்றுமையை நிலைநிறுத்தும் நோக்கம் கொண்டவர்களின் முயற்சியே இதுவெனத் தெரிகின்றது. இரட்டைவிநாயகர் சன்னதிக்கும் பள்ளிகொண்டபெருமாள் சன்னதிக்கும் நடுவில் சப்தமாதர்களின் திருவுருவங்களைக் காணலாம். பிரகாரத்தின் வடகிழக்கு மூலையில் பள்ளியறை உள்ளது.

## சுக்கிரவார மண்டபம்

சுக்கிரவார மண்டபம், வெள்ளிச்சவுக்கை, மற்றும் நவசக்திமண்டபம் என்று அழைக்கப்படுகின்ற நீள்சதுரமண்டபம் அம்மன் சன்னதிக்கு முன்புறம் அமைந்துள்ளது. இங்கு வெள்ளிக்கிழமை தோறும் திருவிழா நடைபெறுவதால் சுக்கிரவாரமண்டபம் எனவும் வெள்ளிச்சவுக்கை எனவும் பெயர் பெற்றுள்ளது. இராஜராஜேஸ்வரி உட்பட ஒன்பது தேவியரின் முழு உருவச்சிலைகள் இம்மண்டபத் தூண்களை அலங்கரிக்கின்ற காரணத்தால் இது நவசக்தி மண்டபம் எனவும் பெயர் பெற்றுள்ளது. இதனை முப்பத்தியிரண்டு தூண்கள் தாங்குகின்றன. சேதுபதி மன்னர்களின் சிலைகளும் இங்கு காணப்படுகின்றன. பள்ளியறைக்குச் செல்வதற்கு முன்பு, வெள்ளிதோறும், இங்கு அம்மன் அரசவை நடைபெறுவது இன்றளவும் மரபாகப் பின்பற்றுப்பட்டு வருகின்றது. இம்மண்டபத்தின் அக்னிமூலையில், சுவாமிசன்னதி, அம்மன் சன்னதியைப் பிரிக்கின்ற சுவரினையொட்டி அஷ்ட லட்சுமிகளின் உருவங்கள் உள்ளன. இவை மற்றோரிடத்திலிருந்து எடுத்து வரப்பட்டவை என நம்பப்படுகின்றது[12]. வெள்ளிச் சவுக்கையின் தென்கிழக்கு மூலையில் சுந்திரசேகர மூர்த்தி, பிரம்மா, விஷ்ணு ஆகியோரின் திருவுருவங்கள் காணப்படு கின்றன. விஜயநகர காலத்தைச் சேர்ந்த, உலோகத்தாலான கொடிமரம், பலிபீடம், நந்தி ஆகியவை மண்டபத்தின் நடுவில் உள்ளன. இங்கு சத்யாமிர்த தீர்த்தக்கிணறு இருக்கின்றது.

இம்மண்டபத்தின் முன்பு, இதற்கும் இரண்டாம் பிரகாரத்திற்குமிடையில் நாற்பது தூண்களையுடைய மண்டபம் ஒன்றுள்ளது. இத்தூண்களில் இராமன், அனுமன் மற்றும் சாதுக்களின் உருவங்கள் வடிக்கப்பட்டுள்ளன. இம்மண்டபத்தின் பயன்பாடு என்ன என்பது சரிவரத் தெரியவில்லை. தற்போது இங்கு கோயில் வாகனங்கள் சில வைக்கப்பட்டுள்ளன.

## இரண்டாவது பிரகாரம்

இரண்டாவது பிரகாரம் கிழக்கு மேற்காக 115.80 மீட்டர் நீளமும் தெற்கு வடக்காக 94.20 மீட்டர் அகலமும் கொண்டதாகும். தற்போதுள்ள முதலாவது மற்றும் மூன்றாவது பிரகாரங்களைவிட காலத்தால் முந்திய கட்டடமைப்பைக் கொண்டதாகத் தோன்றினும் இப்பிரகாரம் முற்றுபெறவில்லை, தோற்றப் பொழிவு கொண்டதாகவுமில்லை. இதன் கிழக்குப்பகுதி மட்டும் நல்ல நிலையில் உள்ளது. அண்மையில் இப்பிரகாரத் தினைத் திருத்திக்கட்டும் பணி நடைபெற்றது. இதற்காகத் திருநெல்வேலி மாவட்டம் அம்பாசமுத்திரம் வட்டத்திலிருந்து கற்கள் கொண்டு வரப்பட்டன. இப்பிரகாரத்தின் உயரம் 5.48 மீட்டராகும். இதன் வடக்குப் பக்கத்தில் மட்டும் முப்பத்தியிரண்டு தூண்கள் உள்ளன. நாயக்கர்காலக் கோயில்களின் கூரைகளில் ஆங்காங்கே, வெளிச்சத்திற்காக, சிறு நீள்சதுரத் துவாரங்கள் விடப்பட்டிருக்கும். மதுரை மீனாட்சிசுந்தரேசுவரர் கோயிலில்கூட இதனைக் காணலாம். ஆனால், நாயக்கர்காலத்தில் அமைக்கப்பட்ட இந்த இரண்டாவது பிரகாரத்தில் துவாரங்கள் காணப்படவில்லை. இதன் தென்கிழக்கு மூலையில் (அக்னி மூலையில்) மடப்பள்ளி உள்ளது.

இரண்டாவது பிரகாரத்தின் வடக்குப் பக்கத்தில் கங்கை, யமுனை, கயா, சூரியன், சந்திரன், மற்றும் பிரம்மஹத்தி விமோச்சன தீர்த்தங்களும். கிழக்குப் பக்கத்தில் சங்கு, சக்கர தீர்த்தங்களும் உள்ளன.

## மூன்றாம் பிரகாரம்

இராமேசுவரம் கோயிலின் சிறப்புமிக்க கட்டடங்களில் ஒன்று பரந்து விரிந்துள்ள உலகப் பிரசித்திபெற்ற மூன்றாம் பிரகாரமாகும். இதன் திருச்சுற்று 5.10 மீட்டர் அகலப்பாதை யுடையதாகும். இதில் 9 மீட்டர் உயரமான தூண்கள், உயரமான மேடை மீது அமைக்கப்பட்டுள்ளன. இப்பிரகாரம் கோயிலில் உள்ள அனைத்து ஆலயங்கள், மண்டபங்கள், தெப்பங்கள் மற்றும் தீர்த்தங்களை உள்ளடக்கிய ஒன்றாகும். ஏராளமான ஆலயங்கள் இதற்குள் இருப்பினும் அவை சரியான முறையில் பராமரிக்கப்பட்டதாகத் தெரியவில்லை. மூன்றாம் பிரகாரத்தின் தெற்குப்பகுதி 207 மீட்டர் நீளமும், வடக்குப்பகுதி 194.70 மீட்டர்

நீளமும், கிழக்குப்பகுதி 130.50 மீட்டரும், மேற்குப்பகுதி 118.50 மீட்டர் நீளமும் உள்ளன. இப்பிரகாரத்தில் 1212 தூண்கள் உள்ளன. இது சொக்கட்டான் (dice) போன்ற அமைப்புடைய காரணத்தால் சொக்கட்டான் மண்டபம் என்றும் அழைக்கப்படுகின்றது.

## சபாபதி சன்னதி

தெற்கு நோக்கியுள்ள சபாபதிசன்னதி மூன்றாம் பிரகாரத்தின் வடகிழக்கு மூலையில் உள்ளது. இதில் செப்புத்திருமேனிகள் வைக்கப்பட்டுள்ளன. இதன் சுவர்கள் இச்சன்னதி பிற்காலத்தைச் சேர்ந்ததென்பதை பறை சாற்றுகின்றன. இதன் தென்மேற்கு மூலையில் ஏழடி அளவுள்ள பள்ளிகொண்டபெருமாள் திருமேனி உள்ளது. அவருக்குப் பக்கத்தில் ஸ்ரீதேவியும் பூதேவியும் அமர்ந்தநிலையில் உள்ளனர். இங்கு ஐநூற்றுக்கும் மேற்பட்ட நாகக்கற்சிலைகள் வைக்கப்பட்டுள்ளன. இவை ஒருவேளை நேர்த்திக்கடனுக்காக பக்தர்களால் வைக்கப்பட்டிருக்கக் கூடும். இவை ஒவ்வொன்றும் வெவ்வேறு அளவினையுடையதாயும் வெவ்வேறு அமைப் பினைக் கொண்டதாகவும் இருக்கின்றன. இதேபோன்ற நாகக்கற்கள் அக்னிதீர்த்தம் எனப்படும் கடற்கரைக்கு முன்னால் உள்ள மரத்தடியில் காணப்படுகின்றன. சபாபதி ஆலயத்தின் மேற்பகுதி சிதைந்துள்ளது. பெர்குஷன் மற்றும் பர்கஸ் ஆகியோர் இவ்வாலயம் கி.பி. 1702[13] இல் தளவாய்சேதுபதியால் கட்டப்பட்டதெனத் தெரிவிக்கின்றனர். ஆனால் தளவாய் சேதுபதி ஆட்சிசெய்த காலம் கி.பி. 1635 முதல் 1646 வரையாகும்.

## கந்தமாதனீசுவரர் ஆலயம்

கந்தமாதனீசுவரர் ஆலயம்[14] (அடுத்த இயலில் குறிப்பிடப்படுகின்ற கோயில் !) மூன்றாம் பிரகாரத்தின் மேற்குப் பக்கத்தில், மேலைக் கோபுரத்திற்குத் தெற்கே அமைந்துள்ளது. இது உண்மையில் மூன்றாம் பிரகாரத்திற்கு வெளியே பூந்தோட்டத்தில் உள்ள மூன்றுதள விமானமாகும். இதன் முன்பகுதி மட்டுமே மூன்றாம் பிரகாரத்தில் இணைக்கப் பட்டுள்ளது. எனவே பிரகாரத்திலிருந்துதான் இக்கோயிலுக்குள் செல்லமுடியும். கட்டடக்கலை அமைப்பைப் பொருத்தளவில் இது இராமேசுவரம் கோயிலுள் இருக்கும் மிகவும் தொன்மை யான சில கட்டடங்களில் ஒன்றாகும். இராமநாதர் சன்னதியை

விட காலத்தால் மிகவும் முந்தியதாகும். சதுரமான இதன் கருவறையின் அளவு 10.70 × 10.70 மீட்டராகும்.

இதுதவிர, காலத்தால் இதனோடு ஒத்துள்ள இரண்டு ஆலயங்கள் மேலைக் கோபுரத்திற்கு வடக்குப் பக்கம் உள்ளன. பூந்தோட்டத்தில் உள்ள இவற்றில் ஒன்று மூன்றுதள, மற்றொன்று இரண்டுதள விமானமாகும். கிழக்கு நோக்கியுள்ள இவற்றின் கருவறையில் சிவலிங்கங்களே வைக்கப்பட்டுள்ளன..

## இராமலிங்கப் பிரதிஷ்டை

மூன்றாம் பிரகாரத்தின் வடமேற்குக் கோடியில் இராமலிங்கப் பிரதிஷ்டையைக் காட்டும் சிற்றாலயம் ஒன்றுள்ளது. இராமேசுவரம் கோயில் தலபுராணத்தை விளக்கும் இதில் இராமன், இலக்குவன், அனுமன் மற்றும் பிறர் காட்டப்பட்டுள்ளனர். இராமனும் சீதையும் இலிங்கப்பிரதிஷ்டை செய்கின்றனர். கோயிலின் பிரதான சன்னதிகளுக்கு அடுத்துச் சிறப்பிடம் பெற்று விளங்குவது இதுவேயாகும். தமிழகத்துக் கோயில் தலபுராணங்கள் விஜயநகர-நாயக்கர் காலங்களில் பிரசித்தி பெறலாயின. ஆனால் இராமேசுவரம்கோயில் தல புராணத்தின் தொடக்கம் கி.பி. ஏழாம் நூற்றாண்டில் நாயன்மார்களின் பாடல்களிலேயே வந்துவிட்டது. எனவே தமிழகத்துத் தொன்மையான தலபுராணம் இக்கோயிலைச் சார்ந்ததாகும்.

## மூன்றாம் பிரகாரத்தில் உள்ள பிற ஆலயங்கள்

ஒரு பெருஞ்சுவர் மூன்றாம் பிரகாரத்தினை இரண்டாகப் பிரிக்கின்றது. அப்பகுதியில் ஆலயங்களும் தீர்த்தங்களும் நிறைந்துள்ளன. இங்கு ஒன்றோடு ஒன்று பொருந்தியுள்ள இரண்டு ஆலயங்கள் (இரட்டைக் கருவறைகள்) உள்ளன. இவை இரண்டையும் இணைக்கும் மண்டபம் விஜயநகர-நாயக்கர் காலத்தது. ஆனால் இவ்விரு ஆலயங்களும் இராமேசுவரம் கோயில் வளாகத்துக் கட்டடங்களிலெல்லாம் காலத்தால் மிகவும் முந்தியனவாகும். இவற்றிற்குச் சற்று பின்னால் கட்டப்பட்டவை தான் பூந்தோட்டத்தில் உள்ள மூன்று ஆலயங்கள். மற்றவை அனைத்தும் பதின்மூன்றாம் நூற்றாண்டுக்கும் பத்தொன்பதாம் நூற்றாண்டுக்கும் இடைப்பட்டவையாகும். இத் தொன்மையான ஐந்து கோயில்கள் பற்றி கோயில் தேவஸ்தானம் வெளியிட்டுள்ள தரைப்படத்தில் குறிப்பேதுமில்லை.

## சேதுமாதவர் சன்னதியும் அதன் சுற்றுப்பகுதியும்

மேற்குறிப்பிடப்பட்ட இரட்டைக்கருவறை ஆலயங்களுக்கு அருகில் சேதுமாதவர் சன்னதி உள்ளது. இதன் சுவர்கள் எளிதாகவும் எந்த வேலைப்பாடும் இன்றிக் காணப்படுகின்றன. இது பிற்காலக் கோயிலேயாகும். ஆனால் இதற்கு முன்பு பழமையான கோயில் ஒன்று இங்கு இருந்து அது மாற்றியோ அல்லது திருத்தியோ கட்டப்பட்டிருக்க வேண்டும். ஏனெனில் கிழக்கு நோக்கிய இதன் கருவறையிலிருக்கும் திருமேனி பழமையானதாக இருக்கிறது. ஆனந்தராமாயணத்தில் இவ்விறைவன் சுவேதமாதவர்[15] என்றழைக்கப்பட்டுள்ளார்.

இவ்வாலயத்திற்கருகில், கிழக்குநோக்கிய மற்றுமோர் சிற்றாலயம் உள்ளது. இது இலட்சுமிநரசிம்மர் கோயிலாகும். இதில் உள்ள திருமேனிகள் பழமையானதும் சிறிதும் சிதைக்கப் படாததாகவும் உள்ளன. (இவற்றினைப் பற்றிய விரிவான விளக்கத்தினைச் சிற்பக்கலை என்னும் இயலில் காணலாம்). இதற்கருகிலேயே பிற்காலத்தினைச் சேர்ந்த மேற்கு நோக்கிய கோதண்டராமர் சன்னதி உள்ளது. இவை தவிர இப்பகுதியில் சேதுமாதவ தீர்த்தம் (சதுரவடிவமான தீர்த்தக்குளம்), சுந்தமாதன, கவக்ச, கவய, நள மற்றும் நீளா தீர்த்தங்கள் அமைந்திருக்கின்றன.

## கல்யாண, அனுப்பு மண்டபங்கள்

திருக்கோயிலின் கல்யாணமண்டபம் அம்மன்சன்னதிக்கு முன்பாக அமைந்துள்ளது. இதன் தூண்களில் சேதுபதி மன்னர்களின் ஆளுயரச்சிற்பங்கள் செதுக்கப்பட்டுள்ளன. இதற்கு இணையாக, இராமநாதர் சன்னதிக்கு முன்பாக அனுப்புமண்டபம் கட்டப்பட்டுள்ளது. இதன் தூண்களில் சமகாலப் பண்பாட்டுச் செய்திகளை வெளிப்படுத்தும் சிற்பங்கள் செதுக்கப்பட்டிருப்பதைக் காணலாம். இதன் கண்ணாடிச் சட்டத்தில் இராமாயணக் கதையைக் காட்டும் சிற்பங்கள் உள்ளன.

## அனுமன் சன்னதி

அனுப்புமண்டபத்தின் வடகிழக்கு மூலையில் பாய்ந்து செல்வது போல் அமைக்கப்பட்டுள்ள அனுமன் திருமேனி உள்ள சன்னதி அமைந்துள்ளது. அனுமனின் உடல் முழுவதும் சிகப்புவண்ணம் பூசப்பட்டிருக்கின்றது. இதன் கருவறையும் அர்த்தமண்டபமும் சேர்ந்து 6.22 × 3.57 மீட்டர் அளவுடையதாகும். இங்கு இருசிவலிங்கங்கள் உள்ளன. இவை காசியிலிருந்து அனுமனால் கொண்டு வரப்பட்டவை என்று

கருதுகின்றனர். இவற்றோடு கொண்டுவரப்பட்ட ஒன்றுதான் காசிவிசுவநாதர் சன்னதியில் பிரதிஷ்டை செய்யப் பட்டுள்ளதாகக் கருதுகின்றனர். அனுமன் சன்னதிக்கு அருகில் உள்ள தோட்டத்தில் சாவித்திரி, காயத்திரி மற்றும் சரஸ்வதி தீர்த்தங்கள் உள்ளன.

## சேதுபதிமண்டபம்

சேதுபதிமண்டபம் அனுப்புமண்டபத்திற்கும் கிழக்கு இரதவீதிக்கும் இடையிலுள்ள முகப்பு மண்டபமாகும். இக்கோயில் வளாகத்தில் காலத்தால் மிகவும் பிந்திய அல்லது இறுதியாகக் கட்டப்பட்டது இதுவேயாகும். இதுவே கிழக்கிலிருந்து கோயிலுக்குள் நுழையவுதவும் பிரதான வாயிலாகும். தொடக்கத்தில் கூரையாக இருந்த இம்மண்டபம் இராமநாத சேதுபதியால் திருத்திக்கப்பட்டது. இதற்கு அருகே சிறுவழி ஒன்றுள்ளது. தீர்த்தமாடச் செல்லும் பக்தர்கள் இதன் வழியாகவே கோயிலுக்குள் நுழைவர். இங்கு நீள்சதுர வடிவில் மகாலட்சுமி தீர்த்தக்கிணறு உள்ளது. இங்குதான் முதல் தீர்த்தமாடி, பக்கத்தில் உள்ள மகாலட்சுமி சன்னதியில் வணங்கிப் பின் பிற பகுதிகளுக்குச் செல்வது வழக்கமாகப் பின்பற்றப்படும் மரபாகும்.

## கோபுரங்கள்

இத்திருக்கோயிலில் கிழக்கிலும் மேற்கிலும் இரண்டு கோபுரங்கள்[16] உள்ளன. கிழக்குக் கோபுரம் 37.80 மீட்டர் உயரம் கொண்டது. மேற்குக் கோபுரத்தின் உயரம் 23.10 மீட்டராகும். இங்கு கிழக்குக் கோபுரம் ஒன்பது தளங்களையும், மேலைக்கோபுரம் ஐந்து தளங்களையும் கொண்டுள்ளன. இவை தவிர வடக்கு மற்றும் தெற்கு வாயில்களில் கட்டி முடிக்கப்பெறாத கோபுரங்கள் உள்ளன. அவற்றில் 5.70 மீட்டர் உயரமுள்ள கல்காரப்பகுதி மட்டுமே முடிக்கப்பட்டுள்ளது. தற்போது இவற்றை முடிக்கும் பணி தொடங்கப்பட்டுள்ளது.

இன்று வானளாவி நிற்கின்ற இராமேசுவரம் கோயில் வளாகம் பிரமாண்டமான பிரகாரங்களையும் காலந்தோறும் அவ்வப்போது எழுந்த பல ஆலயங்களையும் சன்னதிகளையும் தீர்த்தக் கிணறுகளையும் உள்ளடக்கிய ஒன்றாகும். சம்பந்தரின் தேவாரப் பாடல்களில் கூறுகின்றபடி இக்கோயில் ஒரு சிறு கூரையாகவே தொடக்கத்தில் இருந்துள்ளது. தொடர்ச்சியாக சோழர், பாண்டியர் காலங்களில் கட்டடங்கள் கட்டப்பட்டன. விஜயநகர ஆட்சிக்காலத்தில் பரந்து வளர்ந்தது. நாயக்கர் மற்றும் சேதுபதிகள் காலத்தில் முற்றுப்பெற்றது. இவற்றின் விரிவான கட்டடக்கலைக் கூறுகளை அடுத்த இயலில் காணலாம்.

## குறிப்புகள்

1. M.A. Ananthalwar and Alexander Rea, (1980), **Indian Architecture**, II, p.104
2. J.Fergusson, **op. cit.**, pp355-8
   E.B.Havell, (1972), **The Ancient and Medieval Architecture of India**, pp.183-4
   James Burgess, **Indian Antiquary (IA)**, XII, pp.315-26
   Percy Brown, (1956), **Indian Architecture**, I,p.119
3. *மூன்றாம் பிரகாரத்துக்கு அப்பால் பூந்தோட்டத்தில் உள்ள மூன்று தொன்மையான ஆலயங்களுக்கு அருகிலும் தீர்த்தக் கிணறுகள் உள்ளன.*
4. A.S.S.I.R., 1910-11 pp.52-4
5. E.B. Havell, (1977), **The History of Aryan Rule in India**, p.244
6. A.S.S.I.R., 1910 – 11, pp 52-4
7. *உதாரணமாக, பழனியில் உள்ள முருகன் சிலை நவபாசானத்தால் ஆனது என்றும், பாண்டிச்சேரிக்கு அருகில் உள்ள திருவக்கரை கோயிலின் பிரதானச்சிலை கல் மரத்தினாலானது எனவும், நெய்வேலியில் உள்ளது நிலக்கரியாலானது என்றும் நம்பப்படுகின்றது.*
8. *இக்கோயிலுக்குப் பிரதானமான பத்து முக்கிய இலிங்கங்கள் அனுமன், இராமன், சீதை, இலக்குவன், சுக்ரீவன், சேதுப்பாலத்தை அமைத்த நளன், அங்கதன், ஜாம்பவான், விபூசணன் மற்றும் இந்திரன் ஆகியோரால் நிர்மாணிக்கப்பட்டவையென நம்பப்படுகின்றது* (P.V. Jagadisa Ayyar, (1981), **South Indian Shrines**, p.492)
9. *இந்த எழுபத்தி இருவரில் அறுபத்திமூவர் நாயன்மார்களாவர்; மற்றவர்கள் தொகையடியார்களாவர்.*
10. Swami Chidbhavananda, (1978), **Facets of Brahman or the Hindu Gods**, p.141.
11. *இதுபோன்ற இரட்டைவிநாயகர் சன்னதிகள் மதுரை மீனாட்சி சுந்தரேசுவரர் திருக்கோயில், திருப்பரங்குன்றம் சுப்பிரமணியசுவாமி கோயில் போன்ற பழமையான கோயில்களில் பிற்காலத்தில் அமைக்கப்பட்டுள்ளன.*
12. *இராமேசுவரம் இராமநாதசுவாமி தேவஸ்தானத்தின் ஓய்வு பெற்ற கண்காணிப்பாளர் திரு.சீனிவாசசாஸ்திரிகளிடம் 10.5.1979 அன்று நேர்காணல் மூலம் அறியப்பட்டது.*
13. J.Fergusson, **op. cit.**, pp.355-58, I.A, XII (1883), pp.315-26
14. *இவ்வாலயத்தில் தனிப்பட்ட முறையில் இவ்வூரைச்சேர்ந்த திரு. சந்தானம் சுவாமிகள் பூசைகள் நடத்தி வருகின்றார்.*
15. Ananda Ramayana, Yatrakanda, Canto IX, v.28
16. *கோபுரம் என்பது வட சொல்லாகும். இதன் பொருள் ஒரு நகரத்தின் வாயில் அல்லது கோயிலின் நுழைவாயில் என்பதாகும்.*

# 4. கட்டடக்கலை

இராமேசுவரம் திருக்கோயில் சோழர், பாண்டியர், விஜயநகர – நாயக்கர் ஆகியோரின் கலை மரபுகளை ஒருங்கே கொண்டுள்ள ஒரு கலைக் கருவூலமாகும். கி.பி.1604க்குப்பின் மதுரை நாயக்கர்களின் மேலாண்மையின் கீழே இராமநாதபுரத்தில் ஆட்சிசெய்த சேதுபதி மன்னர்களும் இங்கு திருப்பணி செய்துள்ளனர். இந்தியத் தீபகற்பத்தின் தென்கோடியில் அமைந்துள்ள இவ்வூர் இலங்கையிலிருந்து சில மைல்கள் தூரத்திலேயே உள்ளது. இன்று உலகவாணிப மையங்களில் ஒன்றான இலங்கையும் இராமேசுவரமும் இராமாயணத்தின் மூலம் தொடர்புபடுத்தப்படுகின்றன. தென்னகத்தின் பல பகுதிகளிலிருந்த மன்னர்கள் பாண்டியநாட்டை வென்றதாகத் தங்களது வெற்றிச் சிறப்புக்களைக் கூறும்போது இராமேசுவரத்தில் வெற்றித்தூண் எழுப்பியதாக உரிமை பாராட்டியுள்ளனர். (இது பற்றிய விரிவான விளக்கம் இந்நூலின் இரண்டாவது இயலில் கொடுக்கப்பட்டுள்ளது).

தமிழகத்தை ஆட்சிசெய்த மன்னர்களும் வாணிபத்தின் மூலமோ அல்லது போர் மூலமோ இலங்கையுடன் தொடர்பு கொண்டிருந்தனர். அவர்கள் இராமேசுவரத்தில் வீராபிசேகம் செய்வதை வழக்கமாகக் கொண்டிருந்தனர். அத்தருணத்தில் இக்கோயிலுக்கு ஏராளமான நன்கொடைகளையும் நிவந்தங் களையும் கொடுத்துள்ளனர். மதுரையையும் இலங்கையையும் வெற்றிகொண்ட முதலாம் பராந்தகசோழன் *(கி.பி. 907–954)* "மதுரையும் ஈழமும் கொண்ட பரகேசரி" என்ற சிறப்புப் பெயரினைக் கொண்டிருந்தான். இராமேசுவரத்து இறைவன் முன்பு இம்மன்னன் துலாபாரம் செய்ததாக அவனது திருத்தணி வேலஞ்சேரி செப்பேடுகள் கூறுகின்றன. ஏழாம் நூற்றாண்டைச் சேர்ந்த சைவக் குரவர்களான அப்பரும் சுந்தரரும் பாடியிருப்பது போல், இக்கோயில் ஏதோ ஒரு சிறுவடிவில் அக்காலத்திலேயே புகழ்பெற்று விளங்கியிருக்க வேண்டும். ஆனால், இன்று நம் கண்முன்னே காட்சியளிக்கும் இத்திருக்கோயிலில் இன்றளவும் நிலவிவரும் கட்டடங்கள் கி.பி. பத்தாம் நூற்றாண்டுக்கும் பதினெட்டாம் நூற்றாண்டுக்கும் இடையில் கட்டப்பட்டவை யாக உள்ளன.

இன்று இக்கோயில் வளாகத்தில் இருக்கின்ற கட்டடங்களில் தொன்மையானவையாயும் பழைமையான கலைமரபிலிருந்து சிறிதும் மாற்றப்படாமலும் இருப்பவை, மூன்றாம் பிரகாரத்தின் மேற்கு வெளிச்சுவருக்கு அப்பால் பூந்தோட்டத்தில் உள்ள மூன்று ஆலயங்கள் ஆகும். அவை தற்போது பெரிதும் ஒதுக்கப்பட்டவை யாகவே தோன்றுகின்றன. பதினோராம் நூற்றாண்டு சோழர் கட்டடக்கலையை வெளிப்படுத்தும் இக்கோயில்கள், இந்த மூலையில் கட்டப்படாமல் பாண்டிய நாட்டின் ஏதேனும் ஒரு முக்கிய நகர்ப்பகுதியில் கட்டப்பட்டிருந்தால் பாண்டிய நாட்டுக் கோயில்களில் கலைப்படைப்பிலும் பிரமாண்டத்திலும் முன்னணியில் நிற்பதாக அமைந்திருக்கும் என்பதில் ஐயமில்லை. இவ்வாலயங்களுக்கு பெயரிடப்படாமல் இருப்பதால் நூலைப் படிப்போர் வசதிக்காக இனிமேல் இவை கோயில் I, II மற்றும் III என்று அடையாளம் காட்டி அழைக்கப்படும். இக்கோயில்களுக்கு அல்லது சன்னதிகளுக்கு முந்திய கி.பி. 10 ஆம் நூற்றாண்டைச் சார்ந்த இரு கோயில்கள் மூன்றாம் பிரகாரத்தில் உள்ளன. ஆனால் அவற்றின் மேலே சுதை பூசியுள்ளனர். இருப்பினும் அதன் பழமையை முழுவதுமாக மறைக்க முடியவில்லை. அக்காலக் கட்டடக்கலைக் கூறுகள் சுதைப்பூச்சையும் மீறி அழகாக வெளிப்படுகின்றன.

சோழப்பெருவேந்தன் முதலாம் இராஜராஜன் (கி.பி. 985–1014) காலத்தில் இலங்கையில் சோழரின் ஆட்சி முழுமையாக ஏற்படுத்தப்பட்டது. இம்மன்னன் இலங்கையில் பல சிவன் கோயில்களைக் கட்ட ஆணையிட்டான். இவன் காலத்தில்தான் இராமேசுவரத்தில் மேற்கூறப்பட்ட மூன்று முக்கிய ஆலயங்களும் கட்டப்பட்டிருக்க வேண்டும். கடற்காற்றின் உப்புத்தன்மையால் ஆங்காங்கு பெருவாரியாக சிதைவுற்றிருக்கின்றபோதிலும் இத்திருக்கோயில்கள் தங்களது தொன்மையான அழகை இழக்கவில்லை. பத்தாம் நூற்றாண்டினைச் சேர்ந்த இரு கோயில்களும் மற்றும் பதினோராம் நூற்றாண்டின் மூன்று கோயில்களும் தவிர இராமேசுவரம் கோயிலின் பிற கட்டடங்கள் விஜயநகர-நாயக்கர் காலத்தைச் சேர்ந்தவையாகும்.

இவ்வியலின் நோக்கம் இக்கோயிலில் உள்ள சன்னதிகள், மண்டபங்கள் மற்றும் பிரகாரங்களின் கலைக்கூறுகளை விரிவாக எடுத்துரைப்பதாகும். இங்கு கால நிர்ணயத்திற்காக சோழநாட்டில் உள்ள பல கோயில்களுடனும் அவற்றின் கட்டடக் கலை நுணுக்கங்களுடனும் ஒப்பிட்டு விளக்கப்படுகின்றது.

# கோயில் I

கந்தமாதனீசுவரம் என்று இன்று மக்களால் அழைக்கப்பெறும் ஒன்றாவது கோயில் (கோயில் I) மேலைக் கோபுரத்திற்கு இடது பக்கத்தில் பூந்தோட்டத்திற்குள் அமைந்திருக்கின்றது. இது முற்றிலும் கல்லாலானது. இந்த மூன்றுதள விமானம் சாந்தார வகையைச் சேர்ந்தது. அதாவது, இங்கு கருவறையைச் சுற்றி இரண்டு சுவர்கள் கட்டப்பட்டுள்ளன. இந்த இரு சுவர்களுக்குமிடையே திருச்சுற்றுப்பாதை உள்ளது. இம்மாதிரி அமைப்பு தஞ்சைப் பெரியகோயிலிலும், அஷ்டாங்கவிமானக் கோயில்களிலும், இராமேசுவரத்தில் பிற்காலத்தில் கட்டப்பட்டுள்ள இராமநாதர் சன்னதியிலும் காணப்படுகின்றன. இங்கு இக்கோயில் ஒரு உயரமான உபபீடத்தின்மேல் அமைந்துள்ளது. உபபீடத்தில் உபானம், ஜகதி, கண்டம் மற்றும் பட்டி என்னும் பகுதிகள் கீழிருந்து மேல் நோக்கி (vertical) உள்ளன. கண்டத்தில் யாளிகளின் சிற்றுருவச் சிற்பங்கள் (galapadas) காணப்படுகின்றன.



தரைப்படம் கோயில் I

## அதிட்டானம்

உபபீடத்தின் மேலுள்ள அதிட்டானம் கீழிருந்து மேலநோக்கி உபானம், பத்மஜகதி, விருத்தக் குமுதம், யாளிவரி, கண்டம் மற்றும் வரி என்னும் பகுதிகளைக் கொண்டுள்ளது. பத்மஜகதியின் கீழ்ப்பகுதியில் தாமரையின் இதழ்கள் வெளிப்படையாகக்

காட்டப்படவில்லை. இவ்வதிட்டானம் பிரதிபந்த வகையைச் சேர்ந்தது. விருத்தக்குமுதம் சூத்ரபத்மத்தால் அலங்கரிக்கப் பட்டுள்ளது. யாளிவரியில், அரையாளிகள் பக்கச் சாயலாகக் (profile)காட்டப்பட்டுள்ளன. அவற்றில் சிலவற்றில் மட்டும் வாள் மற்றும் கேடயங்களைத் தாங்கியுள்ள வீரர்கள் அமர்ந்துள்ளனர். இவ்வரியின் மூலைகளிலும் பாதம் அல்லது சுவரின் மூலைகளிலும் வாயைப் பிளந்துகொண்டிருக்கும் மகரங்கள் செதுக்கப்பட்டிருக்கின்றன. அவற்றில் வீரர்கள் வாள், கேடயங்களுடன் அமர்ந்துள்ளனர். சிலவற்றில் சிம்மத்தின் முகம் காட்டப்பட்டுள்ளது.

யாளிவரிக்கு மேலே கண்டமும் எளிமையான வரி அல்லது வேதியும் காணப்படுகின்றன. இவை சுவரின் அலங்காரப் பகுதிகளாகும்[1]. சுவர்க்கண்டத்தில் சிற்றுருவச் சிற்பங்கள் (galapada motifs) செதுக்கப்பட்டிருக்கின்றன. சோழநாட்டில் உள்ள முற்காலச்சோழர் கோயில்களிலும் பாண்டியநாட்டில் உள்ள சோழர் கோயில்களிலும் இம்மாதிரிச் சிற்பங்கள் விரவிக் கிடப்பதைக் காணலாம்[2]. பாண்டிய நாட்டில் அம்பாசமுத்திரம் வட்டத்தில் உள்ள கோயில்களில் இவற்றைக் காணலாம்.



**கோயில் I**

சோழநாட்டில் முற்காலச்சோழர் கோயில்களில் உள்ள கண்டசிற்பங்கள் பெரும்பாலும் காப்பிய மற்றும் புராணக் கதைகளை விளக்குவனவாக இருக்கின்றன. ஒருசிலவற்றில்

மட்டுமே பூ வேலைப்பாடும் கருக்கு வேலைப்பாடும் காணமுடிகின்றது. ஆனால் பாண்டிய நாட்டில் உள்ள சோழர் கோயில்களில் பெரும்பாலும் பூ வேலைப்பாடும் கருக்கு வேலைப்பாடும் செதுக்கப்பட்டிருக்கும். சமயம்சார்ந்த சிற்பங்களும் நடனச்சிற்பங்களும் வடிப்பது மிக அரிதாகும். இங்கு கோயில் I இல் பல்வகை நடனச்சிற்பங்கள் காட்சியளிக்கின்றன.

இங்குள்ள அதிட்டானக் கூறுகள் பெரும்பாலும் முற்கால்ச் சோழர் கோயில்களின் அதிட்டான அமைப்புகளைப் பற்றிப் பகுப்பாய்வு செய்துள்ள கலை வரலாற்றாய்வாளர் டக்ளஸ் பேரட்டின் B $4b^3$ வகைப்பிரிவினைச் சார்ந்ததாகும். அவற்றை, திருவிளக்குடி (திருவேள்விக்குடி, தஞ்சை மாவட்டம்) யிலுள்ள மணவாளேசுவரர் கோயில், உலகபுரம் (தென்னாற்காடு) விஷ்ணு கோயில், தஞ்சாவூர் பிரகதீசுவரர்கோயில் ஆகியவற்றிலுள்ள அதிட்டானங்களோடு ஒப்பிடலாம். அறுதியாகக் கூறவேண்டு மானால் இது முதலாம் இராஜராஜனால் கட்டப்பட்ட உலகபுரம் கோயிலைப் பெரிதும் ஒத்துள்ளது. இராமேசுவரத்தைப் போன்றே உலகபுரத்திலும் குமுதத்தையும் ஜகதியையும் பிரிக்கின்ற தாமரை இதழ்ப்பகுதி காணப்படவில்லை.

கருவறையிலிருந்து புனிதநீராட்டுநீர் பிரநாளத்தின் மூலம் வெளிவருகின்றது. இங்கு பிரநாளம் தஞ்சைப் பெரியகோயில் போன்று யாளிவரியில் பொருத்தப்பட்டுள்ளது. சமகாலக் கோயில்களில் காணப்பெறும் சிம்மவக்த்ர அமைப்பின்றி இப்பிரநாளம் எளிமையாக உள்ளது.

பாதம் அல்லது சுவர்

சுவர்ப்பகுதி கர்ணம், பத்ரம் மற்றும் இவற்றிற்கு இடைப்பட்ட பின்னொதுக்கம் (recess)என்று பிரிக்கப்பட்டுள்ளது. இதில் உள்ள அரைத்தூண்கள் (pilasters) சதுரமான எடுப்பான அமைப் புடையவை. இவை தஞ்சைப் பெரியகோயிலை ஒத்துள்ளன. அரைத்தூண்கள் சுவரின் ஒவ்வொரு பிரிவின் மூலையிலும் அமைந்துள்ளன. சுவரின் கர்ணம் அல்லது மூலைப்பகுதி இறையுருவத்துடன் கூடிய கோஷ்டம் (niche) ஒன்றினைக் கொண்டுள்ளது. கோஷ்டத்தின் மேற்பகுதியில் தோரணம் உள்ளது. அதன் அலங்கார வேலைப்பாடுகள் தெளிவின்றி சிதைந்துள்ளன. கர்ணத்திற்கும் பத்ரத்திற்கும் இடையிலுள்ள பின்னொதுக்கம் கோஷ்டபஞ்சரத்தைக் கொண்டிருக்கின்றது.[4] இதிலும் இறையுருவத்தைக் காணமுடிகின்றது.. ஒவ்வொரு

பின்னொதுக்கத்திலும் உள்ள கோஷ்டபஞ்சரங்கள் வெவ்வேறு அமைப்புடைய பீடத்தின் மீது நிற்கின்றன. அவற்றில் உபபீடம் உள்ளது. இது ஜகதி, கண்டம், பட்டி ஆகிய பகுதிகளைக் கொண்டிருக்கிறது. கண்டத்தில் சிற்றுருவச் சிற்பங்கள தெரிகின்றன. உபபீடத்திற்கு மேலுள்ள அதிட்டானம் ஜகதி, விருத்தக்குமுதம், யாளிவரி, கண்டம், வரி அல்லது வேதி ஆகிய கூறுகளை உள்ளடக்கியுள்ளது. கோஷ்டபஞ்சரத்தின் மாடம் பஞ்சரம் ஒன்றினால் சுற்றி வளைக்கப்பட்டுள்ளது. இது கர்ணபகுதியில் காணப்படும் தோரணத்திலிருந்து வேறுபட்டுள்ளது.

கோஷ்டபஞ்சரத்தின் கோஷ்டத்தின் மேலுள்ள கபோதம் அழிந்த நிலையிலுள்ள இரண்டு கூடுகளைக் கொண்டிருக்கின்றது. இருப்பினும் இக்கூடுகள் தொன்மையான கலைமரபைக் காட்டுகின்றன. சுவரின் மையப்பகுதியான பத்ரம் என்னும் மிகப்பரந்த பகுதியில் தேவகோஷ்டம் எனும் மாடம் அமைக்கப்பட்டு அதனுள் இறையுரு வைக்கப்பட்டுள்ளது. பத்ரத்தின் அலங்கார வேலைப்பாடு பெரும்பகுதி அழிந்துள்ளது. சுவர்ப்பிரிவுகளின் மூலைகளில் நிற்கும் அரைத்தூண்களில் கடலரிப்பின் காரணமாகக் கலைக்கூறுகள் தெளிவுறத் தெரியவில்லை.

இத்தூண்களின் மாலஸ்தானங்கள் எளிமையானவை; தெளிவற்ற நிலையில் உள்ளன. மாலஸ்தானத்திற்கு மேலுள்ள பத்மபந்தம் எளிமையாகவும் கலசத்தைத் தாங்கியுமுள்ளது. கலசங்களில் சிலவற்றில் கருக்கு வேலைப்பாடும் வேறு சிலவற்றில் மூன்று தீபங்களின் அமைப்பும் காணப்படுகின்றன. கலசத்திற்கு மேலுள்ள தாடி, குடம் ஆகியவையும் எளிமையாகவே உள்ளன. பத்மம் பகுதி வெளியில் நீட்டிக் கொண்டிருக்காமல் உள்ளடங்கி யிருக்கின்றது. அரைத்தூணின் பலகையானது பெரிதாகவும் இரட்டைப் பலகையாகவும் விளங்குகின்றது. இம்மாதிரி அமைப்பு முற்காலச்சோழர்தம் கோயில்கள் பலவற்றில் காணப்படுகின்றது. அரைத்தூண்களின் மேற்பகுதியான போதிகை சிலவற்றில் சிதைந்திருக்கின்ற போதும் வேறு சிலவற்றில் T போன்ற முக்கோண ஆப்பு வடிவ அமைப்பைக் காண முடிகின்றது. இந்த Tவடிவம் எனும் ஆப்புவடிவ போதிகை தமிழகத்துக் கோயில்களில் முதன்முதலில் இராஜராஜனால் (கி.பி.985-1014) புகுத்தப்பட்டது. இக்கட்டடக்கலைக் கூறு, முதன்முதலில் கி.பி.1006 - இல் கட்டப்பட்ட தாதாபுரம்

சிவன்கோயிலிலும் அல்லது மதகடிப்பட்டு கூடங்குழிமகாதேவர் கோயிலிலும் இடம் பெற்றிருக்கிறது. போதிகைக்கு மேலுள்ள வீரகண்டம் எளிமையானதாகும். பெரும்பாலும் இப்பகுதியானது அனைத்துக் கோயில்களிலும் எளிமையாகவே இருக்கும்.

## பிரஸ்தரம்

கருவறையின் கூரை அல்லது பிரஸ்தரமானது எழுதகப் பகுதியில் எளிமையான உத்திரத்தைக் கொண்டுள்ளது. பொதுவாக பழமையான கோயில்களில் இப்பகுதியில் பூதவரி காணப்படும். ஆனால் இங்கு அது இல்லை. உத்திரத்திற்கு மேலுள்ள கபோதத்தின் ஓரப்பகுதி மணி போன்று அமைந்துள்ளது. மணி போன்ற அமைப்புடைய கபோதம் முதன் முதலில், பாண்டியர்களால் எட்டாம் நூற்றாண்டில் வெட்டப்பட்ட கழுகுமலை வெட்டுவான் கோயிலில் புகுத்தப் பட்டிருப்பினும், இதனை முற்காலச்சோழர் கோயில்களில் பெரும்பாலானவற்றில் காணமுடிகின்றது. கபோதத்தில் கர்ணம் மற்றும் பின்னொதுக்கத்திற்கு மேலே இரண்டிரண்டு கூடுகள் வரிசைப்படுத்தப்பட்டிருக்கின்றன. ஆனால் பத்ரம் பகுதியில் மூன்று கூடுகள் தெரிகின்றன. இதற்குக் காரணம் இது மற்ற இரு பகுதிகளை விட பரந்த ஒன்றாகக் காட்சியளிப்பதாகும். கல் கட்டடத்தின் மீது சுதை பூசப்பட்டிருப்பதால் கூடுகளில் என்ன அலங்காரம் இருந்திருக்கும் என்பது தெளிவாகத் தெரியவில்லை. கூட்டினுள் இருக்கும் பள்ளம் அல்லது கதம் மிகப்பெரியதும் வட்ட வடிவமானதுமாகும். கபோதத்திற்கு மேலே வியாழ அல்லது யாளிவரி உள்ளது. இங்கு யாளிகள் முழு உருவத்துடனும் பக்கச் சாயலாகவும் காட்டப்பட்டுள்ளன.

## மேல்தளங்கள்

கருவறையின் மேலுள்ள கட்டடப்பகுதியில் இரண்டாவது மூன்றாவது தளங்களைக் காணமுடிகிறது. அவற்றின் மேல் வட்ட வடிவ கிரீவமும் சிகரமும் உள்ளன. முன்னமே குறிப்பிட்டது போன்று இந்த மேற்றளங்களும் கல்லால் ஆனவையாகும். இரண்டாவது தளத்தில் ஹாரம் அமைந்திருக்கின்றது. இது கர்ணக்கூடு, பஞ்சரம், சாலை, பஞ்சரம், கர்ணக்கூடு என்று ஒவ்வொரு பக்கத்திலும் பிரிக்கப்பட்டுள்ளது. இங்கு சாலையில் மட்டுமே கல்லாலான இறையுருவர்களைக் காணமுடிகின்றது. கர்ணக்கூட்டின் [illegible] பத்மத்தினைத் தாங்கியுள்ள கூடுகளைக் கொண்டிருக்கின்றது. அனைத்துக் கர்ணக் கூடுகளிலும் உச்சியில் இருக்கவேண்டிய கலசப்பகுதி சிதைந்துள்ளது.

பஞ்சரப்பகுதியின் ஓரங்களில் இரண்டு அரைத்தூண்கள் உள்ளன. இதன் மேற்பரப்பில் உள்ள கூடுகளில் மகாபட்டி, கதம் மற்றும் கலசப்பகுதிகள் சுதை பூசப்பட்டு வேலைப்பாடுகள் மறைக்கப்பட்டிருக்கின்றன.

சாலைப்பகுதி நீண்ட நீள்சதுர அமைப்பாகும். இது வண்டிக்கூடு போன்ற கூரையைக் கொண்டிருக்கின்றது. இதன் மையப்பகுதியில் ஒவ்வொரு திசைகளிலும் இறையுருவுடன் கூடிய கோஷ்டம் உள்ளது. தெற்குப்பகுதி கோஷ்டத்தினைத் தட்சிணாமூர்த்தியும் வடக்குக் கோஷ்டத்தினைப் பிரம்மாவும் மேற்குக் கோஷ்டத்தினை விஷ்ணுவும் அலங்கரிக்கின்றனர். கிழக்குப் பக்கக் கோஷ்டம் வெறுமையாக உள்ளது. ஆனால் மரபுப்படி இங்கு இந்திரனின் உருவம் வைக்கப்பட்டு காலப் போக்கில் அது சிதைந்திருக்க வேண்டும். சாலையின் உச்சியில் பாயும் சிங்கங்கள் இரண்டு காட்டப்பட்டுள்ளன. சில சாலைகளில் யாளிகளும் வேறுசிலவற்றில் மனித உருவமும் கூட தெரிகின்றன. இது முற்காலச்சோழர் கலையை நினை வூட்டுகின்றது. இங்கு சாலையின் கூரையில் உன்னதமான நிலையில் நீண்ட பெரிய கூடுகள் உள்ளன. இவை இரண்டாம் தளத்தின் கபோதம் வரை உயர்ந்து காணப்படுகின்றன. இம்மாதிரி அமைப்பு சோழநாட்டில் திருப்பழனம் ஆபத்சகாயேசுவரர் கோயிலிலும் தஞ்சைப் பிரகதீசுவரர் கோயிலிலும் கங்கைகொண்ட சோழபுரத்திலும் காணப்படுகின்றது.

இவ்விமானத்தின் மூன்றாவது தளமும் ஒரு ஹாரமாக அமைந்து கர்ணக்கூடு, பஞ்சரம், சாலை, பஞ்சரம் என்று பிரிக்கப்பட்டுள்ளது. இங்குள்ள பஞ்சரம் மையத்தளத் (இரண்டாவது தளம்) திலிருக்கும் பஞ்சரத்திலிருந்து வேறுபடுத்திக் காட்டப்பட்டுள்ளது. இங்கு சாலை அமைப்பானது இரண்டாவது தளத்தைவிட சிறிதாக இருக்கின்றது. இது இயற்கையானதாகும். ஏனெனில் விமானம் உயரே செல்லச் செல்ல குறுக வேண்டியுள்ளது இயல்பே. இத்தளத்தின் கர்ணக்கூடுகள் முந்தைய தளத்தைப் போன்றே அமைந்துள்ளன.

பஞ்சரமானது பழமையைக் காட்டுவதோடு சோழர் கோயில்களில் இருப்பதுபோன்று சிறு சுவரையும் இரு கூடுகளையும் கொண்டுள்ளது. இம்மாதிரி அமைப்பைச் சோழநாட்டில் திருச்சென்னாம்பூண்டியிலும் (கி.பி.920) கொடும்பாளூர் மூவர்கோயிலிலும் (கி.பி.850) (தெற்குப் பக்கம் உள்ள கோயில்) மாமல்லபுரம் அர்ச்சுனன், பிடாரி,

வலயங்குட்டை (அனைத்தும் கி.பி. ஏழாம் நூற்றாண்டினைச் சேர்ந்தவை) இரதங்களிலும் காணமுடிகின்றது. இங்கு பொதுவாக இருக்கவேண்டிய நாசி (பொதுவாக சிம்மநாசி) காணப்படவில்லை.

இத்தளத்தின் அனைத்து திசைகளிலும் உள்ள சாலைகளின் மையத்தில் கோஷ்டங்கள் இறையுருவுடன் காட்சியளிக்கின்றன. இங்கே தெற்கே தட்சிணாமூர்த்தி, வடக்கே பிரம்மா, கிழக்கே இந்திரன் (அல்லது சுப்பிரமணியர்) மேற்கே விஷ்ணுவும் அமர்ந்துள்ளனர். சதுரமான கிரீவமேடையில் நான்கு சிம்மங்கள் அமர்ந்தநிலையில் காட்சியளிக்கின்றன. ஆனால் இவை கலையழகில் பிற்காலத்தைச் சேர்ந்தவை என்று தெரிகின்றது. மேலும் அவற்றைச் சரிவர ஆராய முடியாத அளவிற்கு சுதை பூசப்பட்டுள்ளது. இதற்கு மேலுள்ள வட்டவடிவ கிரீவத்தில் திசைக்கொன்றாக நான்கு கோஷ்டங்கள் உள்ளன. இந்த கிரீவ கோஷ்டங்களில் எந்த வாகனமுமின்றி இந்திரன் அல்லது சுப்பிரமணியர் (கிழக்கு), தட்சிணாமூர்த்தி (தெற்கு), பிரம்மா (வடக்கு) மற்றும் யோகநரசிம்மர் (மேற்கு) ஆகியோர் அமர்ந்திருக்கின்றனர். கிரீவ கோஷ்டத்தின் இருமருங்கிலும் இரண்டு குட்டையான, கட்டையான பூதகணங்கள் உள்ளனர். கல்லினாலான இந்த உருவங்களும் சுதையால் மூடப் பட்டிருக்கின்றன.[5]

கிரீவத்தின் மேலுள்ள சிகரம் வட்டவடிவமானது. இது கல்லாலானதும், பின்னாளில் சுதை பூசப்பட்டதுமாகும். இந்த சிகரம் நான்கு திசைகளிலும் நான்கு சிம்மமுக நாசிகளைத் தாங்கியுள்ளது. இவையனைத்திற்கும் உச்சியில் சிகரம் வைத்தாற்போல் கல்லாலான கலசம் உள்ளது.

## கோயில் II

மூன்றாவது பிரகாரத்தின் மேற்குப்பக்கத்தில் வடமேற்கு மூலையை ஒட்டி கோயில் II பிரம்மாண்டமாக அமைந்துள்ளது. மேலைக் கோபுரத்திற்கு அருகில் உள்ள இக்கோயிலும் மூன்று தளங்களைக் கொண்டதும் முற்றிலும் கல்லாலானதும் சாந்தார வகையைச் சேர்ந்ததுமாகும்.

### அதிட்டானம்

இக்கோயிலின் அதிட்டானம் உபானம், ஜகதி, முப்பட்டைக் குமுதம், கண்டம், பத்மம், சுவர்க்கண்டம் மற்றும் எளிமையான,

அலங்காரமற்ற வேதி ஆகிய பகுதிகளைக் கொண்டதாகும். பத்மபந்த அதிட்டான வகையைச் சேர்ந்ததாகும். இது டக்ளஸ் பேரட் கூறியுள்ள அதிட்டான வகைகளில் A2 பிரிவைச் சேர்ந்ததாகும். ஆனால் கண்டத்திற்கும் சுவர்க் கண்டத்திற்குமிடையிலுள்ள பத்மம் அரிதான ஒன்றாகும். ஏனெனில் பொதுவாகப் பல்லவர் கோயில்களிலும் புஞ்சை உட்பட[6] முற்காலச் சோழர் கோயில்களிலும் இந்த பத்மத்திற்கு மாறாக ஒரு பட்டிகையே அமைக்கப்படுவது வழக்கமாகும்.

அதிட்டானத்தின் அனைத்துக் கூறுகளும் எளிமையானவை, அலங்காரமற்றவை. இதன் உச்சிப்பகுதியான வேதியின் அடிப்பக்கத்தில் உள்ள பத்மம் கூட வெளிப்படையாக காட்டப்படாது உள்ளடங்கியுள்ளது. வடக்குச் சுவரில் உள்ள பிரநாளம் எளிமையாகவும் நீண்டும் அனைத்து நிலைகளிலும் கோயில் I ஐ ஒத்ததாகவும் இருக்கின்றது. இது அதிட்டானத்தின் பத்மம் பகுதியில் இணைந்துள்ளது.



**தரைப் படம் – கோயில் II**

## பாதம்

இக்கோயிலின் சுவர் அல்லது பாதப் பகுதி கர்ணம், பிரதி கர்ணம், பத்ரம் மற்றும் இவை ஒவ்வொன்றிற்குமிடையே பின்னொதுக்கம் என்று பிரித்துக் காட்டப்பட்டுள்ளது. ஒவ்வொரு பிரிவின் மூலை அல்லது விளிம்பில் பிரம்மகாண்டம் எனப்படும்

சதுரவடிவ அரைத்தூண்கள் வைக்கப்பட்டிருக்கின்றன. இவ்வமைப்பு கோயில் I ஐ பெரிதும் ஒத்துள்ளது.

கர்ணப்பகுதி கோயில் I ஐப் போலவே கட்டப்பட்டுள்ளதோடு இதன் கோஷ்டத்திலும் இறையுருவம் காணப்படுகின்றது. இருப்பினும் இந்த கோஷ்டத்திற்கு மேலே சாலையமைப்போ அல்லது தோரணமோ அமைக்கப்படவில்லை. பின்னொதுக்கங்கள் கோயில் I - இல் இருக்குமளவிற்கு ஆழமாக இல்லை. எனவே குறுகிய இடைவெளியில் கோஷ்ட பஞ்சரத்திற்குப் பதிலாக ஒரு கம்பம் மட்டும் (தூண்) நிறுத்தி வைக்கப்பட்டுள்ளது. அதன் உச்சியில் யாளியின் உருவம் காணப்படுகின்றது. இதனைத் தமிழகத்தின் பல கோயில்களிலும் காணமுடிகின்றது. பின்னொதுக்கப்பகுதியில் உள்ள அரைத்தூண் வீரகண்டம் வரை உயர்ந்திருக்கவில்லை. பொதுவாக அரைத்தூண்கள் வீரகண்டத்தின் உயரம் வரை செல்வது வழக்கம். ஆனால் இங்கு கலசம் வரை உயர்ந்து அதற்கு மேல் யாளி அமர்ந்துள்ளது. பிரதி கர்ணம், கோஷ்டமோ அல்லது பஞ்சரமோ இல்லாது எளிமையாக அமையும் ஒரு சுவர்ப்பிரிவாக மட்டுமே இங்கு காணப்படுகின்றது. மையத்திலுள்ள பத்ரப் பகுதியில் தேவகோஷ்டங்கள் இறையுருவுடன் காட்சியளிக்கின்றன. இந்த தேவகோஷ்டங்களின் உச்சியினை வேலைப்பாடற்ற தோரணங்கள் அணிசெய்கின்றன.

கர்ணத்திலும் பத்ரத்திலும் இருக்கின்ற கோஷ்டங்கள் அதிட்டானத்தின் பத்மப்பகுதியில் தொடங்குகின்றன. ஆனால் பின்னொதுக்கத்தில் உள்ள கம்பமோ சுவரின் அல்லது வேதி பகுதியிலிருந்து தொடங்குகின்றது. முன்பே குறிப்பிட்டிருப்பது போல் அரைத்தூண்கள் கோயில் I - இல் இருப்பதைப் போன்ற பாகங்களைக் கொண்டுள்ளன. வேலைப்பாடற்ற தாடி, எளிய சிறியகுடம், கோயில் I ஐப் போன்ற பத்மம், கட்டான் இரட்டைப் பலகை, எளிய வீரகண்டம் மற்றும் முக்கோண ஆப்புவடிவ போதிகை ஆகியவற்றையும் இவற்றில் காணலாம்.

## பிரஸ்தரம்

வீரகண்டத்தின் மேலுள்ள எழுதகம் கோயில் I ஐப் போன்று ஒரு உத்திரத்தோடு இல்லாமல், பூதவரியைக் கொண்டுள்ளது. இந்த பூதவரியானது குறைந்த அளவு புடைப்புச் சிற்பங்களாகக் காட்டப்பட்டிருப்பினும் அவற்றில் நடனக் காட்சிகளும் இசைக் கலைஞர்களும் மிளிர்கின்றன. எழுதகத்தின் மேலுள்ள கபோதம்

கோயில் I - ஐப் போன்று மணி போன்று பக்கச்சாயல் அமைப்பு உடையது. இதில் ஒவ்வொரு சுவர்ப்பிரிவிக்கும் மேலே அதாவது கர்ணம், பிரதிகர்ணம் மற்றும் பத்ரம் ஆகியவற்றின் மேலே இரண்டிரண்டு கூடுகளைத் தாங்கியுள்ளது. கூடுகளின் மேல்பகுதி சிதைந்துள்ளது. கபோதத்திற்கு மேல் யாளிவரிக்குப் பதிலாக எளிமையான கற்பலகைகள் காணப்படுகின்றன.

## மேல் தளங்கள்

கருவறையின் மேலுள்ள கட்டடப்பகுதி இரண்டாவது மற்றும் மூன்றாவது தளங்களைக் கொண்டுள்ளது. மூன்றாவது தளத்திற்குமேல் வட்டவடிவ கிரீவமும் சிகரமும் காணப் படுகின்றன. கோயில் I - ஐப் போன்றே இந்த விமானக் கோயிலும் அடிமுதல் முடிவரை கற்களாலானதாகும். இரண்டாவது தளம் ஒரு ஹாரமாக அமைந்து கர்ணக்கூடு, பஞ்சரம், சாலை ஆகிய உறுப்புகளைக் கொண்டிருக்கின்றது. இக்கோயிலில் மூன்றுவகை பஞ்சர அமைப்புகளைக் காணமுடிகின்றது.



**பஞ்சர வகைகள்**

முதலாவது, கோயில் Iஇல் கண்டது போல் ஒரு எளிமையான சுவரில் இரண்டு கூடுகளைக் கொண்டது; இரண்டாவது, இரண்டு அரைத்தூண்களைக் கொண்டு உச்சியில் உயரமானதும் பெரியதுமான நாசி ஒன்றைத் தாங்கியிருப்பது; மூன்றாவது, திருவேதிக்குடியிலுள்ள[7] சோழர்கோயிலைப் போன்று சுவர் போன்ற அமைப்புடன் மத்தியில் ஒரு கூடு மட்டும் கொண்டிருப்பதாகும்.

கர்ணமானது கோயில் I இல் உள்ளது போன்றே கட்டப்பட்டிருக்கின்றது. நீள்சதுர வண்டிக்கூடு போன்ற கூரையுடைய தாழ்வாரமாக சாலை அமைந்துள்ளது. இதனுடைய கோஷ்டத்தில் விஷ்ணுவின் இறையுருவம் காணப்படுகிறது. பொதுவாகக் கோயில் விமானங்களிலும் கோபுரத்தின் உச்சியிலும் கலசங்கள் தனியாகவே அதாவது தேவைப்படும் போது எடுத்து வைத்துக் கொள்வதற்கேற்றபடி பொருத்தப்

படுகின்றன என்னும் கருத்துக்கு ஏற்ப இங்கு சாலையில் வைக்கப்பட்டுள்ளது. இதற்குப் பக்கத்தில் உடைந்து கிடக்கின்ற கலசம் ஆதாரமாக விளங்குகின்றது. இரண்டாவது தளத்தின் ஹாரமானது அதன் சுவரிலிருந்து தள்ளி தனியாக அமைக்கப்பட்டிருக்கின்ற காரணத்தினால் சுவருக்கும் ஹாரத்திற்குமிடையே திருச்சுற்றுப்பாதை அமைந்துள்ளது. இதனைப் பார்த்தே பிற்காலத்தில் கட்டப்பட்ட இராமநாதசுவாமி சன்னதியிலும் ஹாரப்பகுதியில் திருச்சுற்றுப்பாதை விடப்பட்டிருக்கக் கூடும்.

மூன்றாவது தளமும் கர்ணக்கூடு, பஞ்சரம், மற்றும் சாலைப் பகுதிகளைக் கொண்ட ஹாரத்தைக் கொண்டிருக்கின்றது. இதன் கர்ணக்கூடு இரண்டாவது தளத்தை ஒத்துள்ளது. பஞ்சரம் எளிமையாக சுவரின் மேலே இரு கூடுகளைத் தாங்கியுள்ளது. சாலைப் பகுதியும் இரண்டாவது தளத்தைப் போன்றே அமைந்திருப்பதோடு அதன் கூரையைச் சுதையினாலான மனித உருவங்கள் தாங்குகின்றன. இதன் கோஷ்டத்தில் விஷ்ணுவின் உருவம் வைக்கப்பட்டுள்ளது.



கோயில்கள் IIம் IIIம்

கிரீவமேடையில் நான்கு திசைகளிலும் நந்தியின் உருவம் காணப்படுகின்றது. நான்கு பக்கங்களிலும் உள்ள கிரீவ கோஷ்டங்களில் மேற்கே யோகநரசிம்மரும், தெற்கே தட்சிணாமூர்த்தியும், வடக்கே பிரம்மாவும், கிழக்கே இந்திரனும் வீற்றிருக்கின்றனர். கிரீவத்தின் மேல் உள்ள வட்டமான சிகரம் கிரீவ கோஷ்டங்களைச் சுற்றி, நான்கு சிம்மமுக நாசிகள் காட்சியளிக்கின்றன. சிகரத்தின் மேற்பரப்பில் ஊர்த்துவ பத்மத்தையும் அதற்கு மேல் கலசத்தையும் காணலாம்.

## கோயில் III

இக்கோயில் இரண்டாவது கோயிலுக்கு ( கோயில் II ) வலப்புறம் உள்ளது. இது மற்ற இரு கோயில்களைப் போலன்றி இரண்டு தள விமானமாகும். இதுவும் முற்றிலும் கல்லால் கட்டப்பட்டதாகும்.

### அதிட்டானம்

இக்கோயில் அதிட்டானம் எளிமையானதும் பாதபந்த வகையைச் சேர்ந்ததுமாகும். இதில் உபானம், ஜகதி, முப்பட்டை, குமுதம், கண்டம், பட்டி, சுவர்க்கண்டம் மற்றும் வேலைப்பாடற்ற வேதி அல்லது வரி ஆகிய உறுப்புக்களைக் காணலாம். இது டக்ளஸ் பாரட்டின் அதிட்டானப் பகுப்பில் A 2 வகையைச் சேர்ந்ததாகும். இவ்வகை அதிட்டானங்கள் பல்லவர் காலத்தில் புகுத்தப்பட்டு, சில சோழர் கோயில்களிலும் (உதாரணமாக புஞ்சை நல்துணையீசுவரர்கோயில்) பல பாண்டியர் கோயில்களிலும் பின்பற்றப்பட்டுள்ளன.

### பாதம்

இக்கோயில் சுவர் I இல் இருப்பது போன்று கர்ணம், பத்ரம் மற்றும் இவற்றிற்கிடையேயான பின்னொதுக்கம் என்று பிரிக்கப்பட்டுள்ளது. கர்ணத்தின் சுவர்ப்பகுதியில் கும்பபஞ்சரம் வைக்கப்பட்டுள்ளது. இதில் கீழே ஒரு கலசமும் அதன் இரு பக்கங்களிலும் பூமாலைகள் தொங்குவது போன்றும் அதன் மத்தியில் கூம்பும் வைக்கப்பட்டிருக்கும். இங்கு பஞ்சரத்தின் கம்பு தாடி வரை உயர்ந்துள்ளது. தாடிப்பகுதியில் இரண்டு பக்கங்களிலும் பாயும் சிங்கங்கள் உள்ளன. இவ்விரண்டுக்கும் நடுவில் நடனமாடும் பெண் உள்ளாள். இவ்வமைப்பு தமிழகத்துக்

கோயில்களில் வேறெங்கும் காணக்கிடைக்காத ஒரு தனிச்சிறப்புக் கூறாகும். இதற்குமேல் சிதைந்த கோயிலின் உருவத்தைத் தாங்கியுள்ள பலகை இருக்கின்றது. இரு கரங்களில் தாமரை மலர்களை ஏந்தியிருக்கும் இப்பெண்தெய்வம் இலக்குமியாக இருக்க வேண்டும். தமிழகத்தில் கும்பபஞ்சரத்தை முதன்முதலில் புகுத்தியது முதலாம் இராஜராஜன் காலத்துக் கோயில்களிலாகும். இவற்றை தஞ்சாவூரிலும் தாதாபுரத்திலும்[9] காணலாம். ஆனால் தொடக்க கால பௌத்த கலைகளில் கும்பம் ஒரு முக்கிய கட்டடக்கலை உறுப்பாகப் பயன்படுத்தப்பட்டது. உதாரணமாக மகாராட்டிரத்தில் கார்லே மற்றும் நாசிக்கில் உள்ள பௌத்த சைத்தியங்களில் தூண்களின் அடித்தளப்பகுதியாக கும்பம் வைக்கப்பட்டுள்ளது.[10]



**தரைப்படம் – கோயில் III**

சுவர் பின்னொதுக்கங்களில் (recesses) கோயில் I இல் இருப்பது போன்று இறையுருவங்களுடன் கூடிய கோஷ்டங்கள் காணப்படுகின்றன. தென்மேற்கு கர்ணத்தில் உள்ள கோஷ்டத்தில் சிவபெருமான் சந்திரசேகரராகக் காட்சி தருகின்றார். இக்கோஷ்டத்திற்கு மேலே அழிந்த நிலையிலுள்ள தோரணம் காணப்படுகின்றது. அதன் மையப்பகுதியில் வெறுமையான (empty) அரைவட்ட கதம் உள்ளது. வடமேற்குப் பின்னொதுக்கத்தில் உள்ள கோஷ்டத்தில் திரிபுராந்தகரைக் காணலாம். திரிபுராந்தகர் உருவம் சோழப் பேரரசர் முதலாம் இராஜராஜனுக்கு மிகவும் விருப்பமானதென கலை

வரலாற்றாளர்கள் அறிவர். இதன் மீதுள்ள தோரணம் சற்று உயரமான கதத்தைக் கொண்டுள்ளது. வடசுவரில் உள்ள வடமேற்கு கர்ணம் மேற்குச் சுவரில் உள்ளவற்றினைப் போன்றே அமைந்திருக்கின்றது. இப்பகுதியில் உள்ள பின்னொதுக்கத்துக் கோஷ்டத்தில் சிவபெருமானின் உருவத்தைக் காணலாம். வடக்கு பத்ரம் மூன்றாம் பிரகார மேடையால் மூடப்பட்டிருக்கின்றது. இதன் மேல் கோஷ்டத்தில் சிவபெருமானின் சிற்பம் உள்ளது. இதற்கருகில் உள்ள பின்னொதுக்கத்திலும் சிவபெருமான் வைக்கப்பட்டுள்ளார். தெற்குச்சுவரில் உள்ள பத்ரம் மற்றும் பின்னொதுக்கங்களிலும் சிவபெருமானின் உருவங்களே உள்ளன. கோயில் II இல் பத்மப் பகுதியில் பிரநாளம் பொருத்தியிருப்பது போன்றே இக்கோயிலிலும் அதே இடத்தில் பத்மத்திற்குப் பதில் பொதுவாக இருக்க வேண்டிய பட்டியில் பொருந்தியுள்ளது.

## பிரஸ்தரம்

இக்கோயிலின் வாஜனம் அல்லது எழுதகம் கோயில் II ஐப் போன்றே பூதவரிசையைக் கொண்டிருக்கின்றது. இது மணி போன்ற பக்கச்சாயல் அமைப்புடைய கபோதத்தைத் தாங்குகின்றது. கபோதத்தில் ஒவ்வொரு சுவர்ப்பிரிவுக்கும் மேலே இரண்டு கூடுகள் வீதம் அமைக்கப்பட்டுள்ளன. இங்கும் கோயில் II ஐப் போன்றே, கபோதத்தின் மேல் யாளிவரிக்கு பதிலாக கல்வரிசைகளையே காணமுடிகின்றது. இம்மாதிரியமைப்பை சமகாலத்து திருவக்கரை (கி.பி.1001) சோழர் கோயிலில் பார்க்கலாம்[11].

## மேல்தளம்

கருவறையின் மேல்பகுதி இரண்டாவது தளத்தையும் வட்டவடிவ கிரீவத்தையும் சிகரத்தையும் கலசத்தையும் கொண்டுள்ளது. இரண்டாவது தளத்தின் ஹாரம் மற்ற இரு கோயில்களைப் போன்றே கர்ணக்கூடு, பஞ்சரம், சாலை என்று பகுக்கப்பட்டிருக்கின்றது. இதன் கர்ணக்கூடும் சாலையும் கோயில் II- ஐ ஒத்துள்ளது. ஆனால் பஞ்சரம் கோயில் I - ஐப் போன்றுள்ளது. இரண்டாம் தளத்தின் கபோதம் ஒவ்வொரு திசையிலும் நான்கு பூதகணங்களால் தாங்கப்படுகிறது. அவற்றில் சில சிதைந்துள்ளன. வழக்கத்திற்கு மாறாக கிரீவமேடையின் நான்கு மூலைகளிலும் கர்ணக்கூடுகள் கட்டப்பட்டுள்ளன. ஒவ்வொரு கர்ணக்கூட்டின் இரு மருங்கிலும் நந்திகள் (மொத்தம் எட்டு) அமர்த்தப்பட்டுள்ளன. இவ்வரிதான

கலைக்கூறு மிகச்சில கோயில்களில் மட்டுமே காணப்படுகின்றது. பல்லவர் தம் கலைக்கூடமான மாமல்லபுரத்து இரதங்கள் சிலவற்றிலும் சோழ நாட்டில் கி.பி.11 ஆம் நூற்றாண்டைச் சேர்ந்த கூழம்பந்தல் - கங்கை கொண்ட சோழீசுவரர்[12] கோயிலிலும் இவ்வகையமைப்பைக் காணமுடிகிறது.

வட்டவடிவமான கிரீவம் நான்கு திசைகளிலும் வெறுமையான (இறையுருவம் இல்லாத) கோஷ்டங்களைக் கொண்டு வட்டவடிவ சிகரத்தைத் தாங்கி நிற்கின்றது. இச்சிகரத்தைச் சுற்றி நான்கு நாசிகள் உள்ளன. இதற்கு உச்சியில் உள்ள கலசம் சுதை பூசப்பட்டுள்ளது.

ஒரே காலத்தைச் சேர்ந்த மேலே விளக்கப்பட்ட கோயில்கள் I, II, III ஒவ்வொன்றும் ஒவ்வொரு வகையான கட்டட அமைப்புகளைப் பிரதிபலிக்கின்றன. இவை தீபகற்பத்தின் தென்கோடியில் விளங்கிவந்த கட்டடக்கலை மையம் ஒன்றின் வெவ்வேறு வகை கட்டடக்கலை அமைப்புகளைச் சோதனை யோட்டமாக அமைத்திருக்க வேண்டும் என்று எண்ணும்படி அமைந்திருக்கின்றன. சுவரின் பகுப்புகளும் ஒவ்வொன்றிலும் வேறுபட்ட நிலையைக் காட்டுகின்றன. உதாரணமாக சுவரின் பின்னொதுக்கப்பகுதியில் கோஷ்டபஞ்சரம் (கோயில் I), எளிமையான யாளியைத் தாங்கியுள்ள கம்பபஞ்சரம் (கோயில் II) மற்றும் கும்பபஞ்சர அலங்காரம் (கோயில் III) என்று வெவ்வேறு அமைப்புக்கள் உள்ளன. ஹாரப்பகுதியிலும் வேறுபட்ட பஞ்சர உறுப்புகளைக் காணலாம். இரண்டு அரைத்தூண்களையும் அதற்கு மேல் உயரமான கூடும் கொண்டிருப்பது (கோயில்கள் I மற்றும் II இன் இரண்டாம் தளம்) மேலும் இரண்டு கூடுகளைக் கொண்ட எளிமையான சுவர் (கோயில்கள் I மற்றும் II – இன் மூன்றாவது தளம்) மற்றும் மத்தியில் கூடு அமைந்த எளிமையான சுவர் (கோயில் II இன் இரண்டாம் தளம்) என்று வேறுபட்ட பஞ்சரங்கள் இக்கோயில்களில் இடம் பெற்றுள்ளன.

மூன்று கோயில்களில் I ம் II ம் மூன்றுதள சாந்தாரவகை விமானங்கள், கோயில் IIIமட்டும் இரண்டு தளங்களையுடையதும் பெரும்பான்மையான கோயில்களில் காணப்படும் நிரந்தர வகையைச் சேர்ந்ததுமாகும். இவையனைத்திலுமே மேற்கு பத்ரப்பகுதியில் உள்ள தேவகோஷ்டங்கள் இலிங்கோத்பவர் உருவத்தைக் கொண்டிருப்பினும் அவை ஒன்றிலிருந்து மற்றொன்று வேறுபட்டிருக்கின்றது. கோயில் I இல் உள்ள இலிங்கோத்பவருக்கு இரு பக்கங்களிலும், சோழநாட்டுப்

புள்ளமங்கையில் உள்ளது போன்று பிரம்மாவும் விஷ்ணுவும் வணங்கிய நிலையிலிருக்கின்றனர். மற்ற இரண்டு கோயில்களில் உள்ள இலிங்கோத்பவருக்கு இரு பக்கமும் பிரம்மாவும் விஷ்ணுவும் இடம் பெறவில்லை. கோயில் I இல் எழுதகம் வேலைப்பாடின்றி வெறும் உத்திரமாக இருக்கின்ற நிலையில் மற்ற இரண்டு கோயில்களிலும் இப்பகுதியில் பூதவரி காணப்படுகின்றது. கபோதத்திற்கு மேலே இருக்க வேண்டிய யாளிவரி கோயில் I இல் மட்டும் இடம் பெற்றுள்ளது. ஆனால் மற்ற இரண்டிலும் இவ்விடத்தில் கல்வரிசைகளையே காண முடிகின்றது. இவ்வாறு இந்த மூன்று கோயில்களும் ஒரே காலத்தில், அதாவது பத்தாம் நூற்றாண்டின் இறுதிக் கட்டத்திலோ அல்லது பதினோராம் நூற்றாண்டின் தொடக்கத் திலோ கட்டப்பட்டிருப்பினும் அவை வேறுபட்ட கட்டடக் கலைக் கூறுகளைக் கொண்டு விளங்குகின்றன. அவை தங்களுக்குள்ளேயே ஒரு கலைப்பள்ளியாக அல்லது கலை மையமாகத் திகழ்ந்துள்ளன என்பது கண்கூடு.

இந்த மூன்று கோயில்களில் கல்வெட்டுகள் ஏதும் காணப்பட வில்லை. எனினும் கட்டடக்கலை நுணுக்கங்களின் அடிப்படையில் இவை சோழப் பேரரசன் முதலாம் இராஜராஜனின் (கி.பி.985 – 1014) கலைப்பணியாக இருக்க வேண்டுமென்பது கீழ்க்காணும் காரணங்களால் புலப்படுகின்றது.

1. இக்கோயில்கள் அனைத்தும் முற்றிலும் கல்லாலானவை இவற்றில் இரண்டு, மூன்று தளங்களையுடைய விமானங்கள். மூன்றாவது கோயில் இரண்டு தள விமானமாகும். பாண்டிய நாட்டின் அனைத்துக் கோயில்களையும் சீர்தூக்கிப் பார்த்தால் இம்மாதிரியான கோயில்கள் எங்கும் காணக் கிடைத்தில. இக்கோயில்கள் தஞ்சைப் பிரகதீசுவரர் கோயில் போன்று பேரரசுத் தன்மையுடையவை (royal or imperial type of temples) யாகும். முதலாம் இராஜராஜ சோழனுக்கு முந்தைய காலத்திலேயே முற்றிலும் கல்லாலான மூன்றுதள விமானங்கள் சோழ நாட்டில் எழுப்பப்பட்டிருந்த போதும் (புள்ளமங்கைப் பிரம்மபுரீசுவரர் கோயில் மற்றும் திருவாரூர் அசலேசுவரர் கோயில்) அவை அரைத்தூண்கள் மற்றும் போதிகையின் அமைப்பிலும் சிற்பங்கள் வைக்கப்பட்டிருக்கும் பாங்கிலும் முற்காலச்சோழர் கலையின் நிலையைக் காட்டுவதோடு இராமேசுவரத்தில் உள்ள இம்மூன்று கோயில்களிலிருந்து வேறுபட்டுள்ளன. எனவே இக்கோயில்களை இராஜ ராஜனுக்கு முந்தியவையாகக் கொண்டு செல்ல முடியாது.

2. அதிட்டான அமைப்பில் செங்குத்தான ஜகதிக்குப் பதிலாக பத்மம் அல்லது தாமரை செதுக்கப்பட்டுள்ளது. முப்பட்டை குமுதத்திற்குப் பதிலாக விருத்தக்குமுதம் வைக்கப்பட்டிருக்கின்றது (கோயில் I). அதிட்டானத்தில் யாளிவரி காட்டப்பட்டுள்ளது. இக்கூறு பல்லவர் காலத்திலேயே மாமல்லபுரம் கடற்கரை கோயிலிலேயே புகுத்தப்பட்டிருப்பினும் இது பெருவளர்ச்சி பெற்றது சோழர் காலத்தில் ஆகும். கோயில் IIஇன் அதிட்டானத்தில் பட்டிகை வரவேண்டிய இடத்தில் பத்மவரி அமைந்துள்ளது. இது பத்மபந்த அதிட்டானமாக வளர்ச்சியடைந்துள்ளது. பல்லவர் காலத்தில் பயன்படுத்தப்பட்ட எளிமையான பாதபந்த அதிட்டான அமைப்பானது கோயில் III இல் பின்பற்றப்பட்டுள்ளது. இக்கூறு சோழர்காலம் முழுவதும் மற்றும் பாண்டியர்களாலும் கடைப்பிடிக்கப்பட்டது. கோயில் I இன் அதிட்டானம் தஞ்சைப் பிரகதீசுவரர் கோயிலை ஒத்துள்ளது.

3. சோழநாட்டில் உள்ள முற்காலச்சோழர் கோயில்களைப் போன்றும் பாண்டிய நாட்டில் உள்ள சோழர் கோயில்கள் போன்றும் இங்கும் கலபாத சிற்பங்கள் இடம் பெற்றிருக்கின்றன.

4. இக்கோயில்களின் தேவகோஷ்டங்களில் உள்ள இறையுருவங்களோடு தொடர்புடைய சிற்பத் தொகுதிகள் பக்கச் சுவர்களில் வைக்கப்பட்டுள்ளன.

5. கபோதத்தின் கீழும் மேலும் முறையே அமைக்கப்பட்டுள்ள பூதவரியும் யாளிவரியும் முற்காலச்சோழர்தம் கோயில்களைப் பெரிதும் நினைவூட்டுகின்றன.

6. கிரீவகோஷ்டத்தின் இருமருங்கிலும் பூதகணங்களும் பாயும் சிங்கங்களும் அல்லது யாளிகளும் வைக்கப்பட்டுள்ளன. சில இடங்களில் முற்காலச்சோழர் கோயில்களைப் போன்று சாலையின் கூரையை மனித உருவங்கள் தாங்குகின்றன.

7. விமானத்தின் உயரத்தைக் கூட்டுவதற்காக உயரமான உபபீட அமைப்பு முதலாம் இராஜராஜன் காலத்தில் புகுத்தப்பட்டது. இங்கு (கோயில் I) மச்சபந்த உபபீடத்தின் (அதிட்டானம் போன்ற அமைப்பு) மீது பிரமிக்கும் வகையில் விமானம் நிற்கின்றது. தஞ்சையில் உள்ளது போன்று உபபீடமானது விமானத்தின் உயரத்திற்குத் தகுந்தாற்போல் இலக்கண முறைப்படி கட்டப்பட்டுள்ளது.

8. பல முற்கால, இடைக்காலச் சோழர்களின் கோயில்களில் உள்ளது போன்று அரைத்தூண்களின் பலகைகள் பெரியதாகவும் இரட்டைப் பலகையாகவும் அமைந்துள்ளன.

9. அரைத் தூண்களில் உள்ள போதிகை Tபோன்ற முக்கோண வடிவ ஆப்பினைக் கொண்டு விளங்குகின்றது. இம்முறை முதலாம் இராஜராஜன் காலத்தில்தான் முதன்முதலில் புகுத்தப்பட்டது.

10. கோயில் III இல் கும்பபஞ்சரம் வைக்கப்பட்டுள்ளது. இது முதலாம் இராஜராஜனின் சாதனைகளில் ஒன்றாகும். இதனைத் தஞ்சைப் பெரிய கோயிலில் காணலாம்.

11. இந்த மூன்று கோயில்களில் இடம்பெறுகின்ற இறையுருவங்களை உற்றுநோக்கின் அவை கருதுகோளிலும் அமைப்பு முறையிலும் தஞ்சைப் பிரகதீசுவரர் கோயில் போன்றே இருப்பதை உணரலாம். இவற்றில் குறிப்பிடத்தக்கது இராஜராஜனுக்குப் பிரியமான திரிபுராந்தகர் சிற்பமாகும். இக்கோயில்களில் முதலாம் இராஜேந்திரனுக்குப் பிடித்தமான சண்டேசுவர அனுக்கிரகமூர்த்தி வைக்கப் பெறவில்லை.

12. இக்கோயில்களில் உள்ள கோஷ்டங்கள் இரண்டாகப் பிரிக்கப்பட்ட அரைத்தூண்களுக்கு இடைப்பட்ட பகுதியில் ஆழமாக வெட்டப்பட்டிருக்கின்றன. சில தேவகோஷ்டங்களில் தஞ்சைப் பெரியகோயிலைப் போன்றே வீரர்களின் சிற்பங்கள் வைக்கப்பட்டிருப்பது நமது கருத்துக்குப் பெரிதும் துணை செய்கின்றது.

13. சதுரமான, அமைதி பொங்கும், மென்மையான, அழகான மற்றும் கருணை வடிவான முகஅமைப்பினையும் எளிமையான ஹாரம், கேயூரம் போன்ற ஆபரணங் களையும் சிறிய தேகத்தையும் மெல்லிய இடையினையும் சிம்மமுகக் கச்சையையும் அழகான ஆடையமைப்பு முறையையும் உன்னதமான தலையலங்காரத்தையும் கொண்டுள்ள இக்கோயில்களின் சிற்பங்கள் அனைத்தும் முற்கால மற்றும் இடைக்காலச்சோழர்களின் கலைப்பாங்கைப் பெரிதும் பறை சாற்றுகின்றன.

14. பிரகதீசுவரர் கோயில் போன்றே இந்த மூன்று கோயில்களிலும் சதுரமான எடுப்பான அரைத்தூண்கள் உள்ளன. முதலாம் இராஜேந்திரனால் (கி.பி.1014–44) கட்டப்பட்ட கங்கைகொண்ட சோழபுரம் கோயிலில்

வெவ்வேறு வகை அரைத்தூண்களைக் காணலாம். அங்கே கர்ணப் பகுதியில் பிரம்மாண்டமான அரைத்தூணும், பின்னொதுக்கப் பகுதியில் விஷ்ணு காண்ட (எண்பட்டை) அரைத்தூணும், பத்ரப்பகுதியில் பல பட்டைகளைக் கொண்டதாகவும் அமைக்கப்பட்டிருக்கின்றன.

15. முதலாம் இராஜராஜன் காலத்தில் பாண்டிய நாட்டிலும் இலங்கையிலும் சோழரின் அரசியல் ஆதிக்கம் நிலவியதும் இக்கருத்துக்கு வலுவூட்டுகின்றது. இம்மன்னன் காலத்தில் தான் வட இலங்கை கைப்பற்றப்பட்டு மும்முடிச் சோழமண்டலம் என்று பெயரிடப்பட்டது. இதன் விளைவாக சில பௌத்தமடாலயங்கள் தகர்க்கப்பட்டன. சில இந்துக் கோயில்கள் கட்டப்படலாயின.[13]



வீரர் சிற்பம் – கோயில் II

## இரட்டைக் கோயில்கள்

பாவபச்சேசுவரர் மற்றும் புன்யதானேசுவரர் கோயில்கள் என்று இன்று அழைக்கப்படுகின்ற இரட்டைக் கோயில்கள் மூன்றாவது பிரகாரத்திற்குள், சேதுமாதவர் சன்னதிக்கு அருகில் அமைந்துள்ளன. இவற்றில் ஒன்று கிழக்கு நோக்கியும் மற்றொன்று மேற்கு நோக்கியுமுள்ளன. அடி முதல் முடிவரை கல்லாலான இந்த இரண்டுதள விமானங்கள் சுதை பூசப்பட்டுள்ள காரணத்தால் இவற்றின் கட்டடக்கலைக் கூறுகள் பெரும்பகுதி மறைந்துள்ளன. கண்ணுக்குப் புலப்பட்ட கலைக் கூறுகளை உற்று நோக்கியதன் பயனாகக் கீழ்க்கண்ட வரலாற்றுண்மைகள் புலப்படுகின்றன.



**தரைப்படம் – இரட்டைக் கோயில்கள்**

இவ்விரு விமானக் கோயில்கள் உயரமான பொதுவான உபபீடத்தின் மீது கம்பீரமாக நிற்கின்றன. இவ்விரண்டிற்கும் பொதுவான மகாமண்டபம் விஜயநகர-நாயக்கர் ஆட்சிக்காலத்தது.

இக்கோயில்களைப் பிற்காலப்பாண்டியர் காலத்தில் கட்டப் பட்டவையென கே.ஜி.கிருஷ்ணன் கூறுகின்றார்.[14] ஆனால் இந்நூலாசிரியரின் அண்மைக்கால ஆய்வு இக்கோயில்கள் கி.பி.11

ஆம் நூற்றாண்டுக்கு (முதலாம் இராஜராஜன் காலத்திற்கு முந்தையது) முந்தியவை என்ற முடிவைத் தந்துள்ளது. இது பத்தாம் நூற்றாண்டைச் சேர்ந்தது என்னும் இவ்வாசிரியரின் முடிவு, முடிந்த முடிவு என்று சொல்வதற்கில்லை. பின்னாளைய ஆய்வுகள் இதற்கு மாறான கருத்துக்களைக் கொணர இயலும். ஆசிரியரின் இக்கருத்தினை வெளிப்படுத்துவதற்கு உறுதுணைபுரிந்தவை ஆங்காங்கே வெளியில் தென்படுகின்ற கட்டடக்கலைக் கூறுகளேயாகும். கற்கோயிலின் மீது பூசப்பட்டுள்ள சுதையை முற்றிலும் அகற்றி ஆய்வது அவசியமான ஒன்றாகும்.

இவ்விமானங்களின் உபபீடம் தாமரை இதழ்களை விரித்துக் காட்டியிருக்கும் பத்ம உபானம், உயரமான கண்டம், கூடுகளுடன் கூடிய கபோதம் ஆகிய பாகங்களைக் கொண்டுள்ளது. கபோதத்தின் விளிம்புகளில் கொடிக்கருக்கு வேலைப்பாடு களைக் காணலாம்.



இரட்டைக கோயிலகளில ஒனறு – கிழககு நோககிய கோயில்

அதிட்டானததின் பக்கவாட்டுப் பகுதி, பத்மஜகதி, முப்பட்டைக் குமுதம், கண்டம், பட்டி, சுவர்க்கண்டம், கபோதம் போன்ற கூறுகளையும் பத்ரப் பகுதி, பத்ம ஜகதி, விருத்தக் குமுதம், கண்டம், கபோதம், கண்டம், வரி ஆகிய கூறுகளையும் கொண்டிருக்கின்றது. இங்கு பத்ரப்பகுதி மட்டும் வெளியே பிதுக்கமாக காட்டப்பட்டுள்ளது. அதிட்டானம் மொத்தமும் உபபீடத்திலிருந்து உள்ளடங்கியிருப்பதைக் காணலாம். இந்தக் கோயில்கள் ஒவ்வொன்றிலும் வடக்குச் சுவரில் பத்ரத்தின் கபோதத்தில் பிரநாளம் பொருத்தப்பட்டுள்ளது. இப்பிரநாளம் உடைந்து அதிகளவு சுதை பூசப்பட்டிருப்பதால் அலங்கார வேலைப்பாடுகள் மறைக்கப்பட்டுள்ளன.

கர்ணம், பின்னொதுக்கம் என்று பிரிக்காமல் பத்ரப்பகுதி மட்டும் பிதுக்கமாக காட்டப்படும் முறைமையானது பாண்டியர் களது கோயில்கள் எதிலும் பார்க்க முடியாத ஒன்றாகும். இக்கூறு முற்காலச்சோழர்தம் படைப்புக்களில் ஒன்றாக இருக்கக்கூடும். ஏனெனில் அவர்தம் கோயில்களான திருச்சோற்றுத்துறை (கி.பி.881)[15], எறும்பூர்[16] (கி.பி.935), திருநாமநல்லூர் (கி.பி.935)[17], பளூர் (கி.பி.947)[18], வீரலூர் (கி.பி.ஒன்பதாம் நூற்றாண்டு)[19], ஆனங்கூர் (கி.பி.981)[20], திருக்கட்டளை (கி.பி. ஒன்பதாம் நூற்றாண்டின் பிற்பகுதி)[21], கிழையூர்[22], மதகடிப்பட்டு (கி.பி.985 – 1012) மற்றும் தஞ்சைப் பிரகதீசுவரர்கோயிலுக்குள் உள்ள சண்டேசுவரர் சன்னதி ஆகியவற்றில் பத்ரம் மட்டும் பிதுக்கமாகக் காட்டப்பட்டிருக்கின்றது என்பது கண்கூடு. இவ்வடிப்படையில் இவ்விரட்டைக் கோயில்கள் சோழப் பெருவேந்தர்கள் காலத்தில் படைக்கப்பட்டவை என்று கொள்ளலாம்.

இப்போது எழும் அடுத்த கேள்வியானது, இது சோழர்தம் படைப்பெனில் எந்தச் சோழ மன்னரின் காலத்தில் இவை எழுப்பப்பட்டிருக்கும் என்பதாகும். கீழ்க்காணும் விவாதமும் விளக்கமும் இவ்வினாவிற்கு விடைபகர்கின்றன. இங்கு கூர்ந்து நோக்கத்தக்கது யாதெனில், பத்ரப்பகுதி மட்டும் பிதுக்கமாக காட்டப்பட்டுள்ளதற்கு மேலே கூறப்பட்ட உதாரணங்களில் பெரும்பாலானவை முதலாம் பராந்தகன் (கி.பி.904 – 953) ஆட்சிக்காலத்தில் உருவானவையாகும்.



இரட்டைக் கோயில்கள் – கிழக்கு நோக்கியது



இரட்டைக் கோயில்கள் – மேற்கு நோக்கியது

இரட்டைக் கோயில்களின் பாதம் அல்லது பத்தி அல்லது சுவரில் ஒவ்வொரு பக்கமும் ஆறு அரைத்தூண்கள் அமைக்கப் பட்டுள்ளன. பத்ரப் பகுதியில் உள்ள தேவகோஷ்டத்தின் இருமருங்கிலும் கம்ப அல்லது ஸ்தம்ப பஞ்சரங்கள் உள்ளன. கம்பபஞ்சரம் அதிட்டானத்தின் கபோதத்தின் மேல் நிறுத்தப் பட்டுள்ளது. கம்பபஞ்சரத்தின் அடிப்பகுதி மற்றும் கம்புப்பகுதி ஆகியவை முறையே சதுரம் மற்றும் எண்பட்டை அமைப் புடையவையாகும். மேலும் அவை வீரகண்டம் வரை உயர்ந்து செல்கின்றன. அதன் உச்சியில் கபோதம் வைக்கப்பட்டுள்ளது.

கம்பபஞ்சர அமைப்பானது சாளுக்கிய மற்றும் இராட்டிர கூடர்களின் கோயில்களில் முதன்முதலில் புகுத்தப்பட்டது. இதற்கான உதாரணத்தை ஐஹோளேயில் காணலாம்.[23] முற்கால கேரளக்கலை நுணுக்கத்தைக் காட்டும், திருக்குலசேகரபுரம் கிருஷ்ணர்கோயிலிலும் (கி.பி.800) கம்பபஞ்சரம் காணப் படுகின்றது.[24] தமிழகத்தில் தொடக்கத்தில் இக்கூறு இடம் பெற்றிருந்தபோதும்[25] இது பிரபலமடைந்து உன்னதமான இடத்தைப் பெற்றது முதலாம் பராந்தகன் காலத்திலோ அல்லது அதற்கு சற்றுப் பிந்தியோ ஆகும்.[26] பின்னாளில் முதலாம் இராஜராஜன் காலத்தில் இது கும்பபஞ்சரமாக பரிணமித்தது. விஜயநகர - நாயக்கர் காலத்தில் அலங்கார வேலைப் பாடுகளுடன் கூடிய கும்பபஞ்சரமாக மலர்ந்தது. இவை யனைத்தும், முற்காலச்சோழர் கோயில்களில், இராஜராஜன் ஆட்சிப் பீடமேறும் வரை கம்பபஞ்சரம் வழக்கிலிருந்துள்ளது என்பதை உணர்த்துகின்றன. இது பின்பு கும்பபஞ்சரமாக மாறியது. இருப்பினும் சில பிற்காலக் கோயில்களில் மாற்றத் திற்குள்ளான கம்பபஞ்சரங்கள் வைக்கப்பட்டன என்பது மறுக்க முடியாததாகும்[27]

அரசியல் மற்றும் பண்பாட்டு வரலாற்றை அலசி ஆராய்ந்தால் முதலாம் பராந்தகனது ஆட்சிக்கும் முதலாம் இராஜராஜனின் ஆட்சிக்கும் இடைப்பட்ட காலத்தில் தென்கோடியில் கலையை வளர்க்கப் பாடுபட்ட சோழ மன்னர் எவரும் இருந்திலர். எனவே கம்பபஞ்சரத்தின் அமைப்பின் காரணமாக இக்கோயில்களைப் பராந்தகன் காலத்தவை என்று சொல்வது பொருத்தமாகவே அமையும்.

இரட்டைக் கோயில்களின் அரைத்தூண்கள் சதுரப் பீடத்தினையும் எண்பட்டையான தாடி, குடம், பத்மம் மற்றும் சதுரமான பெரிய பலகை ஆகிய பாகங்களையும் கொண்டுள்ளன.

இவ்வமைப்பு முற்காலச்சோழர்களின் கோயில்களான திருநாமநல்லூர், பளூர், புள்ளமங்கை, ஆலம்பாக்கம் போன்றவற்றைப் பெரிதும் ஒத்திருக்கின்றது. ஆனால் பாண்டியர் கோயில்களில் இக்கூறுகளைப் பார்க்க முடியாது. அவை அடி முதல் முடிவரை பிரம்மகாண்டம் எனும் சதுர அமைப் புடையவையே. பலகைப் பாகத்தின் மீது எளிமையான வீரகண்டமும் அதற்குமேல் கோணவடிவ (angular) போதிகையும் பின் உத்திரமும் அமைவது சோழநாட்டில் முற்காலச் சோழர்களின் கோயில்களில் காணப்படும் பொதுவான கலையம்சங்களாகும். உத்திரப்பகுதியில் பத்மவரி இருந்திருக்க வேண்டும். ஆனால் திருப்பணி என்ற பெயரால் ஏற்பட்ட மனிதத் தவறின் விளைவாக அழகு குறைந்து தெரிகின்றது. இரட்டைக் கோயில்களின் கபோதம் முற்காலச்சோழர் கோயில்களில் உள்ளது போன்று நேரானதும் பக்கச்சாய்வு அமைப்பு உடையதாகவுள்ளது. இவ்வமைப்பு இராஜராஜன் காலத்தில் மணி போன்ற வடிவத்தைப் பெற்றது. பின்பு விஜயநகர - நாயக்கர் ஆட்சிக்காலத்தில் கொடுங்கையாக மாறியது.

சுவரிலுள்ள அரைத்தூண்களுக்கு நேர்மேலே, கபோதத்தின் ஒவ்வொரு பக்கத்திலும் ஆறு கூடுகள் வைக்கப் பெற்றுள்ளன. அவற்றிலும் கபோதத்தின் மேலுள்ள யாளி வரியிலும் சுதை பூசப்பட்டு அவற்றின் இயல்பான அழகை மறைத்துள்ளன. கழுத்தளவு மகர உருவங்கள், ஒவ்வொரு பிரிவின் மூலையிலும் பக்கத்திற்கு ஆறுவீதம் வைக்கப்பட்டுள்ளன.

முற்காலச் சோழர் கோயில்களைப் போன்றே இங்கு தேவகோஷ்டங்கள் ஆழமாக வெட்டப்பட்டுள்ளன. கோஷ்டங்கள் பத்ரப் பகுதியின் கபோதத்தின் மேல் நிற்கின்றன. இவற்றில் முறையே தட்சிணாமூர்த்தி (தெற்கு) இலிங்கோத்பவர் (மேற்கு) பிரம்மா (வடக்கு) ஆகியோர் இடம் பெற்றிருக்கின்றனர். அவற்றின் சிற்பவமைதி தொன்மையை வெளிக் காட்டுகின்றது.

## மேல்தளம்

இரட்டைக் கோயில்களின் மேல்தளம், இரண்டாவது தளம், வட்ட கிரீவம் மற்றும் வட்டச் சிகரத்தினைக் கொண்டுள்ளது. கிழக்கு மற்றும் மேற்கு நோக்கியுள்ள கோயில்களிடையேயான முக்கியமான வேறுபாடு யாதெனில், மேற்கு நோக்கிய கோயிலைப் போலன்றி கிழக்கு நோக்கிய கோயில் எண் பட்டையான கிரீவத்தையும் சிகரத்தையும் கொண்டிருப்பதாகும்.

இரண்டாவது தளத்தின் ஹாரம், கர்ணக்கூடு, பஞ்சரம், சாலை என்று ஒவ்வொரு பக்கத்திலும் பிரிக்கப்பட்டுள்ளது. இந்தப் பிரிவுகளில் கர்ணக்கூடு தவிர மற்றவற்றில் வெறுமையான கோஷ்டங்களே உள்ளன. சாலை மற்றும் பஞ்சரத்தின் உச்சியில் சிம்மமுக அமைப்புள்ளது. கிழக்கு நோக்கியுள்ள கோயிலின் கர்ணக்கூடுகளில் கலசம் வைக்கப்பட்டிருக்கின்றது. ஆனால் மேற்கு நோக்கிய கோயிலின் பஞ்சரங்களின் மேலே சிம்மமுக அமைப்புள்ளது.

கிரீவ மேடையில் நான்கு திசைகளிலும் நந்திகளைக் காணலாம்.[28] கிரீவ மேடை வரை, ஒரு சில கூறுகளைத் தவிர, மற்ற அனைத்து நிலைகளிலும் இவ்விரு கோயில்களும் ஒரே மாதிரியானவையே. முன்னமே சொன்னதுபோல் கிழக்கு நோக்கிய கோயிலின் கிரீவமும் சிகரமும் எண்பட்டை அமைப் புடையவை. ஆனால் மேற்கு நோக்கிய கோயிலின் இவ்விரு பாகங்களும் முன்பு விளக்கப்பட்ட கோயில்கள் I, II மற்றும் III ஐப் போன்று வட்ட வடிவமானவை. நான்கு திசைகள் மற்றும் உபதிசைகள் என மொத்தம் கிரீவம் எட்டு கோஷ்டங்களைக் கொண்டுள்ளது. சிகரமானது நான்கு திசைகளில் நான்கு பெரிய நாசிகளையும் உபதிசைகளில் நான்கு சிறிய நாசிகளையும் தாங்கியுள்ளது. சிகரத்தின் மேற்பரப்பில் ஊர்த்துவ பத்மமும் கலசமும் உள்ளன.

சுதை பூசப்படாமலிருந்தால் இவ்விரு கோயில்களும் முற்காலச்சோழர்தம் கலையை உலகிற்கு வெளிக்காட்டியிருக்கும். ஆனால் இப்போது பொலிவிழந்துள்ளன.

## மண்டபங்கள்

இக்கோயில்களின் அர்த்தமண்டபங்களின் உபபீடம், அதிட்டானம் ஆகியவை கருவறையைப் பெரிதும் ஒத்துள்ளன. ஆனால் இந்த மண்டபத்து சுவர் பிரிக்கப்படாது நேராக அமைந்துள்ளது. இங்கு நான்கு அரைத்தூண்கள் வைக்கும் முறை பின்பற்றப்பட்டுள்ளது. சில அரைத்தூண்களில் புஷ்ப போதிகை இருப்பது போன்று தோன்றியது. ஆனால் பக்கத்தில் சென்று சுதைப் பகுதியைப் பார்த்தபோது கோணவடிவ போதிகை தெரிந்தது. கபோதம் நேர்கோட்டில் அமைந்து அரைத் தூண்களுக்கு நேர்மேலே நான்கு கூடுகளைக் கொண்டு விளங்குகின்றது. இங்கு கபோதத்திற்குமேல் யாளிவரிக்கு மாறாகக் கல்வரிசையையே காணமுடிகிறது.

இதனையடுத்து விஜயநகர - நாயக்கர் காலத்தில் கட்டப்பட்ட மகாமண்டபம் நடுவில் நான்கு தூண்களால்

தாங்கப்படுகின்றது. தூண்கள் இருசதுரம் மற்றும் ஒரு எண்பட்டைப் பகுதிகளாகப் பிரித்துக் காட்டப்பட்டுள்ளன. அதற்குமேலே புஷ்பப் போதிகையைக் காணலாம். மகாமண்டபத்தின் கூரையின் மையத்தில் யானை, யாளி, சிம்மம், இசைக் கலைஞர்களின் ஊர்வலம், நடனமாதர், பெண் ஆடும் ஊர்த்துவ தாண்டவம், இடக்கை, தப்பு, கொம்பு, மிருதங்கம் போன்ற காட்சிகள் சிற்பங்களாக செதுக்கப்பட்டுள்ளன. இம்மாதிரிக் காட்சிகளைத் திருநெல்வேலி மாவட்டத்தில் உள்ள விஜயநகர - நாயக்கர் காலக் கோயில்களில் காணலாம்.

இவ்விரட்டைக் கோயில்கள் பற்றிய ஆழமான ஆய்வு, மகாமண்டபம் தவிர்த்த பிறபகுதிகள், கல்வெட்டே இல்லாத நிலையிலும் முதலாம் பராந்தகன் காலத்தில் கட்டப்பட்டவை எனத் தெரிவிக்கின்றது. அம்மன்னனது திருத்தணி வேலஞ்சேரி செப்பேடுகள் இராமேசுவரத்தில் இவன் துலாபாரம் எடுத்ததாகக் கூறுகின்றன. பிற்காலத்தில் கடற்காற்றின் அழிவுச் செயலிலிருந்து இக்கோயில்களைக் காக்கும் பொருட்டே சுதை பூசப்பட்டிருக்க வேண்டும்.

கீழ்க்காணும் காரணங்கள் இக்கோயில்கள் பராந்தகன் காலத்தவை என்னும் கருத்துக்கு உதவியாகவுள்ளன.

1. கருவறையின் மூன்று பக்கங்களிலும் பத்ரப்பகுதி பிதுக்கமாகக் கட்டப்பட்டிருப்பது.

2. அரைத்தூண்களுக்கிடையே கம்ப அல்லது ஸ்தம்ப பஞ்சரங்கள் அமைந்திருப்பது.

3. நேரான-பக்கச்சாயல் கொண்ட கபோதம்.

4. மேற்கு, தெற்கு, வடக்கு தேவகோஷ்டங்களில் முறையே இலிங்கோத்பவர், தட்சிணாமூர்த்தி மற்றும் பிரம்மாவின் உருவமைதிகளை வைத்திருப்பது. தேவகோஷ்டங்கள் ஆழமாக வெட்டப்பட்டிருப்பது.

5. கோண வடிவ (angular) போதிகைகள் இடம் பெற்றிருப்பது.

6. தட்சிணாமூர்த்தி மற்றும் பிரம்மாவின் முகஅமைப்பு தொன்மையைப் பறைசாற்றுவது.

7. அடி முதல் முடி வரை கல்லாலான கோயில்கள்.

8. மகாமண்டபத்தில் சோழர் காலத்தைச் சேர்ந்த சூரியனின் தனிச்சிற்பம் காணப் பெறுவது.

9. சதுரமான அடிப்பாகத்தையும் எண்பட்டை வடிவமான கம்பினையும் கொண்ட அரைத்தூண்கள் இடம்பெற்றிருப்பது.

# இராமநாதர் சன்னதி

இராமேசுவரம் திருக்கோயிலில் இன்று அதிக அளவில் வழிபாட்டில் உள்ளவை இராமநாதர் சன்னதியும் அன்னை பர்வதவர்த்தினி சன்னதியுமாகும். இவையிரண்டும் முதலாவது பிரகாரத்தில் அமைந்துள்ளன என்று முன்னமே கண்டோம். இச்சன்னதிகளின் தற்போதுள்ள கட்டடங்கள் பாண்டியர்களுக்குப் பிந்தைய அதாவது விஜயநகர - நாயக்கர் காலத்தைச் சேர்ந்தவையாகும்[29]. எனினும் பிற்காலத்தில் திருப்பணி செய்யப்பட்ட காரணத்தால் நவீன காலக் கூறுகளை விமானத்தின் மேல்தளங்களில் காணமுடிகின்றது.




**க – கர்ணம், பி – பின்னொதுக்கம், பிக– பிரதிகர்ணம், ப – பத்ரம்**

## அதிட்டானம்

இன்று பிரதானமாக உள்ள இராமநாதர் சன்னதி உயரமான உபபீடத்தின் மேல் அமைந்துள்ளது. பிரஸ்தரம் வரையிலான பகுதி கற்கட்டடமாகவும் மேல்தளங்கள் சுதைக் கட்டடமாகவும் உள்ளன. இந்த மூன்று தள சாந்தார விமானத்தின் அதிட்டானம் உபானம், ஜகதி, முப்பட்டைக் குமுதம், கண்டம், பட்டி என்னும் செங்குத்துப் பகுதிகளைக் கொண்டதாகும். இந்த வர்க்கபேத அதிட்டான அமைப்பு பிரதிகர்ணப் பகுதியில் பட்டிக்குப் பதிலாக கபோதத்தைக் காட்டுகின்றது. மற்றும் பத்ரம், கர்ணப் பகுதிகளில் சுவர்க்கண்டம் அமைந்துள்ளது. பின்னொதுக்கத்திலும் சுவர்க்கண்டம் உள்ளது. வரி அல்லது வேதிக்கு அடியில் தாமரை இதழ்கள் வெளிப்படுகின்றன. கபோதம், அடித்தளம் மற்றும் சுவர்களில் உள்ள கூடுகள் வேலைப்பாடின்றி எளிமையாகத் தெரிகின்றன. முப்பட்டைக் குமுதத்தில் பொருத்தப்பட்டுள்ள சிம்மவக்த்ர மடிப்புடைய பிரநாளம் நீண்டு விஜயநகர - நாயக்கர் கலையை நினைவூட்டுகின்றது. ஆனால் அக்காலத்தில் வழக்கத்திலிருந்த நுனியில் அமைக்கப்படும் தாமரைப் பதக்கம் இங்கு காணப்படவில்லை.

## சுவர் (பாதம்)

இங்கு சுவர்ப்பகுதி கர்ணம், பின்னொதுக்கம், பிரதிகர்ணம், பின்னொதுக்கம், பத்ரம், பின்னொதுக்கம், பிரதிகர்ணம், பின்னொதுக்கம், கர்ணம் என்று கோயில் II இல் உள்ளது போல் பகுக்கப்பட்டுள்ளது.

சுவர்ப் பகுப்புக்களின் மூலைகளில் நான்கு வேறுபட்ட அமைப்புடைய அரைத்தூண்களைக் காணலாம். அவை எண்பட்டை, பதினாறு பட்டை, பலபட்டையமைப்பு மற்றும் ருத்ர காண்டம் எனும் வட்டவடிவம்[30] ஆகியனவாகும். சமகாலக் கோயில்களில் உள்ளது போன்று இந்த அரைத்தூண்கள் அனைத்தும் சிற்றாலயம் போன்ற அமைப்புடைய அடித்தளத்திலிருந்து உயரே செல்கின்றன. இச்சிற்றாலய அடித்தளத்தின் மேற்பகுதியில் நாகபந்தம் காணப்படுகின்றது. நாகபந்தம் முதன் முதலில் கி.பி.12 ஆம் நூற்றாண்டில் கட்டப்பட்ட பழையாறைப் பிற்காலச் சோழர் கோயிலில் தொடங்கப் பெற்று பாண்டியர் காலத்தின் பிற்பகுதியிலும் அதன் பின்னும் தூண்களின் அலங்கார வேலைப்பாடாகத் தொடர்ந்தது[31].

இவ்வரைத் தூண்களின் கம்புப் பகுதியில் (shaft) உள்ள முத்துப் பதித்த மாலஸ்தானம், எளிமையான பத்மபந்தம், அழகூட்டப்பட்டக் கலசம், எளிமையான தாடி, அலங்காரமான குடம், விரிந்த பத்மம், ஒற்றைப் பலகை, எளிய வீரகண்டம் மற்றும் புஷ்பப்போதிகை ஆகிய அனைத்தும் விஜயநகர-நாயக்கர் கலையைப் பறைசாற்றுகின்றன[32].

சுவரின் கர்ணம் மற்றும் பின்னொதுக்கப் பகுப்புகள் கோஷ்டபஞ்சரம் கொண்டுள்ளன. பிரதிகர்ணம் எளிமையாக வெறுமையாக அமைந்துள்ளது. பத்ரப்பகுதியின் தேவ கோஷ்டத்தில் இறையுருவம் உள்ளது. இதன் மேற்குப்பகுதி சந்திரசாலை அல்லது கவசத்தால் அலங்கரிக்கப்பட்டிருக்கின்றது.

கர்ணம் மற்றும் பின்னொதுக்கப் பகுதிகளில் உள்ள கோஷ்ட பஞ்சரங்கள் இரண்டு அரைத்தூண்களைக் கொண்டதாயும் சிற்றாலயம் போன்ற அடித்தளத்திலிருந்து வீரகண்டம் வரை உயர்ந்துள்ளாகவும் காணப்படுகின்றன. இதற்கு மேலுள்ள கபோதம் இரு சிற்றாலய அமைப்புகளைக் கொண்டு விளங்கு கின்றது. இதற்கும் மேல் சிலவற்றில் சிறு சிகர அமைப்புகளும் வேறு சிலவற்றில் கூடுகள் மட்டும் அமைந்துள்ளன.

பத்ரப்பகுதியில் உள்ள தேவகோஷ்டம் இரண்டு அரைத் தூண்களைக் கொண்டு போதிகை வரை உயரச் செல்கின்றது. இப்போதிகை இரண்டு எளிய கூடுகளுடன் கூடிய கபோதத்தைத் தாங்கியுள்ளது. கபோதத்திற்குமேல் இரு தளங்களும் சாலை வடிவச் சிகரமும் காணப்படுகின்றன. மேற்கு, தெற்கு மற்றும் வடக்கு கோஷ்டங்களில் முறையே இலிங்கோத்பவர், தட்சிணாமூர்த்தி மற்றும் பிரம்மா ஆகிய இறையுருவங்கள் வைக்கப்பட்டுள்ளன.

## பிரஸ்தரம்

இராமநாதர் சன்னதியின் கபோதம் கோயில் I, II மற்றும் III ஐப் போன்று மணி போன்ற அமைப்புடையது. ஆனால் மரத்தாலானது போன்ற கற்சக்கைகள் இதன் அடிப்பாகத்தில் செருகப்பட்டுள்ளன. இவை பூதவரிக்குப் பதிலாக அமைக்கப்பட்டிருக்கின்றன. இதுபோன்ற அமைப்பு இதன் சமகாலக் கோயில்களான தஞ்சைப் பிரகதீசுவரர் கோயில் வளாகத்தில் அமைந்துள்ள சுப்பிரமணியர் சன்னதி, மதுரைக்கு அருகில் உள்ள திருமோகூர் விஷ்ணுகோயில், மதுரைக் கூடலழகர் பெருமாள்கோயில் ஆகியவற்றில் காணபபடுகின்றது. பல முற்கால கோயில்களைப் போன்று இங்கு அலங்கார வேலைப்பாடற்ற கூடுகள் அரைத்தூண்களின் அமைப்புக்கு நேராக மேலே காட்டப்பட்டுள்ளன. கபோதத்திற்கு மேலுள்ள யாளி வரியில் அரையாளிகள் பக்கச்சாயலில் நிற்கின்றன. யாளியின் விளிம்புகளில் நான்கு பக்கங்களிலும் மகரவாய்களும் வாள் மற்றும் கேடயத்தைத் தாங்கியுள்ள வீரர்களும் உள்ளனர். இது கோயில்கள் I, II மற்றும் III இன் தாக்கத்தினை உணர்த்துகின்றது.

## மேல்தளங்கள்



இராமநாதர் சன்னதி

விமானத்தின் மேல்பகுதி இரண்டாவது, மூன்றாவது தளங்களையும் வட்டமான கிரீவம், சிகரம் மற்றும் உலோகக் கலசத்தைக் கொண்டுள்ளது. மேல்தளங்கள் முழுவதும் சுதை அல்லது செங்கல்லால் ஆனதாகும்.[33] இவையனைத்தும் பிற்காலத்தில் மேலும் புதுப்பிக்கப்பட்டிருக்க வேண்டும். ஏனெனில் அவற்றில் நவீன காலத்தின் தாக்கம் ஆங்காங்கே தென்படுகின்றது.

இரண்டாவது தளத்தின ஹாரம், கர்ணக்கூடு, சுகநாசி, பஞ்சரம்[34], சுகநாசி, சாலை, சுகநாசி, பஞ்சரம், சுகநாசி, கர்ணக்கூடு என்று பகுக்கப்பட்டிருக்கின்றது. கர்ணக்கூட்டின் மேற்குப் பகுதியில் ஒரு சதுரமான கூடாரம் அமைக்கப்பட்டு அதன் நான்கு பக்கங்களில் சிம்மமுக நாசிகள் வைக்கப் பட்டுள்ளன. அதன் மேற்பரப்பில் கண்ணாடிச் சட்டமும், கொடிக்கருக்கு வேலைப்பாடும் காணப்படுகின்றன. உச்சியில் நான்கு வரிசைகளைக் கொண்ட ஊர்த்துவ பத்மம் உள்ளது. சிம்மமுக உச்சியைக் கொண்ட சுகநாசி இதன் முகப்பட்டியில் நவீன இழை தழைகளையுடைய அலங்காரத்தைக் காட்டுகின்றது. இவ்வமைப்பு ஜோவோ துப்ரயிலின் 'திராவிடக் கட்டடக்கலை[35], என்னும் நூலில் கொடுக்கப்பட்டுள்ள உதாரண விளக்கப் படத்துடன் ஒத்துள்ளது.

மிகப்பெரிய சிம்மமுக உச்சியைக்கொண்ட பஞ்சரம் பெரிதும் நவீனமயமாகியுள்ளது. பஞ்சர நாசியின் உட்கூட்டில் சுதையாலான விண்ணவர் சிற்பங்கள் காணப்படுகின்றன. மேற்குப் பக்கத்திலுள்ள நாசியில் கஜலட்சுமி மற்றும் சரஸ்வதி உருவங்களைக் காணமுடிகின்றது. நீண்ட வண்டிக்கூடு போன்ற கூரையைக் கொண்ட சாலையின் விளிம்புகளில் பெரிய சிம்மமுக நாசிகளைக் காணலாம். இரண்டாவது தளத்தின் ஹாரப் பகுப்புக்களில் பஞ்சரம் மட்டுமே, அதன் நாசிகளில், இறையுருவங் களைத் தாங்கியுள்ளது. இருப்பினும் வடக்கு, கிழக்கு மற்றும் தெற்கிலுள்ள பஞ்சரக் கூடுகள் வெறுமையாகவே இருக்கின்றன. இத்தளத்தின் ஹாரப்பகுதியில் கோயில் II இல் உள்ளதுபோல் கருவறையின் சுவருக்கு உள்ளடங்கி திருச்சுற்றுப்பாதையுடன் கூடியிருப்பது நோக்கத் தக்கதாகும்.

இச்சன்னதியின் மூன்றாவது தளத்தின் ஹாரம் கர்ணக்கூடு, பஞ்சரம், சாலை என்று பகுத்துக் காட்டப்பட்டுள்ளது. கடிகார அமைப்பில் நோக்கினால் கிழக்குப்பக்கம் உள்ள சாலையில் சுப்பிரமணியரும் அவரது இரு சக்திகளும் வீற்றிருக்கின்றனர். பஞ்சரத்தில் சிவபெருமான் நின்றகோலத்தில் மற்றொருவரைக் கோபத்துடன் பார்த்துக் கொண்டிருக்கின்றார். அவரது கைகளில் தண்டு உள்ளது. கைகள் இடுப்பில் வைக்கப்பட்டுள்ளன. அவரது

பின்னங் கைகளில் திரிசூலம் வைத்துள்ளார். சிகையலங்காரம் கோபத்தால் பரவிக் கிடக்கின்றது. அவருக்கு வலப்புறம் பார்வதி நந்தியின் மீது சாய்ந்த நிலையிலுள்ளார். கர்ணக்கூட்டில் சக்திகணபதி (தேவியை தனது இடது தொடையில் அமர்த்தியுள்ளார்) தனது வாகனத்தில் அமர்ந்துள்ளார். அவரைச் சுற்றிப் பூதகணங்கள் நிற்கின்றனர்.

தெற்குக் கர்ணக்கூட்டில் (தென்கிழக்கு மூலையில்) சண்டேசனுக்கிரஹமூர்த்தி உள்ளார். பல்லவர் காலத்திலேயே இவரது உருவமைதி வந்துவிட்ட போதும் இது பிரசித்தி பெற்றது முதலாம் இராஜேந்திரசோழன் காலத்திலாகும். இங்கு சிவபெருமான் சுகாசனத்தில் அமர்ந்து கொண்டு தனக்கு இடதுபுறம் பயபக்தியோடு மண்டியிட்டு வணங்கும் சண்டேசுவரருக்கு மலர்க்கிரீடம் சூட்டுகின்றார். இறைவனுக்கு வலதுபுறம் பார்வதிதேவி அமர்ந்துள்ளார். எப்போதுமே சிற்பங்களை அமைக்கும்போது மையத்திலுள்ள இறை யுருவத்திற்கு இடப்புறம் ஒரு சிற்பம் அமைத்தால் அதனைச் சமன்படுத்தும் முகத்தான் வலப்புறம் மற்றொரு சிற்பம் வைப்பது மரபாக உள்ளது. எனவே இங்கு இறைவனுக்கு ஒருபக்கம் சண்டேசரும் மறுபக்கம் பார்வதிதேவியும் உள்ளனர். இதற்கடுத்துள்ள பஞ்சரத்தில் விஷ்ணு அனுக்கிரஹமூர்த்தியின் சிற்பத்தைக் காணலாம். சைவ சித்தாந்திகளின் கருத்துப்படி விஷ்ணுவின் சிவபக்தியை மெச்சி சிவபெருமான் அவருக்கு சக்கரத்தை அளித்தார் என்று சொல்லப்படுகின்றது. இது சமயக் காழ்ப்புணர்ச்சியின் காரணமாக ஏற்பட்ட கதையாகத் தெரிகின்றது. இச்சிற்பம் இக்கதையையே வெளிக்காட்டுகின்றது.

தெற்குப் பக்கத்தில் உள்ள சாலையில் தட்சிணாமூர்த்தியும் அவரது நான்கு சீடர்களும் உள்ளனர். அவர்களில் இருவர் வணங்கிய நிலையிலும் மற்றிருவர் கருடமுத்திரை காட்டியும் காட்சியளிக்கின்றனர். வடமேற்குப் பக்கத்தில் உள்ள பஞ்சரத்தில் சுகாசனத்தில் அமர்ந்த நிலையில் சிவபெருமான் தேவியருடன் காட்சிதருகின்றார். அப்பகுதியின் மூலையிலுள்ள கர்ணக் கூட்டில் உமாசகிதமூர்த்தி உள்ளார். மேற்குப் பக்கத்தில் உள்ள கர்ணக்கூட்டில் இரண்யனுடன் சண்டையிடும் நரசிம்மரைக் காணலாம். சரபமூர்த்தி நரசிம்மரைத் தாக்குதல், வழக்கத்திற்கு மாறாக இரண்டு தேவியர்களுடன் அமர்ந்துள்ள யோகநரசிம்மர், பாமா ருக்மணியுடன் கூடிய வேணுகோபாலன், இரண்யனின் குடலை உருவும் நரசிம்மர் ஆகிய கதைத் தொகுதிகள் முறையே பஞ்சரம், சாலை, பஞ்சரம் மற்றும் கர்ணக் கூட்டில் (வடமேற்குப் பகுதி) வடிக்கப்பட்டுள்ளன. இங்கு நரசிம்மன் இரண்யனை வதம் செய்யும் காட்சிகளின் தொடர் சரிவர நெறிப்படுத்தப்

படவில்லை. இங்கு தென்மேற்கு மூலையிலுள்ள கர்ணக்கூட்டிற்கு அடுத்துள்ள பஞ்சரத்திலிருக்க வேண்டிய இரண்யனின் குடலை உருவும் கதைப்பகுதி இறுதிக் கட்டத்தில் வருகின்றது. இது தவிர மற்ற சிற்பங்களில் ஓரளவு கதைத் தொடர்ச்சி பின்பற்றப் பட்டுள்ளது. தன்னுடைய தேவியருடன் வேணுகோபாலர் காட்சி தரும் சிற்பத் தொகுதியைப் பார்க்கும்போது அசுரனை வதம் செய்த மகிழ்ச்சியுடன் இருக்கின்றாரோ என்று எண்ணத் தோன்றுகின்றது. இம்மாதிரி அமைப்பினை அழகர்கோயில் கல்யாணமண்டபத்துச் சிற்பங்களிலும் காணலாம். வடக்குப் பக்கத்தில் பிரிங்கி மற்றும் அகஸ்தியருடன் சுகாசனத்தில் அமர்ந்திருக்கும் அர்த்தநாரி, தேவி மற்றும் ரிசிக்கு மத்தியில் ஹரிஹரர், தேவியருடன் பிரம்மா, திருவிளையாடற்புராணக் கதையைக் கூறும் சிவன், பார்வதி, நாரை உருவங்கள், விஷ்ணுவும் மகாலட்சுமியும் அமர்ந்திருப்பது, அவர்களுக்கு அருகில் ஒரு முனிவர், தண்டாயுதபாணியாக (பழனி) சுப்பிரமணியர், அவருக்கருகில் காவடி சுமந்த பக்தர், ஆலாஹால விஷத்தை உண்ட நீலகண்டராக சிவபெருமான் ஆகியோரது உருவங்கள் முறையே கர்ணக்கூடு, பஞ்சரம், சாலை, பஞ்சரம், கர்ணக்கூடு பகுதிகளில் அதாவது வடமேற்கு மூலையிலிருந்து தொடங்கி வடகிழக்கு மூலைவரை சிற்பத் தொகுதிகளாக அமைந்துள்ளன.

மூன்றாவது தளத்திற்கு மேல் உள்ள கிரீவ மேடையில் உமாசகிதமூர்த்தி (கிழக்குப் பக்கம் தென்கிழக்கு மூலையில்), சிவன், பார்வதி மற்றும் கணபதி (கிழக்குப் பக்கம் வடகிழக்கு மூலையில்), சரஸ்வதி (தெற்குப் பக்கம் தென்கிழக்கு மூலையில்), இலட்சுமி (தெற்குப் பக்கம் தென்மேற்கு மூலையில்), இலட்சுமி நாராயணன் (வடக்குப் பக்கம் தென்மேற்கு மூலையில்), பூவராஹர் (மேற்குப் பக்கம் வடகிழக்கு மூலையில்) மற்றும் காளி (வடக்குப் பக்கம்) ஆகிய இறையுருவங்களும் வழக்கமாக வைக்கப்பெறும் நந்தியின் உருவங்களும் காணப்படுகின்றன. வட்டவடிவமான கிரீவம் நான்கு திசைகளிலும் கோஷ்டங்களில் நான்கு பஞ்சரங்களைக் கொண்டுள்ளது. மற்ற உபதிசைகளில் (sub cordinal directions) தேவிகளுடன் சுப்பிரமணியர் (கிழக்கு), ரிஷிகளுடன் தட்சிணாமூர்த்தி (தெற்கு), சுகாசனத்தில் நரசிம்மர் (மேற்கு) மற்றும் யோகாசனத்தில் பிரம்மா (வடக்கு) ஆகியோரது உருவங்கள் வைக்கப்பட்டிருக்கின்றன. கிரீவத்திற்கு மேல் நான்கு பக்கமும் நாசிகளைக் கொண்ட வட்டமான சிகரமும் கலசமும் உள்ளன.

## அர்த்தமண்டபம்

இராமநாதசுவாமி சன்னதி 0.95 மீட்டர் அளவுள்ள அந்தராளத்துடன் கூடிய அர்த்தமண்டபத்தைக் கொண்டுள்ளது.

இம்மண்டபம் கர்ணம், பின்னொதுக்கம், பத்ரம், பின்னொதுக்கம் மற்றும் கர்ணம் என்று பகுக்கப்பட்டுள்ளது. இங்கு இராமநாதர் சன்னதிச் சுவரைவிட குறைந்தளவிலான பகுப்புகள் காணப் படுவதற்குக் காரணம், கருவறையை விட அர்த்தமண்டபம் சிறியதாக இருப்பதேயாகும். இது அவ்வாறு அமைய வேண்டுவது மரபு என்பது அதன் பெயரிலேயே தெரிகின்றது. இம்மண்டபத்து கர்ணம் மற்றும் பின்னொதுக்கத்தில் உள்ள கோஷ்டபஞ்சரங்கள் கருவறையை ஒத்திருப்பினும் பின்னொதுக்கத்தில் உள்ள ஒரே ஒரு பஞ்சரத்தில் ஒருதளம் மட்டுமே காணப்படுவது வேறுபட்ட ஒரு கட்டட அமைப்பைக் காட்டுகின்றது. இம்மண்டப நுழை வாயிலின் மேலே உள்ள கஜலட்சுமியின் சிற்பம் (லலாத பிம்பமாக அமைந்து) 10, 11 ஆம் நூற்றாண்டுகளின் மேலைச் சாளுக்கியரின் கோயில்களை நினைவூட்டுகின்றது.[36] ஆனால் கஜலட்சுமி சிற்பத்தை அமைக்கும் பாங்கு பௌத்தகலையின் துவக்கத்திலேயே பின்புற்றப்பட்டுள்ளது என்பது நினைவு கூறத்தக்கதாகும்.

## காசிவிசுவநாதர் சன்னதி

தொன்ம அடிப்படையிலும் மரபு வழியிலும் காசிவிசுவநாதர் சன்னதி இக்கோயிலில் முக்கிய பங்கு வகிக்கின்றது. இது வடக்கிலிருக்கும் காசிவிசுவநாதர் கோயிலையும் தென்கோடியில் இருக்கும் இராமேசுவரத்தையும் இணைக்கும் பாலமாக அமையப்பெற்றுள்ளது. இராமநாதர் சன்னதியில் அமைந்துள்ள அதே உபபீடத்தில், அச்சன்னதிக்குத் தெற்கில் அமைந்துள்ள இந்த சன்னதி முந்தியதை விட வேறுபட்ட கலைக் கூறுகளைக் கொண்டுள்ளது. இவையிரண்டும் ஏறத்தாழ ஒரே காலத்தில் கட்டப்பட்டவையே யாகும்.

### அதிட்டானம்

இச்சன்னதியின் அதிட்டானம் பாதபந்த வகையைச் சேர்ந்தது. இது உபானம், முப்பட்டை குமுதம், கண்டம், பட்டி, சுவர்க்கண்டம், தாமரை இதழ்களைக் காட்டும் வரி ஆகிய பகுதிகளைக் கொண்டுள்ளது. முப்பட்டைக் குமுதத்தில் சிறிய சிம்மவக்த்ர பிரநாளம் பொருத்தப்பட்டுள்ளது. இப்பிரநாளம் சிம்மத்தின் வாய்க்கு அப்பால் நீளமாக இருப்பதால் புனிதநீர் சிம்மவாயிலிருந்து வெளிவருவதுபோல் அமைந்துள்ளது.

அதிட்டானத்தின் பத்ரப்பகுதி முன்னமே விளக்கப்பட்ட இரட்டைக் கோயில்களைப் போன்று சற்று வெளியே பிதுக்கமாகக் காட்டப்பட்டுள்ளது.

## சுவர்

இச்சன்னதியின் பாதம் அல்லது சுவர்ப்பகுதி கோயில் I இல் இருப்பது போன்று கர்ணம், பின்னொதுக்கம் மற்றும் பத்ரம் என்று பகுக்கப்பட்டுள்ளது. கர்ணப்பகுதி அலங்கார வேலைப்பாடின்றி எளிமையாக உள்ளது. பின்னொதுக்கப் பகுதியில் கும்பபஞ்சரம் காணப்படுகின்றது. கும்பத்தில் இலை தழைகள் மாலை போன்று அணி செய்கின்றன.




க – கர்ணம், பி – பின்னொதுக்கம், ப – பத்ரம்

இம்முறைப் புனைவு விஜயநகர-நாயக்கர் கோயில்களில் அதிகமாகக் காணப்படுகின்றது. கும்பபஞ்சரத்தின் அரைத் தூண்கள் வீரகண்டம்வரை உயர்ந்துள்ளன. வீரகண்டத்திற்கு மேலே கபோதம், கூடு போன்றவை காட்டப்பட்டுள்ளன. பத்ரப்பகுதியின் மத்தியில் வெறுமையான தேவகோஷ்டம் உள்ளது. அதன் உச்சியில் கபோதமும், சாலைச்சிகரமும் அமைந்திருக்கின்றன. சுவர்ப்பகுப்புகளின் விளிம்புகளில் எண்பட்டை மற்றும் பதினாறு பட்டைகளைக் கொண்ட அரைத்தூண்கள் வைக்கப்பட்டுள்ளன. அரைத்தூண்களின் நீள்சதுரமான அடிப்பாகம் இறையுருவங்களையும் விலங்குகளையும் கருக்கு வேலைப்பாடுகளையும் கொண்டு விளங்குகின்றன. பிற்காலச்சோழர் மற்றும் பாண்டியர் காலத்தில் தொடங்கி விஜயநகர - நாயக்கர் காலத்தில் நெறிப்படுத்தப்பட்ட நாகபந்த அமைப்பு இங்கே உன்னதநிலை அடைந்துள்ளது. அரைத்தூண்களின் போதிகை இராமநாதர் சன்னதி போன்று புஷ்பபோதிகையாக உள்ளது.

## பிரஸ்தரம்

எழுதகம், கபோதம், கூடுகள், யாளிவரி ஆகியவற்றைக் கொண்ட இச்சன்னதியின் பிரஸ்தரம் பெரும்பாலும் இராமநாதர் சன்னதியை ஒத்திருக்கின்றது. எனினும் இங்கு மகாபட்டியில் அலங்காரம் செய்யப்பட்டுள்ளது. கபோதத்தின் ஓரப்பகுதிகளில் கொடிக்கருக்கு வேலைப்பாடுகள் தெரிகின்றன. கூடுகளில் சிற்றாலய வடிவங்கள் செதுக்கப்பட்டுள்ளன. இங்கும் யாளிவரியின் மூலைகளில் மகர வாய்களும் வாள் மற்றும் கேடயத்தைத் தாங்கும் வீரர்கள் உருவங்களும் காணப்படுகின்றன.

### விமானத்தின் மேற்பகுதி

*பிரஸ்தரத்திற்கு மேற்கே வட்டமான கிரீவமும் சிகரமும் கட்டப்பட்டுள்ளன. சிகரத்தைச் சுற்றி நான்கு மகாநாசிகளைக் காணலாம். கிரீவ கோஷ்டங்களில் விஷ்ணு, பிரம்மா, இந்திரன் (அல்லது சுப்பிரமணியர்) தட்சிணாமூர்த்தி ஆகியோர் முறையே மேற்கு, வடக்கு, கிழக்கு மற்றும் தெற்குப் பக்கங்களில் அமர்ந்துள்ளனர். இச்சன்னதியின் அர்த்தமண்டபம் அனைத்து நிலைகளிலும் இச்சன்னதியினையே பெரிதும் ஒத்துள்ளது.*

## விசாலாட்சியம்மன் சன்னதி

*பிரதான நாசிகாவில் கஜலட்சுமி உருவம் பொறித்துள்ள அமைப்புடன் கூடிய விசாலாட்சியம்மன் சன்னதி பழைமையான மரபைப் பாதுகாக்கும் பிந்திய மத்திய காலச் சின்னங்களில் ஒன்றாகும். இந்த ஏகதள விமானம் உயரமான உபபீடத்தில் முதலாம் பிரகாரத்தின் வெளிச்சுவரையொட்டி அமைந்திருக்கின்றது. இதன் அதிட்டானம் பத்மம், விருத்தக் குமுதம், கண்டம், கபோதம், வேதிப் பகுதிகளைக் கொண்டதாகும். இச்சன்னதியின் சுவர்ப்பகுதியில் எளிமையான அரைத்தூண்களைக் காணலாம். மேற்பரப்பில் கபோதத்திற்கு மேலே யாளிவரி உள்ளது. கிரீவ கோஷ்டங்களில் அனைத்துப் பகுதிகளிலும் மதுரை அன்னை மீனாட்சி திருவுருவங்களே உள்ளன. விமானத்தின் உச்சியில் சில மனித உருவங்கள் மேலைநாட்டு உடைகளுடன் காட்டப்பட்டுள்ளன. அண்மைக்காலத்தில் இந்துக் கோயில் சிற்ப அமைப்புகளில் எவ்வாறு மாற்றங்கள் ஏற்படுத்தப்பட்டுள்ளன என்பதற்கு இவை சான்றாக அமைகின்றன.*

## பர்வதவர்த்தினியம்மன் சன்னதி

*இராமநாதசுவாமியின் தேவியான பர்வதவர்த்தினியம்மன் சன்னதி, முன்னவரது சன்னதிக்கு தென்மேற்கில் (கன்னி மூலையில்) அமைந்துள்ளது. அம்மனுக்குத் தனிக்கோயில் அமைக்கும் முறையை முதன்முதலில் தமிழகத்தில் கொண்டு வந்தது முதலாம் இராஜேந்திரசோழனாவான். இம்மன்னனே தனது கங்கைகொண்டசோழபுரக் கோயிலில் அம்மனுக்கு திருக்காமகோட்டம் அமைத்தான். இதனைத் தொடர்ந்து*

சோழமன்னரும் அவர்தம் சமகாலப் பாண்டியரும் பிரதானக் கருவறையின் மகாமண்டபத்து வடக்குப் பக்கத்தில் அம்மனுக்குத் தனிக்கோயில் அமைக்கலாயினர். இவ்வகையில் அம்மனுக் கென்று தனியிடம் ஒதுக்கப்பட்டுச் சாலைச் சிகரத்துடன் கூடிய தனிவிமானமும் அமைக்கப்பட்டு அம்மன் திருவிழாக் காலங்களில் சம முக்கியத்துவமும் பெறலாயிற்று[37]. ஆனால் விஜயநகர-நாயக்கர் காலத்தில் அம்மனுக்குச் சுவாமிசன்னதிக்கு தென்மேற்கில் கோயில் அமைப்பது பொதுவான அமைப்பாக மாறியிருக்கின்றது[38]. பர்வதவர்த்தினியம்மன் சன்னதி, மதுரை மீனாட்சியம்மன் சன்னதி, திருமாணிக்கம் திருமணிக்கயமுடைய நாயனார் கோயிலில் உள்ள மீனாட்சியம்மன் சன்னதி, குற்றாலத்தில் உள்ள குற்றாலநாதர் கோயில், திருநெல்வேலி நெல்லையப்பர் கோயில் போன்றவை விஜயநகர- நாயக்கர் காலத்தைச் சேர்ந்தவை என்பது அவற்றின் அமைப்பிலிருந்து தெரிந்து கொள்ளலாம்.



க கர்ணம் பி– பின்னொதுக்கம், ப – பத்ரம்

## அதிட்டானம்

பர்வதவர்த்தினியம்மன் சன்னதி உயரமான உபபீடத்தின் மீது அமைந்துள்ளது. உபபீடம் உபானம், பத்மஜகதி, சிறுகண்டம் மற்றும் பத்மவரி ஆகிய உறுப்புகளைக் கொண்டுள்ளது. கண்டத்தில் சிற்றுருவச் சிற்பத் தொகுதிகள் காணப்படுகின்றன. உபபீடத்தின் மேற்குப் பகுதியில் கபோதபந்த அதிட்டானம் உள்ளது. இது மூலைகளில் சிற்றுரு சிற்பங்களைக் கொண்ட பத்மஜகதி (குரங்குகளும் கிளிகளும் செதுக்கப்பட்டுள்ளன), பத்மம், விருத்தக்குமுதம், பத்மம், சிற்றுருவங்களைக் கொண்ட கண்டம், சிம்மமுக கூடுகளைக் கொண்ட கபோதம் ஆகிய உறுப்புகளைக் கொண்டு விளங்குகின்றது. இதில் மா இலை அலங்காரத்தைக் காண முடிகின்றது. இது விஜயநகர-நாயக்கர் பாணியாகும். கபோதத்திற்குமேல் சுவர்க்கண்டம் மற்றும் பட்டி உள்ளன. இங்கு அமைந்துள்ள பட்டியானது தமிழகத்துக் கோயில்களில் வழக்கத்திற்கு மாறான ஒன்றாகும். பிரநாளம் கபோத பாகத்தில் பொருத்தப்பட்டுள்ளது. பிரநாளத்தின் முனையில் பெரிய தாமரைப் பதக்கம் காணப்படுகின்றது.

## சுவர்

இச்சன்னதியின் சுவர்ப்பகுதி கர்ணம், பின்னொதுக்கம், பத்ரம், பின்னொதுக்கம் மற்றும் கர்ணம் என்று பகுக்கப் பட்டுள்ளது. இவ்வமைப்பு கோயில் I, II மற்றும் காசிவிசுவநாதர் சன்னதியை ஒத்திருக்கின்றது.

எண்பட்டை வடிவ விஷ்ணுகாண்ட அரைத்தூண்கள் சுவர்ப் பகுப்புகளின் விளிம்புகளில் வைக்கப்பட்டுள்ளன. அரைத்தூண்கள் சிறுகோயில் போன்ற அடித்தளத்திலிருந்து உயரச்செல்கின்றன. இந்த அடித்தளத்தில் சிற்பங்கள் செதுக்கப்பட்டுள்ளன. இதற்குமேல் நாகபந்தம் காணப்படுகின்றது. அரைத்தூணின் மேற்பகுதிகள் பல்வகை மாலஸ்தானங்கள், மாலை மற்றும் முத்துக்கள் பதித்த தாமம், எளிமையான பத்மபந்தம், பட்டை சுற்றிய மூன்று தீபங்களையுடைய கலசம், தாமரை இதழுடன் கூடிய தாடி, கருக்கு வேலைப்பாடு கொண்ட குடம், இதழ்கள் நீண்டுள்ள பத்மம், ஒற்றைப் பலகை, எளிமையான வீரகண்டம், புஷ்ப போதிகை ஆகிய பாகங்களைக் கொண்டுள்ளன. கர்ணப் பகுதியில் உள்ள கோஷ்டபஞ்சரம் இராமநாதர் சன்னதி அர்த்தமண்டபத்தில் உள்ளது போன்று காணப்படுகின்றது. பின்னொதுக்கத்தில் உள்ள கும்பபஞ்சரத்தின் அடிப்பகுதியில் பூர்ணகதா அல்லது பூர்ண கும்பம் இருக்கக் காணலாம். இதன் கம்புப் பகுதி கோயில் III மற்றும் காசிவிசுவநாதர் சன்னதி போலன்றி, பலகைவரை நீண்டு செல்கின்றது. இதற்குமேல் கபோதமும் கூடும் அமைந்துள்ளன. மத்தியில் உள்ள பத்ரப் பகுதியில் வெறுமையான தேவகோஷ்டம் கபோதத்தையும் சாலைச் சிகரத்தையும் கொண்டு விளங்குகின்றது.

## பிரஸ்தரம்

பிரஸ்தரத்தின் அடிப்பகுதியான எழுதகம் அல்லது வாஜனம் எளிமையான உத்திரமாக உள்ளது. பூதவரி இல்லை. இதற்கு மேல் மணிவடிவிலான கபோதம் காணப்படுகின்றது. கபோதத்தில் ஒவ்வொரு சுவர்ப்பகுப்பிற்குமேலும் இரண்டிரண்டு கூடுகள் அமைந்துள்ளன. பாதம் அல்லது பித்தியில் முகப்பட்டியில் இலை தழைகளுடன் கூடிய சிம்மமுகக் கூடுகளும் ஒரே ஒரு கூட்டின் கதைப் பகுதியில் மனிதத்தலைப் பகுதியும் காட்டப்பட்டிருக் கின்றன. இவ்வமைப்பைப் பல்லவர்காலக் கோயில்களிலும், ஒரே ஒரு பாண்டியரின் ஒற்றைக்கல் கோயிலான கழுகுமலை வெட்டுவான் கோயிலிலும் காணமுடிகின்றது. கபோதத்தின் மூலைகளிலும் மத்தியிலும் கொடிக்கருக்கு வேலைப்பாடுகள் உள்ளன. இதற்குமேல் யாளி வரிகளில் யாளிகள் முழுமையாக பக்கச்சாயலில் வரிசைப்படுத்தப்பட்டிருக்கின்றன.

## மேல்தளங்கள்

இவ்விமானத்தின் மேற்பகுதி இரண்டாவது, மூன்றாவது தளங்களையும் வட்டவடிவ கிரீவம் மற்றும் சிகரத்தையும் கலசத்தையும் கொண்டுள்ளது. இங்கு வழக்கமாக அமையவேண்டிய சாலை சிகரம் இல்லை. சிகரத்தின் நான்கு பக்கங்களிலும் நான்கு மகாநாசிகளைக் காணலாம். இவ்விமான மேல்தளங்களில் கணபதி, இலட்சுமி, சுப்பிரமணியர், கஜலட்சுமி, சரஸ்வதி ஆகிய இறையுருவங்கள் வைக்கப்பட்டுள்ளன.

## அர்த்தமண்டபம்

இவ்விமானமும் இதன் அர்த்தமண்டபமும் அந்தராளத்தால் இணைக்கப்படுகின்றன. அந்தராளத்தில் கோஷ்டபஞ்சரம் உள்ளது. இது விமானத்தின் கர்ணப் பகுதியை ஒத்திருக்கின்றது. ஆனால் இங்குள்ள அரைத்தூண்கள் விஷ்ணு காண்டத்திற்குப் (எண்பட்டை) பதிலாகப் பிரம்ம காண்டமாக (சதுரம்) உள்ளன. இம்மண்டப அதிட்டானப் பாகங்கள் விமான அதிட்டானத்தைப் போன்றுள்ளன. ஆனால் இங்குள்ள குமுதம், கபோதம், பட்டி ஆகியவற்றில் வேலைப்பாடுகள் இல்லை.

அர்த்தமண்டபத்தின் சுவர்ப் பகுப்புமுறை விமானத்தை ஒத்ததாக இருப்பினும் இவற்றின் அலங்கார அமைப்புகள் வேறுபடுகின்றன. விமானத்தின் கர்ணப்பகுதியில் கோஷ்ட பஞ்சரம் இருக்கின்றது. ஆனால் அர்த்தமண்டப கர்ணப்பகுதி வெறுமையாக உள்ளது. இம்மண்டபத்தின் பின்னொதுக்கப் பகுதியில் கோஷ்டபஞ்சரம் காணப்படுகின்றது. ஆனால் விமானத்தின் பின்னொதுக்கத்தில் கும்பபஞ்சரம் அமைந் துள்ளது. விமானத்தின் யாளிவரிக்குப் பதிலாக இங்கே அர்த்தமண்டபத்தில் ஒரு கல் வரிசை காட்டப்பட்டுள்ளது. மற்ற அனைத்து நிலைகளிலும் விமானமும் அர்த்தமண்டபமும் ஒரே அமைப்பைக் கொண்டுள்ளன.

## மூன்றாவது பிரகாரம்

உலகப் பிரசித்திபெற்ற மூன்றாவது பிரகாரம் நான்கு பக்கங்களிலும் நான்கு கோபுர வாயில்களைக் கொண்டுள்ள பரந்த, நீண்ட கலைக் கூடமாகும். இதன் கட்டடக்கலை நாயக்கர் பாணியில் அமைந்துள்ளது. இது தென்னிந்தியாவிலேயே பெரிய பிரகாரம் எனக் கருதப்படுகின்றது. பார்ப்போரைக் கவரும்

வண்ணம் அமைந்துள்ள இதன் எழிற் தோற்றம் அறிஞர்களையும் சாதாரண மக்களையும் அதிசயிக்கச் செய்கிறது. இப்பிரகாரத் தூண்கள் உயரமான மேடையின் மீது அமைந்துள்ளன. தூண்களில் நாயக்கர் பாணியிலான ஆளுயர உருவச்சிலைகள் வைக்கும் முறை பின்பற்றப்பட்டுள்ளது. மிக உயரத்தில் அமைக்கப்பட்டுள்ள இதன் கூரையும் அதனைத் தாங்கும் தூண்களும் சிற்ப அமைப்புகளும், கற்பலகை அமைப்பும் எந்த ஒரு கலைஞனுக்கும் ஒரு அறைகூவலாகவே அமையும் என்று கே.வி.சௌந்தரராஜன் கருதுகின்றார்[39]



மூன்றாவது பிரகாரம்

திருப்பணி என்ற பெயரில் தூண்களில் செதுக்கப்பட்டிருந்த சிற்பங்களின் அழகு கெட்டுவிட்ட போதும் எஞ்சியுள்ளவை முந்தைய காலத்தில் அவை எத்தகைய வனப்புடன் திகழ்ந்திருக்கக் கூடும் என்பதை வெளிப்படுத்துகின்றன. கல்தூண்களில்கூட சுதை பூசப்பட்டுவிட்ட காரணத்தால் ஆராய்ச்சி செய்பவர்கள் இன்னல்களுக்கு உட்படுகின்றனர். பிரகாரம் முழுவதும் கல்தூண்கள் அமைக்கப்பட்டிருக்கும் விதமும் அளவு முறைகளும் மற்றும் தூண்களுக்கு மேலே கண்ணாடித் சட்டத்தில் உள்ள

இராமாயணக்கதை மற்றும் தொன்மக்கதைச் சிற்பத் தொகுதிகளும் முருகியல் கற்றோருக்கு (aestheticians) நல்ல விருந்தாக அமைகின்றன. இப்பிரகாரம் அமைக்கப்படுவதன் நோக்கமே இக்கோயிலின் அனைத்துக் கட்டடப்பகுதிகளையும் இதனுள் கொண்டு வருவதற்கேயாகும். எனினும் சில முக்கிய கோயில்கள் இதற்கு வெளியே மழையில் நனைந்தும் கடற் காற்றால் அரிக்கப்பட்டும் அழிந்துக் கொண்டிருக்கின்றன.

## வாயில்கள்

இக்கோயிலில் நான்கு திசைகளிலும் வாயில்கள் அமைக்கப்பட்டுள்ளன. கிழக்கு மற்றும் மேற்கு வாயில்களில் கோபுரங்கள் உள்ளன. வடக்கிலும் தெற்கிலும் ஒன்பதுநிலைக் கோபுரங்கள் அமைக்கும் பணி தொடங்கப்பட்டு கல்காரப் பகுதியோடு நிறுத்தப்பட்டுள்ளன.



கிழக்கு கோபுரம்

*இம்மாதிரி நாயக்கர் காலக் கோபுரங்கள் பல கட்டிமுடிக்காமலே விடுபட்டிருப்பதைக் காணமுடிகின்றது. இங்குள்ள தெற்குக் கோபுரம் அமைப்பில் திருவரங்கத்துத் தெற்குக் கோபுரம் கட்டி முடிக்கப்படாத நிலையில் எவ்வாறிருந்ததோ அது போன்றேயுள்ளது.[40] கட்டி முடிக்கப்படாத நிலையிலும் இது ஒரு சிறந்த கட்டடக் கலைக் கூறாக விளங்குகின்றது என்பதில் ஐயமில்லை. மிகப்பரந்த அடித்தளத்தைக் கொண்டிருக்கும் தெற்கு மற்றும் வடக்கு கோபுரங்கள் கட்டி முடிக்கப்பட்டிருந்தால் இவை மிக உயரத்தை எட்டியிருக்கும் என எம்.ஏ.அனந்தாழ்வாரும் அலெக்ஸாண்டர் ரீயும் கருதுகின்றனர்[41].*

*கிழக்குக் கோபுரம் மேற்குக் கோபுரத்தைப் போன்று மூன்றாவது பிரகாரச்சுவரை ஒட்டி அமைக்கப்படவில்லை. இது இரண்டாவது பிரகாரத்திற்கும் நுழைவுப் பாதைக்கும் இடையில் கட்டப்பட்டுள்ளது. இது மற்ற தென்னிந்தியக் கோயில் கோபுரங்களைப் போன்று கல்காரப் பகுதிக்குமேல் சுதையால் அல்லது செங்கல்லால் கட்டப்படவில்லை. மாறாக அடி முதல் நுனிவரை மென்மையான கல்லால் எழுப்பப்பட்டிருக்கின்றது. இது ஒருவேளை கோபுரத்தை கடலின் உப்புக்காற்றிலிருந்து காப்பாற்றுவதற்காகச் செய்யப்பட்டிருக்க வேண்டும். கோபுரத்தின் முன்தோற்றம் ஆவமாகும்[42] (நீண்டது); பக்கத்தோற்றம் விஸ்தரமாகும் (விரிந்தது). இந்த ஒன்பதுநிலை கோபுரத்தின் வெளிப்புறத் தோற்றம் பிரம்மாண்டமானதாகும். முகப்புப் பகுதிகள் நேர்கோட்டில் திரமாக அமைந்துள்ளன. இதன் ஒவ்வொரு தளம் அல்லது நிலையின் மத்தியிலும் பிதுக்கம்* (projection) *காட்டப்பட்டிருப்பதைக் காணமுடிகின்றது. இதன் மேற்பகுதி கி.பி.1900 இல் ஏ.எல்.ஆர். செட்டியார் குடும்பத்தாரின் முயற்சியில் தேவஸ்தான நிர்வாகக் குழுவினரால் கட்டி முடிக்கப்பட்டது.*

*ஒன்பதுநிலை கோபுரம் அமைக்கும் பணியை முதன்முதலில் தொடங்கியது கி.பி.1216 இல் ஆட்சி பீடமேறிய முதலாம் மாறவர்மன் சுந்தரபாண்டியன் காலத்திலாகும். இதற்கான உதாரணங்களை மதுரையிலும் சிதம்பரத்திலும் காணலாம். இராமேசுவரம்கோயில் கிழக்குக்கோபுரம் பெரும்பாலும் இக்கால கட்டத்திலோ அல்லது சற்று பிந்தியோ கட்டத் தொடங்கியிருக்க வேண்டும்[43]. இக்கோபுரம் கி.பி.1659 இல் தளவாய்சேதுபதியால் கட்டப்பட்டதாகக் கருத்தொன்று நிலவுகிறது. இது திருப்பணி*

வேளையாக இருந்திருக்குமே அன்றிக் கோபுரம் புதியதாக கட்டப்பட்டிருக்க முடியாது. அக்காலப் பொருளாதார நிலையும் இதற்கு உதவியாக இருந்திருக்க வாய்ப்பில்லை. கி.பி.1092 ஆம் ஆண்டு கல்வெட்டொன்றின் அடிப்படையில் அக்காலத்திலேயே பிரதானக் கோயிலுக்கு முன்பு ஒரு கோபுரம் இருந்திருக்க வேண்டுமென்று கே.வி. இராமன் கருதுகின்றார்[44]. இது அக்காலத்தில் ஏதோ ஒரு அமைப்புடைய கோபுரம் ஒன்று பழைமையான கோயில்களான I, II, III மற்றும் இரட்டைக் கோயில்களுக்கு முன்புறத்தில் அமைந்திருக்க வேண்டும் என்பதையே நமக்கு உணர்த்துகின்றது. ஏனெனில் இன்றுள்ள பிரதான சன்னதி (இராமநாதர் சன்னதி) அப்போது காணப்படவில்லை).

மேற்குக் கோபுரம் ஐந்துநிலை மாடமாகும். இதன் உள்பக்கங்கள் கட்டடக்கலையின் அலங்கார வேலைப் பாடுகளைக் காட்டுகின்றன. இக்கோபுரத்தின் மேற்கு முகப்பில் (facade) சிதைந்த நிலையில் உள்ள சிற்பங்கள் காணப்படுகின்றன. கிழக்குக் கோபுரத்தைப் போலன்றி இதில் பூதகணங்கள், ரிஷபங்கள், கிருஷ்ணர், இராதை, ருக்மணி, பிச்சாடனர், ரிசிபத்தினிகள், மான் என்று நூற்றுக்கும் மேற்பட்ட சிறிய, பெரிய சிற்பங்கள் அமைந்துள்ளன.

## மண்டபங்களும் தூண்களும்

முதலாவது மற்றும் இரண்டாவது பிரகாரங்களுக்கு இடைப்பட்ட பகுதியில் சரியாக வரிசைப்படுத்தப்படாத தூண்களைக் கொண்ட மண்டபம் ஒன்று உள்ளது. இது நந்திமண்டபம் என்றழைக்கப்படுகின்றது. இதன் நடுவில் மிகப்பெரிய நந்தி ஒன்று அமர்ந்துள்ளது. முதல் பிரகாரத்தில் நந்தி மண்டபத்தின் அருகில் இராமநாதர் சன்னதிக்குச் செல்லும் உயரமான வாயில் மெருகூட்டப்பட்ட கருங்கல்லால் ஆனதாகும். இதன் உள்ளே சென்றால் இதற்கு இரண்டு பக்கத்திலும் சூரியன் சந்திரன் சிற்பங்கள் உள்ளன[45]. இது ஒருவேளை பரிவ. ரதேவதைகள் இங்கு முன்னமே அமைக்கப்பட்டிருந்திருக்க வேண்டுமென்பதை நினைவூட்டுகின்றது. அம்மன் சன்னதிக்கு முன்னால் பெரிய, உயரமான தூண்களைக் கொண்ட நவசக்தி அல்லது சுக்ரவாரமண்டபம் உள்ளது. இத்தூண்களில் ஆளுயர அம்மன் சிலைகளைக் காணலாம். இதற்கருகே அஞ்சுப்புமண்டபமும் கல்யாண மண்டபமும் உள்ளன. விஜயநகர-நாயக்கர் காலத்தில் தமிழகத்துக் கோயில்கள்

பலவற்றில் கட்டப்பட்ட மண்டபங்களுடன் ஒப்பிடும்போது இவை மிகச்சிறியனவாகும். இம்மண்டபங்களின் உட்பகுதிகள் நவீனமயமாக்கப்பட்டுள்ளன. இராமநாதர் சன்னதிக்குச் செல்லும் பிரதான நுழைவுவாயிலைக் கொண்டுள்ள சேதுபதி மண்டபமே[46] இக்கோயில் வளாகத்தின் இறுதிக்கட்ட வளர்ச்சியாகும். இதன் தூண்களில் அழகான சிற்பங்கள் உள்ளன.

தெ.வே.மகாலிங்கம் அவர்களின் கருத்துப்படி மதுரைக் கலைப்பாணிக் கோயில்களில் நான்குவிதமான தூண்கள் அமைக்கப்பட்டிருக்கின்றன. அவை யாளிவகை, ஆளுயரச் சிற்பத்தினைக் கொண்ட தூண் வகை, அலங்கரிக்கப்பட்ட ஒட்டுத்தூண் வகை மற்றும் இறையுருவமைப்பு வகை[47] என்பனவாகும். இராமேசுவரத்தில் யாளிவகைத் தூண்கள் மிக அரிதாகக் காணப்படுகின்றன. மற்ற மூன்றுவகைத் தூண்கள் அதிகமாக' உள்ளன. அவற்றில் தொன்மக்கதையைக் காட்டும் சிற்பங்கள் செதுக்கப்பட்டுள்ளன. தூண்களின் ஒவ்வொரு பகுதியிலும் இறையுருவங்கள், நடனமாதர்கள் மற்றும் மிருகங்களின் உருவங்களைக் காணலாம். இங்கு தூண்களில் காணப்படும் மிக முக்கியமான அமைப்பு யாதெனில் யானை அல்லது குதிரை மீது அமர்ந்திருக்கும் வீரர்கள் மற்றும் வேட்டையாடுவோர் போன்ற சிற்பங்களேயாகும். தூண்கள் தகுந்த கட்டடக்கலை உறுப்புகளின் அடிப்படையில் அமைந்துள்ளன. அவை பத்மாசனம், கருக்குப்பட்டி, பாதம், பத்மமாலை, கண்டம், கலசம், விருத்தம், தாடி, கண்டம், கும்பம், கண்டம், பத்மம், பலகை, வீரகண்டம் மற்றும் போதிகை ஆகிய செங்குத்துப் பகுதிகளைக் கொண்டுள்ளன. சில தூண்கள் எளிமையானவை. வேறுசில அணியொட்டிவகைத் தூண்கள் ஆகும். தூண்களின் அளவும் அமைப்பும் அதன் அடிப்பாகத்தின் அமைப்பைப் பொருத்து அமைந்துள்ளன. மண்டபங்களின் மூலைப்பகுதிகளில் சதுரமான தூண்கள் நிற்கின்றன. அவையே மண்டபங்களையும் பிரகாரங்களையும் தாங்குகின்றன.

இராமேசுவரம் கோயில் வளாகத்தின் கட்டடக்கலை அமைப்பையும் அதன் வளர்ச்சியையும் பற்றிய மேலே கண்ட விளக்கமான ஆய்வுப்படி தற்போது இங்குள்ள தொன்மையான கட்டடங்கள் கி.பி.10 ஆம் நூற்றாண்டில் கட்டத் தொடங்கப்பட்டு, இக் கட்டட வளர்ச்சி கி.பி.18 ஆம் நூற்றாண்டுவரை சென்றிருக்க வேண்டுமென்றும் புலனாகிறது. ஒரே கோயில் வளாகத்திற்குள் வேறுபட்ட கட்டடக்கலைக் கூறுகள் இடம் பெற்றிருக்கின்றன.

இங்கு விளக்கப்பட்டுள்ள ஒன்பது கோயில்களும் ஒவ்வொன்றும் ஒவ்வொரு விதமான அதிட்டானக் உறுப்புகளைக் கொண்டுள்ளன. எந்த ஒரு கோயிலின் அதிட்டானமும் மற்றொரு கோயிலின் அதிட்டானத்தின் கூறுகளையும் ஒருங்கே பின்பற்றவில்லை. ஒவ்வொன்றும் அவ்வக்காலக் கலைக்கூறுகளை விவரிக்கின்றன. முற்காலக் கோயில்களான I, II, III மற்றும் இரட்டைக் கோயில்கள், தமக்குள்ளாக ஒன்றிலிருந்து ஒன்று பல நிலைகளில் வேறுபட்டுக் காணப்படுகின்றன. இராமநாதர் சன்னதி, காசிவிசுவநாதர் சன்னதி, விசாலாட்சியம்மன் சன்னதி மற்றும் பர்வதவர்த்தினியம்மன் சன்னதி ஆகிய நான்கும் விஜயநகர-நாயக்கர் காலத்தைவை எனினும் அவையும் தமக்குள் பல கட்டடக்கலை வேறுபாடுகளைக் கொண்டுள்ளன. இந்த ஒன்பது கோயில்கள் போக, பிற கட்டடங்கள், மண்டபங்கள், பிரகாரங்கள், தூண்கள் ஆகியன விஜயநகர - நாயக்கர் காலத்தில் எழுப்பப்பட்டு இப்பகுதியின் காவலர்களான சேதுபதி மன்னர்களது காலத்தில் திருப்பணி செய்யப்பட்டுள்ளன.

## குறிப்புகள்

1. கோயிற்சுவரின் தரைமட்டத்திற்கு மேலுள்ள அதிகப்படியான அதிட்டானப் பகுதிகளை சுவர் அலங்காரப் பகுதிகள் என்று பாரட் கருதுகின்றார். (D.Barrett, (1974), **Early Chola Architecture and Sculpture,** p.28)
2. மன்னார்கோயிலில் உள்ள கோபாலசுவாமி கோயில், சேரன்மாதேவி இராமசாமிகோயில், பிரம்மதேசம் கைலாசநாதர்கோயில் ஆகியவற்றில் சிற்றுருவச் சிற்பங்களான கலபாதச் சிற்பங்கள் உள்ளன.
3. D.Barrett, **op.cit.,** Fig.2, B4.b. pp. 126 – 27
4. கோஷ்டபஞ்சரமானது பௌத்த சைத்தியங்களின், குறிப்பாக அஜந்தாவில் உள்ள மாடங்களின், சிறு மாற்று வடிவமேயாகும். சோழர் கோயில்களில் கோஷ்டங்களில் உள்ள மேற்பகுதிகளை பூ வேலைப்பாடுகளோடு நிறுத்தாமல் அவற்றில் கர்ணக்கூட்டை வைத்தனர். இது பிற்காலத்தில் சிறு கோயிலமைப்பாகவே மாறியது. (R.N. Saletore, (1982), Vijayanagara Art, p.34)
5. இந்தக் கலைக் கூறானது முற்காலச்சோழர் கோயிலான புள்ளமங்கையில் காணப்படுகின்றது. (J.C.Harle (1958), **The Early Cholatemoleat Pullamangai, Oriental Art,** Vol.4, No.3, p.96)
6. D.Barrett, **op.cit.,** p.28
7. Gerda Hoekveld Meijer, (1981), **Koils in Colamandalam**, p.289, Fig.56 b.
8. J.C.Harle, (1986), **Art and Architecture of Indian Sub continent,** p.313.
9. G.H.Meijer **op.cit.,** pls. 52 b, 73;
10. J.C.Harle (1986) **op.cit.,** pp 52–57;
11. M.A.Dhaky and Meister, ed. (1983), **Encyclopaedia of Indian Temple Architecture, South India, Lower Dravidadesa,** p.238

12. *மேலது, படம்.280*
13. *மேலது, ப.259*
14. *மேலது; ப344.*
15. *மேலது; படம் .147.*
16. *மேலது, .படம் 187.*
17. *மேலது, படம் 189.*
18. *மேலது; படம் 192.*
19. *மேலது; படம் 120.*
20. *மேலது;.படம்219.*
21. *மேலது; .படம் 249.*
22. *மேலது; .படங்கள் 253 மற்றும் 261.*
23. *சாளுக்கிய, இராட்டிரகூட மரபில் கோயிற்சுவரின் அனுராதா பகுதியில் ஸ்தம்பபஞ்சரங்கள் காட்டப்பட்டுள்ளன. உதாரணம் ஐஹொளே.* **(K.V.Soundararajan (1971), Indian Temple Styles: The Chalukya Rashtrakuta Traditions,** p.42)
24. M.A.Dhaky **op.cit.,** pl.318.
25. *கோவில்பட்டிக் கோயிலில் ஸ்தம்பபஞ்சரம் உள்ளது. ஆனால் இதன் அதிட்டானம் மட்டுமே முற்காலப்பாண்டியர் காலத்தது. மற்ற பகுதிகள் பிற்காலத்தில் கட்டப்பட்டவையாகும்.*
26. K.V.Soundararajan, **Tamil Temple Architecture and Art,** in MARG (Splendours of Tamil nadu) p.63.
27. *பொதுவாக பின்னொதுக்கங்களில் அல்லது இரண்டு அரைத்தூண்களுக்கிடையில் உள்ள சிறிய இடைவெளியை நிரப்புவதற்கே ஸ்தம்பபஞ்சரம் ஒரு கட்டடக்கலை அலங்கார உறுப்பாகப் பயன்படுத்தப்படுகின்றது. இரண்டு அரைத்தூண்களையுடைய முழுப்பஞ்சரம் வைக்க அதிக இடம் தேவைப்படும்.*
28. *இதில் இருந்த பழைமையான நந்திகள் சிதைவுற்ற காரணத்தால் அவற்றை நீக்கிவிட்டு சுதையாலான நந்திகளை வைத்துள்ளனர் எனத் தெரிகின்றது.*
29. *நாயக்கர்பாணி என்பது அனைத்து நிலைகளிலும் விஜயநகர - நாயக்கர் கலையின் விரிவாக்கமே ஆகும்.* (K.V.Raman, **Architecture in Vijayanagar - Nayak period,** p.674)
30. *விஜயநகரக் கலையில் வட்டவடிவத் தூண்கள் அரிதாக பயன்படுத்தப்பட்டன. அவர்கள் சதுர அடித்தளத்தையோ அல்லது சதுரத் தூணையோ அமைத்தனர்.* (R.N.Saletore, **op.cit.,** p.63)
31. *விஜயநகரக் கலையில் நீண்ட காலமாகப் பின்பற்றப்பட்டு வரும் இப்புதிய கட்டடக்கலை உறுப்பு அம்மன்னர்களின் கலைப்பாணியின் சாதனையாகும். இங்கு நாகபந்த அமைப்பு முழுநிலையடைந்தது. இது தூணின் சதுரப்பகுதியின் உச்சியின் விளிம்பில் அமைக்கப்பட்டது என்று R.N.சேல்டோர் கூறுகின்றார்.* (Vijayanagara Art, p.61)
32. *புஷ்ப அல்லது பூ முனைப் போதிகை பாண்டியர் காலத்திலேயே புகுத்தப்பட்டிருந்த போதும் அவை முழுமையான நிலையை அடைந்தது விஜயநகர ஆட்சிக் காலத்தில்தான்* (K.V.Raman , **op.cit.,** p. 66)

33. இந்த விமான மேற்பகுதி தொடக்கத்தில் கல்லாலேயே கட்டப்பட்டு பின்பு சுதை பூசப்பட்டிருக்க வேண்டும். ஏனெனில் ஆங்காங்கு கற்கள் இங்கு வெளித் தெரிகின்றன.

34. சுகநாசியானது சாளுக்கிய-ஹொய்சளர் கலைப்பாணியைச் சேர்ந்ததாகும். அது விஜயநகர- நாயக்க மன்னர்களால் அவர்தம் தென்னகக் கோயில்களில் பின்பற்றப்பட்டது. (K.V.Raman , **op.cit.**, p.671)

35. J.Dubreuil, (1987), **Dravidian Architecture**, p.12

36. K.R.Srinivasan, (1972), **Temples of South India**, p.153.

37. *மேலது, ப.150*

38. K.V.Raman, **op.cit.**, p.667

39. K.V.Soundararajan, in Saga of Rameswaram temple, p.300

40. Extract from UNESCO Report on Rameswaram temple, (Serial No.2325/ RMS/RS/CLP/Paris Feb. 1971), Requoted from Saga of Rameswaram temple, pp. B.31-2)

41. M.A. Ananthalwar and Alexander Rea, ed. (1980), **Indian Architecture**, I, p.104

42. கே.வி. சௌந்தரராஜன் அவர்கள் கவனக்குறைவாக இதனை எழுநிலைக் கோபுரம் என எழுதியுள்ளார். (Saga of Rameswaram temple, pp. 300-301)

43. I.A. XII pp. 315 - 326

44. "தமிழகத்திற்கு அப்பால் இவ்விடம் பெற்ற சிறப்பு பற்றி கி.பி. 1092 ஆம் ஆண்டைய கல்வெட்டொன்றின் மூலம் அறியலாம். நாகவாவி (நோகை) யைச் சேர்ந்த 400 மகாஜனங்களும், வாணிகர்களும் இராமேசுவரம் கோயிலில் இருந்த உபக்கோயில் ஒன்றின் தேவைக்கான வழி வகைகளை ஏற்படுத்தவும் பிரதானக் கோயிலின் முன்பிருந்த கோபுரத்தைப் பழுதுபார்க்கவும் இலட்சுமணன் சன்னதியில் சில வசதிகள் செய்யவும் வேண்டிக் கூட்டம் போட்டனர்." (K.V. Raman, **Historical Glimpses of Rameswaram,** Saga of Rameswaram temple, p.303)

45. அவை வலது மற்றும் இடது நாசி வழியாக இழுத்து விடும் மனித மூச்சான சூரிய கலை, சந்திர கலையுடன் ஒப்பிடப்படுபவையாகும். இதுபோன்றே கோயிலில் இருக்கும் இறைவன் உடலில் இருக்கும் ஆன்மாவுக்கு ஒப்பானவனாவான்.

46. இராமநாதசுவாமி தேவஸ்தான அலுவலக ஆவணங்களின்படி இம்மண்டபம் 1974 பிப்ரவரியில் கட்டி முடிக்கப்பட்டது.

47. T.V. Mahalingam, **op.cit.**, pp. 313-5

## 5. சிற்பக்கலை

இந்திய சமயக்கருத்துக்களைக் கட்புலனாக (visual) வெளிப் படுத்தும் சாதனங்களில் ஒன்று சிற்பக்கலையாகும். இறை யுருவங்கள் வெறும் சிற்பங்களாக மட்டுமல்லாமல் அவற்றில் பொதிந்து கிடக்கும் சமயத் தத்துவங்கள், தொன்மைக் கதைகள் (myths), குறியீட்டு விளக்கங்கள், இறைவனின் திருவிளை யாடலின் பல்வேறு கட்டங்கள், அவதாரங்கள், ஒவ்வொரு சமயப் பிரிவினரும் விரும்பி வணங்கும் உருவ அமைப்புகள், ஒரு சமயப்பிரிவின் கடவுள் மற்றொரு பிரிவினரின் கடவுளைவிட உயர்ந்தவர் என்ற மனப்பாங்கினை வெளிப்படுத்தும் முறைமைகள் போன்ற அனைத்து நிலைகளையும் விளக்குகின்ற உருவ அமைதிகளாக விளங்குகின்றன என்பதில் ஐயமில்லை.

இந்துக் கோயில்களோ பிரபஞ்சத்தின் ஒரு சிறு வடிவமானவையே என்று (microcosm) கருதப்பட்டு வருகின்றன. உண்மையில் சமயப்பிரபஞ்சம் என்ற ஒன்று கருத்துக்களின் பாற்பட்டதேயன்றி அறிவியல் உண்மை சார்ந்ததென்று சொல்ல முடியாது. அதன்படியே இந்து கோயில்களின் பல பாகங்களிலும் அமைக்கப்பட்டிருக்கின்ற சிற்பங்களும் இயற்கையின் அடிப்படையில் எழுந்தவையல்ல. மாறாக அவை சமயக் கருத்துக்கள் மற்றும் தொன்மக் கதைகளின் அடிப்படையில் எழுந்தவையாகும். எப்படி இந்த நூற்றாண்டிலே அக்காலத்தில் திருவள்ளுவர் இப்படித்தான் இருந்திருப்பார் என்று உருவகப் படுத்திப் பார்க்கின்றோமோ அவ்வகையில் இரண்டாயிரம் ஆண்டுகளுக்கு முன்பிருந்தே தம்மால் வணங்கப்படும் இறைவனின் உருவம் இம்மாதிரிதான் அமைந்திருக்கும் என்று நம் முன்னோர் உணர்ந்துள்ளனர். எனவே ஒரு சிற்பத்தினை ஆராய்வதற்குமுன்பு அதைப்பற்றிய சமய மற்றும் தொன்மக் கருத்துக்களைத் தெளிவுபடத் தெரிந்துகொள்ள வேண்டியது மிக அவசியமாகும். அதனால் தான் இந்திய இறையுருவங்களைப் பற்றிய தவறான கருத்துக்களைப் பத்தொன்பதாம் நூற்றாண்டில் ஐரோப்பியர்கள் கொண்டிருந்தபோது ஆனந்தகுமாரசாமி அவர்களும் இ.பி.ஹேவலும் இக்கலையின் அருமை பெருமை களைத் தெரிந்து கொள்ள வேண்டுமெனில் அவற்றை இந்திய

சமயக்கண்கொண்டு பார்க்க வேண்டும் என அறுதியிட்டுக் கூறினர்.

இந்தியக் கலையின் ஒவ்வொரு கூறும் அதாவது சிற்பக்கலையோ, ஓவியக்கலையோ, கட்டடக்கலையோ அல்லது இசையோ, நடனமோ எதுவாகிலும் வெளிப்படையான ஒரு பொருளையும் மறைவான உட்பொருளொன்றையும் கொண்டதாக விளங்குகிறது என்பது கண்கூடு. வரலாற்றுக் காலத்தில் உருவான தொன்மையான இந்தியச் சிற்பங்கள் பௌத்தக்கலை வல்லுநர்களின் படைப்புக்களாகும். அவர்களது சிற்பங்கள் பெரும்பாலும் புத்த ஜாதகக் கதைகளை விளக்குவனவாகும். மிகச்சில உருவமைதிகள் தனிப்பட்ட சிற்பங்களாகும். இதனடிப்படையிலேயே இந்துக் கோயில் சிற்பங்கள் அமைக்கும் பணியை இந்தியப் பண்பாட்டின் காவலராய் விளங்கிய குப்தப் பேரரசர்கள் (கி.பி.4ஆம் நூற்றாண்டு முதல் 6 ஆம் நூற்றாண்டு வரை) தொடங்கினர். அவர்கள் தொடங்குவதற்கு முன்பாக இந்துக் கடவுளின் உருவமைதிகள் தமிழகத்திலும், இந்தியாவின் பிற பகுதிகளிலும் இல்லவேஇல்லை என்று சொல்லிவிட முடியாது. தொடக்ககாலத் தமிழ் இலக்கியங்களிலும் பிறமொழி இலக்கியங்களிலும் சிற்பங்களும் ஓவியங்களும் அந்தக் காலத்தில் அமைக்கப்பட்டிருந்தது பற்றி ஏராளமான செய்திகள் காணப்படுகின்றன. ஆனால் அழிந்துபடக்கூடிய பொருட்களால் அமைக்கப்பட்ட அவைகள் இன்று நமக்குக் கிடைத்தில. எனவே கல்லால் செய்யப்பட்ட, வரலாற்றுக்காலத்தைச் சேர்ந்த இந்து சமயச் சிற்பங்களை முதன்முதலில் உருவாக்கிய பெருமை குப்தர்களையே சாரும். அவர்களால் அமைக்கப்பட்ட சிற்பங்கள் இன்றளவும் காட்சிக்கு இனியவையாக இருப்பதைக் காணலாம். அழகு, எளிமை, சிறப்பு, பண்பட்ட நிலை, புலன்துய்ப்புக் கருத்துக்களிலிருந்து விலகிநிற்றல் போன்றவையே குப்தர்காலச் சிற்பங்களின் சிறப்பு அம்சங்களாகும். குப்தர் பகுதியிலிருந்து சிற்பக்கலை மரபு பாரதத்தின் பல பகுதிகளிலும் நிலவிய சிற்பக்கலைப் பண்புகளுடன் கலந்து பரவத் தொடங்கியது. அவர்களுக்குப் பின்வந்த அரச வம்சத்தவர்கள் இந்து சமயத்தை ஆதரித்ததோடு மட்டுமின்றி இக்கலைமரபை அவரவர் பகுதிகளில் அவ்வப்பகுதிப் பண்பாட்டியல்புகளுக்குத் தக்க சிறு மாற்றங்

களுடன் வளர்க்கலாயினர். இம்மரபு தென்கோடி வரை சாளுக்கியப் பகுதி மூலமாகப் பரவியது. இப்பகுதியில் பாதாமி, பட்டடக்கல், ஐஹோளே ஆகிய நகரங்கள் திராவிட மற்றும் நாகர கட்டடக்கலைகள் மற்றும் இந்து சிற்பக்கலை மரபின் தொட்டில்களாக விளங்கின.

தமிழகத்தில் சங்க காலத்திலேயே சிற்பக்கலை வளர்ந்ததற் கான ஆதாரங்கள் இலக்கிய வாயிலாக அறியப்படினும் வரலாற்று அடிப்படையில் நமக்குத் தெரிகின்ற சிற்பக்கலை மரபு பல்லவர் மற்றும் அவர்தம் சமகாலப் பாண்டியர்களால் புகுத்தப்பட்டது. பின்னர் சோழர், பிற்காலப் பாண்டியர், விஜயநகர-நாயக்கர்களால் பின்பற்றப்பட்டது. பல்லவர்களது சிற்பங்கள் உயரமானதும் வலுவான உடலமைப்பு கொண்டதும் அகன்ற இடையணி அணிந்ததாகவும் அமைந்துள்ளன. அச்சிற்பங்களில் புனிதநூல் (பூணூல்) எனும் யக்ஞோபவிதம் வலக்கரத்தின் மேலே ஏறிச் செல்லும். இவ்வமைப்பு சமகாலப் பாண்டியர் சிற்பங்களில் சிலவற்றிலும் முற்காலச் சோழர் சிற்பங்கள் சிலவற்றிலும் காணப்படுகின்றது.

சோழர் சிற்பங்களில் முந்தைய அரசவம்ச சிற்பங்களின் கூறுகள் சிலவற்றைத் தொடர்ந்து பின்பற்றினர். அதாவது உயரமான மகுடம், மெல்லிய நெடிய உடலமைப்பு, பட்டையான பூணூல் போன்றவை சிலகாலம் தொடர்ந்தன. ஆடை வகைகளைப் பார்க்கும்போது சோழர் கலைஞர்கள் பல்லவக் கலைஞர்களிடமிருந்து வேறுபட்டனர். பின்னவர்கள் ஆடையைக் குறிக்க கல்லில் ஒரு கோடு மட்டுமே வரைந்தனர். ஆனால் முன்னவர்கள் கால் எலும்பைக் காட்ட முயற்சித்து அதில் தோல்வி கண்டனர். முதலாம் இராஜராஜனும் அவன் மகன் முதலாம் இராஜேந்திரனும் தங்களது வெற்றிகளை வெளிப்படுத்தும் சிற்பங்களைத் தங்களது கோயில்களில் அமைத்தனர். விஜயநகர-நாயக்கர் சிற்பங்கள் முருகியல் (aesthetics) அடிப்படையில் காணும்போது தரத்தில் சற்று பின் தங்கியவையாகும். அவர்களது உடலமைப்பில் கடுமையும், உணர்ச்சிகளைக் காட்டாத தன்மையும், அதிகமான ஆபரணங்களும் காணமுடிகின்றது. அவர்கள் கால்களின் முட்டியை ஒரு தேங்காய்முடி போன்றும், முட்டிக்குக் கீழுள்ள

முழங்கால்களில் எலும்பு கூர்மையாகத் தெரியும்படியும் அமைக்கப்பட்டுள்ளன. இச்சிற்பங்கள் பெரும்பாலும் இதிகாச, புராணக் கதைகளை விளக்கும் சிற்பத் தொகுதிகளாகும். ஆளுயர அரசர், அரசியர் சிற்பங்களை வடிக்கும் பழக்கம் பல்லவர்களால் மாமல்லபுரத்திலேயே தொடங்கப்பட்டிருந்த போதும் அவை பெருமளவில் பல்கிப் பெருகியது விஜயநகர-நாயக்கர் காலத்தில் தான். இவர்களைப் பின்பற்றி சேதுபதி மன்னர்களும் அரச உருவங்களை அமைக்கலாயினர்.

இந்தப் பின்னணியை அடிப்படையாகக் கொண்டு இராமேசுவரம் கோயில் வளாகத்திலுள்ள சிற்பங்களை ஆய்வதும் அவற்றின் குறியீட்டுப் பொருளை காண (symbolic meaning) முயல்வதும் அவசியமானதாகும். ஏனெனில் இங்கு கட்டடக் கலையைப் போன்றே சோழ, பாண்டிய, விஜயநகர-நாயக்கர், சேதுபதிகள் மற்றும் நவீன காலத்துச் சிற்பங்கள் எனப் பல்வகைச் சிற்பக்கலைப் பள்ளிகள் அல்லது மையங்களின் கூறுகளைக் காணலாம். அவற்றை அவ்வக் கூறுகளின் அடிப்படையில் அலசி ஆராய்வதே ஏற்புடையதாகும்.

மூன்றாம் பிரகாரத்திற்கும் கோயிலின் வெளிச் சுற்றுச் சுவருக்கும் இடையில் உள்ள பூந்தோட்டத்தில் அமைந்துள்ள மூன்று கோயில்களில் கட்டடக்கலையமைப்பு போன்றே சிற்பக் கலையிலும் சிறந்த இறையுருவமைதிகளைக் கொண்டு விளங்குவது கோயில் I ஆகும். இங்கு முதலாம் இராஜராஜனின் தஞ்சைப் பெரியகோயில் போன்றே பழமையான, எந்த மாற்றங்களுக்கும் உட்படுத்தப்படாத சிற்பங்கள் அப்படியே இன்றும் காட்சியளிக்கின்றன. இக்கோயில் சிற்பங்களும் இதற்கருகிலுள்ள கோயில் II மற்றும் III இன் சிற்பங்களும் சேர்ந்து கி.பி. 11 ஆம் நூற்றாண்டின் (முதலாம் இராஜராஜன் காலம்) தொடக்கத்தில் தான் இக்கோயில்கள் கட்டப்பட்டிருக்க வேண்டும் என நாம் முந்தைய இயலில் கண்ணுற்ற கருத்துக்கு ஆதாரமாக விளங்குகின்றன.

இக்கோயில்களுக்குச் சற்று காலத்தால் முந்திய இரட்டைக் கோயில்களின் சிற்பங்களில் சுதை பூசப்பட்ட காரணத்தினால் அவற்றின் முருகியல் தன்மை அழிக்கப்பட்டு விட்டது. இருப்பினும் அவற்றின் சில பாகங்கள் தொன்மையைப்

பறைசாற்றுகின்றன. இராமநாதர் சன்னதியின் தேவகோஷ்டங் களில் உள்ள சிற்பங்கள் விஜயநகர-நாயக்கர் காலத்தினை நினைவுபடுத்துகின்றன. ஆனால் இச்சன்னதியின் மேல் தளங்களில் அடிக்கடி ஏற்பட்ட திருப்பணியின் காரணமாக அப்பகுதியில் நவீனகூறுகளைக் காண முடிகிறது. முதலாவது, இரண்டாவது பிரகாரங்களில் சில தனிச்சிற்பங்கள் உள்ளன. அவை வெவ்வேறு கால கட்டடங்களைச் சேர்ந்தவையாகும். இவை தவிர அவர்களது தூண்கள், மற்றும் பிரகாரத்து நாடகச்சட்டம் ஆகியவற்றில் ஏராளமான சிற்றுருவச் சிற்பங்கள் காணப்படுகின்றன. சோழர், பாண்டியர், விஜயநகர-நாயக்கர் காலத்துச் செப்புத் திருமேனிகளும் இங்கு அழகுக்கு அழகு செய்கின்றன.

## சிவபெருமானின் திருவுருவங்கள்

சிவபெருமானின் பல்வேறு திருவிளையாடல்களை விளக்கும் சிற்பங்கள் தமிழகத்தின் கோயில்கள் அனைத்திலும் உள்ளன. அவை கோபத்தைக் காட்டுபவை (தீயவற்றை அழிக்கும்போது), அமைதியைக் காட்டுபவை, (அம்மனுடன் இருக்கும்போது) கருணையைக் காட்டுபவை (பக்தர்களுக்கு அருள் பாலிக்கும் போது) என்று மூன்று வகைப்பட்ட வடிவங்களாக விளங்குகின்றன. இவை ரசம் அல்லது மெய்ப்பாட்டியல் முறையில் ரௌத்ரம், சாந்தம் மற்றும் கருணைக் கோட்பாடுகளுள் அடங்கும். இவை அனைத்திலும், மகா விஷ்ணுவின் உருவ அமைதியினைப் போலன்றி, சில அடிப்படைக்கூறுகள் மாற்றம் அடையாமலேயே வடிக்கப் பட்டிருக்கும். இராமேசுவரம் கோயிலில், பல முற்காலச்சோழர், பாண்டியர், விஜயநகர நாயக்கர், கோயில்களிலுள்ளது போன்று சிவபெருமானின் பல்வேறு தொன்மங்களை விளக்கும் சிற்பங்கள் அமைந்துள்ளதைக் காணலாம்.

### அர்த்தநாரீசுவரர்

அர்த்தநாரீசுவரர் உருவமைதி சிவபெருமானின் சாந்த மூர்த்தமாகும். இது வலப்பாகம் சிவனும் இடப்பாகம் பார்வதியுமாக உமையொரு பாகனாய் அமையும். தென்னிந்திய சைவ சமயக் கோட்பாடுகளின்படி இவ்வுருவம் உலக உற்பத்தியின் தூண்டுதலின் சிறப்பு அம்சமாகக் கருதப்படுகின்றது. இங்கு சிவபெருமான் ஆண் தன்மையோடு விளங்குகின்ற அதே தருணத்தில் பார்வதிதேவியோடு கருணையே வடிவமாகக் காட்டப்படுகின்றார்.



**ரிஷப வாகன அர்த்தநாரீசுவரர் – கோயில் I**

இவ்வுருவம் பல இந்துக் கோட்பாடுகளில் சொல்லப் பட்டுள்ள இரு உற்பத்திக் காரணிகளான புருஷம் மற்றும் பிராகிருதியின் இணைந்த கோட்பாடே ஆகும். ஆண் பகுதியான புருஷம் இங்கு இயக்கமற்றுள்ளது. ஆனால் பிராகிருதி அதனை இயக்கத் தூண்டும் காரணியாகின்றது. எனவே இவ்விரண்டும் பிரிக்க முடியாத ஒன்றாக இணைந்துள்ளன.[1] இவ்வுருவானது இருபெரும் சமயப் பிரிவினரிடையே ஒருமைப்பாட்டு உணர்வை ஏற்படுத்துகின்றது. இவற்றில் ஒரு பகுதியினர் சிவபெருமானே அனைத்துமானவர், அவரே ஆக்கவும், காக்கவும், அழிக்கவும் செய்கின்றார் என்று கருதுபவர்கள். மற்றொரு பிரிவினரோ இப்பிரபஞ்சமும் அனைத்துக் கடவுளரும் சக்தியிலிருந்து தோன்றியவர்கள் என்ற கருத்தைக் கொண்டவர்கள்[2]. இவ்விரு பிரிவினரையும் இணைக்கும் ஓர்உருவமே அர்த்தநாரீசுவரர் ஆவார். இவரது தொன்மையான சிற்பங்கள் குஷானர்களால் கி.பி. ஒன்றாம் நூற்றாண்டு முதல் மூன்றாம் நூற்றாண்டு

வரையான கால கட்டத்திற்குள், மதுராவில் வடிக்கப்பட்டன. இதனைத் தொடர்ந்து எலிபெண்டாவிலும் (ஆறாம் நூற்றாண்டின் மத்தியில்) வாதாபி (கி.பி.620)யிலும்[3]. அர்த்தநாரீசுவரர் சிற்பங்கள் இடம்பெறலாயின. தமிழகத்தில் இதன் பிரதியை மாமல்லபுரத்து பல்லவச் சிற்பக்களஞ்சியமான தர்மராஜரதத்தில் காணலாம். முற்காலச்சோழர் கோயில்கள் சிலவற்றில் அர்த்தமண்டபத் தெற்குச்சுவரில் உள்ள தேவகோஷ்டத்தில் அர்த்தநாரீசுவரரின் இறையுருவம் வைக்கப் பட்டது. தமிழகத்தில் கிடைத்துள்ள இந்தத் தொன்மையான சிற்பங்களில் இறைவனுக்கு இரண்டு கரங்களும் இடப்பக்கமுள்ள இறைவிக்கு ஒரு கரமும் உள்ளன. இவற்றில் சிவனது வாகனமான நந்தி அவருக்கு முன்னாலோ அல்லது பின்னாலோ நிற்கக் காணலாம். ஆனால் எலிபெண்டாவிலும் பாதாமியிலும் சிவனது இருபக்கமும் வேறுபாடு காட்டாமல் நான்கு கரங்களே வைத்துள்ளனர். தமிழகத்திலும் பிற்காலத்தில் உருவான சிற்பங்களில் நான்கு கரங்கள் வந்துவிட்டன.[4]

இராமேசுவரத்தில் கோயில் I இல் உள்ள அர்த்தநாரீசுவரர் உருவம் ஆனங்கூர் (கி.பி.891) அகஸ்தீசுவரர் கோயில்[5], திருவிராமேசுவரம்[6] (கி.பி.985 -1000) மற்றும் பட்டீசுவரம் இராமநாதர்கோயில்[7] (கி.பி. 11 ஆம் நூற்றாண்டின் துவக்ககாலம்) ஆகியவற்றில் காணப்படும் அர்த்தநாரீசுவரரோடு பெரிதும் ஒத்திருப்பதைக் காணலாம்.

இங்கு இவ்விறைவன் நந்தியின் மீது சாய்ந்த நிலையில் நிற்கின்றார். வலப்பக்க கீழ்க்கை நந்தியின் தலையில் உள்ளது. இறைவன் மூன்று வளைவுகளுடன் (tribangas) நளினமாகக் காட்சியளிக்கின்றார். வலது மேல்கை மழுவைத் தாங்கியுள்ளது. இடதுகை பார்வதியை உணர்த்தும்படி மலரைத் தாங்கியுள்ளது. காதணிகளும் வெவ்வேறாக வலதுபக்கம் மகர குண்டலமாகவும் இடது பக்கம் பத்ர குண்டலமாகவும் காட்டப்பட்டிருக்கின்றன. வயிற்றைச்சுற்றி உதரபந்தமும் இடையில் கடி சூத்திரத்தில் சிம்மமுகமும் காணப்படுகின்றன. அகன்ற இடதுபுற இடைப்பக்கத்தில் இயற்கையாக முடிச்சொன்று தொங்குகின்றது. இடப்பக்க ஆடை பாதம்வரையும் வலதுபக்கம் மேல்தொடை வரையும் காட்டப்பட்டுள்ளது. கேயூரமும் பிற அணிகலன்களும் மிக அழகாக வடிக்கப்பட்டுள்ளன. புன்முறுவலும் கருணையும் வடிவான முகம் சிதைந்துள்ளது.

## திரிபுராந்தகர்

திரிபுராந்தகர் சிற்பம் தமிழ் இலக்கியங்களில் கூறப்படுவது போல் முப்புரம் எரித்த விரிசடைக் கடவுள் என்ற பொருள் விளங்கப்பெற்றதாகும். தங்கம், வெள்ளி, இரும்பாலான மூன்று மாய நகரங்களை அழிக்கும் கோபத்தின் இயல்பினை (ரௌத்ரம்) கொண்டதே இவ்வுருவம். இவரதுகதை மகாபாரதத்திலும்[8] புராணங்களிலும்[9] சொல்லப்பட்டுள்ளது.



**திரிபுராந்தகர் – கோயில் I**

இதிகாச, புராணக் கதைகளின்படி மூன்று நகரங்களும் தாராகாசுரன் என்னும் அசுரனின் பிள்ளைகளான தாரகாக்சன், கமலாக்சன், விந்துமாலி ஆகியோரால் அமைக்கப்பட்டவையாகும். அவர்கள் பிரம்மாவிடம் ஆயிரம் ஆண்டுகளுக்கு ஒரு முறை தங்களது நகரங்களை ஒன்று சேர்க்கும் தருவாயில், மூவரும்

ஒரே இடத்தில் இருக்கும்போது தான் தாங்கள் கொல்லப்பட வேண்டும் என்ற வரம் பெற்றனர். இது ஒப்பிட முடியாத பகுதிகளை ஒன்று சேர்த்தல் என்ற தொன்மக் கதையின் அடிப்படையானது. எனவே இது பிரபஞ்சத்தின் அழிவிற்குக் காரணமாக அமையும்[10] என்று கருதப்பட்டது. இந்த அழிவானது ருத்ரனாலேயே தாங்கள் கொல்லப்பட வேண்டும் என்று எண்ணிய அசுரர்களுக்குச் சாதகமானதாகும். அனைத்து உயிரினங்களுக்கும் சாதகமான முறையில், ருத்ரனே அவ்வப்போது பிரபஞ்ச் அழிவைக் கொணர்கின்றான் [11]. தமிழ் இறையியலின் தந்தையான திருமூலர்[12] 'இந்த மூன்று நகரங்களும் தூய்மையற்றவை (மலம்) யும் ஆன்மாவைச் சுற்றியுள்ளதும் ஆகும்' என்று கூறுகின்றார். ஆனால் ஆன்மாவோ தூய்மையானது தெய்வீகமானது என்றும் மலங்களில் அதாவது ஆணவ மலம் (தலைக்கனம் அல்லது கர்வம்) கன்மம் (சேர்த்து வைத்துள்ள கர்மம் அல்லது வினை) மற்றும் மாயை ஆகியவை குறியீடுகளாகும் என்றும் கருதுவர்.



கிரிபார்க்கர் – கோயில் II



**திரிபுராந்தகர் – கோயில் III**

*திரிபுராந்தகர் சிற்பம்[13] தென்னிந்தியாவில் முதன்முதலில் பல்லவர் காலத்தில் தோன்றியது. இதிலிருந்து முற்காலச் சோழர்காலம் வரை அமைக்கப்பட்ட அனைத்து திரிபுராந்தகர் சிற்பங்களும் அலிதாசனத்தில் ஒரு தேரில் நின்று கொண்டோ அல்லது அமர்ந்து கெண்டோ வில்லில் நாண் பூட்டியபடி அல்லது எதிரியைத் தாக்கியபடி[14] அமைக்கப்பட்டிருக்கின்றன. ஆனால் பிற்காலத்துப் (விஜயநகர–நாயக்கர் காலம்) பிரதிகளில் ஒரு சாயலாக தேரில் நின்று கொ ாடு வில்லால் அவர்களைத் தாக்குவது போல் அமைந்திருப்பதைக் காணமுடிகிறது. இதற்கு உதாரணமாக, மதுரை மீனாட்சி சுந்தரேசுவரர் கோயிலில் உள்ள கம்பத்தடி மண்டபத்திலும் ஆயிரங்கால் மண்டபத்திலும் (கி.பி.17 ஆம் நூற்றாண்டு) உள்ள இவ்விறைவனது உருவங்களைக் கூறலாம்.*

*திரிபுராந்தகரின் தொடக்க நிலையை மாமல்லபுரம் கடற்கரைக் கோயிலிலும், காஞ்சி கைலாசநாதர் கோயிலிலும்*

திருக்கட்டளையிலுள்ள முற்காலச் சோழர் கோயிலிலும் காணலாம். கி.பி. 11 ஆம் நூற்றாண்டில் இந்த உருவமைதி பிரபலமடைந்தது என்பதனை இராஜராஜனின் தஞ்சைப் பெரிய கோயிலில் பல இடங்களில் இச்சிற்பம் காணப்படுவதிலிருந்தே அறிந்து கொள்ளலாம். இம்மன்னனின் இஷ்ட (விருப்ப) தெய்வம் இவரே எனத் தெரிகின்றது. இவ்விறைவனின் திருவுருவம் அங்கு முப்பது இடங்களில் காணப்படுவதால் இதுவே முதலாம் இராஜராஜனின் படை வலுவினையும் பேரரசுத் தன்மையையும் விளக்கும் குறியீடாகும்.[15]

இராமேசுவரத்தில், கோயில்கள் I, II, III இலும் சேதுபதி மண்டபத்திலும் திரிபுராந்தகர் வடிக்கப்பட்டுள்ளார். இவை தவிர இவ்விறைவனைக் காட்டும் இரண்டு செப்புத் திருமேனிகளும் இங்குள்ளன. கோயில் I இல் உள்ள திரிபுராந்தகர் நான்கு கரங்களுடன் வில், அம்பு மற்றும் மான் மழுவுடன் காட்சியளிக்கின்றார். அவரது இடதுகால் உயர்த்தப்பட்டு அலிதாசனத்தில் காட்டப்பட்டுள்ளது. இடைக்கச்சையில் சிம்மமுகம் காணப்படுகின்றது. குஞ்சம் மிக அழகாக இரு தொடைகளுக்கும் நடுவேசெல்வது போன்று அமைந்துள்ளது. மகுடம் தரித்து, காதுகளில் மகர மற்றும் பத்ர குண்டலங்கள் அணிந்துள்ளார். முகபாவனையும், உடல் அமைப்பும் அணிகலன்களும் தஞ்சைப் பெரியகோயிலை நினைவூட்டு கின்றன.

கோயில் II இல் உள்ள திரிபுராந்தகரும் நீண்ட சடைமகுடத்தைத் தரித்துள்ளார். ஹாரம் என்னும் கழுத்தணி எளிமையாக உள்ளது. காதுகளில் மகர மற்றும் பத்ர குண்டலங்கள் மிளிர்கின்றன. கோயில் I இல் வில்லானது இறைவனது பாதத்திற்கருகில் நிறுத்தி வைக்கப்பட்டுள்ளது. ஆனால் இங்கோ வலது கையில் வில்லும் இடது கையில் அம்பும் தாங்கியுள்ளார். இங்கு ஆயுதங்கள் வைக்கப்பட்டுள்ள மாண்பு இவ்விறைவன் தாக்குவதற்குத் தயார் நிலையிலிருப்பது போல் அமைந்துள்ளது.

இறையுருவிற்கு மேலே, பல முற்காலச் சோழர் கோயில்களில் இருப்பது போன்று[16] குடை காணப்படுகிறது. கேயூரமும் பிற கையணிகளும் சிறப்பாகச் செதுக்கப்பட்டுள்ளன. முந்தைய சிற்பம் போன்றே இடைக் கச்சையில் சிம்மமுகம் காணப்படு கின்றது. இடது காலில் காட்டப்படும் சிறு மடிப்பிலிருந்து அவர் அலிதாசனத்திலிருக்கின்றார் என்பதைக் குறிப்பால் உணரலாம்.

கோயில் III இல் உள்ள திரிபுராந்தகர் அனைத்து நிலைகளிலும் மற்ற இரு உதாரணங்களையே முழுவதும் ஒத்துள்ளார். அவரது புன்முறுவல் பூத்த முகம் வெற்றிக் களிப்பைக் காட்டுகிறது. இங்கு குடை காட்டப்படவில்லை. இக்கோயிலில் உள்ள இரண்டு செப்புத்திருமேனிகள் காலத்தால் பிந்தியவை. இவற்றில் ஒன்று நான்கு கரங்கள் கொண்டு பன்னிரு கைகளில் மான், மழுவைத் தாங்கி உள்ளது. முன் இடதுகரம் கடக முத்திரையைக் காட்டுகின்றது. முன் வலதுகரம் உயர்த்தப்பட்டு மார்பை நோக்கி உள்ளது. பத்ம பீடத்தில் நின்றிருக்கும் இவரது இடதுகால் சற்று தூக்கி குஞ்சித பாணியில் அமைந்துள்ளது. கிரீட மகுடமும் அபரிமிதமான ஆபரணங்களும் பூண்டுள்ளார். மற்றொரு செப்புத் திருமேனியில் இறைவனின் முகம் சற்று இடப்பக்கம் திரும்பியதாகக் காட்சியளிக்கின்றது. கரங்கள் முன்னதின்படியே அமைக்கப்பட்டிருந்தபோதும் உயர்த்திக் காட்டப்பட்டுள்ள கரங்களில் வெவ்வேறு சாயல்கள் உள்ளன. இவருக்கருகே பத்ம பீடத்தில் கௌரிதேவி உள்ளார். ஆனால் இவ்வன்னையின் உயரம் திரிபுராந்தகரின் உயரத்தை விட கூடுதலாக இருக்கின்ற காரணத்தால் இவையிரண்டும் ஒன்றோடொன்று தொடர்பற்றவை என்பது புலப்படுகின்றது. சேதுபதி மண்டபத்தின் தூணில் சென்ற நூற்றாண்டினைச் சேர்ந்த திரிபுராந்தகரின் சிற்பம் காணப்படுகிறது. திரிபங்கத்தில் நின்றிருக்கும் இவரது மேற்கைகள் மானையும் மழுவையும் கீழ்க் கரங்கள் வில்லையும், அம்பையும் தாங்கி உள்ளன.

மேலே விவரிக்கப்பட்ட மூன்று தொன்மையான கோயில்களிலும் திரிபுராந்தகர் உருவங்கள் உள்ளமை இவை முதலாம் இராஜராஜன் காலத்தவை என்று நாம் முன்னமே கருதியதற்கு அரண்செய்வதாக உள்ளது. இச்சிற்பவடிவத்திற்கு முதலாம் இராஜேந்திரன் காலத்தில் முக்கியத்துவம் கொடுக்கப் படவில்லை. ஏனெனில் அம்மன்னன் தனக்கு விருப்பமானதையே பெரிதுபடுத்தினான்.

## தட்சிணாமூர்த்தி

சைவசித்தாந்தப்படி தட்சிணாமூர்த்தி சிவலீலை மூர்த்தங்களில் ஒன்றாகும். பிரபஞ்சத்தின் குருவான இவர் ஞானக் கடவுளாவார்[17]. பெரும்பாலும் இவரது சிற்பங்கள் அமர்ந்த நிலையிலேயே இருக்கும். இமய மலையில் முனிவர்களுக்கு ஞானத்தைக் கற்பிப்பதற்காக இவர் தெற்குநோக்கி அமர்ந்ததாக நம்பப்படுவதால் தட்சிணாமூர்த்தி என்று பெயர் பெற்றார்[18].

இவர் வடக்கில் பெரிதும் போற்றப்பட்ட ஞானகுருவான லகுலீசருக்குப் பதிலாக தெற்கில் சைவர்களால் உருவாக்கப்பட்ட வடிவமாவார். ஆலமரத்திற்கு அடியில் நான்கு சீடர்களுடனும்

விலங்குகள் சூழவும் அமர்ந்து ஆசிரியராய் விளங்கும் இவரது உருவமைதி, சாரநாத்தில் மான் பூங்காவில் போதி மரத்தடியில் புத்தர் தனது முதல் போதனையைத் தொடங்கிய சிற்ப அமைதியினைப் பின்பற்றிய ஒன்றாகும்[19]. தியோகாரில் குப்தர்களால் கட்டப்பட்ட (கி.பி. 5 ஆம் நூற்றாண்டின் பிற்பகுதி) தசாவதாரக் கோயிலில் உள்ள நர-நாராயணன் சிற்பத் தொகுதியும் இக்கோட்பாட்டைத் தழுவியதேயாகும்[20]

தட்சிணாமூர்த்தி உருவமைதியின் தொடக்கம் கி.பி. எட்டாம் நூற்றாண்டு எனத் தெரிகின்றது. பல்லவர் கோயில்களிலும் பாண்டியரது ஒற்றைக்கல் கோயிலான கழுகுமலை வெட்டுவான் கோயிலிலும் இவரது சிற்பங்களைக் காணலாம். மற்றெங்கும் காணக்கிடைக்காதபடி கழுகுமலையில்மட்டும் மிருதங்க தட்சிணாமூர்த்தியாக உள்ளார். இராமேசுவரம் உட்பட்ட சில சோழர் கோயில்களில் வீணை வாசிக்கும் வீணாதர தட்சிணாமூர்த்தியாகவும் வடிக்கப்பட்டுள்ளார். பல்லவர்கள் தட்சிணாமூர்த்தியை விமானத்தின் தெற்குத் தேவகோஷ்டத்தில் வைத்தனர். இதனையே எந்த மாற்றமுமின்றி முற்காலச் சோழர்களும் பின்பற்றினர். பெருங்கோயில்களில் தேவகோஷ்டங்களில் வைக்கப்பட்ட உருவங்களின் பிரதிகளே அதன் மேல்தளங்களிலும் வைக்கப்பட்டன[21]. இராமேசுவரத்து முற்காலக் கோயில்களும் இவ்வகையைச் சேர்ந்தவையே.

இங்கு கோயில் I ல் உள்ள தெற்கு தேவகோஷ்டத்தில் தட்சிணாமூர்த்தி வீராசனத்தில் அமர்ந்தநிலையில் உள்ளார்.



**தட்சிணாமூர்த்தி கோயில் – I**

அவரது புன்முறுவலுடன் கூடிய கருணையே உருவான திருமுகம் சிறப்பாகச் சித்தரிக்கப்பட்டுள்ளது. அவருக்கு இருபுறமும் தேவகோஷ்டத்தின் வெளிச்சுவர்களில் விலங்குகளுடன் நான்கு சீடர்கள் உள்ளனர். தேவகோஷ்டத்தில் உள்ள இறையுருவத்தோடு சிற்பவமைதியில் தொடர்புடைய பிற உருவ அமைதிகளைத் தேவகோஷ்டத்தின் வெளிச்சுவர்களில் அமைக்கும் மாண்பு முற்காலச் சோழர்தம் கோயில் கலையில் பொதுவான ஒரு அமைப்பாகும்.[22] இங்கு இச்சுவரில் காட்டப்பட்டுள்ள ரிசிகள் தங்களது ஆசிரியருடன் கலந்துரையாடுகின்றனர் என்பது அவர்களது கைகளைத்தூக்கிப் பேசும் பாங்கிலிருந்து அறிந்துகொள்ள முடிகின்றது. தட்சிணாமூர்த்தியின் வலது கால் முயலகனை (அபஸ்மாரன்) மிதித்துக் கொண்டுள்ளது. இது மாயையையும் அறியாமையையும் அகற்றும் செயலாக விளங்குகின்றது.

அவரது தலையில் சண்டையானது பல முற்காலச்சோழர் கோயில்களில் உள்ளது போல், வெளியே பரவிய முறையில் காட்டப்பட்டுள்ளது. அவரது புன்னகை பூத்த முகமும் உதடுகளின் இயக்கமும் இறைவன் தமது சீடர்களுக்காக மந்திரத்தை உச்சரிப்பது போன்ற இயல்பைக் காட்டுவதாக உள்ளன. நெற்றியில் மூன்றாவது கண் நேர்த்தியாக செதுக்கப்பட்டுள்ளது. அழகாக அமைந்துள்ள கழுத்தணியான ஹாரமும் வஸ்த்ர யக்ஞோபவிதமும், அருமையான உதரபந்தமும் காண்போரைக் கவர்கின்றன. இடைக்கச்சையில் சிம்மமுகம் காணப்படுகிறது. கடிசூத்திரத்திலிருந்து குஞ்சரம் அழகாகத் தொங்குகிறது. கேயூரமும், மணிக்கட்டு அணிகளும் மேனிக்கு மெருகூட்டுகின்றன. அவரது வலது மேல்கையில் நாகம் உள்ளது. இடது மேற்கை ருத்ராட்ச மாலையைக் கொண்டுள்ளது. வலது கீழ்க்கை ஞானமுத்திரையைக் காட்டுகின்றது. இடது கீழ்க்கையில் புத்தகம் வைக்கப்பட்டிருக்கிறது. இது தத்துவஞானத்தை உணர்த்துவதாக அமைகின்றது.

கோயில் II இன் தெற்கு தேவகோஷ்டத்திலும் தட்சிணாமூர்த்தி தமது சீடர்களுடன் காட்சியளிக்கின்றார். கோஷ்ட வெளிச்சுவரில் இரண்டு பக்கங்களிலும் இரண்டிரண்டு சீடர்கள் அமர்ந்துள்ளனர். இங்கு இறைவன் முந்தைய சிற்பத்தில் காணப்படுவது போன்றே வீராசனத்தில் அமர்ந்து வலது காலை முயலகன் மீது வைத்துள்ளார். கீழ்க்கரங்களில் ஒன்றில் ஞானமுத்திரை காட்டி மற்றொன்றில் ஏட்டினை ஏந்தியுள்ளார்.

மேற்கரங்கள் சிதைந்துள்ளன. தலையில் சடைபாரப்புனைவுடன், காதுகளில் பத்ர குண்டலமும், கழுத்தில் எளிமையான ஹாரமும் பூணூலும், உதரபந்தமும் அணிந்துள்ளார். சிற்பம் சிதைவுற்று இருக்கின்ற காரணத்தால் மற்ற விவரங்களை அறிய முடியவில்லை.

கோயில் I மற்றும் II இன் மேல்தளங்களிலுள்ள சாலை கோஷ்டங்களிலும் கிரீவ கோஷ்டங்களிலும் தெற்குப்பக்கத்தில் தட்சிணாமூர்த்தி அமர்ந்துள்ளார்.



**தட்சிணாமூர்த்தி – இரட்டைக் கோயில்கள்**

இது அனைத்து முற்காலச் சிவன் கோயில்களிலும் காணப்படும் பொதுவான முறைமையாகும். இராமேசுவரத்து இரட்டைக் கோயில்களிலும் தட்சிணாமூர்த்தியும், வீணாதர தட்சிணாமூர்த்தியும் வைக்கப்பட்டுள்ளனர். கிழக்கு நோக்கியுள்ள கோயிலின் யோக தட்சிணாமூர்த்தி வீராசனத்தில்

அமர்ந்து, அவரது வலது காலை முயல்கன் மீது வைத்துள்ளார். அவரது சடைபாரம் வெளிப்பக்கம் பரவி தோள்பட்டைவரைத் தொங்குகிறது. மேற்கரங்களில் அனலும் நாகமும் உள்ளன. வலது கீழ்க்கை ஞானமுத்திரையைக் காட்டுகின்றது. இடது கீழ்க்கை இடது காலின் முட்டியின் மீது உள்ளது. இக்கையின் விரல்கள் பொதுவாக நாகத்தின் தலைமீது வைக்கப்பட்டிருக்கும். ஆனால் இங்கு அவை நந்தியின் தலையைத் தடவுகின்றன. இதேபோன்ற அமைப்பு சிதம்பரம் கோயிலில் கி.பி. 12 ஆம் நூற்றாண்டைச் சேர்ந்த சிற்பம் ஒன்றில் காணப்படுகிறது. இங்கு நந்தி இறைவனின் வலது பக்கத்தில் அமர்ந்துள்ளது. அவரது மடிக்கப்பட்ட கால்முட்டி நந்தியின் தலைமீது வைக்கப்பட்டிருக்கிறது.[23] இராமேசுவரத்து இரட்டைக் கோயில்களில் மேற்கு நோக்கியுள்ள கோயிலில் வீணாதர தட்சிணாமூர்த்தி ஒரு மலைமீது வீராசனத்தில் அமர்ந்துள்ளார். வழக்கம்போல் அவரது வலதுகால் மாயையைக் குறிக்கும் முயலகன்மீது வைக்கப் பட்டுள்ளது. அவரது மேல் கைகளில் தீப்பந்தமும் நாகமும் உள்ளன. கீழ்க்கைகளில் வீணை ஏந்தியுள்ளார். வீணையானது மார்புக்கு குறுக்கே வைக்கப்பட்டுள்ளது. அவரது முகத்திலும் தலையிலும் அதிகமான சுதை பூசப்பட்டிருப்பதால் தொன்மைத் தோற்றம் மறைக்கப்பட்டு நவீன சிற்பம் போல் காட்சியளிக்கிறது. மற்றொரு தட்சிணாமூர்த்தியின் சிற்பம் இராமநாதர் சன்னதியின் தெற்குப் பத்திரப்பகுதியிலுள்ள தேவகோஷ்டத்தில் காணப் படுகிறது. இங்கு இறைவன் தனது மேற்கரங்களில் மானையும் அனலையும் வைத்துள்ளார். கீழ்க்கரங்களில் ஒன்றில் ஞானமுத்திரையும் மற்றொன்று நாகத்தின் தலைமீது வைக்கப்பட்டு தண்ட ஹஸ்தத்தில் காட்டப்பட்டுள்ளது.

தட்சிணாமூர்த்தியின் முக்கிய படிவங்களில் ஒன்று காமதகன மூர்த்தியாகும். (காமதகனமூர்த்தி பற்றிய விரிவான தனிவிளக்கம் இவ்வியலில் பிறிதொரு இடத்திலும் உள்ளது) சரஸ்வதிய சித்திரகர்ம சாத்திரத்தின்படி[24] காமதகன மூர்த்தி தனது மேற்கரங்களில் ருத்ராட்ச மாலையும் நாகமும் வைத்திருக்க வேண்டும். கீழ்க்கரங்களில் ஒன்றில் கொடி வைத்தும் மற்றொன்றில் சுசி (ஞான) முத்திரை காட்டியும் இருக்க வேண்டும். காரணாகமமும்[25] ஸ்ரீதத்துவநிதியும்[26] இந்த இறைவனின் மேற்கரங்களில் மானும் உளியும் தாங்கியிருக்க வேண்டுமெனவும் கீழ்க்கரங்களில் அபய மற்றும் வரத முத்திரைகளைக் காட்ட வேண்டுமெனவும் கூறுகின்றன. இராமேசுவரத்தில் மூன்றாம் பிரகாரத்தில் மேற்குப்புறத்தில் உள்ள நாடகச்சட்டத்தில் தட்சிணாமூர்த்தி காமதகனமூர்த்தியாக உள்ள சிற்பம் உள்ளது. இங்கு இறைவன் ஒரு மரத்திற்கடியில் மகாராஜலீலாசனத்தில் அமர்ந்துள்ளார். அவரது மேலிரு கரங்களில் மானும் மழுவும்

உள்ளன. வலது கீழ்க்கரத்தில் ஞானமுத்திரை காட்டுகின்றார். இடதுகரம் இடதுகாலின் முட்டியில் வைக்கப்பட்டுள்ளது. இங்கு காமன் பிரத்யலிதாசனத்தில் நின்று கொண்டு மலர்க்கணை தொடுக்கத் தயாராக உள்ளான். காமதகனமூர்த்தி அவனை எரித்துவிடும் கோபக் கண்களால் நோக்குகின்றார். இச்சிற்பம் பிற்காலத்தினைச் சேர்ந்த ஒன்றாக இருந்தபோதும் இது அரிதான ஒன்றாகும். இதன் சிற்ப நுணுக்கங்கள் கிடைத்திருக்கின்ற சாத்திர இலக்கணங்களோடு ஒத்திருக்கவில்லை.

*சந்திரசேகரர்*

தலையில் சந்திரனைத் தரித்துள்ள சந்திரசேகரமூர்த்தி சிவ பெருமானின் மூர்த்தங்களில் ஒன்றாகும். ருத்ரனோடு சந்திரனைத் தொடர்புபடுத்தும் செய்தி வேதப்பாடல்களிலேயே காணப்படுகிறது. இலக்கியங்களில் சந்திரன் சோமன் என்று அழைக்கப்படுகின்றான். ரிக் வேதத்தில்[27] பல இடங்களில் சோமன் இந்து என்று அழைக்கப்படுகின்றான். இது பிந்தைய இலக்கியங்களில் சந்திரன் என்று அடையாளம் காட்டப் பட்டுள்ளது[28]. பிந்திய வேத இலக்கியங்களிலும் சோமன் சந்திரனோடு தொடர்புபடுத்தப்படுகின்றான். துவக்கத்தில் சோம என்பது அழியாத சக்தியைத் தரும் அமிர்தச் செடியோடு தொடர்புபடுத்தப்பட்டது. ருத்ரனோடும் தொடர்பு படுத்தப் பட்டது. ருத்ரனே பிற்காலத்தில் சிவனோடு ஐக்கியமானார். ருத்ரன் பிரபலமடைந்து ருத்ர சிவனாகப் பரிணமித்தபோது சோம என்று கூறப்பட்ட சந்திரன் இக்கடவுளின் தலையில் வைக்கப்பட்டான்.[29] நாளடைவில் இவ்வமைப்பு பற்றிய கதைகள் உருவாக்கப்பட்டன. சோமநாதர், சந்திரசேகர் போன்ற பெயர்கள் சூட்டப்பட்டன. கி.பி. 5 அல்லது 6 ஆம் நூற்றாண்டைச் சேர்ந்த பத்மபுராணத்தில்[30] சிவபெருமானின் மாமனாரான தக்கனால் சபிக்கப்பட்ட சந்திரன் சிவனிடம் சரணடைந்து அவரது தலையில் இடம்பெற்ற செய்தி விவரிக்கப்பட்டுள்ளது. இதுவே சந்திரசேகர மூர்த்தியின் கட்புலச் சிற்பங்கள் (visual forms) வெளிவரத் தொடங்கிய காலமாகும்.

கோசாமியில் உள்ள கி.பி. ஆறாம் நூற்றாண்டைச் சேர்ந்த ஹர பார்வதியின் சிற்பம் தென்னிந்திய உமாசகித சந்திரசேகரரின் உருவமைதிக்கு ஒப்பானதெனக் கருதப்படுகின்றது. ஆகமங்களின் படி சந்திரசேகரரின் உருவமைதிகளை மூன்று வகையாகப் பிரிக்கலாம் என டி.ஏ. கோபிநாதராவ் கூறுகின்றார். அவையாவன கேவலமூர்த்தி (இறைவன் தனித்திருத்தல்) உமாசகிதமூர்த்தி (உமா -பார்வதியுடன்) மற்றும் ஆலிங்கனமூர்த்தி (பார்வதிதேவியை அணைத்துக் கொண்டிருத்தல்)[31] ஆகியனவாகும். சந்திரசேகரராக

உள்ள சிவபெருமானின் உருவமைதியை சிவலிங்கத்திலிருந்து வெளிவருவது போன்று அமைக்க வேண்டும் என்று காரணாகமமும் அம்சபேதாகமமும் கூறுகின்றன.[32] தமிழகத்தில் தொன்மையான சந்திரசேகரமூர்த்தியின் வடிவம் ஒன்று செப்புத் திருமேனியாக, தஞ்சை மாவட்டம் திருப்பராய்த்துறையில் உள்ளது.[33] தஞ்சைப் பெரியகோயிலில், ஒரு தேவகோஷ்டத்தில் இவ்விறைவன் ஆலிங்கன சந்திரசேகரராக காட்சியளிக் கின்றார்.[34]



**சந்திரசேகரர் – கோயில் I**

இராமேசுவரத்தில் கோயில் I இல் தெற்குச் சுவரில் உள்ள கோஷ்டம் ஒன்றில், கேவல சந்திரசேகரமூர்த்தியின் சிற்பம் உள்ளது. இங்கு இறைவன் முத்துப் பதித்த ஹாரத்தையும் யக்ஞோபவிதம், உதரபந்தம், கீழே தொங்கும் குஞ்சரம் போன்றவற்றை அணிந்துள்ளார். அவரது சடை மகுடத்தில்

பிறைச்சந்திரன்[35] காட்டப்பட்டுள்ளார். இடது மற்றும் வலது காதுகளில் முறையே பத்ர, மகர குண்டலங்கள் காணப்படுகின்றன. இவரது மேலிரு கரங்களில் மானும் மழுவும் வைத்துள்ளார். கீழிரு கரங்களில் அபய முத்திரையும் கடி ஹஸ்தமும் காட்டுகின்றார்.

## ஹரிஹரர்

வைதீக சமயத்தில் பல்வகை இறைவழிபாடுகளை ஒருங்கிணைக்கும் காரணிகள் பல உள்ளன. அவற்றில் தொன்மையான ஒன்று ஹரிஹரர் கோட்பாடாகும். இது மகாபாரதத்திலும்[36] மத்ஸய புராணத்திலும்[37] குறிப்பிடப் பட்டுள்ளது. கட்புலக் கலைகளில் இது சிவனும் மகாவிஷ்ணுவும் இணைந்த அமைப்பாகும். குஷான மன்னர் குவிக்சர் காலத்தில் புழக்கத்திலிருந்த தங்கநாணயங்களில் ஒன்றில் சிவபெருமான் திரிசூலம் மற்றும் வஜ்ராயுதத்துடன் சக்கரம் ஒன்றையும் கையில் ஏந்தியுள்ளார்.[38] இதுவே சமய வழிபாட்டுக் கடவுளரிடையே ஒற்றுமை உணர்வினை உருவாக்க எடுக்கப்பட்ட முதல் முயற்சியாகும். ஹரிஹரனின் தொன்மையான சிற்பவமைதி மத்தியப்பிரதேசத்தில் உள்ள குப்தர் கோயில்[39] ஒன்றில் (கி.பி. ஐந்தாம் நூற்றாண்டின் தொடக்க காலம்) காணப்படுகின்றது. தமிழகத்தில் இச்சிற்பம் பிள்ளையார்பட்டியிலும் (கி.பி. ஆறாம் நூற்றாண்டு ) மாமல்லபுரத்து தர்மராஜரதத்திலும் (கி.பி.8 ஆம் நூற்றாண்டு) உள்ளன. இச்சிற்பம் அரிதாகவே முற்காலச் சோழர் கோயில்களின் மேற்கு கோஷ்டங்களில் அமைக்கப்பட்டன. ஆயினும் சங்க காலத்தில்

> "வெருவரு கடுந்திறல் இருபெருந் தெய்வத்து
> உருவுடன் இயைந்த தோற்றம் போல"

என இவ்விருவரும் இணைந்த செய்தியை அகநானூறு (பா. 360) கூறுகின்றது. எனவே அக்காலத்திலேயே இக்கோட்பாடு வழக்கில் இருந்தது என்பது தெளிவாகின்றது.

இராமேசுவரத்தில் கோயில் I இல் வடமேற்குக் கர்ணப் பகுதியில் உள்ள கோஷ்டத்தில் ஹரிஹரர் சிற்பம் உள்ளது. இதில் தலையில் உள்ள மகுடத்தில் இவ்விரு கடவுளரையும் பிரித்துக் காட்டும் பொருட்டு சிவனுக்கான சடையோ விஷ்ணுவிற்கான மகுடமோ காணப்படவில்லை. இவர் மகரகுண்டலங்களும், யக்ஞோபவிதமும், கழுத்தில் ஹாரமும், இடைக் கச்சையில் குஞ்சமும் அணிந்துள்ளார். ஆடையானது இடப்பக்கத்துக் காலில்

பாதம் வரையிலும், வலப்பக்கத்தில் முட்டி வரையிலும் உள்ளது. இதன் மூலம் சிவபெருமானை வலது பாதியாகவும் மகாவிஷ்ணுவை இடது பாதியாகவும் அடையாளம் காணலாம். இவரது மேலிரு கரங்களில் மழுவும் சக்கரமும் உள்ளன. கீழிரு கைகளில் அபய முத்திரையும் கடிஹஸ்தமும் காட்டுகின்றார்.



**ஹரிஹரர் – கோயில் I**

## இலிங்கோத்பவர்

இலிங்கோத்பவர் உருவம் சிவபெருமானின் ஆதியும் அந்தமுமற்ற பிரகாசமான ஒளியுடன்கூடிய தூணாகும். இத்தூண் சிவலிங்கத்தை ஒத்துள்ளது. இது மெய்மையின் அச்சாகும். பிந்துவிலிருந்து வளரும் பிரபஞ்சத்தின் மையப் பகுதியாகும்.[40] இது முழுக்க முழுக்க இந்திய தொன்மக் கதையினை விளக்கும் தென்னிந்திய சிற்பவமைதியாகும். இச்சிற்பமானது விஷ்ணு,

பிரம்மா, சிவன் ஆகிய கடவுளர் மூவரை வணங்குபவர்க்குள்ளிருந்த சமயப்பூசலை வெளிக்காட்டுகின்றது. இதன் முடிவில் சிவபிரானே உயர்ந்தவர் என்ற கருத்து உருவானது. சைவ சித்தாந்தத்தின்படி இது சிவபெருமானின் இருபத்தைந்து லீலா மூர்த்தங்களில் ஒன்றாகும்.[41] இலிங்கபுராணத்தில் பெருங் கடவுளர் மூவரில் சிவபெருமானின் மற்ற இரு கடவுளர் மீதான மேலாண்மைத் தன்மையைப் பற்றி விளக்கப்படுகின்றது. இங்கு இறையொற்றுமை குறியீடாகக் காட்டப்பட்டுள்ளது எனவும் கொள்ளலாம்.



**இலிங்கோத்பவர் – கோயில் I**

மாமல்லபுரத்துக் கடற்கரைக் கோயிலிலும் காஞ்சிக் கைலாசநாதர் கோயிலிலும் இலிங்கோத்பவர் அமைக்கப்பட்ட போதும் கருவறையின் மேற்குச் சுவரில் உள்ள தேவகோஷ்டத்தில் இவ்விறையுருவை வைக்க வேண்டும் என்ற முறைமை சோழர்காலத்தில்தான் ஏற்படுத்தப்பட்டது. இம்முறையை

முதன்முதலில் புகுத்தியவர் சோழமன்னன் முதலாம் பராந்தகனாவான்[42]. இராமேசுவரத்தில் கோயில்கள் I, II, III, இரட்டைக் கோயில்கள் மற்றும் இராமநாதர் சன்னதி ஆகிய வற்றின் மேற்குச்சுவர் மைய தேவகோஷ்டத்தில் இலிங்கோத்பவர் வைக்கப்பட்டுள்ளார். இதில் முதல் மூன்று சிற்பங்கள் பழமை மாறாமல் தெளிவாகத் தெரிகின்றன.



**இலிங்கோத்பவர் – கோயில் III**

ஆனால் இரட்டைக் கோயில்களில் உள்ள உருவங்களில் சுதை பூசப்பட்டுள்ளது. (இதில் கிழக்கு நோக்கியுள்ள கோயிலில் மட்டுமே இலிங்கோத்பவர் உள்ளார்). இராமநாதர் சன்னதியில் பிற்காலச் சிற்பம் வைக்கப்பட்டுள்ளது. கோயில் I இல் உள்ள இலிங்கோத்பவர் உருவத்தில் சிவலிங்கத்திலிருந்து சிவபெருமான் சந்திரசேகர மூர்த்தியாக வெளிப்பட்டு வருகின்றார். இலிங்கம் உயரமாகவும் கனமாகவும் சிலிண்டர் வடிவத்திலும் உள்ளது. இறைவன் சடை மகுடமும் பத்ர, மகர குண்டலங்களும், முத்துப் பதித்த ஹாரமும், முப்புரிநூலும் உதர பந்தமும், குஞ்சமும் அணிந்துள்ளார். பிரம்மாவும் விஷ்ணுவும் முறையே சிவலிங்கத்தின் மேற்பரப்பிலும், அடியிலும்[43] காட்டப் பட்டுள்ளனர். பிரம்மா வழக்கத்திற்கு மாறாக மனித உருவில் உள்ளார்[44]. விஷ்ணு பன்றியின் உருவில் காட்சியளிக்கிறார். புள்ளமங்கையில் உள்ள முற்காலச்சோழர் கோயிலில் இருப்பது போன்று பிரம்மாவும் விஷ்ணுவும் மனித உருவில் வணங்கிய நிலையில் இலிங்கத்தின் இரு பக்கங்களிலும் உள்ளனர். கோயில் II இல் உள்ள இலிங்கோத்பவர் உருவம் பெரிதும் சிதைந்துள்ளது. கோயில் III இல் உள்ள இவ்விறைவனின் உருவம் சிவலிங்கத் திலிருந்து சந்திரசேகரர் வெளிவருவது போல் அமைந்துள்ளது. பிரம்மாவும் விஷ்ணுவும் அன்னப்பறவையாகவும் பன்றியாகவும் முறையே இலிங்கத்தின் மேலேயும் கீழேயும் காட்டப் பட்டுள்ளனர்.

இதே அமைப்புடைய இலிங்கோத்பவர் சிற்பங்கள் இரட்டைக் கோயில்களில் கிழக்கு நோக்கிய கோயிலிலும், இராமநாதர் சன்னதியிலும் காணப்படுகின்றன. முன்னது சுதையால் மூடப்பட்டுள்ளது. பின்னது அச்சன்னதி கட்டப்பட்ட காலத்துக் கூறுகளைத் தாங்கியுள்ளது.

## காலசம்ஹாரமூர்த்தி

சிவபெருமானின் இந்த வடிவம் காலாரி, காலநாசமூர்த்தி, காலாந்தகர் மற்றும் காலசம்ஹாரமூர்த்தி என்று பலவாறாக அழைக்கப்படுகின்றது. இவ்வடிவம் தாங்கிய சிவபெருமான் இறப்புக் கடவுளான காலனை (எமன்) அல்லது காலத்தைத் தனது கட்டுப்பாட்டினுள் வைத்திருந்தார் என்று தொன்மக் கதைகள் கூறுகின்றன. இவ்வகையில், இவர் குறித்தகாலக் கெடுவிற்கு முன்பே இறக்கக்கூடிய தமது பக்தர்களின் உயிரைக் காக்கும் பொறுப்புடையவராகின்றார். இது இறைவனின் திருப்பாதங் களில் சரணடைந்த பக்தர்கள் மீது இறைவன் காட்டும் கருணையின் வெளிப்பாடாகும். இந்த வடிவம் ஏகாதச

(பதினொன்று) ருத்ரர்களில் ஒன்றென ரூபமண்டனம் கூறுகின்றது[45]. கொடும்பாளூரில் உள்ள மூவர்கோயிலின் (பத்தாம் நூற்றாண்டின் தொடக்கம்) தெற்குச் சுவர் ஹாரத்தின் சாலையில் உள்ள கோஷ்டத்தில் சிவபெருமான் காலன் மீது சதுர தாண்டவமாடுகின்றார்.[46] இதைப்போன்ற சிற்பங்கள் பட்டீசுவரத்திலும் திருச்செங்காட்டாங்குடியிலும் உள்ள முற்காலச்சோழர் கோயில்களில்[47] காணப்படுகின்றன. தஞ்சைப் பெரியகோயிலில் மைய கோஷ்டத்தில் காலனை வென்ற சிவபெருமான் களிப்புடன் நடம்புரியும் காட்சியைக் காணலாம். இக்கோஷ்டத்தின் வெளிச்சுவரில் சிவலிங்கத்தைக் கட்டிப் பிடித்துக் கொண்டுள்ள மார்க்கண்டேயனைநோக்கி காலன் வருவது சித்தரிக்கப்பட்டுள்ளது.

இராமேசுவரத்தில் கோயில் I இல் வடக்குச் சுவரில் உள்ள பின்னொதுக்கக் கோஷ்டத்தில் சிவபெருமான் காலன் மீது சதுர தாண்டவமாடுகின்றார். காலனது உருவத்தில் பாதிக்குமேல் சுதை பூசப்பட்டு தேவையான விவரங்கள் மறைக்கப்பட்டுள்ளன. கோஷ்டத்து வெளிச்சுவர்களில் காலன் தனது வலது கையில் கயிறு வைத்துக் கொண்டு மார்க்கண்டேயனை விரட்டிச் செல்கின்றது போலவும் அடுத்த பக்கத்தில் மார்க்கண்டேயன் சிவலிங்கத்தைப் பிடித்துக்கொண்டிருப்பது போலவும் செதுக்கப்பட்டிருப்பதைக் காணலாம். இது காலசம்ஹார நாடகத்தின் அடுத்தடுத்த கட்டங்களைக் காண்பதுபோல் அமைந்துள்ளது. மற்றொரு கால சம்ஹார சிற்பம் சேதுபதி மண்டபத்துத் தூண் ஒன்றில் காணப்படுகின்றது. இதில் சிவபெருமான் தனது இடதுகாலை சிவலிங்கத்தின் ஆவுடையார் (லிங்கத்தின் விஷ்ணுபாகம் என்னும் மத்தியப்பகுதி) மீது வைத்துள்ளார். அதாவது காலனை வதைக்கும்பொருட்டு இலிங்கத்திலிருந்து வெளிவருகின்றார். இவரது மேலிரு கைகளில் மானும் மழுவும் உள்ளன. கீழ்க்கரங்களில் சுசி முத்திரையும் திரிசூலமும் காணப்படுகின்றன. மானின் முகம் சிவபெருமானை நோக்கி அமைந்துள்ளது. இறைவனது வலதுகால் சற்று உயரத் தூக்கிக் காட்டப்பட்டுள்ளது. இது அவர் காலனை எட்டி உதைப்பது போன்றதொரு தோற்றமாகும். அவருக்கு வலதுபுறம் சிவலிங்கத்தைத் தொட்டுக்கொண்டு மார்க்கண்டேயனும் இடதுபுறம் எருமையின்மீது அமர்ந்து கொண்டு சிவலிங்கத்தின் மீது பாசக்கயிறு வீசும் எமனும் காட்டப்பட்டிருக்கின்றனர்.

## காமதகனமூர்த்தி

சிவபெருமானின் சம்ஹார வடிவங்களில் (வதம் செய்யும் வடிவம்) ஒன்று காமதகன மூர்த்தியாகும். இதில் இறைவன் இச்சையை அழிக்கின்றான். சிவபெருமான் கடுந்தவத்திலிருக்கும்

போது காமன் அவனது தவத்தைக் களைக்க முற்படக் காமனை சாம்பலாக்கினார் என்று தொன்மம் கூறுகின்றது. சூரன் என்னும் அசுரனை வதம் செய்ய ஒரு மகனைப் பெற்றுத்தர வேண்டியே சிவனது இச்சையை காமன் தூண்டினான் என்று நம்பப்படுகின்றது. இக்கதை காளிதாசரின் (கி.பி.ஐந்தாம் நூற்றாண்டு) குமாரசம்பவத்தில் கூறப்பட்டுள்ளது. இதன் கட்புலக் காட்சி ஓவியமாக கி.பி. 17 ஆம் நூற்றாண்டில் நாயக்கர் காலத்தில் கட்டப்பட்ட நத்தம்கோவில்பட்டி சிவன் கோயிலில் உள்ள அம்மன் சன்னதி முன்மண்டபக் கூரையில் தீட்டப் பட்டிருக்கின்றது. பாரதத்திற்குப் பொதுவான தொன்மக் கதைகளை, ஒரு குறுகிய வட்டார எல்லைக்குள் உட்படுத்தி இறைவனின் திருவிளையாடல்கள் இந்த ஊரில், எங்கள் ஊரில் தான் நடந்தது என்று கூறிக்கொள்ளும் வழக்கம் இந்தியாவின் பல இடங்களில் நிலவிவருகின்றது. அவ்வாறு கூறுவதால் தமது ஊர்களுக்கு புனிதத்துவம் கிடைக்கப் பெற்றதாக நம்புகின்றனர். இதற்குத் தமிழகம் விதிவிலக்கல்ல. எனவே சிவபெருமான் காமனைத் தகனம் செய்தது தமிழ் நாட்டில் தஞ்சை மாவட்டத்தில் திருக்குறுகை என்ற கிராமத்தில் தான் என்ற நம்பிக்கை இன்றளவும் நிலவி வருகின்றது. இராமேசுவரத்தில் கோயில் I இல் மேற்குச்சுவர் பின்னொதுக்கக் கோஷ்டமொன்றில் காமதகன மூர்த்தியின் உருவம் உள்ளது. அவர் சடைமகுடமும், மகரகுண்டலங்களும், முத்துப் பதித்த ஆரமும் முப்புரிநூலும் உதரபந்தமும் அணிந்துள்ளார். அவரது மேற்கரங்களில் மானும் மழுவும் உள்ளன. கீழ் வலதுகரம் காமதகன மூர்த்திக்குரிய சிறப்பு அம்சமான கீழ்நோக்கிக் காட்டும் சுசி முத்திரையையும் இடதுகரம் கடிஹஸ்தத்தையும் காட்டுகின்றன.

*ரிஷபவாகனர்*

காளை அல்லது ரிஷபம் சிவபெருமானின் வாகனமாகும். இது இனப்பெருக்கம் அல்லது உற்பத்தியின் குறியீடாகும். சிவபெருமானோடு காளையைத் தொடர்பு படுத்துவதன் தொடக்கநிலையை குஷானர் காலத்து (கி.பி. 1 இலிருந்து 2 நூற்றாண்டுகள்) நாணயங்களில் காணலாம். இவற்றில் சிவபெருமான் காளைக்குப் பின்புறம் நின்றுகொண்டிருக்கிறார்.[48] தமிழகத்தில் காளை அல்லது நந்திவாகனத்துடன் கூடிய சிவபெருமானுடைய சிற்பங்கள் பல்லவர் காலத்தில் தோற்றுவிக்கப்பட்டன. இதற்கான உதாரணத்தை மாமல்லபுரத்து அர்ச்சுனரதத்தில் காணலாம். இந்த அமைப்பு சோழர்களின் செப்புத்திருமேனிகளில் பிரபலமடைந்துள்ளது.[49] சிவபெருமான் பார்வதியோடு சேர்ந்து காளை அல்லது நந்தியின் மீது அமர்ந்திருக்கும்போது அவர் பொதுவாக ரிஷபாரூடர் என்று

அழைக்கப்படுகின்றார். இதன் தொன்மையான சிற்பத்தைத் தியோகாரில் உள்ள குப்தர்களின் தசாவதாரக் கோயில் அனந்தசாயி சிற்பத் தொகுதியில் காணலாம்.[50] சிவபெருமான் நந்திக்கு முன்னால் நின்று கொண்டிருக்கும் போதும் அல்லது அதன் மீது சாய்ந்து கொண்டிருக்கும்போதும் ரிஷபவாகனர் என்று அழைக்கப்படுகின்றார். சிவபெருமான் காளையின் முன்பாக நிற்பது போன்ற தோற்றத்தை ரிஷபாந்திகர் என்பர். இவர் காளையின் மீது அமர்ந்தகோலம் ரிஷபாருடர் எனப்படும். இம்மூன்றிலுமே சிவபெருமான் உமையுடனேயே காட்டப் படுகின்றார்.

இராமேஸ்வரத்தில் கோயில் I இன் வடக்குச்சுவர் கர்ண கோஷ்டத்தில் ரிஷபவாகன உருவம் உள்ளது. இங்கு இறைவன் எளிமையான ஆரம், யக்ஞோபவிதம், உதரபந்தம், கீர்த்தி முகத்துடன் கூடிய அரைக்கச்சை ஆகியவற்றை அணிந்துள்ளார். சிதைந்த நிலையிலுள்ள அவரது மேலிரு கரங்களில் மானும் மழுவும் உள்ளன. வலது கீழ்க்கரம் அவருக்குப் பின்னால் நின்று கொண்டிருக்கின்ற நந்தியைத் தொட்டுக் கொண்டுள்ளது. இடது கீழ்க்கரம் முற்றிலும் சிதைந்து விட்டது. சிவபெருமான் நந்தியின் மீது சாய்ந்து நிற்கின்றார்.

மற்றொரு ரிஷபவாகனமூர்த்தி சிற்பம் மூன்றாவது பிரகாரத்தின் மேற்குப் பக்கத்தில் உள்ளது. அவரது இரு மருங்கிலும் அவரது புதல்வர்கள் ஹேரம்ப கணபதியாகவும், சண்முகராகவும் காட்சியளிக்கின்றனர். இவ்விறைவனைக் காட்டும் நாயக்கர்காலத்து செப்புத்திருமேனி ஒன்றும் இங்கு உள்ளது. மேலிருகரங்களில் மானும் மழுவும் காணப்படுகின்றன. வலது கீழ்க்கரம் கடிஹஸ்தத்தில் வலது தொடை மீது வைக்கப்பட்டுள்ளது. இடதுகை நந்தியை அரவணைப்பாகத் தடவுகின்றது. நந்தியின் உருவம் இறைவனின் தொடைவரை காட்டப்பட்டிருக்கின்றது. இங்கு தேவியின் உருவம் காணப்பட வில்லை. சிவபெருமான் உயரமான சடைமகுடத்தையும் மகர (வலது காது) மற்றும் பத்ர (இடது காது) குண்டலங்களையும் அணிந்துள்ளார். இவரது ஆபரணங்களும் ஆடை அமைப்பும் முட்டியின் அமைப்பும் முகபாவனையும் உடல் அமைப்பும் விஜயநகர-நாயக்கர் பாணியைத் தெளிவாக எடுத்துக் காட்டுகின்றன.

## பிச்சாடனர்

பிச்சாடனர் சிற்பம் சிவபெருமான் பிச்சைபுகும் பெருமானாக (mendicant) உருவம் எடுத்த காட்சியை விளக்குவதாகும். கோபத்தால் பிரம்மனின் தலை ஒன்றைக் கொய்த பாவத்தினைப் போக்கவே அவர் இவ்வுரு எடுத்ததாகக்

கூறுவர். இக்கோலத்தில் சிவபெருமான் ஆடையெதுவும் உடுத்தாமல் ஆபரணங்கள் மட்டுமே அணிவது மரபாகும். அவரது இடையைச் சுற்றி நாகத்தை அரைஞாணாக அணிவார்.[51] தொன்மக் கதையொன்று சிவபெருமான் ஏன் இந்த உருவத்தை எடுத்தார் என்பதற்கான பிறிதொரு காரணத்தைக் கூறுகின்றது. அதன்படி தாருகாவனத்து ரிஷிகளின் ஆணவத்தை அடக்க சிவபெருமான் இவ்வுருவத்தை எடுத்தார். சிவபெருமானும் மகாவிஷ்ணுவும் பிச்சாடனராகவும் மோகினியாகவும் உருவெடுத்து முறையே ரிஷிபத்தினிகளையும் ரிஷிகளையும் மனத்தளவில் கெடுத்து அவர்களது ஆணவத்தை அழித்தனர். இந்நிகழ்ச்சியானது ஆணவம் நிறைந்த மனித மனத்திற்கும் கடுமையான தவத்திற்கும் மேலான இறைவனின் உயர்வுத் தன்மையை விளக்கும் ஒரு குறியீடென்றே தெரிகின்றது. இவ்வுருவ அமைதியின் தொன்மையான சிற்பம் சாளுக்கிய மன்னன் விக்ரமாதித்தன் (கி.பி.681 - 96) காலத்தில் வாதாபிக்கு அருகில் ஆலம்பூரில் கட்டப்பட்ட சுவர்க்கபிரம்மா கோயில்சுவரில் காணப்படுகின்றது[52]. இருப்பினும் இச்சிற்பவமைதி பிரபல மடைந்தது முற்காலச்சோழர் காலத்திலாகும். சோழர் கோயில்களில் உள்ள தொன்மையான பிச்சாடனர் சிற்பம் கும்பகோணம் நாகேசுவரசுவாமி கோயிலில் உள்ளது.

இராமேசுவரத்தில் கோயில் I– இன் அர்த்தமண்டப தெற்குச் சுவரில் உள்ள கோஷ்டத்தில் பிச்சாடனர் சிற்பம் காணப்படுகின்றது. இது பெரிதும் சிதைந்துள்ளது. மான், பிச்சை பாத்திரத்தைத் தாங்கிய பூதம் இறைவனுக்கு இருமருங்கிலும் உள்ளன. அவரது தோளில் ஒரு நீண்ட கம்பு உள்ளது. சோழரின் கலை நுணுக்கத்தைக் காட்டும் உயரமான மற்றும் மெல்லிய உடலமைப்பும் சதுரமான முகவமைப்பும் இச்சிற்பத்தில் காணப்படுகிறது. இதுதவிர பிற்காலத்தைச் சேர்ந்த இவரது சிற்பங்கள் மூன்றாம் பிரகாரத்தின் வடக்கு மற்றும் மேற்குப் பகுதியில் காணப்படுகின்றன. இவற்றில் இறைவனது இடையை நாகம் சுற்றியுள்ளது. மேற்குப் புறத்திலுள்ள சிலையில் தோளின் மீதிருக்க வேண்டிய கம்பு காணப்படவில்லை.

## பைரவர்

பைரவர் அல்லது சேத்திரபாலர்[53] சிவபெருமானின் கோபமான உருவமாகும். இவர் சிவன் கோயில்களில் அஷ்ட (எட்டு) பரிவார தேவதைகளில் ஒருவராக இடம் பெறுகின்றார். இவர் பாசுபத, காளாமுக, இலிங்காயத்துகளின் இஷ்ட தேவதையாவார். சரஸ்வதீய சித்திர கர்மசாத்திரம் நான்குவகை பைரவர்கள் பற்றிக் கூறுகிறது. எட்டு வகை பைரவர்கள் பற்றிய மற்றொரு கருத்தும் நிலவுகிறது. இவர் சூரியனை ஒத்தவர். இருளை

நீக்குபவா, குழப்பத்தைப் போக்குபவர், கிராமக் காவலர் என்றெல்லாம் நம்பப்படுகின்றார். இச்சிற்ப அமைப்பில் இறைவன் நிர்வாணமாகவும் எடுத்துக்கட்டிய தலைமுடிச் சடனும் மண்டையோட்டு மாலையுடனும் காட்டப்படுவார்[54]. தென்னிந்தியச் சிற்பங்களில் இவர் நாய் வாகனத்திற்கு அருகில் பாசக்கயிற்றைக் கையிலேந்தி அமைக்கப்படுவார். ஆனால் வட இந்திய மற்றும் சாளுக்கியப் பகுதியிலுள்ள இவரது சிற்பங்களில் பாசக்கயிறுக்குப் பதிலாக வாள் ஒன்றைக் கையில் வைத்திருப்பார்.[55] இவரது தொன்மையான சிற்பம் ஒரிஸ்ஸாவில் வைத்தல் தியோலில் காணப்படுகின்றது.

இராமேசுவரத்தில் கோயில் I இன் அர்த்தமண்டப வடக்குச் சுவரில்[56] உள்ள கோஷ்டத்தில் நான்கு கரங்களையுடைய பைரவர் உள்ளார். மேலிரு கரங்களில் உள்ள ஆயுதங்கள் சிதைந்துள்ளன. கீழிரு கைகளில் ஒன்றில் திரிசூலத்தையும் மற்றொன்றில் மண்டை ஓட்டையும் வைத்துள்ளார். அவரது தலையலங்காரத்தில் பொதுவாக இருக்கவேண்டிய ஜீவாலகேசம் உள்ளது. கோஷ்டத்தின் வெளிச்சுவரில் பைரவருக்கு வலதுபுறம், கீழ் அடுக்கில் ஒரு நாயும், மேல்அடுக்கில் இருவர் வணங்கிய நிலையிலும் காட்டப்பட்டுள்ளனர். இவ்வமைப்பு பல முற்காலச் சோழர்களின் கோயில்களில் காணப்படுகிறது. இதுதவிர மூன்றாவது பிரகாரத்தின் மேற்கு மற்றும் தெற்குப் பகுதிகளில் இரண்டு பைரவர் சிற்பங்கள் உள்ளன. இவற்றின் மேலிரு கரங்கள் உடுக்கையும் நாகமும் தாங்கியுள்ளன. கீழிரு கரங்கள் மண்டையோடும் (கபாலம்) திரிசூலமும் வைத்துள்ளன.[57] தலையில் ஜ்வாலகேசமும் கபாலமாலையும் இடுப்பில் நாகமும் காணப்படுகின்றன. இவருக்குப் பின்னால் நிற்கும் நாய் கபாலமாலை அணிந்துள்ளது.

## கஜசம்காரமூர்த்தி

யானை உருவமுடைய அசுரனை வதம் செய்த சிவபெருமானின் சிற்ப அமைதிக்குக் கஜசம்காரமூர்த்தி என்று பெயர். இது கி.பி. ஏழாம் நூற்றாண்டிலிருந்து பிரபலமடைந்துள்ளது. திருநாவுக்கரசரும் சுந்தரரும்[58] தங்களது தேவாரப் பாடல்களில் இறைவனின் இவ்வுருவம் பற்றிக் குறிப்பிடுகின்றனர். தென்னிந்தியாவில் இதன் பழமையான வடிவங்களில் ஒன்று தஞ்சை மாவட்டம் வழுவூரில் உள்ள செப்புத் திருமேனியாகும்.[59] சில முற்காலச்சோழர் கோயில்களில் உள்ள கலபாதச் (சிற்றிரு) சிற்பங்களில் கூட இவ்வடிவம் மிக நேர்த்தியாகக் காட்டப்பட்டுள்ளது. இயக்க நிலையையும் பயநக

*என்ற ரசக் கோட்பாட்டையும் சிறப்புடன் காட்டும் இவ்வடிவத்தின் சிறிய கலபாதச் சிற்பம் புள்ளமங்கை பிரம்மபுரீசுவரர் கோயிலில் உள்ளது.*

*இராமேசுவரத்தில் மூன்றாவது பிரகாரத்தில் உள்ள நாடகச் சட்டத்தில் மூன்று கஜசம்கார சிற்பங்கள் உள்ளன. இவற்றில் இரண்டு எட்டுக் கரங்களையும் ஒன்று நான்கு கரங்களையும் கொண்டிருக்கின்றன. கைகளில் யானையின்தோல், கபாலம், தந்தம், பாசக்கயிறு, உடுக்கை, திரிசூலம், ஆச்சரியதினைக் குறிக்கும் விஸ்மயமுத்திரை ஆகியவை காணப்படுகின்றன. இந்த மூன்று உதாரணங்களிலும் சிவபெருமான் தனது வலது காலை யானையின் தலைமீது வைத்துள்ளார். பார்வதியும் ஸ்கந்தரும் அருகில் உள்ளனர்.*

## *சரபமூர்த்தி*

*சரபமூர்த்தி தென்னிந்தியர்விற்கு மட்டுமே தெரிந்த சிவபெருமானின் வடிவமாகும். இதில் சரபம் எனும் பறவையாக அவர் காணப்படுகிறார். இப்பறவையை எங்கும் காணமுடியாது. ஏனெனில் இது தொன்மக் கதைகளின் கற்பனைப் பறவை. சிவபெருமானின் இவ்வடிவம் சிம்ம முகமும் எட்டும் அதற்கு மேற்பட்ட கரங்கள் கொண்டு அமைக்கப்படுகின்றது. இரண்யனை வதம் செய்தபின்னும் கோபம் அடங்காதிருக்கின்ற நரசிம்மரை அடக்கி சாந்தப்படுத்தவே சிவபெருமான் இவ்வடிவம் எடுத்தார் என்று தென்னிந்திய சைவர்கள் கருதுகின்றனர். இது சைவ வைணவ சமயத்தவரிடையே நிலவிய காழ்ப்புணர்ச்சியின் விளைவாக ஏற்பட்ட வடிவம் என்றே சொல்லலாம். பிற்காலச்சோழர் கோயில்களான தாராசுரம் ஐராவதேசுவரர் கோயிலிலும் திரிபுவனம் கம்பகரேசுவரர் கோயிலிலும் இச்சிற்பத்தைக் காணலாம்.*

*இராமேசுவரம் கோயிலில் மூன்றாவது பிரகாரத்தின் தெற்குப் பகுதியில் சரப மூர்த்தியின் சிற்பம் உள்ளது. இங்கு நரசிம்மர் வணங்கிய நிலையில் கீழே விழுகின்றார். சரபத்தைக் கண்டு பயந்து காணப்படுகின்றார். சரபர் நரசிம்மரை ஒரு கையால் இடுப்பில் பிடித்து மறுகையால் அடிக்கின்றார்.*

## *சோமஸ்கந்தர்*

*காளிதாசரின் ரகுவம்சம்[60] சோமஸ்கந்தரின் வடிவம் பற்றி கூறுகின்றது. இவ்வடிவத்தில் சிவபெருமான் உமா (பார்வதி) தேவியுடனும் குழந்தையான ஸ்கந்தனுடனும் இருப்பார். வட இந்தியக் கோயில்கள் எதிலும் இவ்வுருவத்தைக் காண*

முடிவதில்லை. பல்லவர் கோயில்களில், முதலாம் இராஜசிம்மன் காலத்திலிருந்து இவ்வடிவம் முக்கியத்துவம் பெறலாயிற்று. இது அன்பான பெற்றோர், துள்ளி விளையாடும் குழந்தை, அன்பெனும் தத்துவம் ஆகிய அனைத்தையும் ஒன்றிணைக்கும் அன்புச் சின்னமாகும்.[61] இது சோழர்காலச் செப்புத் திருமேனிகளில் பிரபலமடைந்தது. நாயக்கர் காலத்துச் செப்புத்திருமேனிகளிலும் இவ்வடிவம் இடம்பெற்றது.

இராமேசுவரம் கோயிலில் சோமஸ்கந்தர் செப்புத்திருமேனி ஒன்று சிறு கோயிலில் வைக்கப்பட்டுள்ளது. சிவபெருமான் பெரிய உருவமாக சுகாசனத்தில் அமர்ந்துள்ளார். அவரது வலதுகால் கீழே தொங்குகின்றது. உமாதேவி லலிதாசனத்தில் அமர்ந்துள்ளார். அவரது இடதுகால் பீடத்திற்குக் கீழே தொங்குகிறது. இறைவனின் மேல்கரங்கள் மான் மழுவுடனும் கீழ்க்கரங்கள் அபய சிம்மகர்ண முத்திரைகளுடனும் காட்சியளிக்கின்றன. உமையின் வலது கரத்தில் மலர் உள்ளது. இடக்கரம் கடக ஹஸ்தம் காட்டுகின்றது. கரண்டமகுடத்துடன் ஸ்கந்தர் நடுவில் நின்று கொண்டிருக்கின்றார். இவரது வலதுகரம் சுசி முத்திரையைக் காட்டுகின்றது. இடதுகையில் மலர் மொட்டு ஒன்றை வைத்துள்ளார். மூன்று உருவங்களும் ஆபரணங்களால் அலங்கரிக்கப்பட்டுள்ளன. ஆடை அழகாகக் காட்டப் பட்டுள்ளது. இந்த சிற்பம் விஜயநகர நாயக்கர் காலத்தைச் சேர்ந்தது எனினும் இதன் காதணிகளின் அமைப்பைத் தவிர பிற கூறுகள் சோழர் காலத்தையே நினைவுபடுத்துகின்றன. இதேபோன்ற இதே காலத்தைச் சேர்ந்த சான்பிரான்சிஸ்கோ அருங்காட்சியகத்திலுள்ள சோமஸ்கந்தர் திருமேனியும் சோழர் கலையையே நினைவுபடுத்துகின்றது[62] என்பது இங்கு குறிப்பிடத் தக்க ஒன்றாகும். இராமேசுவரத்தில் மூன்றாம் பிரகாரத்தில் உள்ள சோமஸ்கந்தர் சிற்பத்திற்கு முன்னால் இராம பக்தனான அனுமன் தவமிருப்பது போல் காட்டப்பட்டுள்ளார். இங்கு அனுமன் தனது இடதுகாலில் நிற்கின்றார். வலதுகாலைத் தூக்கியபடி இரண்டு கரங்களையும் தலைக்கு மேலே கூப்பியபடி உள்ளார். அவரது மேலுயர்ந்த வாலில் மணிகள் தொங்குகின்றன.

## நடராஜர்

நாட்டியக் கலையின் அரசரான சிவபெருமான் நடராஜர், ஆடவல்லான், சபாபதி என்றெல்லாம் அவரது நடனக் காட்சிகளின்போது அழைக்கப்படுகின்றார். இவ்வடிவம் இந்தியா முழுவதற்கும் பொதுவானதும் இறைவனது ஐந்து செயல்களைக் குறிக்கும் பஞ்சக்கிருத்தயம் எனும் கோட்பாட்டை வலியுறுத்துவதுமாகும். அச்செயல்களாவன சிருஷ்டி (உற்பத்தி),

ஸ்திதி (காத்திருத்தல்), சம்ஹாரம் (வதம்), துரோபவம் (கருத்துருவம்) மற்றும் அனுக்கிரகம் (அருள்பாலித்தல்) ஆகியனவாகும்.[63] நடராஜரின் பல்வகை நடன அமைப்புகளில் சிறப்பாகக் கருதப்படுபவை ஆனந்த தாண்டவமும் ஊர்த்துவ தாண்டவமுமாகும். ஆனந்த தாண்டவ நடராஜர் சிற்பங்கள் இந்தியக் கலைமரபிற்குச் சோழர்கள் கொடுத்த கொடையென்றே கொள்ளலாம்.[64]



**நடராஜர் – சிதம்பரேசுவரர் சன்னதி (செப்புத் திருமேனி)**

இராமேசுவரம் கோயிலில் முதல் பிரகாரத்தில் சிதம்பரேசுவரர் சன்னதியில் பிற்காலப் பாண்டியர் காலத்தினைச் சேர்ந்த நடராஜர் செப்புத் திருமேனி ஒன்றுள்ளது. இது அழகில் சிறந்ததென்று சொல்வதற்கில்லை. இதன் சடை நாட்டியம் ஆடும்போது பரக்காமல் சடை மகுடமாகக் கட்டி வைத்ததுபோல் உள்ளது. நடராஜரின் மேற்கரங்கள் சடை மற்றும் நடராஜர் உருவங்களில் காட்டப்பட்டிருப்பது போல் நீண்டு கஜஹஸ்தத்தில் அமைக்கப்படவில்லை. சிற்பத்தின் அமைப்பும் முழு நிறைவானதாக இல்லை. முயலகன் தனது தலையை மேலே தூக்கியுள்ளான். இவ்வமைப்பு பல சிற்பங்களிலும் காணப்படுவதே எனினும் பொதுவாக முயலகன் தனது தலையை சிவனது வலப்பக்கம் திருப்பி அமைக்கப்படுவது என்பது மரபாகும்.[65]

அடுத்த பிரபல நடனமான ஊர்த்துவ தாண்டவம் திருவாலங்காட்டில் காளிதேவியைத் தோற்கடிக்கும் பொருட்டு சிவபெருமானால் ஆடப்பட்டது. இந்த நடனத்தில் அவர் தனது

காதணியைக் கீழே விழவைத்து, பின்பு அதனைத் தனது பாதத்தால் எடுத்து மீண்டும் காதில் அணிந்து கொண்டார். இவ்வடிவ அமைப்பு சோழர் காலத்தில் தோன்றியபோதும் நாயக்கர் மண்டபங்களில் பரவலாக இடம் பெறலாயிற்று. இதற்கான உதாரணங்களை மதுரை மீனாட்சி சுந்தரேசுவரர் கோயிலில் கம்பத்தடி மண்டபம் மற்றும் ஆயிரங்கால் மண்டபத்திலும் தென்காசி விசுவநாதர் கோயிலிலும் காணலாம்.



**ஊர்த்துவ தாண்டவம் – மூன்றாம் பிரகாரம்**

இராமேசுவரத்தில் மூன்றாம் பிரகாரத்தின் கிழக்குப் பக்கத்தில் பத்துக் கரங்களையுடைய ஊர்த்துவதாண்டவ சிற்பம் காணப்படுகிறது. இதில் சிவபெருமான் நீண்ட கபாலமாலை அணிந்துள்ளார். அவரது வலதுகால் நெற்றிவரை தூக்கப்பட்டுள்ளது. வலது மற்றும் இடது கீழ்க்கரங்களில் முறையே அபயஹஸ்தமும் கஜஹஸ்தமும் காட்டுகின்றார். வலதுபக்க கீழ்க்கை ஒன்றைத் தவிர சிவபெருமானின் அனைத்துக் கரங்களும் ஊர்த்துவமாக் கர்த்தரி முத்திரையில் மேல்நோக்கி

உள்ளன. அவற்றில் ஆயுதங்கள் எதுவுமில்லை. இந்த உருவம் நிர்வாண நிலையில் (ithi phallic) உள்ளது. இது தமிழகக் கோயில்களில் காணப்பெறாத ஒன்று. இவருக்கு அருகில் வலப்புறத்தில் சிம்மம் ஒன்று அமர்ந்துள்ளது. இதே இடத்தில் உள்ள மற்றொரு ஊர்த்துவ தாண்டவச் சிற்பத்தில் நந்தி மிருதங்கம் வாசிக்கின்றது. நான்கு கரங்களையுடைய சிவபெருமான் மேல்க்கரங்களில் சங்கும் மானும் தாங்கியுள்ளார். இது சிவனையும் மகாவிஷ்ணுவையும் இணைப்பதாக உள்ளது.

## சிவபெருமானின் பிற வடிவங்கள்

கோயில் I இன் மேற்குச்சுவரின் பின்னொதுக்கத்துக் கோஷ்டத்தில் நான்கு கரங்களையுடைய சிவபெருமான் நின்ற நிலையில் உள்ளார். அவரது மேலிரு கரங்களில் மானும் மழுவும் காணப்படுகின்றன. இடது கீழ்க்கரம் கடிஹஸ்தமாக உள்ளது. வலக்கரத்தில் உள்ள பொருள் சிதைந்துள்ளதால்



**சிவபெருமான் – கோயில் I**

அடையாளம் காணமுடியவில்லை. இங்கு இறைவன் முத்துப் பதித்த ஆரம், மகரம் மற்றும் பத்ர குண்டலங்கள், உதரபந்தம், அரைக் கச்சையில் குஞ்சம், தலையில் சடைமகுடம் ஆகியவற்றுடன் முற்காலச் சோழர்கலையின் உன்னதநிலை காட்டி நிற்கின்றார். முகத்தில் காட்டியிருக்கும் புன்னகையும்

உடல்வனப்பும் அவரது தோற்றத்திற்கு மெருகூட்டுகின்றன. கோஷ்டத்தின் வெளிச்சுவர்களில் இடதுபக்கம் அழிந்த நிலையில் சண்டைக் காட்சியும், வலது பக்கத்தில் கதையுடன் கூடிய பூதமும், வணங்கிய நிலையில் மனித உருவமும் தெரிகின்றன. இவற்றினை எந்தத் தொன்மக் கதையோடும் ஒப்பிட்டோ அல்லது இணைத்தோ பார்க்க முடியவில்லை.

பிற்காலத்தைச் சேர்ந்த உமாசகித மூர்த்தியின் செப்புத்திருமேனி ஒன்று இக்கோயிலில் உள்ளது. பிரதோஷமூர்த்தி என்று இது இங்கு அழைக்கப்படுகின்றது. மாதத்தில் இருமுறை பிரதோஷ நாளன்று இத்திருமேனி ஊர்வலமாக எடுத்துச் செல்லப்படுகிறது. இதில் சிவனும் பார்வதியும் தங்களது இடதுகால்களைச் சற்றுமடக்கி நின்றுகொண்டிருக்கின்றனர். சிற்பவமைதிப்படி இது உமாமகேசுவரர் வடிவத்தையே காட்டுகின்றது. பள்ளியறையில் பொன்னாலான சிவனது உருவம் பத்மபீடத்தில் வைக்கப்பட்டுள்ளது. இது பள்ளியறைச் சொக்கர் என அழைக்கப் படுகின்றது. இவ்விரு திருமேனிகளுமே விஜயநகர-நாயக்கர் காலத்தவை ஆகும்.

## மகாவிஷ்ணுவும் அவரது அவதாரச் சிற்பங்களும்

இந்து தொன்மத்தின்படி மகாவிஷ்ணு காக்கும் கடவுளாவார். இவர் வேத காலத்திலிருந்து வழக்கிலிருந்துள்ளார். சங்ககாலத் தமிழரிடையே திருமால் என்ற பெயரில் வணங்கப்பட்டு வந்தார். பல்லவர் காலத்திலிருந்து கட்டப்பட்ட கோயில்களில் பெரும்பான்மையானவற்றில் இவரது சிற்ப வடிவங்களைக் காணலாம். இவர் இருபத்துநான்கு அவதார மெடுத்ததாகக் கருதப்படினும் இவரது பெரும்பாலான சிற்பங்கள் இவரது பத்து அவதாரங்களைக் குறிப்பதாகவே அமைந்துள்ளன. விஷ்ணுவின் வெவ்வேறு அவதாரங்கள் வெவ்வேறு பகுதிகளில் வழக்கில் இருந்தன. அவை அனைத்தும் ஒரு காலகட்டத்தில் ஒருங்கிணைக்கப்பட்ட விஷ்ணுவின் அவதாரங்கள் என்று வழிமுறைப்படுத்தப்பட்டன. நாட்டின் அனைத்துப் பகுதிகளிலும் மகாவிஷ்ணுவின் பல்வகைச் சிற்பங்களைக் காணலாம். தமிழ்நாட்டில் காணும் அவரது வடிவங்களில், வலது மேல் கரத்தில் சக்கரமும், இடது மேல்கரத்தில் சங்கும், இடது கீழ்க் கரத்தில் கதையும் (club) வலது கீழ்க்கரத்தில் பத்மமும் (தாமரை) வைக்கப்படிருக்கும். ஆனால் பெரும்பாலான முற்காலச் சிற்பங் களில் வலது கீழ்க்கரம் அபய முத்திரையையே காட்டுகின்றது. பத்மம் பொதுவாக இடக்கரத்தில் காணப்படுகின்றது. பிற்காலச் சிற்பங்களில் பத்மம் இடம் பெறவில்லை.[66]

## மகாவிஷ்ணு–பொது வடிவங்கள்

பொதுவாக மகாவிஷ்ணுவின் சிற்பங்கள் நின்ற நிலையிலோ அமர்ந்த நிலையிலோ அல்லது கிடந்த நிலையிலோ காணப்படும். இந்த மூன்றுவகைச் சிற்பங்களும் தமிழகத்தில் பல்லவர் காலத்திலிருந்தே காணப்படுகின்றன. அவரது சிற்பங்களிலும் ஓவியங்களிலும் இறைவனின் இரு பக்கங்களிலும் ஸ்ரீதேவியும் பூதேவியும் இருப்பது மரபாகும். சில இடங்களில் நீலாதேவியும் சேர்க்கப்பட்டிருப்பதைக் காணலாம்.

இராமேசுவரம் கோயிலில் தொன்மையான விஷ்ணு சிற்பங்கள் கோயில்கள் I, II, III இலும், பிற்காலச் சிற்பங்கள் இராமநாதர் சன்னதி விமான மேல் தளங்களிலும், மூன்றாவது பிரகாரத்திலும், சேதுபதி மண்டபத்திலும் காணப்படுகின்றன. மூன்றாவது பிரகாரத்து நாடகச் சட்டத்தில் ஏராளமான இராமாயணச் சிற்பங்கள் உள்ளன.



**விஷ்ணு – கோயில் I**

கோயில் I - இன் மேற்குச் சுவர் கர்ண கோஷ்டத்தில் சமபங்கத்தில் நிற்கும் நான்கு கரங்களையுடைய விஷ்ணு உள்ளார். இவரது மேலிரு கரங்களில் சங்கு சக்கரமும், கீழிருகரங்கள் அபய கடி முத்திரைகள் காட்டுகின்றன. இடதுகரம் கதையைத் தொட்டுக் கொண்டுள்ளது. மகர குண்டலங்களும், முத்துப் பதித்த ஆரமும், முப்புரிநூலும், உதரபந்தமும், அரைக்கச்சையில் தொங்கும் குஞ்சமும் அணிந்துள்ளார். இச்சோழர்காலத்துச் சிற்பத்தில் தேவியர் இருவரும் இல்லை. இரண்டாவது மூன்றாவது தளங்களில் உள்ள சாலை கோஷ்டங்களில் விஷ்ணு சுகாசனத்தில் அமர்ந்துள்ளார். மூன்றாவது தளத்தில் உள்ள இறைவனின் தலை சிதைந்துள்ளது. கோயில் II - இன் இரண்டாவது, மூன்றாவது தளங்களின் மேற்குச் சுவர்களும் சுகாசனத்தில் அமர்ந்துள்ள விஷ்ணு சிற்பங்களைக் கொண்டுள்ளன. இரண்டாவது தளத்திலுள்ள சிற்பம் தொன்மையானது. ஆனால் மூன்றாவது தளத்தில் பழையசிற்பம் அகற்றப்பட்டு சுதையாலான உருவம் வைக்கப்பட்டுள்ளது.



விஷ்ணு – கோயில் III

**விஷ்ணு – கோயில் III**

கோயில் III இன் மேற்குச் சுவரில் உள்ள பின்னொதுக்கத்து கோஷ்டத்தில் கோயில் I இல் உள்ளது போன்று நின்ற நிலையில் விஷ்ணு சிற்பம் உள்ளது. இவ்வுருவம் உயரமான கிரீடமகுடமும், பூ வேலைப்பாடுடைய கேயூரமும், மகரகுண்டலங்களும், முத்துப்பதித்த ஆரமும் அணிந்துள்ளது. இதே கோயிலில் தெற்குச் சுவரில் உள்ள பின்னொதுக்க கோஷ்டத்தில் இரண்டு கரங்களையுடைய நின்ற நிலையிலான வராகமூர்த்தி வடிவம் உள்ளது. அவர் அபயமும் கடிமுத்திரையும் காட்டுகின்றார். நீண்ட கிரீடமகுடம் அணிந்துள்ளார்.[67].

தமிழகக் கோயில்களில் இது போன்ற சிற்பம் காண்பது அரிது. இது வராகமூர்த்தியை (பூவராகர்) மிகவும் உன்னத நிலையில் வைத்திருந்த சாளுக்கியரின் செல்வாக்கின் வழி வந்ததாக இருக்குமோ என்று எண்ணத் தோன்றுகிறது. மூன்றாவது பிரகாரத்தின் மேற்குப்பக்க நாடகச் சட்டத்தில் நான்கு கரங்களில் பொதுவான ஆயுதங்களைக் கொண்ட மகாவிஷ்ணு சிற்பம் உள்ளது. அவருக்கு இருமருங்கிலும் மலர்களைத் தாங்கிக் கொண்டு ஸ்ரீதேவியும் பூதேவியும் பத்மாசனத்தில் அமர்ந்துள்ளனர்.

## நரசிம்மர்

இது சிம்மமும் மனிதனும் சேர்ந்த உடலமைப்பு கொண்ட வடிவமாகும். தொடக்கத்தில் மக்களது குலமரபுக் கடவுளாக வணங்கப்பட்டுப் பின்னாளில் மகாவிஷ்ணுவுடன் இணைக்கப் பட்டிருக்க வேண்டும். தொன்மக் கதைகளின்படி ஏழு உலகங்களுக்கும் தன்னை அதிபதி என்று கூறிக் கொண்டு எதிர்த்தவர்களை எல்லாம் வதைத்த இரண்யகசிபு என்னும் அசுரனை வதம் செய்யவே விஷ்ணு நரசிம்மராக அவதாரமெடுத்தார். அவரது சிற்பவடிவங்கள் யோகாசனத்தில் அமர்ந்த நிலையிலோ (யோக நரசிம்மர்) அல்லது சுகாசனத்திலோ (கேவல நரசிம்மராக (தனித்த நிலையில்) அல்லது தொடைமீது இலட்சுமியைத் தாங்கிய இலட்சுமி நரசிம்மராக அல்லது அசுரனுடன் போர்புரிவது போன்றோ அல்லது வதம் செய்வது போன்றோ (அசுரனின் வயிற்றைக் கிழித்துக் குடலை உருவுவது போல) அமைக்கப்படுகின்றன. தொடக்கத்தில் சொல்லப்பட்ட வடிவங்கள் பல்லவர், முற்காலப் பாண்டியர் காலத்தில் பிரபலமாயிருந்தன. பின்னால் சொல்லப்பட்ட போரிடுதலும்

வதம் செய்தலும் விஜயநகர-நாயக்கர் கால மண்டபத் தூண்களில் அதிகமான அளவில் அமைக்கப்படலாயின.[68] கால்களைச் சுற்றி யோகப்பட்டையுடன் கூடிய யோகநரசிம்மர் சிற்பம், பல்லவ, சோழ, பாண்டியர் கோயில்களின் சாலை கோஷ்டங்களில் அமைக்கப்படுவது பொதுமரபாகக் கொள்ளப்பட்டது. இதற் இராமேசுவரம் விதி விலக்கல்ல.



**இரணியவதம் – மூன்றாம் பிரகாரம்**

இங்கு கோயில்கள் I, II, III இல் உள்ள சாலைகோஷ்டங்களில் நான்கு கரங்களுடன் யோக நரசிம்மர் வைக்கப்பட்டுள்ளார். மேற்கரங்களில் சங்கும் சக்கரமும் உள்ளன. கீழ்க்கரங்கள் யோகபட்டையால் கட்டப்பட்டுள்ள கால்களின் முட்டியின்மீது வைக்கப்பட்டுள்ளன. அவரது முன்னுக்குத் தெரிகின்ற பல்லும் (protruding teeth), கரண்ட மகுடமும், ஆபரணங்களும் சோழர்காலக் கலைக்கூறுகளை வெளிப்படுத்துகின்றன. தனியான யோக நரசிம்மர் சிற்பம் ஒன்று இலட்சுமி நாராயணர் சன்னதியில் உள்ளது. இது கி.பி.11 ஆம் நூற்றாண்டு சோழர்

கோயிலில் உள்ள சிற்பத்தை ஒத்துள்ளது. இது ஆத்தூரைப் போன்று பூ வேலைப்பாடுள்ள கேயூரத்தையும், யக்ஞோபவிதத்தையும், யோக பட்டையையும் அணிந்துள்ளது.[69]

நவீனகாலப் பாணியைக் காட்டும் யோகநரசிம்மர் சிற்பம் ஒன்று இராமநாதர் சன்னதி மகாமண்டபத் தூண் ஒன்றில் உள்ளது. மூன்று கண்களையுடைய நரசிம்மர்[70] கிரீடமகுடம் அணிந்து உட்குடிகாசனத்தில் அமர்ந்துள்ளார். மூன்றாம் பிரகாரத்தில் இரண்யனை நரசிம்மர் வதம் செய்யும் சிற்பங்கள் ஏராளமாகக் காணப்படுகின்றன. பர்வதவர்த்தினி அம்மன் சன்னதியின் கிழக்கு வாசலில் உள்ள தூணில் நரசிம்மர் வெளிவந்து இரண்யனை வதம் செய்கின்றார். இங்கு அவருக்கு ஆறு கரங்கள் உள்ளன. மேற்கரங்கள் சங்கு சக்கரத்தைக் கொண்டுள்ளன. நடுவில் உள்ளவை அசுரனின் வயிற்றைக் கிழித்துக் குடலை உருவுகின்றன. கீழ்க்கரங்களில் ஒன்று இரண்யனின் தலைக்கடியிலும் மற்றொன்று அவனது கால்களைப் பிடித்தும் உள்ளன. அவனது உடல் நரசிம்மரின் மடிமீது கிடக்கின்றது.

திருமாலின் சிம்மமுகம் கோபாவேசத்துடன் பயங்கரத்துடன் உள்ளது. அவருக்கு இரண்டு பக்கங்களிலும் இரண்டு மனித உருவங்கள் காணப்படுகின்றன. அவற்றில் ஒன்று வணங்கிய நிலையில் இருப்பதால் அது பிரகலாதனின் சிற்பமாக இருக்கலாம். தூணின் மேற்பகுதியில் யோக நரசிம்மர் உள்ளார். இவ்விரண்டு சிற்பத் தொகுதிகளும் இரண்யவத நாடகத்தைச் சித்தரிக்கின்றனவோ எனத் தெரிகின்றது. அதாவது நாடகத்தின் அடுத்தடுத்த கட்டங்களாக தூண், அதிலிருந்து வெளிவரும் நரசிம்மர், இரண்யவதம், பிரகலாதன் வணங்குதல், பின்பு இறைவன் அமைதியாக யோகத்தில் அமர்தல் போன்ற காட்சிகள் சித்தரிக்கப்பட்டுள்ளன. இங்கு தூண் இரண்டாக வெடித்துப் பிளப்பது போல் காட்டப்பட்டுள்ளது. இப்பிரகாரத்தின் தெற்குப் பக்கத்தில் உள்ள மற்றொரு தூணிலிருந்து வெளிவரும் நரசிம்மர் இரண்டாகப் பிளந்த தூணின் இரு பக்கத்திலும் கால்வைத்து அமர்ந்துள்ளார். அவரது மடியில் இரண்யன் கிடக்கிறான். பத்துக் கரங்களில் மேலிரு கரங்களில் சங்கு சக்கரம் உள்ளன. இருகரங்கள் இரண்யனை வதம் செய்கின்றன. பிறகரங்கள் ஆயுதங்களை ஏந்தியுள்ளன. இவருக்கு அருகில் மிகச்சிறிய உருவமாக பிரகலாதன் வணங்கிய நிலையில் காணப்படுகின்றான்.

## இராமர் குழு


சீதை


இராமன்


இலக்குவன்


அனுமன்

(10 ஆம் நூற்றாண்டு) (நன்றி : தமிழ்நாடு அரசு தொல்லியல் துறை)

இராமாயணக் காப்பியத்தின் தலைவனான இராமன் தசரதனின் மூத்த மகனும் ரகுவம்சத்தின் தோன்றலுமாவான்.[71] தென்னிந்தியக் கோயில்களில் முற்காலச் சோழர் காலக் கோயில்களில் உள்ள தென்னிந்தியக் கலபாதச் சிற்பங்கள் போன்று சிறு சிற்பங்களாகவோ அல்லது ஆளுயரச் சிற்பங் களாகவோ (அதாவது விஜயநகர-நாயக்கர் மண்டபங்களில் உள்ளது போன்றது) அல்லது அழகர்கோயில், திருவிடைமருதூர் போன்ற கோயில்களில் உள்ளது போன்று சிற்றுரு ஓவியங் களாகவோ இராமனின் வடிவங்கள் சித்தரிக்கப்பட்டுள்ளன. இராமேசுவரம் கோயில் தொன்மக் கதைகளால் இராமயணத்தோடு தொடர்புபடுத்தப்பட்டிருக்கின்ற காரணத் தால் இங்கு இராமாயணச் சிற்பங்கள் காணப்படுவது பொருத்தமான ஒன்றாகும். பொதுவாக இராமன் மனித உருவில் இரண்டு கரங்களுடன் தனது பரிவாரங்கள் சூழ வடிக்கப்படுவது மரபாகும். இக் குழுவில் இலட்சுமணன், சீதை மற்றும் அனுமனும் அடங்குவர்.



இக்கோயிலில் இராமன், சீதை, இலட்சுமணன், அனுமன் ஆகியவர்களின் எழிலான செப்புத் திருமேனிகள் உள்ளன. இராமனும் இலட்சுமணனும் கிரீடமகுடம் அணிந்துள்ளனர். அவர் தம் இடது, வலது கரங்கள் வில்லும், அம்பும் ஏந்துவது போன்று காட்டப்பட்டுள்ளன. சீதையின் இடது கரம் மலர்த்தாங்கும் பாவனையில், வலதுகரம் ஊருமுத்திரையில் உள்ளது. அனுமனின் நெற்றியைச் சுற்றி முத்துப் பதித்த மாலை அணிவிக்கப்பட்டுள்ளது. வீரத்தினைக் காட்டுவதற்காக அவருக்கு சன்னவீரம் அணிவிக்கப்பட்டிருக்கிறது.

உடலின் நளினமும் முகபாவங்களும் முற்காலச் சோழரின் செப்புத் திருமேனிகளை நினைவூட்டுகின்றன. அனுமனின் கரங்கள் சிவலிங்கத்தைத் தாங்கியுள்ளன. இக்கோயில் தலபுராணப்படி அனுமனை இராமன் சிவலிங்கம் கொண்டு வர ஆணையிட்டான் எனக் கூறப்படுகின்றது. இந்தச் சிற்பங்கள் ஒவ்வொன்றும் தனித்தனி பத்மபீடங்களில் அமைக்கப்பட்டுள்ளன. இந்த இராமர்குழு திருமேனிகளை வடக்குப்பனையூர், பருத்தியூர் மற்றும் திருவதிகையிலுள்ள இவ்வகைத் திருமேனிகளோடு ஒப்பிட்டுப் பார்க்கும் போது இவை கி.பி.பத்தாம் நூற்றாண்டைச் சேர்ந்தவை எனக் கொள்ளலாம்.[72] எனவே இத்திருமேனிகளை மதுரையும் ஈழமும் கொண்டு இராமேசுவரத்தில் துலாபாரம் செய்த முதலாம் பராந்தகனின் கொடையெனக் கொள்வது மிகப் பொருத்தமாகும். இம்முடிவு இங்கு இரட்டைக் கோயில்களைக் கட்டியதும் இம்மன்னனே என்ற கருத்துக்கு வலுவூட்டுகிறது[73].

மற்றொரு இராமர்குழு சற்று காலத்தால் பிந்தியதாக அதாவது விஜயநகர-நாயக்கர் காலத்தினைச் சேர்ந்ததாக உள்ளது. இதிலும் இராமனும் இலட்சுமணனும் கிரீடமகுடமணிந்துள்ளனர். சீதையும் அனுமனும் கரண்ட மகுடம் தரித்துள்ளனர். முன்னிருவரின் இடது கரங்கள் வில் ஏந்துவது போல் காட்டப்பட்டுள்ளன. சீதையின் வலதுகரத்தில் மலரும் இடது கரத்தில் லோலஹஸ்தமும் காணப்படுகின்றன. இங்கு அனுமன் இரண்டு தனிச்சிற்பங்களாகக் காட்டப்பட்டுள்ளார். இதில் வலது கோடியில் உள்ளவர் பணிவாகக் காட்சியளிக்கின்றார். மற்றொருவர் தலபுராணத்தினை விளக்கும் வகையில் இரண்டு இலிங்கங்களை ஏந்தியுள்ளார். அக்கால முறைப்படி இத்திருமேனிகள் அனைத்தும் கனமான ஆடையும் எளிமையான ஆபரணங்களும் அணிந்திருப்பதைக் காணலாம்.

மற்றொரு செப்புத்திருமேனிக் குழுவில் இராமனும் சீதையும் பத்மாசனத்தில் அமர்ந்துள்ளனர். கற்பக விருட்சத்தின் கீழ் அமர்ந்துள்ள இராமனின் வலதுகை, சின்முத்திரை(ஞான முத்திரை)யைக் காட்டுகின்றது. இடதுகை கால் முட்டியின் மீது உள்ளது. இங்கு வில்லும் அம்பும் இல்லை. சீதையின் வலது கரத்தில் மலரும் இடது கரத்தில் கனியும் உள்ளன. இராமனின் வலதுபுறம் இலட்சுமணன் சமபங்கத்தில் கைகூப்பியுள்ளார். அவரது வில் கக்கத்தில் உள்ளது. அனுமனும் மற்றவரும் பயபக்தியோடு காணப்படுகின்றனர். இத்திருமேனிகள் நாயக்கர் காலத்தைச் சேர்ந்தவையாகும்.

## இராமலிங்கப் பிரதிஷ்டை



இராமலிங்கப் பிரதிஷ்டை

மூன்றாம் பிரகாரத்தின் வடமேற்கு மூலையில் உள்ள சிறுசன்னதியில் இராமனும் மற்றவர்களும் இக்கோயில் தலபுராணத்தை விளக்கும் வகையில் வடிக்கப்பட்டிருக்கின்றனர். இதில் இராமனும், சீதையும் பிறரும் இலிங்கப் பிரதிஷ்டை

செய்கின்றனர். மணற்கல்லாலான இராமனும் சீதையும் இலிங்கத்தின் இருபக்கமும் அமர்ந்து அதனைத் தொட்டுக் கொண்டுள்ளனர். சீதையின் முழங்கால் பீடத்தின் விளிம்பைத் தொட்டுக் கொண்டிருக்கிறது. இராமனின் இடதுபக்கம் அவனது வில் செங்குத்தாக நிறுத்தி வைக்கப்பட்டுள்ளது. அவனுக்கு அருகில் மரியாதையுடன் இலட்சுமணன் நிற்கின்றான். இதனைக் கண்ணுறும் மற்றவர்கள் அனுமன், விபீடணன் மற்றும் ரிஷிகளாவர். இவர்களால் பிரதிஷ்டை செய்யப்படுகின்ற இலிங்கத்தின் மீது ஐந்துதலை நாகம் உள்ளது. இதையொத்த சிற்பத்தொகுதி மூன்றாம் பிரகாரத்து நாடகச்சட்டத்திலும் உள்ளது. புராணக் கதையோடு தொடர்பு கொண்ட அனுமன் உருவம் ஒன்று உடல் முழுவதும் சிவப்பாக அனுமன் சன்னதியில் வைக்கப்பட்டிருக்கின்றது. இது இராமனால் பிரதிஷ்டை செய்யப்பட்ட இலிங்கத்தை மிகத்துன்பப்பட்டு அனுமன் எடுத்தெறிய முயற்சிப்பது போல் உள்ளது.

## இராமாயணச் சிற்பத்தொகுதிகள்

மூன்றாம் பிரகாரத்தின் நாடகச்சட்டத்தில் ஏராளமான இராமாயணச் சிற்பத்தொகுதிகள் உள்ளன. அவற்றில் குறிப்பிடத்தக்கவை சூர்ப்பணகை இராமனை அணுகுவது, இலட்சுமணன் இந்த அசுரப் பெண்ணின் மூக்கையும் தலைமுடியையும் அறுப்பது, இராவணன் வீணை வாசிப்பது, இராவணன் அசோகவனத்தில் சீதையின் முன்னிற்பது, இராமன் மாரீசன் மீது அம்பு போடுவது, இராவணன் தேரில் சீதையை எடுத்துச் செல்வது, இராமன் சாலை மரங்கள் மீது அம்பெய்வது, வாலி சுக்ரீவனுடைய போர், இராமன் வாலி மீது அம்பெய்தல், அனுமன் இராவணனைச் சந்திப்பது, இராவணனது அவையில் அனுமன் தனது வால்மீது அமர்ந்திருப்பது, அனுமன் இராமனிடம் முறையிடுவது, அனுமனின் தோள்மீது அமர்ந்து கொண்டு இலட்சுமணன் இந்திரஜித்துடன் போரிடுவது, இந்திரஜித் தேரில் நிற்பது, இராவணன் தேரில் இருந்து கொண்டு இராமனுடன் போரிடுவது போன்றவையாகும். கலபாதச் சிற்பங்களில் இராமாயணக் கதைத் தொகுதிகளைச் செதுக்குவது முற்காலச்சோழர் காலத்தில் பெருவழக்காக இருந்ததைப் போன்று நாடகச்சட்டத்தில் இச்சிற்பங்களை வடிப்பது விஜயநகர-நாயக்கர் ஆட்சிக் காலத்தில் சிறப்பிடம் பெற்றது.

## இலட்சுமி நாராயணர்

இலட்சுமிநாராயணர் உருவம் மகாவிஷ்ணுவின் வடிவங்களில் ஒன்றாகும். இதில் மகாவிஷ்ணு ஸ்ரீதேவியுடன்

அமர்ந்திருப்பார். சில நேரங்களில் மகாலட்சுமி அல்லது ஸ்ரீதேவி அவரது தொடையில் அமர்ந்திருப்பது வழக்கமாகும். இராமேசுவரத்தில் இலட்சுமிநாராயணர்சன்னதியின் கருவறையில் மகாவிஷ்ணு மற்றும் அவரது இரு பக்கங்களிலும் ஸ்ரீதேவியும் பூதேவியும் அமர்ந்து உள்ளனர். இவர்களது சிற்பங்கள் பழமையின் கலைக் கூறுகளைக் கொண்டுள்ளன. இங்கு விஷ்ணு சுகாசனத்திலும் தேவியர் மகாராஜலலிதாசனத்திலும் அமர்ந்துள்ளனர். சேதுபதி மண்டபத் தூண்களிலும் விஷ்ணுவின் அவதாரச் சிற்பங்கள் உள்ளன.

## பிரம்மா

உற்பத்தியின் கடவுளான பிரம்மா இந்துசமயத்தின் முப்பெருங் கடவுளருள் ஒருவர். நான்முகன், பிதாமகர், பிரஜாபதி போன்ற பெயர்களைப் பெற்றவர்.[74] அவர் எப்பொழுதும் வயோதிகராய் இல்லாது இளைஞராகவே வடிக்கப்படுவார். தமிழகத்தில் பிரம்மா கருவறையின் வடக்கு தேவகோஷ்டத்திலும் அதேபக்கமுள்ள மேல்த்தள சாலை கோஷ்டங்களிலும், கிரீவ கோஷ்டங்களிலும் அமர்ந்த நிலையிலோ அல்லது புள்ளமங்கையில் உள்ளது போன்று நின்றநிலையிலோ வடிக்கப்படுவது வழக்கமாகும்.

இராமேசுவரத்தில் கோயில் I இல் வடக்குச்சுவர் பத்ரத்தில் உள்ள தேவ கோஷ்டத்தில் பிரம்மா சமபாதத்தில் நின்று கொண்டிருக்கின்றார். இக்கோயில் வளாகத்தில் உள்ள தொன்மையான சிற்பங்களில் இதுவும் ஒன்றாகும். இங்கு பிரம்மாவுக்கு இருபுறமும், தேவகோஷ்டத்தின் வெளிச்சுவர்களில் ஆறு ரிஷிகள் உள்ளனர். இது முற்காலச் சோழர்கலையை நினைவுபடுத்துவதாக உள்ளது. இரட்டைக் கோயில்களிலும் பிரம்மா நின்ற நிலையில் ருத்ராட்ச மாலை, கமண்டலம் ஆகியவற்றைத் தாங்கி அபய கடிஹஸ்தம் காட்டி உள்ளார். அவர் சடைமகுடம், யக்ஞோபவிதம் மற்றும் உதரபந்தம் தரித்துள்ளார். அவரது சதுரமுகமும், உடையில் தொங்கும் குஞ்சமும் இது சோழர் சிற்பமே என்பதை எடுத்தியம்புகிறது. சோழர் சிற்பங்களின் மீதுள்ள குடைக்குப் பதிலாக இவரது தலைக்கு மேலாக தாமரைப் பதக்கம் காணப்படுகிறது. இராமநாதர் சன்னதியின் வடக்குச் சுவர் தேவகோஷ்டத்தில் பிற்காலத்திய பிரம்மாவின் சிற்பம் உள்ளது. இங்குள்ள அனைத்து சன்னதிகளிலும் மேல்தள சாலைகோஷ்டங்களில் பொதுவான கலைப்பாணியுடன் அமர்ந்தநிலையில் பிரம்மா உள்ளார்.

கணபதி



கணபதி – 10 ஆம் நூற்றாண்டு
(நன்றி : தமிழ்நாடு அரசு தொல்லியல் துறை)

இன்னல்களை நீக்கும் கணபதி சிவகணங்களில் தலைமையானவராவார். இவர் விக்னேசுவரர், கணேசர், விநாயகர், பிள்ளையார் என்று பல பெயர்களாலும் அழைக்கப்படுகின்றார். புராணக் கதைகளின்படி இவர் சிவன், பார்வதியின் மகனாகக் கருதப்படுகின்றார்.[75] இவரது சிற்பங்கள் நின்றநிலை, அமர்ந்தநிலை மற்றும் நாட்டியமாடும் நிலைகளில் வடிக்கப்படும்.[76] இவரை வணங்கும் வழக்கமானது தொன்மையான காலத்திலிருந்து நடைபெற்று வருவதாகும். இவரது உருவத்தின் தொடக்கம் அமராவதியின் சிற்பவேலியில் உள்ள யானைமுகம் கொண்ட இயக்கனின் (yaksha) உருவத்திலிருந்து வந்தது எனத் தெரிகின்றது.[77] கி.மு. மூன்றாம் நூற்றாண்டில் அசோகரின் மகள் நேபாளத்தில் கணேசருக்குக் கோயில் எடுப்பித்ததாக நம்பப்படுகிறது.[78] தமிழகத்தில் இவரது வழிபாடு கி.பி. ஏழாம் நூற்றாண்டில்தான் வெளிப்படுகின்றது. பல்லவ, சோழ மற்றும் அதற்கு சற்றுப் பிந்தைய கால கணபதி சிற்பங்களை வேறுபடுத்திக் காட்டுவது கணபதியின் துதிக்கையின் நீளத்தை பொருத்ததாகும். இதில் துதிக்கை செங்குத்தாக கீழே சென்று இடது உள்ளங்கையில் உள்ள மோதகத்தைத் தொடுவது போல் அமைக்கப்படுவது மரபு.[79]

இராமேசுவரம் கோயிலில் உள்ள கணபதி சிற்பங்களில் குறிப்பிடத் தக்கவை சதுர்புஜ (நான்கு கரங்களையுடைய) வலம்புரி கணபதி, இலட்சுமி கணபதி, நிருத்த கணபதி, மூன்று, நான்கு மற்றும் ஐந்து முகங்களையுடைய கணபதி ஆகியவையாகும்.

இக்கோயிலில் உள்ள கணபதி செப்புத்திருமேனி குறிப்பிடத்தக்க ஒன்றாகும். நின்றநிலையில் நான்கு கரங்களையுடைய இவரது துதிக்கை வலதுபக்கம் திரும்பியுள்ளது. வலது மேல்கை உடைந்த தந்தத்தைக் கொண்டுள்ளது. இடது கையில் இருக்கும் பொருள் உடைந்துள்ளது. வலது கீழ்க்கையில் மோதகம் இருக்கின்றது. அதன்மீது துதிக்கை வைக்கப்பட்டு உள்ளது. இடதுகை அங்குசத்தைத் தாங்கியுள்ளது. இவர் தலையில் கிரீட மகுடம் அணிந்துள்ளார். கால்கள், கரங்கள், துதிக்கை, கிரீடம் ஆகிய அனைத்தும் எழிலாக அமைந்துள்ளன. இதன் சிற்பவமைதி டக்ளஸ் பாரட்டின் முற்காலச்சோழர் செப்புத்திருமேனிகள் (Early Chola Bronzes)[80] என்ற நூலில் விளக்கப்பட்டாகக் கொடுக்கப்பட்டுள்ள கோனேரிராஜபுரம் கணபதியை விட காலத்தால் சற்று முந்தியதாகும். எனவே இது கி.பி.பத்தாம் நூற்றாண்டை அதாவது முதலாம் பராந்தகனின் காலத்தைச் சேர்ந்ததாகும்.[81]

## இலட்சுமிகணபதி

*இரண்டாவது பிரகாரத்தின் கிழக்கு நுழைவாயிலில் இலட்சுமிகணபதி சிற்பம் உள்ளது. இங்கு கணபதி தனது வலதுகாலைச் சற்று தூக்கிப் பீடத்தின் மேல் வைத்துள்ளார். தேவியானவள் அவரது இடது தொடையில் அமர்ந்துள்ளாள். தேவியின் ஒரு கரத்தில் தாமரை உள்ளது. மற்றொரு கரத்தில் இருக்கும் பொருள் சரியாகத் தெரியவில்லை. கிரீடமகுடம் அணிந்துள்ளாள். பத்துக் கரங்களையுடைய கணபதி சக்கரம்,[82], தாமரை, கனி ஆகியவற்றைக் கொண்டுள்ளார். ஒரு கை தேவியின் மீது உள்ளது. மற்ற கரங்களில் உள்ள ஆயுதங்கள் சரிவர அடையாளம் காணும் நிலையில் இல்லை. இவரது துதிக்கை இடப்பக்கம் திரும்பி கனி ஒன்றைக் கொண்டுள்ளது. மூன்றாம் பிரகாரத்தின் மேற்குப் பக்கத்திலும் இலட்சுமி கணபதி சிற்பம் காணப்படுகின்றது.*

## நிருத்தகணபதி

*மூன்றாம் பிரகாரத்தின் வடக்குப் பக்கத்தில் நிருத்தகணபதி சிற்பம் (நாட்டியமாடும் கணபதி) உள்ளது. அவரது வலதுகால் குஞ்சிதத்தில் சற்று மடக்கப்பட்டிருக்கிறது. கிரீடமகுடமும் ஆபரணங்களும் அணிந்துள்ளார். நான்கு கரங்களில் மழு, பாசக்கயிறு, மற்றும் சிம்மகர்ண முத்திரையைக் காணமுடிகின்றது. பீதாம்பரம் அணிந்துள்ளார். அது அவரது கால்களுக்கிடையில் தொங்கி வனப்பூட்டுகின்றது.*

## சுப்பிரமணியர்

*சுப்பிரமணியர் (வடக்கே கார்த்திகேயன்) தொடக்கத்தில் ஒரு போர்க் கடவுளாவார். இவர் ஆட்டுத்தலையுடைய சுரா என்ற ஒரு அசுரனை அழிப்பதற்காக தோன்றியவர். சுப்பிரமணியர் பற்றிய தொன்மையான செய்தி குமரன் என்ற பெயரில் காளிதாசரின் குமாரசம்பவத்தில் வருகின்றது. வட இந்திய போர்க்கடவுள் பின்னாளில் தமிழகத்துத் தொன்மையான போர்க்கடவுளான முருகனோடு இணைக்கப் பட்டார். புராணகாலத்தில் இவர் வேதக் கடவுளான இந்திரனின் இயற்பண்புகளை எடுத்துக் கொண்டார். இதனால் வேதத்தில் சுப்பிரமணியர் என்றழைக்கப் பட்ட இந்திரனின் பெயர் குமரனுக்கு வந்துவிட்டது. காளிதாசரின் கருத்துப்படி சிவன் மற்றும் பார்வதியின் மகனாகவே இக்கடவுள் தமிழகத்துக் கோயில்களிலெல்லாம்*

சிற்பவடிவில் காட்டப்பட்டுள்ளார். சிவன் கோயில்களில் வடமேற்கு மூலையில் ஒரு சிறு சன்னதியிலோ அல்லது கருவறையின் கோஷ்டத்திலோ அல்லது தனித்தோ இவரது உருவங்கள் அமைக்கப்படுவது மரபாகும்.

இராமேசுவரத்தில் கோயில் I இல் தென்மேற்குக் கர்ணகோஷ்டத்தில் எழில்மிக்க சோழர்காலச் சுப்பிரமணியர் சிற்பம் உள்ளது. காதுகளில் கனமான குண்டலங்களும் பொதுவாக அமைக்கப்பட வேண்டிய கிரீடமகுடத்திற்குப் பதிலாக கரண்டமகுடமும், அகன்ற முத்துப் பதித்த ஆரமும், யக்ஞோபவிதம், உதரபந்தம், கேயூரம், சன்னவீரம் மற்றும் அரைக் கச்சையிலிருந்து அழகுறத் தொங்கும் குஞ்சம் ஆகிய அணிகலன்கள் சிறப்பாகக் காட்டப்பட்டுள்ளன. இறைவனின் மேலிரு கரங்களில் சக்தி என்னும் சூலமும், வஜ்ராயுதமும் உள்ளன. கீழ்க்கரங்கள் அபய கடிஹஸ்தங்களைக் குறிக்கின்றன.



**சுப்பிரமணியர் – கோயில் I**

சுப்பிரமணியரின் செப்புத்திருமேனி ஒன்று இங்குள்ளது. பிற்காலத்தைச் சேர்ந்த இச்சிற்பத்தில் இறைவனது வலதுகால் சிறிது நளினமாக வளைந்துள்ளது. இடைப்பகுதியிலும் வளைந்து உடல் இடதுபக்கமாகக் சாய்ந்துள்ளது. கிரீட மகுடமும் ஆரமும் காதுவளையங்களும் மிளிர்கின்றன. நான்குகரங்கள் பொதுவான ஆயுதங்களையும் முத்திரைகளையும் காட்டுகின்றன.

## சக்தி வடிவங்கள்

சக்தி வழிபாடு அல்லது அன்னை வழிபாடு என்பது உலகம் முழுவதிலும் மிகத் தொன்மை வாய்ந்த ஒன்றாகும். தெய்வம் என்ற ஒன்று உண்டென்று நேரடியாகக் கண்டுகளிக்க முடியாத நிலையிலிருந்த தொன்மை மனிதன் தாய்மையின் உன்னத நிலையைக் கண்டு வியந்தான். அதன் காரணமாக தாயைத் தெய்வமாக வணங்கத் தலைப்பட்டான். இந்தியாவில் சிந்துசமவெளி நாகரிகம் விளங்கி வந்த இடங்களில் தாய்த்தெய்வ வழிபாட்டுச் சின்னங்கள் கண்டெடுக்கப்பட்டுள்ளன. அக்காலத்திற்கு முந்தியே இந்த வழிபாடு பிரபலமாக இருந்திருக்க வேண்டும். வேத இலக்கியங்களில் தாய்த் தெய்வங்கள் பற்றிய ஏராளமான செய்திகள் உள்ளன. இந்து மதத்தைத் தவிர, வேறெந்த சமயமரபும் தொய்வற்ற தொடர்ச்சியான தாய்த்தெய்வ வழிபாட்டு முறையைக் கொண்டிருக்கவில்லை என்று கருதுகின்றனர்[83]. பௌத்த, சமண, இந்து கோயில்களில் பெண் தெய்வங்களுக்குச் சிற்பம் வடிப்பதில் முக்கியத்துவம் கொடுக்கப்பட்டிருப்பதைக் காணலாம். இராமேசுவரம் கோயில் இதற்கு விதிவிலக்கல்ல. இங்கு துர்க்கை, அஷ்டலட்சுமி சிற்பத் தொகுதி, காளி, மகிஷமர்த்தினி, சப்தமாதர்கள், இராஜராஜேஸ்வரி, இன்ன பிற பெண்தெய்வங்கள் தொடர்பான சிற்பங்கள் உள்ளன.

### துர்க்கை

தமிழகத்துக் கலை வரலாற்றில் துர்க்கையின் சிற்பங்கள் இடம்பெற்ற காலம் மிகவும் தொன்மையானதாகும். சங்ககாலத் தமிழ் இலக்கியங்களில் பாய்கலைப்பாவையாக இவள் சித்தரிக்கப்பட்டுள்ளாள். தமிழகத்தில் நமக்குக் கிடைக்கின்ற இவளது சிற்பங்களில் தொன்மையானது பல்லவர்காலத்துச் சிற்பங்களாகும். இராமேசுவரத்தில் உள்ள பழமையான துர்க்கை சிற்பம் கோயில் II இன் தென்மேற்கு கர்ணகோஷ்டத்தில் காணப்படுகின்றது. இது சமகாலச்சோழர் சிற்பங்களை

நினைவூட்டுகின்றது. மேலிரு கரங்களில் சங்கு சக்கரம் தாங்கி கீழிரு கரங்களில் வரதம் மற்றும் கடி முத்திரைகள் காட்டி நிற்கின்றது. அம்மன் சன்னதிக்கு முன்புள்ள சுக்கிரவார மண்டபத்தில் விஜயநகர- நாயக்கர் காலத்தைச் சேர்ந்த மற்றுமோர் துர்க்கைச் சிலை உள்ளது. நான்கு கரங்களையுடைய இந்த அம்மன் சிலை எண்ணைக் காப்பால் மூடப்பட்டிருக்கிறது. இதன் மேலிரு கரங்களில் சங்கு சக்கரம் உள்ளது. கீழ் வலக்கரம் அபய முத்திரை காட்டுகின்றது. இடது கரத்தில் இருப்பது சரியாகத் தெரியவில்லை. இதே காலத்தைச் சேர்ந்த துர்க்கை செப்புத்திருமேனி ஒன்றும் இங்குள்ளது. எட்டுக் கரங்களுடன் அம்மன் எருமைத்தலை மீது நின்றுள்ளாள்.[84] கைகளில் சக்கரம், வாள், சிம்மகர்ண முத்திரை, ஞான முத்திரை, சங்கு, கேடயம், கடகமுத்திரை மற்றும் மீண்டும் சிம்மகர்ண முத்திரை காட்டப்பட்டுகின்றன.

## காளி

காரணாகமத்தில் துர்க்கையின் கோபமான வடிவமே காளி என்று கூறப்பட்டுள்ளது. இங்கு சுக்கிரவார மண்டபத்தில் ஒரு தூணில் திரிசூலத்தை எரிவது போன்று காளி நின்றிருக்கின்றாள். இவளது மற்ற கரங்களில் நாகம், உடுக்கை, கபாலம் ஆகியவை உள்ளன. கபாலமாலை அணிந்துள்ளாள். இதே மண்டபத்தில் உள்ள மற்றொரு தூணில் எட்டுக் கரங்களையுடைய காளியின் சிலை உள்ளது. மகாமண்டபத் தூண் ஒன்றில் காளிதேவி அசுரன் ஒருவனை வதம் செய்கின்றாள். அவளது தலையில் சடைபாரம் காணப்படுகிறது. அவளது வலதுகால் அசுரனை மிதிப்பது போல் காணப்படுகிறது. அவளது கரங்களில் திரிசூலம், மழு, தாமரை மற்றும் அசுரனின் தலை ஆகியவை உள்ளன. அம்மன் சன்னதி கிழக்கு வாயிலில் வெடித்துப் பிளக்கும் தூணின் இரு பக்கத்திலும் கால் வைத்துக் கம்பீரமாக நிற்கும் காளிதேவியைக் காணலாம். அவளது தலையில் தீப்பிளம்பு (ஜ்வாலை) காணப்படுகிறது. எட்டுக்கரங்கள் உள்ளன. ஒருகரம் ஒரு அசுரனின் கழுத்தை இறுக்குகின்றது; மற்றொன்றில் மணி உள்ளது. இருகரங்கள் அடி வயிற்றை நோக்கி குவிந்துள்ளன. சமன்படுத்தும் முகத்தான் இருகரங்கள் தூணின் மேற்பரப்பைத் தாங்கியுள்ளன. மற்ற இருகரங்களில் உள்ள ஆயுதங்களை அடையாளம் காண இயலவில்லை.

## மகிஷமர்த்தினி

எருமைத் தலையுடைய அசுரனை மகிஷன் வதம் செய்யும் மகிஷமர்த்தினி, துர்க்கையின் போர் செய்யும் வடிவமாவாள். தமிழகக் கலைஞர்கள் இவ்வம்மையின் சிற்பங்களைச் செதுக்குவதில் பேரார்வம் கொண்டிருந்தனர் என்பது சிற்பங்களின் வனப்பிலிருந்தே யூகிக்க முடிகிறது. தமிழகத்தில் மகிஷமர்த்தினியின் தொன்மையான புடைப்புச் சிற்பம் மாமல்லபுரத்தில் மகிஷமர்த்தினி மண்டபத்தில் காண்போரை வியக்கும் வண்ணம் அமைந்துள்ளது. இது இயல்பாகப் போர் நடந்து கொண்டிருப்பதைக் காண்பதுபோல் இயக்க நிலையில் சித்தரிக்கப்பட்டுள்ளது. சிற்ப சாத்திரங்களில் இவ்வம்மையின் சக்தியைக் கூட்டும் வகையில் பலகரங்கள் சொல்லப்பட்டு உள்ளன.



**மகிஷமர்த்தினி – முதல் பிரகாரம்**

இராமேசுவரத்தில் உள்ள மகிஷமர்த்தினி சிற்பத் தொகுதிகளில் அன்னை எட்டுக்கரங்களைப் பெற்றுள்ளாள். வலது கரங்களில் வாள், அம்பு, சக்கரம், திரிசூலம் ஆகியவையும் இடது கரங்களில் கேடயம், சங்கு, வில் மற்றும் (எருமையிலிருந்து வெளிவரும்) அசுரனின் தலை ஆகியவையும் உள்ளன. அன்னையின் வலதுகால் மடக்கப்பட்டு சிம்ம வாகனத்தின் மேல் வைக்கப்பட்டுள்ளது. தேவி திரிசூலத்தால் எருமையைத் தாக்குகின்றாள். வீழும் நிலையிலுள்ள எருமையிலிருந்து மகிஷன் வெளிப்படுகிறான். எருமையின் உடலில் அன்னையால் வீசப்பட்ட சக்கரம் உள்ளது. மாமல்லபுரத்துச் சிற்பத்தொகுதி அளவிற்கு இல்லாவிடினும் இங்கு இயக்கநிலை மிகச்சிறப்பாகக் காட்டப்பட்டிருப்பதில் 'ஐயமில்லை. இச்சிற்பத்தில் அன்னை அசுரனின் தலையைப் பிடித்திருக்கும் பாங்கு வட இந்திய மற்றும் தக்காணச் சிற்பங்களின் தாக்கத்தை உணர்த்துகின்றது.

## சப்தமாதர்கள்

சப்தமாதர்கள் என்னும் ஏழு பெண் தெய்வங்கள் பிரம்மா, மகேஸ்வரர், குமரன், விஷ்ணு, வராஹர், இந்திரன், யமன் ஆகியோரின் பெண் சக்திகள் என்று புராணங்களில் கூறப்பட்டுள்ளன. இவர்கள் அந்தகாசுரனை வதம் செய்வதற்காக உருவாக்கப்பட்டவர்கள். அசுரனின் உடலில் இருந்து சிந்திய இரத்தத்துளிகளைச் சிதறவிடாமல் குடித்து அவனைக் கொன்றனர் எனத் தொன்மக் கதைகள் கூறுகின்றன. இம்மாதர்கள் குறியீட்டளவில் எட்டுவிதப் பண்புகளைக் கொண்டுள்ளனர். அவையாவன காமம் அல்லது இச்சை (யோகேஸ்வரி), குரோதம் அல்லது கோபம் (மாகேசுவரி), லோபம் அல்லது பேராவல் (வைஷ்ணவி) மதம் அல்லது ஆணவம் (பிராம்மி), மோகம் அல்லது மாயை (கௌமாரி), மாத்சர்யம் அல்லது குற்றங்காணல் (இந்திராணி), பைசூன்யதலம் அல்லது ஆர்ப்பரித்தல் (சாமுண்டா) மற்றும் அசூயை அல்லது எரிச்சல் (வாராஹி)[85] ஆகும்.

தமிழகத்தில் பழமையான சப்தமாதர் சிற்பங்கள் மாமல்லபுரத்தில் உள்ளன. அவற்றை அமைக்கும் மரபு கி.பி. பதினொன்றாம் நூற்றாண்டுக்குப் பின்பு வழக்கொழிந்து விட்டதாகத் தெரிகின்றது[86]. இருப்பினும் இம்மரபு பிற்காலத்திலும் ஆங்காங்கே நடைமுறைப் படுத்தப்பட்டுள்ளது என்பதற்கு உதாரணமாக இராமேசுவரத்தில் பிற்காலத்திய சப்தமாதர் சிற்பங்கள் உள்ளன. அவற்றை அம்மன் சன்னதிக்குப்

பின்னால் காணமுடிகிறது. பொதுவாகச் சன்னதிக்குத் தெற்குப்புறத்தில் வைக்கப்பட வேண்டிய அவர்கள் இங்கு இடம்மாறி லலிதாசனத்தில் அமர்ந்துள்ளனர். சிந்துசமவெளி முத்திரைகளில் மரத்தின் அடியில் நிற்க வைக்கப்பட்டிருப்பது போல் இங்கு மரத்தடியில் அமர்த்தப்படவில்லை. இவை தவிர சுக்கிரவார மண்டபத்தின் தூண்களில் சப்தமாதர்களில் சிலருடைய சிலைகள் தனித்தனியாக உள்ளன. அவர்கள் அனைவரும் நான்கு சுரங்களுடனும், மேலிரு கரங்களில் அவர்களுடன் தொடர்புடைய ஆண் தெய்வங்களின் ஆயுதங்களையும் கீழிரு கரங்களில் அபய, வரத முத்திரைகளையும் கொண்டுள்ளனர்.

## இராஜராஜேசுவரி

பிரபஞ்சத்தின் தன்னிகரற்ற ஆட்சியாளரே இராஜராஜேசுவரி என்று சக்தி வழிபாட்டாளர்கள் கருதுகின்றனர். எப்படி சைவர்களுக்கு சிவபெருமான் பரமேசுவரனோ, எப்படி வைணவர்களுக்கு மகாவிஷ்ணு பரவாசுதேவனோ அதுபோன்றே அன்னையே சாக்தர்களுக்கு இராஜராஜேசுவரியாகின்றாள். சாக்த தத்துவப்படி இவள் இந்துசமய மும்மூர்த்திகள் உட்பட்ட எவருக்கும் மனைவியானவள் அல்ல. மாறாக அனைவருக்கும் தாயாவாள். ஆனால் சைவசமயத்தில் பார்வதியின் வடிவமாக சிவபிரானின் மனைவியாக காட்டப்படுகின்றாள். இங்கு சுக்கிர வார மண்டபத்தில் உள்ள தூண் ஒன்றில் இராஜராஜேசுவரியின் சிற்பத்தைக் காணலாம். கிரீடமகுடம் அணிந்து கரங்களில் மழு, பாசக்கயிறு, தாமரை, கரும்பு ஆகியவற்றைக் கொண்டுள்ளாள்.[87] இதே மண்டபத்தில் மற்றொரு தூணில் இவ்வன்னையின் மற்றொரு வடிவமான புவனங்களை ஆளும் புவனேசுவரியின் சிற்பம் உள்ளது. இவளது கைகளில் மழுவும் பாசக்கயிறும் உள்ளன. இதனையொத்த சிற்பம் பரமேசுவரமங்கலத்தில் காணப்படுகின்றது. [88]

## அஷ்டலட்சுமி

இலட்சுமி செல்வத்தின் அதிபதியாவாள். அவள் , திருமகள், பத்மம், கமலம் என்று பல பெயர்களால் அழைக்கப்படுகின்றாள். சிற்பவமைதியின் அடிப்படையில் நோக்கும் போது அவள் தொடக்கத்தில் பௌத்த பெண் தெய்வமாக இருந்திருக்கிறாள். பார்கூத், புத்தகயா மற்றும் சாஞ்சி (கி.மு. இரண்டாம் நூற்றாண்டு) யிலுள்ள பௌத்த சிற்பங்களில் இவ்அன்னையைக் காணலாம்.[89]

சிற்ப சாத்திரங்கள் அஷ்டலட்சுமி என்னும் எட்டு வடிவங்கள் பற்றிக் கூறுகின்றன. பத்மம், மகாபத்மம், மகரம், கச்சபம், முகுடம், நீல அனந்தம், மற்றும் சங்கம் என்னும் எட்டுச் செல்வங்களின் தெய்வமே இலட்சுமி என்று மார்க்கண்டேயபுராணம் கூறுகின்றது.[90] அஷ்டலட்சுமி எட்டுவித செல்வங்களைக் குறிப்பவள் என்பதையே இது சுட்டுகிறது. கோயில்களில் அஷ்டலட்சுமிகளை அமைப்பது கோயிலுக்கும் காண்போருக்கும் வளம் சேர்ப்பதாக நம்புகின்றனர். இராமேசுவரத்தில் சுக்கிரவார மண்டபத்தில் உள்ள அஷ்டலட்சுமி சிற்பத்தொகுதியில் ஆதிலட்சுமி, சந்தானலட்சுமி, கஜலட்சுமி, தனலட்சுமி, தான்யலட்சுமி, ஜெயலட்சுமி, ஐஸ்வர்யலட்சுமி மற்றும் வீரலட்சுமி ஆகியோரின் வடிவங்கள் உள்ளன. முதல் நான்கு மற்றும் ஏழாவது இலட்சுமி சிற்பங்கள் நான்கு கரங்களையுடையன. மற்ற மூன்றும் எட்டுக் கரங்களைக் கொண்டிருக்கின்றன. அவர்களுடைய பொதுவான சின்னங்கள் தவிர அனைவருமே அபய வரத முத்திரைகள் காட்டுகின்றனர்.

## குதிரைச்சொக்கர்

குதிரைச்சொக்கர் என அழைக்கப்படும் செப்புத் திருமேனி ஒன்றும் இங்குள்ளது. சொக்கர் என்பது பொதுவாக சொக்கநாதர்[91] என்னும் சிவனது பெயரையே குறிக்கும். இங்கு சிவபெருமான் குதிரையின் மீது அமர்ந்துள்ளதால் குதிரைச் சொக்கர் என அழைக்கப்படுகிறார். இத்திருமேனி சேதுபதி மன்னர்களில் ஒருவரான விஜயரகுநாதசேதுபதி (கி.பி.1711-25) யினுடையது என்ற ஒரு கருத்தும் நிலவி வருகின்றது[92]. சேதுபதி மன்னர்கள் இராமேசுவரம் வராத காலத்தில் இச்சிற்பமே பள்ளியறையின் போது சுவாமியுடன் வலம் வருவது வழக்கமாகப் பின்பற்றப்பட்டு வரும் நியதியாக இருந்துள்ளது[93]. தற்போது இவ்வுருவம் பூசையின் போது எடுத்துச் செல்லப்படுவதில்லை.

இது ஐயனாருடைய உருவமைதியாக இருக்கலாம் என்ற மற்றொரு கருத்தும் நிலவுகிறது[94]. அய்யனார், ஹரிஹரபுத்திரன் அல்லது மகாசாஸ்தா என்று பெயர் பெற்றுள்ள காரணத்தால், சிவபெருமானுக்கும் மகாவிஷ்ணுவிற்கும் மகனாய் அவதரித்ததாகக் கருதப்படுகின்றது[95]. அய்யனார் ஒரு கிராம தெய்வம் ஆவார். அவர் குளக்கரைகளிலோ ஆற்றங்கரைகளிலோ சிற்பமாக வைக்கப்படுவது வழக்கம். அவரது உருவத்திற்கு முன்னால் மரத்தாலான அல்லது சுதையாலான குதிரைகள், யானைகள் மற்றும் பிற மிருகங்களின் உருவங்கள் வைக்கப்படும். மக்கள் அவரைக் கிராமக்காவல் தெய்வமாகவே கருதுகின்றனர். இங்கு பள்ளியறை பூசையின் போது இத்திருமேனி காவலாக உடன் சென்றிருக்க வாய்ப்புள்ளது. ஆனால் இதனை

விஜயரகுநாத சேதுபதியின் உருவம் என்று ஏற்கத்தகுந்த ஆதாரம் இல்லை. இதுபோன்ற கற்சிலை ஒன்று நாயக்கர் காலத்தில் கட்டப்பட்ட பேரூர் கோயில் மண்டபத்தூண் ஒன்றிலும் காணப்படுகின்றது.

## சேதுபதி மன்னர்களின் சிற்பங்கள்

பதினேழாம் நூற்றாண்டின் சிற்பக்கலை வளர்ச்சியில் ஒரு குறிப்பிடத்தக்க சாதனையாவது அரசன் அரசி மற்றும் பிறரது ஆளுயரச் சிற்பங்கள் வடிக்கப்பட்டதாகும். கோயில்களுக்குத் திருப்பணி செய்தவர், நிவந்தங்கள் அளித்தோர் ஆகியோரின் சிற்பங்கள், கோயில் மண்டபங்களிலும் பிரகாரங்களிலும் உள்ள தூண்களில் நடைபாதையை நோக்கியவாறு அமைக்கப்பட்டன[96]. இராமேசுவரத்தில் சேதுபதி மன்னர்கள், அவர்களது அமைச்சர்கள் ஆகியோர் உருவங்கள் சுக்கிரவார மண்டபத்திலும் கல்யாண மண்டபத்திலும் காணப்படுகின்றன. சேதுபதி கடம்பத் தேவர் (பிரதானி) உருவங்கள் சுக்கிரவார மண்டபத்தில் உள்ளன. திருமலைசேதுபதி மற்றும் அவர் மகன் இரகுநாதசேதுபதியின் உருவங்களை அம்மன் சன்னதியில் தெற்கு நுழைவாயிலில் காணலாம். முத்துராமலிங்க சேதுபதி (கி.பி.1725 - 1770) அவரது அமைச்சர்கள் முத்திருளப்பபிள்ளை, கிருஷ்ண ஐயங்கார் ஆகியோர் சிலைகளையும் இப்பகுதியில் வடித்துள்ளனர். மகாஹிரண்ய கர்ப்பயாஜி விஜயரகுநாத கட்டத்தேவர் (1730 – 35), செல்லமுத்து விஜயரகுநாத சேதுபதி (கி.பி.1749 – 62), விஜயரகுநாத ராமசாமி சேதுபதி (கி.பி.1820 – 30) மற்றும் முத்துராமலிங்க ராஜேசுவர சேதுபதி (1889 – 1928) ஆகியோர் உருவச்சிலைகள் கல்யாண மண்டபத்தில் உள்ளன. சேதுபதி மண்டபத்தில் ராஜா பாஸ்கர சேதுபதியின் (1873 – 1903) சிலை இருக்கின்றது. மூன்றாம் பிரகாரத்தில் சபாபதி சன்னதிக்கருகிலும் இச்சன்னதியைக் கட்டியதாகக் கருதப்படும் தளவாய் சேதுபதியின் சிலை உள்ளது.

மேற்கூறப்பட்ட சேதுபதிகள் மற்றும் அவர்களது அமைச்சர்களின் சிற்பங்கள் அனைத்தும் ஆளுயர வடிவமானவை. அவற்றின் மீது வண்ணம் பூசப்பட்டுள்ளது. இங்குள்ள இச்சிற்பங்கள் மதுரை மீனாட்சி சுந்தரேசுவரர் கோயிலுக்கு முன்புள்ள புதுமண்டபத்தில் அமைந்திருக்கும் நாயக்க மன்னர்களின் உருவச்சிலைகளை ஒத்து அமைந்துள்ளன. இவையனைத்தும் வணங்கிய நிலையில் உள்ளன. சேதுபதி மன்னர்கள் நீண்ட பெரிய மீசையையும் கனத்த உடலையும் கொண்டுள்ளனர். இவர்கள் அனைவருக்குமே பொதுவான ஒருஅமைப்பு கனத்த தொப்பையாகும். இச்சேதுபதிகளும் அவரது அமைச்சர்களும் மறவர் குலத்தைச் சேர்ந்தவராவர். கனத்த தொப்பையானது வளமையான வாழ்வைக் குறிப்பதாக

உள்ளது. விஜயரகுநாத ராமசாமி சேதுபதி ஐரோப்பிய ஆடை அணிந்துள்ளார். மற்ற அனைவரும் இம்மண்ணுக்குரிய வேட்டி அணிந்துள்ளனர். தலையில் தலைப்பாகையும், அரைக்கச்சையில் கத்தியும் உள்ளன.

கிருஷ்ணாபுரம், தென்காசி, ஸ்ரீவில்லிபுத்தூர் மற்றும் மதுரை கோயில்களின் 17, 18 ஆம் நூற்றாண்டு மண்டபங்களில் உள்ளது போன்று இராமேசுவரத்து சேதுபதி மண்டபத்திலும் குறவன் குறத்திகளின் உருவச் சிலைகள் காணப்படுகின்றன. இந்தக் கோயில்கள் அனைத்திலுமே உள்ள இவ்வகைச் சிலைகள் அமைப்பில் ஒரேமாதிரியானவை. ஆனால் முருகியல் அடிப்படையில் கிருஷ்ணாபுரம், தென்காசி, மதுரை சிற்பங்கள் அக்காலத்து அழகமைதியோடு உள்ளன. ஆனால் இராமேசுவரத்தில் உள்ள குறவன்-குறத்தியர் அழகாகக் காணப்படவில்லை. இதற்குக் காரணம் அவற்றின் மீது சுதை பூசப்பட்டுள்ளதேயாகும்.

## தூண்களில் உள்ள சிறுசிற்பங்கள்

விஜயநகர-நாயக்கர்காலத் தூண்கள் சிற்ப அரங்குகளாகக் கருதப்படுகின்றன. அவற்றில் சமயம், அக்காலச் சமுதாயம், தொடர்பான மற்றும் விலங்குகளின் சிற்பங்களைக் காணலாம். இவற்றை அவர்களது மண்டபங்களிலும், பிரகாரங்களிலும் காணமுடிகின்றது. இராமேசுவரக்கோயில் தூண்களிலும் இச்சிறு சிற்பங்கள் வடிக்கப்பட்டுள்ளன. இங்கு காணப்படும் சமயம் தொடர்பான சிற்பங்கள், கிருஷ்ணரின் காளியநர்த்தனம், யோக நரசிம்மர், பிச்சாடனர், இலிங்க வழிபாடு, இராமாயணக் கதைகள், விஷ்ணு அவதாரங்கள், பக்திமயமான அனுமன் போன்றவையாகும். முதலாவது பிரகாரத் தூண்களில் யோகிகளும், தவசிகளும் வடிக்கப்பட்டுள்ளனர். அவர்கள் பல்வகை தலையலங்காரத்துடனும் கால்அமைப்புகளுடனும் காட்டப்பட்டுள்ளனர். இவர்களில் சிலர் கொடிக்கம்பு வைத்துள்ளனர். வேறு சிலருக்கருகில் இச்சையைத் தூண்டும் வகையில் பெண்கள் காணப்படுகின்றனர். இது ஒரு வேளை அவர்களது தவத்தைக் களைப்பது போல் அமைந்திருக்கலாம். சமுதாய நிலையைக் காட்டும் நடனக் காட்சிகள், பாம்பாட்டி, குரங்காட்டி போன்ற சிற்பங்களையும் காணலாம். வளமையைக் காட்டும் மலர்கள், கொடிக்கருக்கு வேலைப்பாடு ஆகியனவும் உள்ளன. மான், நாகம், யானை போன்ற விலங்குகளும் இடம்பெறுகின்றன.

இராமேசுவரம்கோயில் வளாகச் சிற்பக்கலை பற்றிய இவ்வாய்வு இக்கோயிலில் தற்போதுள்ள கட்டடங்கள் கி.பி.பத்தாம் நூற்றாண்டில் இருந்து பதினெட்டாம் நூற்றாண்டு

வரையான காலத்திற்குள் கட்டப்பட்டிருக்க வேண்டும் என்று தெளிவுபடுத்துவதாக உள்ளது. பெரும்பாலான கட்டடங்கள் அடுத்தடுத்து திருப்பணி செய்யப்பட்டிருந்த போதும் சில தொன்மையான சிற்பங்கள் எந்த வித இடையூறுமின்றி விளங்கி வருவதைக் காணலாம். சில சிற்பங்கள் சுதை பூசப்பட்டுப் பழைமை மறைக்கப்பட்டுள்ளது. மண்டபங்கள், பிரகாரங்களில் உள்ள பிற்காலச் சிற்பங்கள் தொடர்பற்ற வண்ணப்பூச்சின் காரணாக களை இழந்து காணப்படுகின்றன. வடிவமைப்பில் கோயில் I, II, III ஆகியவை ஏராளமான சிவமூர்த்தங்களைக் கொண்டுள்ளன. ஆனால் மிகச்சில விஷ்ணு, சுப்பிரமணியர், துர்க்கை உருவங்களைப் பெற்றுள்ளன. ஆனால் பிற்காலச் சன்னதிகளிலும் மண்டபங்களிலும் சைவ, வைணவ, சாக்த சமயச் சிற்பங்களுக்கு சமத்துவம் கொடுக்கப்பட்டுள்ளது. தனிச் சிற்பங்களாக அமைந்துள்ள யோகநரசிம்மர், இலட்சுமிநரசிம்மர், இலட்சுமிகணபதி, மகிஷமர்த்தினி ஆகியவற்றின் காலத்தைக் கணிப்பது சிக்கலாயிருப்பினும் அவற்றில் வட இந்திய, தக்காணத் தாக்கம் இருப்பது இராட்டிரகூட அரசர் மூன்றாம் கிருஷ்ணர் இங்கு வந்து வெற்றித்தூண் எழுப்பியதாகக் கூறும் செய்தியோடு பொருத்திப் பார்க்கத்தக்கதாகும்.[97]

## குறிப்புகள்

1. Susan L.Huntington, (1993), **The Art of Ancient India, p.279**
2. G.Sethuraman, **Religious Harmony as reflected in Indian Sculptures** in UNITE Dec. (1995) (Vol.4, 12) p.51
3. Susan L.Huntington, **op.cit.,** 13.6 and Aschwin de Lippe, (1978), **Indian Medieval Sculpture**, pl.112.
4. C.Sivaramamurti, **Geographical and Chronological factors in Indian Iconography** in Ancient India, No 6, p.56.
5. M.A.Dhaky, ed., **Encyclopedia of Indian Temple Architecture, South India, Lower Dravidadesa**, pl.220.
6. C.Sivaramamurti, **Geographical and Chronological factors in Indian Iconography, op.cit.,** pl.XXb.
7. M.A.Dhaky, **op.cit.,** pl.312.
8. **Mahabharata,** ch.VIII, v.24.
9. **PadmaPurana,** ch.31-34.
10. O.Flaherty, **Hindu Myths,** p.125.
11. *மேலது, ப.126*
12. *திருமந்திரம், செ.329.*
13. *காசியப்ப சிற்பசாத்திரம் (பட.70, செய்.41 - 5) எட்டுவிதமான திரிபுராந்தகர் உருவ அமைதி பற்றிக் கூறுகிறது.*
14. C.Sivaramamurti, **Geographical and Chronological factors in Indian Iconography, op.cit.,** p.58, p.XXIII D.

15. Susan L.Huntington, **op.cit.,** p.528.
16. *இது பற்றிய சிறந்த உதாரணங்களைப் புள்ளமங்கை பிரம்மபுரீசுவரர் கோயிலில் காணலாம்.*
17. Chaganty Suryanarayanamurthy (commt.), (1981), **Sri Lalitasahasranama,** pp. 158-9
18. Swami Harshananda, (1981), **Hindu Gods and Goddesses,** pp.90-1
19. C.Sivaramamurti, **Geographical and Chronological factors in Indian Iconography, op.cit.,** p.58.
20. C.Sivaramamurti, (1955), **Royal Conquests and Cultural migrations in South India and Deccan,**p.17.
21. Aschwin De Lippe, **Some South Indian Icons** in ARTIBUS ASIAE, Vol.XXXVII (3), p.171.
22. *இவ்வமைப்பின் பண்பட்ட உதாரணங்களைப் புள்ளமங்கை பிரம்மபுரீசுவரர் கோயிலிலும் புஞ்சை நல்துணையீசுவரர் கோயிலிலும் காணலாம்.* (M.A.Dhaky,**op.cit.,** pls. 218, 219, 220, 225)
23. J.C.Harle, **op.cit.,** pl.255.
24. *சரஸ்வதிய சித்திரகர்மசாத்திரம், இயல் 19, செய்.3.*
25. H.Krishnasastri, (1916), **South Indian Images of Gods and Goddesses,** p.19.
26. *ஸ்ரீதத்துவநீதி, பகுதி I, 3.47*
27. **Rig Veda,** IX, 86, VII, 48.2.
28. Mahadev Chakravarti, (1994), **The Concept of Rudra Siva, p.58.**
29. *மேலது, பக். 57-58.*
30. **PadmaPurana,** Sristikanda, ch.34, 108 f.
31. T.A.Gopinatha Rao, 1971, **Elements of Hindu Iconography,** Vol.II. pt.I, p.117.
32. Mahadev Chakravarti, **op.cit.,** p.163.
33. T.A.Gopinatha Rao,. **op.cit.,** Vol II, pt.I, p.121.
34. H.Krishnasastri, **op.cit.,** fig.73.
35. *சிவனது தலையிலுள்ள பிறைச்சந்திரன் அவரது வாகனமான காளையின் கொம்பைக் குறிக்கின்றது.* (Margaret Stutley, (1985), **The Illustrated Dictionary of Hindu Iconography,** p.30)
36. E.W.Hopkins, **Epic Mythology,** p.221.
37. **Mastsya Purana,** 187.49
38. J.N.Banerjee, **Development of Hindu Iconography,** p.124.
39. Susan L.Huntington, **op.cit.,**p.194, pl.10.10.
40. Margaret Stutley, **op.cit.,** p.81.
41. T.A.Gopinatha Rao,**op.cit.,**Vol. II, pt. II, pp.369-70
42. K.V.Soundararajan, **Tamil Temple Architecture and Art** in Splendours of Tamilnadu, MARG, p.63.
43. *பல உருவங்களில் அன்னமும் பன்றியும் சிற்ப சாத்திரப்படி இலிங்கத்தில் வலது இடது பக்கங்களில் அமைக்கப்பெறுகின்றன (காஸ்யப்ப சிற்பசாத்திரம், இயல் 81, செய்.14)*

44. இது புள்ளமங்கை இலிங்கோத்பவரை நினைவுபடுத்துகின்றது. (ஒன்பதாம் நூற். பிற்பகுதி) (Susan L. Huntington, op.cit., இதன் தொடக்க கால வடிவம் எல்லோராவில் உள்ளது. T.A.Gopi nathaRao, **op.cit.**, pl. XIV, fig 1)
45. T.A. Gopinath Rao, **op.cit.** Vol. II, pt. II, pp. 371-88
46. Basil Gray, ed., (1981), **The Arts of India**, fig. 78.
47. T.A. Gopinatha Rao, **op.cit.**, Vol. II, I, pls. XXXV. fig. 2, XXXVI. fig. 2.
48. Mahadev Chakravarti, **op.cit., p.** 62
49. Douglas Barrett, **Early Chola Bronzes**, pl. 1-2.
50. J.C.Harle, **op.cit.**, fig. 87.
51. Susan L.Huntington, **op.cit.**, 516.
52. J.C.Harle, **op.cit.**,pp. 186-87
53. *சரஸ்வதீய சித்திரகர்ம சாத்திரம், இயல் 32, செயல் 13.*
54. Douglas Barrett, **op.cit.**, p.137
55. C.Sivaramamurti, 1950, **Geographical and Chronological factors in Indian Iconography,** in Ancient India, Vol.6, p.59
56. *பொதுவாக இவர் சிவன் கோயில்களில் அஷ்டபரிவார தேவதைகளில் ஒன்றாக வடக்குமூலையில் அமைக்கப்படுவார்.*
57. *ஸ்ரீதத்துவநிதியில் தொகுதி I.3.120 இவரது ஆயுதங்களாக சூலம், கபாலம், பாசம், உடுக்கை என்று கூறப்பட்டுள்ளது. இவர் இங்கு ப(வ)டுக பைரவர் என அழைக்கப்படுகின்றார்.*
58. *திருமுறை 4.19 மற்றும் 7.237.*
59. C.Sivaramamurti, (1950), **op.cit.**, p.59.
60. **Raghuvamsa**, III, 23,
61. C.Sivaramamurti, (1976). **Indian Painting**, p.53.
62. George Michell, (1995). **Architecture and Art of Southern India,** pl.112.
63. *"அன்ன நடனமே தென்னிலைந் தொழிநடத்தழகும்" திருவம்பலச்சுருக்கம். செ.6.*
64. Douglas Barrett, **Early Chola Bronzes**, p.27
65. *சில்பரத்தினம், இயல் 22, ப.10.*
66. C.Sivaramamurti, (1950), **Geographical and Chronological factors in Indian Iconography,** p.40.
67. *இந்நூலாசிரியர் இரண்டு ஆண்டுகளுக்கு முன்னால் மறுஆய்வுக்காக இந்தக்கோயிலை மீண்டும் பார்த்தபோது இச்சிற்பத்தின் தலை உடைந்து கீழே கிடத்தப்பட்டிருந்தது.*
68. *மத்தியகாலத் தொடக்கத்தைச்சேர்ந்த தக்காணம் மற்றும் தென்னிந்திய சிற்பங்களில் சிம்மமுகம் இயற்கையானதாகும். ஆனால் பின்னாளில் இந்தியா முழுவதும் நவீனமுறையானது. வட இந்தியாவில் இவரது சிற்பங்கள் இடதுகாலைச் சற்றுதூக்கி நடனமாடிக்கொண்டு அசுரனின் வயிற்றைக் கிழிப்பது போல் காணப்படும்.* (C.Sivaramamurti, **Geographical and Chronological factors in Indian Iconography**, p.42.)
69. G.Sethuraman and S.Kannan, (1996),**"Two Chola temples in Pandya Country "** in PANCHALA, p. 105 fig.3
70. *நரசிம்மரின் மூன்றுகண்கள் சூரியன், சந்திரன் மற்றும் அக்னியை குறிக்கின்றன (சில்பரத்தினம், இயல், 23, செ.7)*
71. **Bhagavata Purana**, kanda IX, 10.16.

72. வடக்குப்பனையூர், பருத்தியூர், திருவதிகை, இராமேசுவரம் .இராமர் சிற்பத்தொகுதிகள் பத்தாம் நூற்றாண்டவை. (R.Nagasamy, (1979), South Indian Studies, II pp.160-3)
73. *காண்க, இயல்4.*
74. P.Thomas, (1960), **Hindu Religious Customs and Manners**, pp.20-3.
75. T.A.Gopinatha Rao, **op.cit.**, Vol. I, pt. I, pp 34–45.
76. *சரஸ்வதீய சித்திரகர்ம சாத்திரம், இயல் 37, செ.1.*
77. C.Sivaramamurti, **Geographical and Chronological factors in Indian Iconography, op.cit.**, p. 25
78. K.N. Radhakrishna, (1942), **Tirumalirunjolaimalai Sthalapurana**, pp.169 - 71.
79. C.Sivaramamurti, **Geographical and Chronological Factors in Indian Iconography, op.cit.**, p. 30
80. *பாராட்டின் கருத்துப்படி கோனேரிராசபுரம் கணபதியின் காலம் கி.பி 970 ஆகும்.* (R.Nagasamy, ed.. (1979), **South Indian Studies**, II.pp. 160-3.
81. *மேலது, பக். 160 – 164*
82. *தாந்திரீக. நூல்களான சாரததிலகமும் மேருதந்திரமும் இலட்சுமி-கணபதிக்கு நான்கு கைகள் உண்டென்றும் அவற்றில் சங்கு, சக்கரம், தந்தம், அபயமுத்திரை காட்டப்படும் என்றும் கூறுகின்றன.*
83. David kinsley, (1987), **Hindu Goddesses**, p.1
84. *எருமையின்மீது நின்றுகொண்டிருக்கும் இறைவியை அமைப்பது என்பது ஜாவாவின் முக்கிய கலைக்கூறாகும். இதைப்போன்றே எருமையின் தலைமீது நின்றிருப்பது தென்னிந்தியக் கலைமரபாகும்.*
(C. Sivaramamurti, **Geographical and Chronological factors in Indian Iconography, op.cit.**, p.32).
85. T.A.Gopinatha Rao, **op.cit.**, Vol. I, pt.III,p.381.
86. K.V.Soundararajan, (1978), **The Art of South India – Tamilnadu and Kerala**, pp.72 and 161.
87. The iconographical form of Lalita (a representation of beauty) partly resembles Rajarajesvari (Swami Harshananda, **op.cit.**, p.148,fig.36)
88. H.Krishnasastri, op.cit., p.192, fig. 120.
89. Bhagawant Sahai, (1975), **Iconography of minor Hindu and Buddhist Deities**, pp.166-7.
90. *மேலது., ப.173.*
91. *மதுரைக்கோயில் சிவபெருமான் சொக்கநாதசுவாமி என அழைக்கப்படுகின்றார்.*
92. Somalay, ed. Saga of Ramesvaram Temple, **op.cit.**, p.160.
93. *மேலது, ப.11*
94. H.Krishnasastri, **op.cit.**, p.233, fig.142.
95. *மேலது, பக். 229–30.*
96. George Michell, (1995), **Architecture and Art of Southern India**, p.180.
97. *பார்க்க இயல். 2 இன் குறிப்பு எண் 84.*

# 6. வழிபாடும் திருவிழாவும்

வழக்கமான பூசை வழிபாடுகளும் திருவிழாக்களும் மக்கள் மனதில் ஆனந்தத்தை ஏற்படுத்துவதோடு அவர்களது உடைமைகளுக்கு வளமை சேர்ப்பதாகவும் உடலுக்கு ஆரோக்கியத்தை அளிப்பதாகவும் ஆன்மாவிற்கு தூய்மை ஏற்படுவதாகவும் பாவங்களைத் தீர்ப்பதாகவும் வழிவழியாக இந்துக்கள் நம்பி வருகின்றனர். தங்களது இறைவனையும், தேவியையும் அமைதிப்படுத்துவதற்காகப் படையல் செய்கின்றனர். பூசை, தினந்தோறும் நடைபெறும் நித்திய பூசை, ஆத்மார்த்த பூசை என இரு வகைப்படும்.[1] முன்னது வீடு, சத்திரம் போன்ற இடங்களில் தனிமனிதனால் செய்யப்படுவதாகும். பின்னது குருக்களால் (priests) கோயில்களில் நடத்தப் பெறுவ தாகும். திருவிழாக்களை ஒட்டி நடத்தப்படும் அவற்றுடன் தொடர்புடைய பூசைகள் நைநிமித்தகம் எனப்படும். திருவிழாக்கள் குறிப்பிட்ட கால இடைவெளிகளில் அதாவது வாரம், திங்கள், ஆண்டு[2] என்ற வகையில் நடைபெறுகின்றன. ஒவ்வொரு இந்துக் கோயிலிலும் அதனதன் பொருளாதார நிலைக்கேற்ப இவ்வகைத் திருவிழாக்கள் நடத்தப் பெறுகின்றன. இவற்றில் வழிபாடுகளும் ஊர்வலங்களும் முக்கிய பங்கு வகிக்கின்றன. அக்காலத்தில் இறையுருவங்கள் ஊர்வலமாக நான்கு இரதவீதிகளில் வலம் வந்ததற்கு ஒரு முக்கிய காரணம் உண்டு. அதாவது அப்போது கோயில் நுழைவுச் சலுகை மறுக்கப்பட்டவர்கள் வெளியிலிருந்து கொண்டே இறைவனின் ஊர்வலம் கண்டு மகிழ்வுற்றனர். பக்தர்களும் இத்தருணத்தில் நேரடியாக இறைவனுக்குத் தங்கள் விருப்பப்படியே பூக்களையும் மற்றவற்றையும் படைத்தனர். ஊர்வலத்தின்போது தேரே நடமாடும் (mobiletemple)கோயிலாக உருவகப் படுத்தப்படுகின்றது. எனவே திருவிழாக்கள் மக்கள் கூடுவதற்கும் ஒருவரோடு ஒருவர் அல்லது ஒரு குழுவோடு மற்றொரு குழு நட்புணர்வை வளர்த்துக் கொள்வதற்கும் வழி செய்கின்றன. நாள் முழுவதும் கடுமையாக உழைத்த மக்கள் திருவிழாக்காலங்களில் இசை, நடனம், நாட்டுப்புற நிகழ்ச்சிகள் இவற்றைக் கண்டுகளித்து கவலை நீங்கி வாழ்கின்றனர். நித்தியபூசைகள் கருவறையோடு நின்று விடுகின்றன. ஆனால் திருவிழாக்களோ பொதுமக்களின் பொது வழிபாடாக அமைகின்றன. இது ஒருவகையில் இனப்பூசல் களையும் மதக்காழ்ப்புணர்ச்சியையும் அகற்ற உதவுகிறது.

பூசைகள் மற்றும் திருவிழாக்கள் பற்றிய அடிப்படையான விதிகள் பற்றி ஆகமங்களில் கூறப்பட்டுள்ளன.[3] பூசையானது பல நிலைகளைக் கொண்டதாகும். அதாவது, ஆவாகனம் (முதல் இறை வணக்கம்), ஆசனம் (இறைவன் அமர ஆசனம் அளித்தல்), சுவகதம் (இறைவனது திருப்பாதங்களைக் கழுவிட நீர் கேட்டல்), அர்க்கயம் (பூக்கள், குங்குமம், சந்தனத்தூள் ஆகியவை கலந்த நீரை இறைவனுக்கு அளித்தல்), ஆச்சமனியம் (இறைவன் தனது திருமுகம் மற்றும் திருவாயைக் கழுவுவார் என்று எதிர்பார்த்து நீர் கொடுத்தல்), மதுபார்க்கம் (தேன், சர்க்கரை, பால் ஆகியவை கலந்த பானத்தைப் படைத்தல்), ஸ்நான ஜலம் (குளிப்பதற்கு நீர் வழங்குதல்), பூசும் அபரனஸ்யா (ஆடை, ஆபரணம் அளித்தல்), கந்தம் (சந்தனக் காப்பு செய்தல்), அக்ஸதை (அரிசி, தானியங்களைக் குங்குமத்தில் கலத்தல்), புஷ்பம் (மலர் அர்ச்சித்தல்), தூபம் (சாம்பிராணிப் புகை), தீபம் (விளக்கு) மற்றும் நைவேத்யம் (சமைக்கப்பட்ட உணவு, பழங்கள், மற்றும் சத்துள்ள உணவுகள், வெற்றிலைப் பாக்கு அதாவது ஒரு தனி நபருக்குரிய உணவு ஆகியவற்றினைப் படைத்தல்) ஆகும்.[4] அஜிதாகமத்தின்படி தினந்தோறும் எட்டுவேளை பூசைகள் நடத்தப்பட வேண்டும்.[5] காரணாகமத்தில் ஆறு கால பூசை அதாவது விடியற்காலை (dawn), காலை (morning), உச்சிக்காலம் (noon), பிற்பகல் (after noon), மாலை (evening), மற்றும் இரவு (அர்த்தயாமம்) ஆகிய நேரங்களில் நடத்தப்பெற வேண்டும் என நிர்ணயிக்கப்பட்டுள்ளது.[6] வைணவர்களின் பாஞ்சராத்ராகமம்[7] ஒருகால பூசையிலிருந்து பன்னிரண்டு காலப் பூசை வரை நடத்தலாம் என்று கூறுகின்றது. சி.சி. டயல் என்பார் Instrument and purpose என்னும் தனது நூலில் பொதுவாக ஆறுகாலப் பூசை முறையே தென்னிந்திய ஆகம வழியாக உள்ளதென்றும் முழு பூசைகளும் மூன்று காலப் பூசைகளில் முடிக்கப்படக்கூடியவை என்றும் தெரிவிக்கின்றார்.[8] பொதுவான சிவபூசை என்பது பஞ்சோபச்சார பூசை (ஐந்து வகை) என்று ஜி.எஸ்.குர்யா கூறுகின்றார்.[9] ஒரு நாளில் சூரிய உதயம், உச்சிக்காலம், சூரிய அஸ்தமனம் மற்றும் நள்ளிரவு ஆகிய நான்கு வேளைகளில் நடத்தப் பெறுவதே உத்தமமான பூசைமுறை எனவும் சொல்லப்படுகின்றது.[10] இவ்வாறு பல்வேறு கருத்துக்கள் நிலவிவரினும் ஒவ்வொரு கோயிலும் தனித்தனி முறைமைகளை அந்தந்த ஆகம விதிப்படி செயல்படுத்துகின்றது. உதாரணமாக ஒரிஸ்ஸா மாநிலம் புவனேசுவரத்து, சிவன்கோயிலில் தினந்தோறும் மூன்றுகால பூசைகளே நடைபெறுகின்றன.[11]

திருப்பரங்குன்றம் சுப்பிரமணியசுவாமி கோயிலில் ஆறுவேளை நித்தியபூசை நடைபெறுகின்றது.[12]

இராமேசுவரத்தில் மகுடாகமம் பின்பற்றப்பட்டு வருகின்றது. இதன் வழிமுறைகள் பெரும்பாலான ஆகமங்களோடு ஒத்துள்ளன. இக்கோயிலில் ஆறுகாலப் பூசைகள் பிரதானக் கருவறை திறக்கப்படும் நிகழ்ச்சியிலிருந்து தொடர்ந்து நடைபெறுகின்றது. இக்கோயில் வழிபாட்டு முறைகள் குறிப்பிடத் தக்கவையாகும். ஏனெனில் அவை துங்கபத்திரா மற்றும் கிருஷ்ணா நதிக்கு வடக்கிருக்கும் கோயில் வழிபாடுகளிலிருந்து பெரிதும் வேறுபட்டவை என ஜேம்ஸ்பர்கஸ் கருதுகின்றார்.[13] இராமேசுவரத்துப் பூசை வழிபாடுகள் இரு வகைப்படுகின்றன. (i) புரோகிதர்களால் தினந்தோறும் கோயிலில் நடத்தப் பெறும் ஆறுகாலப் பூசைகள் (ii) பல்வேறு வேண்டுதல்களுடனும் நன்றிக் கடனாகவும் பக்தர்கள் அல்லது புனிதப் பயணிகள் கொண்டு வரும் பொருட்களை அவர்களது சார்பாக இறைவனுக்குப் படைப்பது என்பதாகும்.[14] இருபதாம் நூற்றாண்டில் இங்கு வழிபாட்டு முறையில் மாற்றங்கள் ஏற்பட்டுள்ளன. பிற கோயில்களைப் போன்றே இங்கும் தேவதாசி முறை ஒழிக்கப்பட்டது.

## நித்திய பூசைகள்

ஒவ்வொரு நாளும் காலை ஐந்து மணிக்கு ஆச்சன் (ஆசிரியர்) என்றழைக்கப்படும் (வடமொழியில் பாதசேவை) அலுவலர் சேகண்டி (கண்டாமணி) ஒன்றுடன் கிழக்கு வாசலுக்கு வந்து ஒலி எழுப்புவார். பின் மூன்று முறை சங்கு ஊதுவார். அதன்பின்பு ஜலகண்டம் [15] என்னும் மணி அடிப்பார். இதுபோன்றே மற்ற மூன்று வாயில்களுக்கும் சென்று செய்வார். இதுவே திருக்கோயில் திறந்து விடப்பட்டதற்கு அறிகுறியாகவும் பக்தர்கள் உள்ளே வரலாம் என்ற வரவேற்பு ஓசையாகவும் அமைகின்றது. இம் முறைமை இங்கு பின்பற்றப்பட்டதற்கும், பின்பற்றப்பட்டு வருவதற்கும் காரணம் நாட்டின் பல பகுதிகளிலிருந்து இராமேசுவரம் வந்துள்ள பக்தர்களை நித்திரையிலிருந்து எழுப்பி வழிபாட்டுக்குத் தயாராகச் செய்வதற்காக எனக் கருதப்படுகின்றது. மேலும் குறியீட்டளவில் (symbolically) வாயில்களில் இரவில் தங்கியிருக்கும் தீய ஆவிகளைக் கோயில் நடைதிறப்பதற்கு முன்பு விரட்டுவதற்காக இவ்வாறு மணியடிப்பதும் சங்கு ஊதுவதும் நடைபெறுவதாக நம்பிக்கை உள்ளது.

இத்தருணத்தில் ஆச்சனுடன் இசைக் கருவிகளைக் கொண்ட குழுவும் உடன் செல்லும்.[16] கோயில் நிர்வாகிகளும், குருக்களும் குளித்து முடித்து[17] கருவறை வாயிலைத் திறந்து விளக்கேற்றுவர்.[18] நைவேத்தியம் தயாரிக்க வேண்டி உணவுப் பொருட்கள் வழங்கப்படும். திருவமுதும் புனித நீரும் அலுவலர் ஒருவரால் கருவறைக்கு எடுத்து வரப்பெறும்.[19] குருக்கள் வேத மந்திரங்களைச் சொல்லிப் படையலை ஏற்றுக்கொள்ளுமாறு இறைவனை வேண்டுவார். இவ்வேளையில் பூசைக்குரிய பொருட்கள், பாத்திரங்கள், நைவேத்தியம் ஆகிய யாவும் தயாராகிவிடும். பின்பு 5.45.க்கு இராமநாதசுவாமி கருவறைக்கு முன்புள்ள மகாமண்டபக் கதவுகள் திறக்கப்படும். பின்பு அலுவலர்களும், இசைக் கலைஞர்களும் அம்மன்சன்னதிக்குச் சென்று பள்ளியறைக்கதவைத் திறப்பர். குருக்கள் வடமொழியில் இறைவனைத் துயிலெழச்செய்யும் மந்திரத்தை ஓதுவார். 'இப்பிரபஞ்சத்தின் இறைவனே துயிலெழுவாய், இவ்வுலகத்திற்கு நன்மை பயக்க வேண்டி, எமது நித்திய வழிபாட்டைத் தயைகூர்ந்து ஏற்றுக் கொள்வாயாக' என்று வேண்டுவார்.

இதற்கு அடுத்து முறையானவழிபாடு தொடங்கும். முதலில் இராமநாதசுவாமி சன்னதிக்கு உள்ளே இருக்கும் ஸ்படிக லிங்கத்திற்கு பாலாபிசேகம் நடைபெறும். முறையான சடங்குகளுடன் பள்ளியறையிலிருந்து பல்லக்கில் இறைவனின் பொன்திருமேனி கொண்டுவரப்பட்டு[20] கருவறையில் வைக்கப்பெறும். இத்தருணத்தில் மேளம், நாதசுரம், வேதமுழக்கம், தேவாரப்பாடல்கள் ஆகியவை ஒலிக்கப்படும். இவையனைத்தும் கோயில்களில் இறைவனின் திருவுளம் கவர்வதற்காக நடத்தப்பெறுகின்றன.[21] இதன்பிறகு குருக்கள் சிவலிங்கம் மற்றும் அம்மன் திருவுருவில் இருக்கும் பழைய மாலைகள், ஆடைகள் ஆகியவற்றை எடுத்து அருகில் சிறுகோயிலில் அமர்ந்திருக்கும் சண்டிகேசுவரர் முன்பு வைப்பார்.[22]

தொடர்ந்து குருக்கள் சிறிய சங்கல்பம்[23] செய்வார். "சிவபெருமானின் ஆணைப்படி, சிவபெருமானின் மேலான ஏற்புக்காக சாத்திர முறைப்படி இந்தக்காலைப் புனித வழிபாட்டை நடத்துகிறேன்"[24]. இச்சொற்களைச் சொல்லி அவர் புண்ணியவசனம் செய்வார். பித்தளைப் பாத்திரம் ஒன்றில் நீர் ஊற்றி, கற்பூரம் ஏற்றி உயரமான கல்லில் வைக்கப்பட்ட அரிசியின் மீது வைப்பார்.[25] அதன்பின்பு பூரண கலசம் உண்டு பண்ணி

அட்சதையிட்டு[26] பிராணயாம மந்திரம் உச்சரிப்பார்.[27] பின்பு மாலை எடுத்து ஆறுமுறை நீரில் மூழ்கவைத்துப் பின் சிறிய பாத்திரத்திலிடுவார். இதனைத் தொடர்ந்து விருத்தி, புஸ்துகி, துஸ்திகி, ஆரோக்கியம், தனதான்ய சம்ருத்தி, கோபிரமணேப்பிய சுபம்[28] என்று ஆறுமுறை சொல்வார். இத்தனை முறையும் துணை குருக்கள் ஒருவர் அப்படியே ஆகட்டும் (be it so) என்பார். பின்பு பாத்திரத்திலிருந்து தேங்காய், மாலை ஆகியவற்றை எடுத்து விட்டு, தர்ப்பப் புல்லையும் மா இலையையும் நீரில் நனைத்து எடுத்து தனது தலையில் தெளித்துக் கொள்வார்.[29] அதன்பின்பு அந்நீரை, சன்னதி, அர்த்தமண்டபம், மகாமண்டபம், பூசைப் பாத்திரங்கள் ஆகியவற்றில் தெளித்து தூய்மையாக்குவார்.[30] இச்சடங்குகள் ஆன்மா, மனம், பாத்திரங்கள், புரோகிதரும் பக்தரும் கூடியிருக்கும் இடம் ஆகியவற்றைத் தூய்மையாக்கும்படி இறைவனை வேண்டுதலாகும்.

இச்சடங்குக்குப் பின் ஸ்தானிகர் என்பவர் கோடித்தீர்த்த மண்டபத்திலிருந்து பூரண கலசத்தில் நீர் கொண்டு வருவார். குருக்கள் இந்நீரால்[31] சிவலிங்கத்தை நீராட்டுவார்.[32] "காலை நீராட்டல் நமது பாவங்களை நீக்குவதாகவும், உச்சிக்கால நீராடல் செல்வத்தைத் தருவதாகவும், மாலை நீராட்டல் நமது நோய்களைப் போக்குவதாகவும்" பொதுவான நம்பிக்கை நிலவுகிறது.[33] புனித நீராட்டலின் முக்கியத்துவம் பற்றி காரணாகமத்திலும் விளக்கப்பட்டுள்ளது.[34] அதன்படி இறைவனை நீராட்டும் சடங்கானது செல்வத்தையும் ஆரோக்கியத்தையும் மனச்சாந்தியையும் ஆன்ம பலத்தையும் தருவதோடு பாவங்களையும் ஒழிக்கும்.

நீராட்டுவிழா முடிந்ததும் ஸ்தானிகர் திரை போடுவார். பின் குருக்கள் ஒரு துண்டால் சிவலிங்கத்தைத் துடைப்பார். இரு ஆடைகளால் அலங்காரம் பண்ணி சந்தனக்காப்பு செய்வார். மலர்மாலை அலங்கரித்து, வில்வஇலை போட்டு மற்ற படையல்களை முன்வைப்பார். யானைமீது ஏற்றி வந்த திருவமுது காயத்ரிமந்திரம் ஒலிக்கப் படைக்கப்படும்.[35] கற்பூரஆரத்தி நடக்கும். தீபஆராதனை நடைபெறும்[36]. ஒவ்வொரு தீபத்தையும் தனது உதவியாளரிடமிருந்து பெறும்போது குருக்கள் தனது கைகளை அலம்புவார். மலர்களைத் தீபத்தின்மீது தூவி வாங்குவார். இறைவனுக்கு வெற்றிலைப் பாக்கு படைத்தபின்பு மீண்டும் தீபஆராதனையும் கற்பூரஆரத்தியும் நடைபெறும். பின்பு படைக்கப்பட்ட உணவை ஏற்றுக் கொள்ளும்படி இறைவனை

குருக்கள் வேண்டுவார். இறுதியாக அவர் இறைவனின் திருவுரு முன்பு தரையில் விழுந்து வணங்குவார். ஒவ்வொரு பூசை முடிந்த பின்னும் குருக்கள் விழுந்து வணங்கவேண்டும் என்று சைவ ஆகமங்களில் கூறப்பட்டுள்ளது.[37] இத்தோடு அதிகாலை பூசை (திருவனந்தால் பூசை) 6 மணி அளவில் முடிவடையும். இதனையே குருக்கள் சுப்பிரபாதபூசை என்பர். அதாவது இறைவனின் பாதங்களுக்குப் பூசைசெய்து அவரைப் பள்ளியெழும்படி வேண்டிக் கொள்வதாகும்.

இரண்டாவதாக உதயமார்த்தாண்டம் என்னும் விழா பூசை காலை 7 மணி அளவில் தொடங்கப்பெறும். மீண்டும் குருக்கள் ஒரு பாத்திரத்தில் தண்ணீர் எடுத்துக் கொண்டு கோயிலுக்குள் செல்வார். இரு கைகளையும் கூப்பி அடுத்து நடத்தப்பெறுகின்ற பூசையை ஏற்றுக் கொள்ளும்படி வேண்டுவார். விரலால் நீர் எடுத்து சிவலிங்கத்தின் மீது தெளிப்பார். பின்பு மூன்றுமுறை நீரைத் தரையில் தெளிப்பார். ஸ்தானிகர் திருவமுது கொண்டு வருவார். திரையைப் போடுவார். மீண்டும் குருக்கள் தரையில் நீரைத் தெளிப்பார். தனது கைகளை இலிங்கத்தை நோக்கி நான்குமுறை அசைப்பார். தூப தீப ஆராதனைகள் நடைபெறும். கற்பூர ஆரத்தி நடக்கும். அனைத்து முக்கிய சன்னதிகளிலும் இது நடத்தப்பெறும்.[38] பின்பு கோயில் பணியாளர்களுக்கு உணவு வழங்கப்படும். இத்தோடு கருவறையின் கதவுகள் மூடப்படும். குருக்கள் கோயிலை விட்டு வெளியேறுவார்.

மூன்றாவதான உதயக்கால பூசை 10 மணிக்குத் தொடங்கும். இப்போது ஸ்தானிகர் கோடித்தீர்த்த மண்டபத்திலிருந்து யானை மீது நீர் கொண்டு வருவார். இவரோடு இசைக் கலைஞர்களும் கொடையும் சாமரமும் வரும்.[39] யானை ஊர்வலமாகக் கிழக்கு வாயிலுக்கும் பின் கோயிலைச் சுற்றியும் கொண்டு செல்லப்பட்டு மீண்டும் கிழக்கு வாயிலுக்கு வரும். பின்பு மூன்றாம் பிரகாரத்தைச் சுற்றிவரும். கிழக்கு வாயிலில் ஸ்தானிகர் நீரை அர்த்த மண்டபம் எடுத்துச் செல்வார். இதனைத் தொடர்ந்து குருக்கள் பஞ்சசுத்தி எனும் ஐவகைத் தூய்மை செய்வார். தனது தலையில் நீர் தெளிப்பார். வேதத்தைச் சொல்லி இறைவனிடம் தூய்மை யாக்கும்படி வேண்டுவார். அந்த இடத்தைத் தூய்மைப்படுத்த வேண்டுவார். பூசை பாத்திரங்களைத் தூய்மைப்படுத்த வேண்டுவார். மந்திரங்களைத் தூய்மைப்படுத்த வேண்டுவார்.

பின்பு சூரியவழிபாடு நடத்தி இந்த பூஜை சிறப்பாக நடக்க வழி செய்யும்படி வேண்டிக் கொள்வார். இதைத் தொடர்ந்து

முதல்கால பூசையில் நடைபெற்றது போன்று புண்ணியவசனமும் சங்கல்பமும் செய்வார். பஞ்சாமிர்தம் படைப்பார். பின்பு குருக்கள் காலையில் இறைவனுக்கு அணிவித்த மாலைகளை அப்புறப்படுத்தி சண்டிகேசுவரர் சன்னதியில் வைப்பார்.[40] தொடர்ந்து குருக்கள் அர்த்த மண்டபத்தில் உள்ள கணபதி சிலைக்கு முன்பு நின்று சிவபூசை செய்யும்போது ஏற்படும் இடர்ப்பாடுகளிலிருந்து தன்னைக் காக்கும்படி வேண்டுவார். முதல் நாள் மாலையில் நந்திக்கு அணிவித்திருந்த மாலையையும் அம்மன் சன்னதி மற்றும் பிற முக்கிய சன்னதிகளில் அணிவித்திருந்த மாலைகளையும் எடுத்து சண்டிகேசுவரர் முன் வைப்பார். இது சுமார் அரை மணி நேரம் நடைபெறும்.

அதன்பின்பு திரை போடப்படும். மீண்டும் நீராட்டல் தொடங்கும்.[41] சந்தனக்காப்பு சாத்தப்படும். இரண்டு ஆடைகள் அணிவிக்கப் பெறும். பொங்கல் (முக்கன்னம்)[42] படைக்கப்படும். வர்சனைப் புகை, தீப ஆராதனை, கற்பூரஆரத்தி நடைபெறும். திரை விலக்கப்பட்டு மீண்டும் போடப்படும். குருக்கள் இலிங்கத்தின் மீதிருந்து ஆடைகளை எடுப்பார். மூன்றுமுறை இலிங்கத்தின் மீது நீர் ஊற்றுவார். ஸ்தானிகர் ஒரு பாத்திரத்தில் கங்கை நீர் கொண்டு வந்து வைப்பார்.[43] புரோகிதர் அப்புனித நீரால் மீண்டும் இறைவனை நீராட்டுவார். பின்பு இறைவனை அலங்கரிப்பார்.[44] இதனைத் தொடர்ந்து பரிவார தேவதை களுக்குச் சந்தனக்காப்பு செய்து வில்வ இலை தூவுவார். மீண்டும் திருவமுது படைக்கப்படும். திருவமுதிலும் சிவலிங்கத்தின் பாதத்தில் தரையிலும் நீர் தெளித்து மந்திரம் ஓதப்படும்.[45] மூன்று முறை நீர் ஊற்றி அர்க்கயம்[46] என்று மந்திரம் உச்சரிப்பார். வில்வ இலைகளை இலிங்கத்தை நோக்கி அசைப்பார். மீண்டும் மந்திரம் உச்சரிப்பார். இதற்கிடையில் நந்திமண்டபத்தில், தேவாரப் பாடல்கள் பாடப்படும். ஸ்தானிகர் அங்கு மணியடிப்பார்.[47]

படையல் முடிந்ததும் உணவை ஓர் அறைக்குக் கொண்டு செல்வார். கருவறையில் ஸ்தானிகர் மணி அடித்துக் கொண்டே தூபத்தைக் குருக்களிடம் கொடுப்பார். திரை விலக்கப்படும். குருக்கள் தூபம் அக்ரபயாமி எனச்சொல்லி தூப ஆரத்தி செய்வார்.[48] மூன்று முறை தரையில் நீர் தெளிப்பார். தீபங்களை ஒவ்வொன்றாக ஆராதனை செய்வார். மீண்டும் வாசனைப்புகை காட்டப்படும். பின்பு குருக்கள் திருவமுது, வெற்றிலைப் பாக்கு ஆகியவற்றை வைத்து விளக்கேற்றுவார். மகாதீபம் (அலங்காரம், முதன் முதலில் ஆரத்தி செய்யும் தீபம்), பூதருத்ர தீபம் (பூத

கணங்களின் பெயரால்), நாகதீபம் (ஒரு, தலை நாகத்தின் உருவத்தோடு கூடியது), சேஷ தீபம் (ஐந்து தலை நாகத்தின் உருவம்), புருஷ மிருக தீபம் (அரை மனித உருவமும் அரை மிருக வடிவமும் கூடியது), நட்சத்திர தீபம் (24 நட்சத்திரங்களைக் கொண்டது) ஆகிய தீபங்களின் ஆராதனை நடைபெறும். இதனைத் தொடர்ந்து திக்பந்தம் (எட்டுத் திக்கிலும் வேலி போன்ற இயக்க அமைப்பு), ஆவகுந்தனம் (கெட்ட ஆவிகளை விரட்டுவதற்காக ஒரு கையின் இரண்டு விரல்களை மற்றொரு கையில் கட்டுதல்) ஆகிய சடங்குகள் நடைபெறும். சந்தனப்பொடியும், வாசனைப் பொடியும் தூவப்படும். ஐந்து முத்திரைகள் அர்ப்பணிக்கப்படும்.[49] ஐந்து பிராமணங்கள்[50] மற்றும் ஆறு அங்கங்களுடன்[51] ஆரத்தி எடுக்கப்படும். மணியடிப்பது நிறுத்தப்பட்டு கற்பூர ஆராதனை நடைபெறும். மீண்டும் நிரஞ்சனம் (கற்பூர ஆரத்தி) மற்றும் ஆச்சமனம்[52] படைக்கப்படும். திருநீறு காண்பிக்கப்பட்டு கண் புருவ மத்தியில் திலகமிடப்படும்.

பின்பு குருக்கள் ஆச்சமனம் என்று சொல்லிக் கொண்டே தரையில் நீர் ஊற்றுவார். திருநீரால் இலிங்கத்தின் மீது பொட்டு வைப்பார். ஸ்தானிகர் கொடுக்கும் கண்ணாடியை வாங்கி இலிங்கத்திற்குக் காட்டுவார். சிறிய குடை ஒன்று சிறிது நேரம் இலிங்கத்திற்கு மேல் பிடிக்கப்படும். மூன்றுமுறை சாமரம் வீசப்படும். மயிலிறகினால் தயாரிக்கப்பட்ட விசிறியினால் மூன்று முதல் நான்கு நிமிடம் வரை வீசப்படும். தொடர்ந்து குருக்கள் பூக்களையும் வில்வ இலைகளையும் இலிங்கத்துக்குப் படைப்பார். கைகளைக் கூப்பி பூசையின் போது ஏதேனும் தவறு இழைத்திருந்தால் மன்னிக்கும்படி இறைவனை வேண்டுவார். இப்போது ஸ்தானிகர் அர்த்தமண்டபத்தில் நின்றுகொண்டு சிவபெருமானின் 108 பெயர்களைச் சொல்லுவார். திருவமுது படைத்தலும் கற்பூர ஆரத்தியும் மீண்டும் தொடரும். பக்தர் களுக்குத் திருநீறு வழங்கப்படும். அதன்பின்பு குருக்கள், தூபம், தீபம் மற்றும் திருவமுதுடன் கோயிலுக்குள் உள்ள அனைத்து இலிங்கங்களுக்கும் சென்று படைப்பார்.

மீண்டும் கருவறைக்கு வந்து குருக்கள் அர்ச்சனை செய்வார். இச்சமயம் அவர் சாத்திர விதிகளின்படி வடக்கு நோக்கி நின்று கொண்டு, தட்டில் வில்வ இலை வைத்து அர்ச்சிப்பார். ஸ்தானிகர் அர்த்தமண்டபத்தில் நின்று கொண்டு சிவபெருமானின் 108 நாமங்களைச் சொல்லுவார். மற்றொரு ஸ்தானிகர் அறை

யிலிருக்கும் திருவமுதை மீண்டும் கொண்டு வந்து வைப்பார். குருக்கள் அதன் மீது நீர் தெளித்து அதனைச் சிவலிங்கத்திற்குப் படைப்பார்.

அதன்பின்பு மகாமண்டபத்திலிருக்கும் பக்தர்களுக்குப் பிரசாதமாகத் திருநீறும், வில்வஇலையும் தீர்த்தமும் வழங்கப்படும். ஒரு ஸ்தானிகர், ஒரு பாத்திரத்தில் சமைத்த அரிசிஉணவை எடுத்து அதனைத் துணியால் மூடுவார். மற்றொரு ஸ்தானிகர் இடது கையால் மணியையும், வலது கையால் தூப, தீபத்தையும் கொண்டு வருவார். அவர்கள் முதல் பிரகாரத்தில் உள்ள அனைத்து இலிங்கங்களுக்கும் செல்வர். குருக்கள் பின் தொடர்வார். ஒவ்வொரு இலிங்கத்தின் முன்பாகவும் திருவமுதினை ஸ்தானிகர் திறந்து காட்டுவார். குருக்கள் சைகையால் படைப்பார். பின்பு தூப தீப ஆரத்தி நடைபெறும். இதேபோல் கணேசர், சுப்பிரமணியர் மற்றும் சிறு சன்னதிகளில் பூசை நடைபெறும். நைவேத்யமும், தூப தீப் ஆராதனைகளும் பரிவார தேவதைகளுக்கு நடத்தப்பட்டு, பூசைகளை ஏற்றுக் கொள்ளும்படி குருக்களால் வேண்டப்படும். பரிவாராலயங் களுக்கும் சடங்குமுறைப்படி திருவமுது அளிக்கப்பெறும் என்பது இதன் மூலம் பெறப்படுகின்றது.

இதனையடுத்து குருக்கள் மகாமண்டபத்தின் கிழக்கு வாயிற்கதவின் இருமுனைகளிலும் நீர் தெளித்து வில்வ இலையையும் அரிசியையும் போடுவார். திரிசூலத்தைப் போன்ற தாமிர உருவத்தை (பலி தேவதை) பல்லக்கில் எடுத்து வந்து மகாமண்டபத்தின் கிழக்கு வாயிலில் கொண்டு வந்து, பின்பு வடக்குப்படிவரை சென்று சன்னதியைச் சுற்றித் தெற்கு வழியாகச் சென்று ஒவ்வொரு பலிபீடத்திற்கும் வில்வ இலை, மற்றும் உணவு ஆகியவற்றைப் படைப்பார்.

பின்பு பல்லக்கு நந்திமண்டபம் செல்லும்; யாக சாலைக்குச் செல்லும். அங்கே ஹோமகுண்டம் ஒன்றில் ஸ்தானிகர் நெருப்பு வைப்பார். குருக்கள் தனது கைபிடிக்குமளவு உணவை மூன்றுமுறை எடுத்துத் தீயிலிடுவார். அப்போது தேவபலி (அனைத்துக் கடவுள்களுக்கும் படைத்தல்); பூதபலி (காற்று, நீர், பூமி, வானம் ஆகாயம் ஆகியவற்றிற்குப் படைத்தல்) மற்றும் ஈசுவரபலி (இறைவனுக்குப் படைத்தல்) என்று சொல்லுவார். பின்பு பல்லக்கு, கொடிமரத்திற்குப் பின்னால் உள்ள பலி பீடத்திறகுக் கொண்டு வரப்படும். அங்கு பலி பீடத்தின் மீது நீர் தெளித்து, குருக்கள் வில்வ இலையைப் போடுவார். இதனைத்

தொடர்ந்து அங்கு சங்கு ஊதிய கோயில் அலுவலருக்கு உணவு வழங்கப்படும். பின்பு மீதமிருக்கின்ற நீரையும், வில்வ இலையையும் பலிபீடத்தில் போடுவார். இப்போது பல்லக்கு நந்தியின் மேற்குப் பக்கமாக மகாமண்டபம் அடையும். இத்துடன் குருக்கள் அர்த்தமண்டபக் கதவைச் சாத்துவார். உதயக்கால பூசையும் முடிவடையும்.

நான்காவதாக உச்சிக்கால பூசை நண்பகல் 12 மணிக்கு தொடங்கும். இது சுமார் ஒன்றரை மணிநேரம் நடைபெறும். இது முதல்கால பூசையைப் போன்றே நடைபெறும். இவ்விரண்டுக்கும் ஒரே ஒரு வேறுபாடு உண்டு. அதாவது முதல்கால பூசையில் அம்மன் சன்னதியிலிருக்கும் பள்ளியறையிலிருந்து இறைவன் அழைத்து வரப்படுவார். இது அதிகாலையிலேயே நடைபெற்று விட்டபடியால் நான்காவது பூசையின்போது இறைவன் கருவறையிலேயே இருக்கின்றார். நான்காவது பூசை முடிந்ததும் குருக்கள் மற்றும் பிற கோயில் அதிகாரிகளும் கோயில் வாயிற்கதவுகளைச் சாத்திவிட்டு மதிய உணவிற்குச் சென்றிடுவார்கள்.

ஐந்தாவதான சாயரட்சை பூசை மாலை ஆறு மணிக்குத் தொடங்கும். இப்போது மேளகாரர்களும் இசை வித்வான்களும் நுழைவாயிலில் அமர்ந்துகொண்டு இசையொலிப்பார்கள். சூரிய அஸ்தமனத்தின்போது சங்கு ஊதப்பட்டு விளக்குகள் ஏற்றப்படும். பின்பு ஸ்தானிகர் கதவுகளைத் திறந்து கோயிலுக்குள் விளக்கேற்றுவார். குருக்கள் மீண்டும் நீராடி தூய ஆடை உடுத்தி கோயிலுக்குள் வருவார். பின்பு மூன்றாவதான உதயக்கால பூசையின் முறைகளைச் செய்து முடிப்பார். பெரும் பக்தர்கள் கூட்டத்தினிடையே இப்பூசையானது இரவு ஒன்பது மணி வரை தொடரும்.

இறுதியான ஆறாவது அர்த்தயாமபூசை முதல்காலப் பூசையினைப் போன்றதேயாகும். இப்பூசை முடிந்ததும் குருக்கள் சிவபெருமானின் பொற்சிலையைப் பல்லக்கிற்குக் கொண்டு வருவார். அங்கு கற்பூர ஆரத்தி எடுப்பார். அதன் பின்பு பல்லக்கு, ஊர்வலமாக வடக்குப்படி வழியாக எடுத்துச் செல்லப்படும். தூப தீபங்கள் சமர்ப்பிக்கப்படும். நந்திக்கு வெற்றிலைப் பாக்கு படைத்தபின்பு பல்லக்கு வடக்காகச் சுற்றி கிழக்கு தெற்குப் பக்கமாக இரண்டாவது பிரகாரம் கொண்டு செல்லப்படும். பின்பு பார்வதவர்த்தினியம்மன் சன்னதியின் தெற்கு வாயிலுக்குக் கொண்டு வரப்படும். அங்கு பல்லக்கிலிருந்து இறைவனின்

திருவுருவம் எடுக்கப்பட்டு பள்ளியறையில் வைக்கப்பெறும். கற்பூரம் ஏற்றப்பட்டு, இறைவனுக்கு நைவேத்யமாக பால் படைக்கப்படும். ஓதுவார் தேவாரப் பாடல்களை இசைப்பார்.[53] இதற்கிடையில் ஸ்தானிகர் இறைவன் உறைந்திருக்கும் ஊஞ்சலை முன்னும் பின்னும் அசைத்து, சாமரம் வீசுவார். பக்தர்களுக்கு திருநீறு வழங்கப்படும்.[54] இத்துடன் ஒருநாளின் கடைசிபூசை முடிவடையும். இறைவன் இறைவியின் மீதுள்ள ஆபரணங்கள் சரிபார்க்கப்பட்டு இரவு பத்து மணிக்குக் கதவுகள் சாத்தப்படும். நித்திய பூசையை விட சிறப்பானதும் அதிகச் செலவானதும் திருவிழாக்களேயாகும்.

## திருவிழாக்கள்

இந்துக் கோயில்களில் திருவிழாக்கள் நடைபெறுவது என்பது பொதுவானதும் இயல்பானதும் ஆகும். முன்னமே குறிப்பிட்டது போல் திருவிழாக்காலங்களில் இறைவன் இறைவியரது திருமேனிகளை நகரின் நான்கு முக்கிய தெருக்களில் ஊர்வலமாக எடுத்துச் செல்வது முக்கிய நிகழ்ச்சியாகக் கருதப்படுகின்றது. இத்தருணத்தில் வெவ்வேறு பகுதிகளிலிருந்தும் பக்தர்கள் இத்திருவிழாவினைக் கண்டுகளிக்க வருவது வழக்கம். இதன்பால் உறவினர்கள் மற்றும் நண்பர்கள் ஒன்றுகூடவும் திருமணங்கள் பேசி முடிக்கவும் வழி ஏற்படுகின்றது. உதாரணமாக விருதுநகர் மாரியம்மன் கோயில் திருவிழாவின்போது பெண்பார்த்தல் எனும் சடங்கு இன்றும் கடைபிடிக்கப்பட்டு வருகின்றது. இத்திருவிழாக்கள் தச்சர்களுக்கும், ஓவியர்களுக்கும், ஆசாரியருக்கும், கலைஞர்களுக்கும், மாலை செய்வோருக்கும் இன்ன பிறருக்கும் வேலைவாய்ப்பினைக் கொடுப்பதோடு, வியாபாரிகளுக்குக் கணிசமான வருவாயைத் தேடித் தருகின்றன.

இராமேசுவரம் கோயிலில் காலந்தோறும் திருவிழாக்கள் நடத்தப் பெறுகின்றன. அவை சைவரையும், வைணவரையும் ஈர்க்கின்றன. திருவிழாக்காலங்களில் இத்தீவு முழுவதுமே வியாபார மையமாகச் செயல்படுகின்றது.

## வெள்ளித் திருநாள்

வெள்ளித் திருநாளில் ஒவ்வொரு வெள்ளிக்கிழமையும் இரவு ஒன்பது மணியளவில் பர்வதவர்த்தினியம்மன் தங்கப்பல்லக்கில் மூன்றாவது பிரகாரத்தைச் சுற்றி வலம் வரும். அதன்பின்பு

அம்மனின் உருவச்சிலையும், இராமநாதர் திருமேனியும் சுக்கிரவார மண்டபத்திற்கு எடுத்து வரப்படும். இதனைத் தொடர்ந்து அம்மன் சன்னதிக்குச் செல்லும் தெற்கு வாயிலில் அமைந்துள்ள திருமலைசேதுபதி (1647 - 72) மற்றும் அவரது மகன் இரகுநாதசேதுபதி ஆகியோரின் சிலைகளுக்கு மாலை அணிவிக்கப்பட்டு மரியாதை செய்யப்படும். அவர்களுக்கு வெற்றிலைப் பாக்கு, மலர்கள் அர்ப்பணிக்கப்படும். இத்திருவிழாவை நடத்த ஏற்பாடுசெய்து அதற்கான பொருள்வசதியும் உண்டாக்கியவர்கள் இவ்விரு மன்னர்களே என்று கருதப்படுவதால்[55] அவர்களுக்கு இந்த மரியாதை நடைபெறுகிறது.

## பிரதோச பூசை

ஒவ்வொரு தமிழ் மாதமும் பதினைந்து நாட்களுக்கு ஒருமுறை இராமநாதரின் பொன் திருமேனி மூன்றாவது பிரகாரத்தில் ஊர்வலமாக எடுத்துச் செல்லப்படும். இதற்குப் பொன்னாலான ரிஷபவாகனம் பயன்படுத்தப்படும். இது மாலை 5 மணி முதல் 6 மணி வரை நடைபெறும். இந்தப் பிரதோசபூசை திரயோதசி திதியின் முடிவில் தொடங்கி சதுர்த்தி திதியின் தொடக்கம் வரை நடத்தப்பெறுகின்றது. இவ்விழா சிவபெருமானுக்கும் அவரது வாகனமான நந்திக்கும் நடைபெறும். இச்சமயம் சிவபெருமானை வழிபட்டால் துன்பம் நீங்கப் பெறலாம் என்ற நம்பிக்கை நிலவுகின்றது.

## மாதத் திருநாட்கள்

ஒவ்வொரு தமிழ் மாதத்திலும் வரும் கார்த்திகை நட்சத்திர தினத்தன்று (கார்த்திகை நட்சத்திரம் சுப்பிரமணியரின் பிறப்பு நட்சத்திரமாகும்) சுப்பிரமணியரின் திருவுருவம், அவரது மயில் வாகனத்தில் இரவு 9 மணி முதல் 10 மணிவரை ஊர்வலமாக நான்கு இரத வீதிகளிலும் எடுத்துச் செல்லப்படுகிறது[56]. தமிழ்க் கார்த்திகை மாதம் வரும் திருக்கார்த்திகைத் திருநாள், ஒவ்வொரு ஆண்டும் சிறப்பாகக் கொண்டாடப்படுகின்றது. பத்ம புராணத்தின்படி கார்த்திகை மாதத்தின் இருண்ட பாதியில் பதினான்காவது நாள், தீப உற்சவம் நடைபெறுகிறது. இந்நாள் குறைகளைத் தீர்க்கும்படி எமதேவனை வணங்குவதற்கு உகந்த நாளாகும். இந்நாளில் மாலையில் விளக்குகளால் கோயில்கள் அலங்கரிக்கப்படும்.

## ஆண்டுத் திருவிழாக்கள்

ஆண்டுதோறும் நடைபெறும் திருவிழாக்களில் குறிப்பிடத் தக்கவை மகாசிவராத்திரி விழா, இராமலிங்கப் பிரதிஷ்டை விழா, ஆடித் திருக்கல்யாண விழா, நவராத்திரி விழா போன்றவை யாகும். தவிர வசந்த உற்சவம், கந்த சஷ்டி உற்சவம் மற்றும் ஆருத்ராதரிசனம் போன்ற விழாக்களும் இராமேசுவரத்தில் நடத்தப்படுகின்றன. இத்தருணங்களில் நாட்டின் பல பகுதி களிலிருந்தும் பக்தர்கள் கூடுவர். தங்களது நன்றிக் கடனைச் செலுத்துவர்.

### மகாசிவராத்திரி

மகாசிவராத்திரி என்பது சிவபெருமானின் சிறப்புவாய்ந்த இரவு என்பதாகும். தொன்மக் கதைகளின்படி, இந்த நாளில் தான் தேவர்களாலும் அசுரர்களாலும் திருப்பாற்கடலில் அமுதம் வேண்டிக் கடைந்தபோது உண்டான விசத்தைச் சிவபெருமான் உண்டார்.[57] தேவர்களைக் காப்பதற்கே அவர் அவ்வாறு செய்தார். இதனைக் கொண்டாடும் இத்திருவிழா தமிழ் மாசி மாதம் (பிப்ரவரி மார்ச்) நடைபெறும். இவ்விழா பௌர்ணமிக்கு அடுத்த ஆறாவது நாள் தொடங்கி அமாவாசை அன்று முடிவடைகின்றது.

இத்திருவிழா அனைத்து முக்கிய சிவன் கோயில்களிலும் நடைபெறுவது வழக்கம். இருப்பினும், அவற்றில் குறிப்பிடத் தக்கவை வாரணாசி, இராமேசுவரம், மதுரை மற்றும் பிற ஜோதிலிங்க ஸ்தலங்களாகும்.[58] பன்னிரண்டு ஜோதிலிங்கங்களும் சிவபெருமானின் அவதாரங்கள் என்று சிவபுராணம் கூறுகின்றது.[59] எவனொருவன் பன்னிரண்டு ஜோதிலிங்கங்களின் பெயர்களை உச்சரிக்கின்றானோ அல்லது அவற்றைப் பற்றிய செய்திகளைத் தொகுக்கின்றானோ அவன் அனைத்துப் பாவங்களிலிருந்தும் நீங்கப்பெறுவான். சுத்திகளின் பலன் கிடைக்கும்.[60] இராமேசுவரத்தில் மகாசிவராத்திரி பன்னிரண்டு நாள் நடைபெறும். இது ஒன்பதாவது நாளில் களைகட்டும். இத்தருணத்தில் ரிஷபவாகனமும் வெள்ளி இரதமும் ஊர்வலமாக எடுத்துச் செல்லப்படும்.[61] வட இந்தியாவிலிருந்து வரும் புனிதப்பயணிகள் தனிப்பாத்திரத்தில் கங்கை நீர் கொண்டு வருவர். பல்வேறு கோயில்களில் கங்கா அபிஷேகம்

நடைபெறுவது உண்டெனினும் இராமேசுவரம் கோயிலில் இது தனிச்சிறப்புப் பெற்ற ஒன்றாகக் கருதப்படுகின்றது.[62] வடக்கிலிருந்து கங்கை நீர் கொண்டு வருபவர்கள் இங்கிருந்து கோடித்தீர்த்தம் கொண்டுசென்று அவர்களது இடங்களில் அபிஷேகம் செய்கின்றனர்.

இத்திருவிழா அமாவாசையன்று தொடங்குகிறது. அன்று இரவு முழுவதும் பால், தயிர், வெண்ணெய் மற்றும் தேன் கொண்டு மூன்று மணி நேரத்திற்கொன்றாக நான்கு அபிஷேகங்கள் நடைபெறுகின்றன[63]. இந்த அபிஷேகத்தின் போது 1008 சங்குகள் பயன்படுத்தப்படுகின்றன.

கீழ்க்கண்ட அட்டவணையின்படி இத்திருவிழாவில் வாகனங்கள் பயன்படுத்தப்படுகின்றன.

| நாள் | இறைவனுக்கான வாகனம் | தேவிக்கான வாகனம் |
|---|---|---|
| 1. | ரிஷபம் | ஹம்சம் |
| 2. | கற்பக விருட்சம் | காமதேனு |
| 3. | பூதம் | கிளி |
| 4. | கைலாசம் | சிம்மம் |
| 5. | யானை | யானை |
| 6. | ரிஷபம் | இந்திர விமானம் |
| 7. | இந்திர விமானம் | இந்திர விமானம் |
| 8. | இந்திர விமானம் | இந்திர விமானம் |
| 9. | இந்திர விமானம் | ரிஷபம் |
| 10. | ரிஷபம் | ரிஷபம் |
| 11. | கேடகம் | கேடகம் |
| 12. | கேடகம் | கேடகம் |

## வசந்த உற்சவம்

தொடக்கத்தில் சமயச்சார்பற்ற விழாவாக இருந்த வசந்த உற்சவம், சமய விசயங்களில் அதிக ஆர்வமிருந்ததன் காரணமாக சமய விழாவாக மாறி விட்டது.[64] இவ்விழாவின் காலம் ஒவ்வொரு கோயிலுக்கும் வேறுபட்டதாக உள்ளது. இராமேசுவரத்தில் இது

பத்துநாள் நடைபெறுகின்றது. வைகாசி மாதத்தில் (மே - ஜூன்) வளர்பிறையின் ஆறாவது நாள் தொடங்கி பௌர்ணமி வரை நடைபெறும். எனவே இது இளவேனிற்கால விழா எனவும் அழைக்கப்படுகிறது. இவ்விழாவில் சந்தனம், பூ, வாசனைத் திரவியம் கலந்த நீர் (பன்னீர்), ரோசா நீர், தைலம் மற்றும் குளிர்ந்த பொருட்களை வைத்து அபிஷேகம் நடைபெறும். இது கோடையின் வெப்பத்தைக் குறைத்து இறைவனுக்குக் குளிர்ச்சியை ஏற்படுத்துவதற்காக நடத்தப்படுகிறது.

## இராமலிங்கப் பிரதிஷ்டை

இராமேசுவரம் கோயில் ஸ்தலபுராணத்தைத் தழுவிய திருவிழா இதுவாகும். தமிழ் ஆனிமாதம் (ஜூன் - ஜூலை) வளர்பிறையின் ஆறாவது நாள் தொடங்கி பௌர்ணமி வரை பத்து நாட்கள் இது நடத்தப்படுகின்றது. இது இராமனாலும் சீதாதேவியாலும் இங்கு சிவலிங்கம் பிரதிஷ்டை செய்யப்பட்டதாக நம்பப்படுவதினைக் கொண்டாடுவதாகும்.

திருவிழாவின் முதல்நாளில் இராவண வதம் செய்யும் நிகழ்ச்சி நடைபெறும். இரண்டாவது நாளில் விபூசணனுக்குப் பட்டாபிசேகம் நடைபெறும். இராமாயணத்தின்படி இராவணன் இறந்தபிறகு அவன் தம்பி விபூசணன் இராமனால் இலங்கையின் அரசனாக்கப்படுகிறான்[65]. மூன்றாவது நாள் இராமலிங்க பிரதிஷ்டை நிகழ்ச்சி நடைபெறுகிறது[66]. இதன்பின் அடுத்த ஏழு நாட்கள் இவ்விழா தொடரும். இராமனும், இராமநாதனும் பரிவார தேவதைகளோடு இரத பவனி வருவர்.

## திருக்கல்யாண விழா

திருக்கல்யாண விழா ஆடி மாதம் (ஜூலை - ஆகஸ்டு) நடைபெறும். இது நெடுந்தூரத்திலிருந்து வரும் பயணிகளையும் கவரும் தெய்வீகத் திருமணக் காட்சியாகும். திருவாங்கூர் மகாராஜா, இராமநாதபுரம் சேதுபதி மன்னர்கள், கோட்டூர் இராஜகோபால சாஸ்திரி, திருச்சி குழுமணி முத்துராஜாக்கள், பச்சி இராமநாதசாஸ்திரி ஆகியோர் இந்தத் திருவிழாவுக்கானப் பொருள்வசதி செய்தவராவர்[67]. அனைத்து நாட்களிலும் வேதபாராயணம் நடைபெறும். கலை நிகழ்ச்சிகள் நடத்தப்படும். இத்திருவிழாவை விஜயரகுநாத சேதுபதி தொட்ங்கி வைத்ததாகக்

கூறப்படுகிறது[68] இதன் காரணமாக இத்திருவிழாக்காலத்தில் மேற்குக் கோபுர மண்டபத்திலிருக்கும் அவரது சிலைக்கு மரியாதை நடைபெறும்.

| நாள் | இறைவனுக்கான வாகனம் | இறைவிக்கான வாகனம் |
|---|---|---|
| 1. | | தங்க கேடக வாகனம் (இரவில்) |
| 2. | | தங்கப்பல்லக்கு (பகலில்) |
| 3. | | தங்கப்பல்லக்கு, காமதேனு, (இரவில்) |
| 4. | | தங்கப்பல்லக்கு, காமதேனு, ஹம்சம் (இரவில்) |
| 5. | | தங்கப்பல்லக்கு, சிம்மம் (இரவில்) |
| 6. | | தங்கப்பல்லக்கு, யானை (இரவில்) |
| 7. | | தங்கப்பல்லக்கு, ரிஷபம் (இரவில்) |
| 8. | | தங்கப்பல்லக்கு, வெள்ளி ரதம் (இரவில்) |
| 9. | | தங்கப்பல்லக்கு, குதிரை (இரவில்) |
| 10. | தங்கப்பல்லக்கு வெள்ளி ரதம் (பகலில்), கிளி (இரவு) | தங்கப்பல்லக்கு (பகலில்) |
| 11. | வெள்ளிகமலவாகனம் (தாமரை) | ரிஷபவாகனம் |
| 12. | | ஏக சிம்மாசன வாகனம் |
| 13. | | ஏக சிம்மாசன வாகனம் |
| 14. | | ஏக சிம்மாசன வாகனம் |
| 15. | | ஏக சிம்மாசன வாகனம் |
| 16. | | |
| 17. | | கேடக வாகனம் |

இத்திருவிழாவின்போது தேவிக்கே அதிக முக்கியத்துவம் கொடுக்கப்படுகின்றது. இது மனித வாழ்வில் திருமணத்தின்போது எப்படி மணப்பெண்ணுக்கு முக்கியத்துவம் தரப்படுகிறதோ அதைப் போன்றதேயாகும்.

## நவராத்திரி விழா

புரட்டாசி மாதம் வரும் ஒன்பது முக்கிய இரவுகளைக் கொண்டாடுவது கோயில்களில் குறிப்பிடத்தக்க ஒன்றாகும். இது பார்வதி அசுரனுடன் போர் தொடங்கும் நிகழ்ச்சியிலிருந்து ஆரம்பமாகும். இது தாய் வழிபாட்டோடு தொடர்புபடுத்தப் பட்டதாகும். பத்து நாட்கள் நடைபெறும் இவ்விழா தமிழ் புரட்டாசியில் அஷ்விய சுக்ல பிரதமையில் தொடங்கி விஜய தசமியில் முடியும் (வளர்பிறையின் முதல் நாள்).

கி.பி. 1658 இல் நவராத்திரித் திருவிழா நடத்துவதற்காக சங்கர குருக்களுக்கும் அவரது துணையாளர்களுக்கும் இரகுநாதசேதுபதி காத்தத்தேவர் கொடையளித்தார். [69]

## பிற திருவிழாக்கள்

ஐப்பசி மாதம் (செப்டம்பர் - அக்டோபர்) ஸ்கந்தசஷ்டி விழாவும், மார்கழியில் (டிசம்பர் - ஜனவரி) ஆருத்ராதரிசனமும், வைகுண்ட ஏகாதசியும், தையில் (ஜனவரி-பிப்ரவரி) மகர சங்கராந்தியும், சித்திரையில் (ஏப்ரல்-மே) பஞ்சமூர்த்தி விழாவும்[70] நடைபெறுகின்றன. ஆடி மாதத்தில் பௌர்ணமியிலும் அமாவாசையிலும் இராமேசுவரத்து அக்னிதீர்த்தத்தில் நீராடுவது (கடலில்) மிகச்சிறப்பானதாகக் கருதப்படுகிறது.[71] நாகதோசம் உள்ளவர்கள் தம்பதியர்களாக வந்து இத்தலத்தில் நாகப் பிரதிஷ்டை செய்கின்றனர். [72] இதனால் குழந்தைவரம் பெற்றுச் செல்வதாக நம்பிக்கை உள்ளது.

பூசைகளும் விழாக்களும் பற்றிய இக்கட்டுரையின் மூலம் இராமேசுவரம் ஆண்டு முழுவதும் திருவிழாக்கோலம் பூண்டிருப்பதை உணரமுடிகிறது. வெள்ளிக்கிழமை விழாவும், இராமலிங்க பிரதிஷ்டையும் தலபுராணத்தின் அடிப்படையில் ஏற்பட்டவையாகும். திருவிழாக்களும், நித்திய பூசையும் இங்கு முறைப்படி திட்டமிட்டுச் செயல்படுத்தப்படுகின்றன.

## குறிப்புகள்

1. எஸ்.சுவாமிநாத சிவாச்சாரியார், பதி. (1957), நித்திய பூஜா லச்சன சங்கிரஹம், ப.9
2. **Kumaratantra**, pat.39. மாதத் திருவிழாக்கள் பற்றிய அட்டவணையைக் கொண்டிக்கின்றது.

3. சைவர்களும் வைணவர்களும் தனித்தனி ஆகமங்களைக் கொண்டுள்ளனர். சைவ ஆகமங்கள் இருபத்தி எட்டு. அவை, காமீகம், யோகஜம், சிந்தியம், காரணம், அஜிதம், திந்திம், சூசமம், சக்ஸ்ரம், அம்சுமபேதம், சுப்ரபேதம், விஜயம், நிஹயசம், சுவயம், புவம், அணில் வீத், ரௌரவம், மகுடம், விமலம், சந்திராகனம், பிம்பம், புரோத்கீதம், லலிதம், சித்தம், சந்தானம், சர்வோக்தம், பரமேஸ்வரம், கிரனம் மற்றும் வாது ஆகிய ஆகமங்களாகும்.

4. Abbe J.A. Dubois, (1972), **Hindu Manners, Customs and Ceremonies**, ed.by Henry R. Beauchamp, pp.147-8.

5. எஸ். சுவாமிநாத சிவாச்சாரியார், முன்னது, பக். 14-15.

6. மேலது; பக். 28-23

7. T.K. T. Viraraghavacharya, (1977), **History of Tirupathi**, I, p.208, fn.

8. G.S. Ghurye, (1965), **Religious Consciousness**, p.317

9. மேலது; பக். 316-17.

10. George Michell, (1977), **The Hindu Temple**, p.63.

11. G.S. Ghurye, **op.cit.**, pp. 316-17.

12. டி.கே. சுந்தரமூர்த்தி (1976), பதி. திருப்பரங்குன்றம் தலபுராணம், ப.46.

13. **Indian Antiquary**, XII, pp.315-26.

14. முந்திய காலங்களில் இறைவனுக்கும் . இறைவிக்கும் அர்ப்பணிக்க வேண்டிய தங்கம் அல்லது வெள்ளியாலான' சிறு சிறு பில்யபாத்திரம், திரிசூலம், குடை ஆகியவற்றைக் கொண்டுவருவர். தங்கம் மற்றும் வெள்ளியிலான செம்பில் கங்கை தீர்த்தம் கொண்டுவந்து வணங்குவர்.

15. தமிழில் சேகண்டி என அழைக்கப்படுகிறது.

16. அவர்களில் மூவர் மேளம் வாசிப்போர்; இருவர் நாதசுவரம் வாசிப்போர்; ஒருவர் முரசு அடிப்பவர்.

17. அக்காலத்தில் குருக்களும், ஸ்தானிகரும் அன்றைய பூசை நடத்த வரும் போது அவர்களுடன் தேவதாசிகளும் வருவர் என ஜேம்ஸ் பர்கஸ் கூறுகின்றார். (I.A., XII, pp.315-26). ஆனால் தேவதாசி முறை ஒழிக்கப்பட்டபின் இந்த வழக்கமும் ஒழிந்தது.

இராமேசுவரம் கோயிலில் பணியாற்றிய தேவதாசிகள் அல்லது நாட்டியப் பெண்கள் ருத்ராக்சம் தவிர்த்த வேறெந்த ஆபரணமும் அணியவில்லை. அவர்கள் பெரும்பாலும் தீவுக்கு வெளியே இருந்து கொண்டு வரப்பட்டவர்கள் (Edgar Thurston, (1909), **Castes and Tribes of Southern India**, III, p.59).

18. மின்விளக்குகள் 1922 இல் பயன்படுத்தத் தொடங்கப்பட்டன. இருப்பினும் பழைமை மரபைப் பின்பற்ற வேண்டும் என்ற எண்ணத்தின் படி எண்ணை விளக்குகளே உட்கோயில்களிலும், பிரகாரங்களிலும், இரண்டாவது பிரகாரத்தில் உள்ள நந்திமண்டப வாசலிலும் இப்போதும் பயன்படுத்தப்பட்டு வருகின்றன.

இந்துக்களின் நம்பிக்கையின்படி அர்த்தயாமப் பூசைக்குப்பின் (ஒரு நாளின் இறுதிப் பூசைக்குப் பின்) சிவபெருமான் சயனாலயத்திற்குச் செல்கின்றார் (பள்ளியறைக்கு). இத்தருணத்தில் பார்வதியைக் கண்டதும் (பார்வதவர்த்தினி) கங்கை வெளியே சென்று மற்ற ஆறுகளிலும் தீர்த்தங்களிலும் கலக்கும். இவ்வேளையில் அனைத்துத் தீர்த்தங்களும் தூய்மையாகின்றன. எனவே மீண்டும் அடுத்த நாள் காலையில்,

கோயிலுக்கு, யானையின் மீதோ அல்லது பரிசாரகனின் தலையிலோ (கோயில் அலுவலர்) கங்கை நீர் கொண்டுவரப்படும். (நித்திய பூஜை லச்சனசங்கிரஹம், முன்னது; பக்.23–8)

20. "அவர்கள் பொன்னாலான இறையுரு ஒன்றைப் பல்லக்கில் வைப்பர். அதனைத் தெற்கு நுழைவாயிலுக்குக் கொண்டுவருவர். இசைக் குழுவினரும் நடனமாதர்களும் இரண்டு வெள்ளிக்கம்புகளும், இரண்டு கைவிளக்குகளும், ஒரு வெள்ளிக்குடையும் மற்றும் சாமரமும் முன்செல்ல, பல்லக்கு மேற்குத்திசை வழியாக இரண்டாவது பிரகாரத்தைச் சுற்றி சுவாமிசன்னதியின் கிழக்குவாசல் வழியாக வந்து அர்த்த மண்டபத்தில் வைக்கப்பெறும்". (I.A XII, pp e 315 – 26). இம்முறையானது இன்றும் கடைப்பிடிக்கப்பட்டு வருவதைக் காணலாம். ஆனால் இப்போது நடனமாதர்கள் இல்லை என்பது குறிப்பிடத்தக்கது.

21. திருமந்திரம், பா. 1824

22. இந்தமுறை நடத்தப் பெறாவிட்டால் பூசையானது சக்தியிழந்துவிடும் என்று நம்பப்பட்டு வருகின்றது. இதற்குக் காரணம் சண்டிகேசுவரர் சிவபெருமானின் தலைமை அடியார் என்றும், இவர் சிவபெருமானின் உடல்மேலிருந்து எடுக்கப்படும் அனைத்துப் பொருள்களையும் மகிழ்ச்சி யுடன் ஏற்றுக் கொள்வார் என்றும் கருதப்படுவதாகும் (குறிப்பு எண் 40 காண்க). சண்டிகேசுவரர் சிவன் கோயில் உடைமைகளுக்குப் பொறுப்பானவர் என்ற ஒரு கருத்தும், முன்னமே பயன்படுத்தப்பட்ட பொருட்கள் அனைத்தும் வெளியே போடப்படுவதற்கு முன் அவர் சரிபார்க்கிறார் என்ற நம்பிக்கையும் இருந்து வருகிறது.

23. இது ஒரு சடங்காகும். மகாமண்டபத்தில் அமர்ந்துகொண்டு, கிழக்கு முகமாகத்திரும்பி தனது வலதுகையின் நான்காவது விரலில் ஒரு தர்ப்ப மோதிரத்தை (பவித்ரம்) அணிகிறார். (இது ஆகர்சண சக்தி அல்லது பலத்தைக் கொடுப்பதாக நம்பப்படுகிறது). அதே விரலைச் சுற்றி இரண்டு தர்ப்பைப்புல்களை மடக்கி அவர் பிராணயாமம் செய்கிறார். அதாவது தனது நாசியை மூன்றாவது நான்காவது விரல்களால் பிடித்துக் கொண்டு மந்திரங்களைச் சொல்கிறார். பின்பு அவர் தனது கையை வலது காதில் வைக்கிறார். பின் இரண்டு கைகளையும் கோர்த்துக் கொண்டு மந்திரத்தைத் தொடர்கிறார்.

24. சிவ ஆகமங்களில் இது பொதுவான ஒன்றாகும். (கே.எம். சுப்பிரமணிய சாஸ்திரி, மொ.பெ.1930, அகோர சிவாச்சாரியாரின் பரார்த்த நித்ய பூஜை விதி, ப.5)

25. I.A., XII, pp. 315-26.

26. மஞ்சளுடன் கலந்த அரிசி.

27. "மண்டப சுத்யார்த்தம், திரவிய உபகர்ண சுத்யார்த்தம், பிம்பசுத்யார்த்தம், சுத்தார்த்த புண்யவசனம் கரிஸ்யே". இதன் பொருளாவது, இந்தப் புனித காலை பூசைக்காக இந்த இடத்தையும், பூசை பாத்திரங்களையும் தூய்மைப்படுத்துவற்காக நான் இந்த புண்ணியவசனம் சடங்கைச் செய்கின்றேன் (பரார்த்த நித்திய பூஜை விதி, பக். 10–25)

28. விருத்தி என்றால் வளர்ச்சி : புஸ்தி என்றால் செல்வம்; துஸ்தி என்றால் ஆனந்தம்; ஆரோக்கியம் என்றால் நோயற்ற தன்மை; தனதான்ய சம்ருத்தி என்றால் ஏராளமான பயிர்களும் செல்வமும்; கோபிரமணோபியம் சுபம் என்றால் அனைவருக்கும் நன்மை என்பதாகும்.

இதைச் செய்வதன் மூலம், குருக்கள் அனைத்து பக்தர்களின் வாயிலாகவும் அனைவருக்கும் செல்வத்தையும், சந்தோசத்தையும், ஆரோக்கியத்தையும் தரும்படி இறைவனை வேண்டுகிறார்.

29. இந்தச் சடங்கு ஆத்ம புரோக்சனம் எனப்படுகிறது. அதாவது ஆன்மா மற்றும் உடல் தூய்மை.

30. மனு சம்கிதையின்படி (இயல் V. செ. III) இரத்தினங்கள், உலோகப் பொருட்கள், கற்களினால் ஆன பொருட்கள் ஆகியவற்றை நீர், சாம்பல், மற்றும் மண்ணால் தூய்மை படுத்த வேண்டும். **(The Dharam Sastras, Hindu Religious codes,** VI, p.201).

31. புனித நீராட்டலின்போது குருக்கள் " சிந்து, சரஸ்வதி, யமுனா, கோதாவரி, நர்மதா, காவேரி, கபிலா, பிரயகனியதா, வெத்ரவதி, கிருஷ்ணா, பீமரதி, பல்கு, கண்டகி, கோமதி - ஆகிய ஸ்ரீஹரியின் (விஷ்ணு) பாதங்களிலிருந்து தோன்றிவருகின்ற, புனித நதிகள் என்றும் செல்வத்தை, வளமையைத் தரட்டும்" என்றும் வேண்டுவார்.

32. இந்த புனித நீராட்டலானது, பதினாறுமுறை, கீழ்க்கண்ட பொருட்களால் நடத்தப் பெறும் i)வாசனைத் தைலம் ii)எலுமிச்சைச் சாறு iii)பச்சைப்பயறு மாவு iv) மஞ்சள் தூள் v) ஈரத்துணி vi) பஞ்சகவ்யம் (பால், தயிர், பசுவின் சாணம், கோமியம் கலந்தது), vii) பால், viii) தயிர் ix) நெய் x) பஞ்சாமிர்தம் xi) பழச்சாறு xii) தேன் xiii) கரும்புச் சாறு xiv) இளநீர் xv) பன்னீர் மற்றும் xvi) தூயநீர்.

33. I.A, XII, pp.315-26

34. எஸ்.சுவாமிநாதசிவாச்சாரியார், முன்னது, பக்.28-33

35. ஓம் பூர்ப்புவசுவஹ; தத்ஸவிதுர்வரேண்யம்; பர்கோ தேவஸ்ய தீமஹி; தியோயோந ப்ரசோதயாத்". (ஓம் நமது புத்தியை இயங்கச் செய்யும் சூரிய நாராயணனை நாம் வணங்குவோம்).

36. ஏழு வகையான தீபங்கள் உள்ளன. I. ஏகமுக தீபம், ii) சப்தஸ்தான தீபம் (ஏழு தட்டுகளைக் கொண்டது), iii) பஞ்சசிர்ச நாக தீபம் (ஐந்து தலை நாக உருவமுடையது), iv) ரிஷப தீபம் (காளை உருவமுடையது), v) புருஷமிருக தீபம் (அரைமனிதன் அரை மிருக உடலமைப்புக் கொண்டது), vi) நட்சத்திர தீபம், vii) கும்பதீபம். எனவே இந்த தீபங்களின் பெயர்கள் அவற்றின் அமைப்பிலிருந்து பெறப்பட்டதாகும். தீபங்களை ஆராதனை செய்யும் விதம் உலகத்தின் இயக்கத்தைக் குறிப்பதாகும்.

37. எஸ். சுவாமிநாத சிவாச்சாரியார், முன்னது; பக்.28-33.

38. பர்வதவர்த்தினி சன்னதி, காசி விசுவநாதர் சன்னதி மற்றும் விசாலாட்சி சன்னதி.

39. தேவதாசி முறை ஒழிப்புக்கு முன் நாட்டியப் பெண்களும் ஊர்வலத்தில் கலந்து கொண்டனர்.

40. சண்டிகேசுவரர் சன்னதியில் வைக்கப்பட்ட பூக்கள், நைவேத்தியம் அல்லது மற்ற எந்த படையலையும் எவரும் பயன்படுத்தக் கூடாது என்று காரணாகமம் கூறுகின்றது. இவை ஒரு கிணற்றில் போடப்பட வேண்டும், அல்லது தீயில் அழிக்கப்பட வேண்டும். (கே.எம். சுப்பிரமணிய சாஸ்திரி, மொ.பெ., (1927), அப்பய தீட்சிதரின் சிவார்ச்சன சந்திரிகா, பக். 218-19).

41. நீராட்டும் சடங்கு 1. வாசனைப் பொடி 2. மஞ்சள் மற்றும் இலவங்கப் பொடி, 3. இளநீர் 4. தயிர், நெய், தேன் மற்றும் 5. பஞ்சகவ்யம் ஆகியவற்றை உள்ளடக்கியதாகும். இறுதியில் தூய்மையான நீரால் நீராட்டப்படும்.

42. இது காரச்சுவையுணவு மற்றும் பச்சைப்பயறு ஆகியவை சேர்ந்த கலவையாகும். (முகச்சிகிச்சடி).

43. அக்காலத்தில் வட இந்தியாவிலிருந்து வரும் புனிதப்பயணிகள் கங்கையிலிருந்து தீர்த்தம் கொண்டுவருவர். இது மிகுந்த மரியாதைகளுடன் பெறப்படும். யானைகள், நடனப் பெண்கள், இசைக் கலைஞர்கள் வெளி சென்று வரவேற்பர். பின் இதனைக் கோயிலுக்கு அறிவிப்பர். (I.A., XII. pp 315–26). ஆனால் எப்பொழுதுமே கங்கை நீர் கொண்டு வருவது சாத்தியமானதல்ல. எனவே இக்கோயிலில் உள்ள கங்காதீர்த்தத்திலிருந்து நீர் கொண்டு வரப்படுகிறது. கங்கை நீரினால் எவனொருவன் சிவபெருமனை நீராட்டி, பய பக்தியோடு இராமேசுவரனை வணங்குகின்றானோ அவன் பிறவியறுக்கப்படுகிறான் என்று சிவபுராணம் கூறுகிறது **(Siva Purana, Kotirudra Samhita**, ch.31, 1.42).

44. குருக்கள் இலிங்கத்திற்கு ஆடை அணிவிக்கிறார், சந்தனக் காப்பு செய்கின்றார், இலிங்கத்தில் வெள்ளிக் கவசக் கண்களைப் பதிக்கின்றார், பின்பு மாலையணிவிக்கின்றார்.

45. "ஓம் பிராணாய சுவாஹ, ஓம் அபநயசுவாஹ; ஓம் வியநயசுவாஹ; ஓம் உதணய சுவாஹ; ஓம் சமநய சுவாஹ; ஓம் பிரம்மனே சுவாஹ".

46. இறைவன் உணவு உட்கொள்வதற்காக அவரது கைகளைக் கழுவிக் கொள்ளும்படி வேண்டி நீர் அர்ப்பணிக்கப்படுகிறது.

47. நீராட்டுவிழா தொடங்கும்போதும், அது முடிவடையும் போதும், அர்ச்சனையின் போதும், திருவமுது படைக்கும் போதும், உத்சவத்தின் தொடக்கத்திலும் முடிவிலும் கோயிலில் உள்ள பெரிய மணிகள் அடிக்கப்படும். இது அனைத்து பக்தர்களின் கவனத்தையும் கருவறையின் பக்கம் திருப்புவதற்காக நடைபெறுகின்றது.

48. ஒவ்வொரு தீப ஆராதனையின்போதும் குருக்கள் தனது கைகளை அலம்பி, தீபத்தின் மீது பூ போட்டு வாங்கி ஆரத்தி எடுப்பார். இதற்குக் காரணம் தீபமானது வணங்கத்தக்க ஒன்றாகும். இது ஒளியின் கடவுளின் (சூரியனின்) குறியீடாகும்.

49. பஞ்ச முத்திரைகள் என்பவை சிவபெருமானுக்குக் காண்பிக்கப்படும் ஐந்துவகைக் கை நிலைகளைக் குறிப்பதாகும். அவை சிவபெருமானின் ஐந்து முகங்களை ஒத்ததாகும்.

50. ஐந்து பிராமணங்களாவன - ஐத்ரேய பிராமணம், கௌசிதகி அல்லது சங்காயன பிராமணம், ஜைமினியபிராமணம், தண்டிய மகா பிராமணம், அல்லது பஞ்சவிம்சதி பிராமணம் மற்றும் சதபத பிராமணம். அதர்வவேதம் கோபாதபிராமணம் என்ற ஒன்றையும் குறிப்பிடுகின்றது. இது மேலே குறிப்பிடப்பட்ட ஏதேனுமொரு பிராமணத்தின் பிறிதொருபெயராகலாம்.

51. ஆறு அங்கங்களாவன வியாகரணம், தர்க்கம், மீமாம்சம், வேதாந்தம் ஜோதிஸம், நிர்த்தம் ஆகியனவாகும்.

52. ஆச்சமனம் என்பது மார்பு மற்றும் தொண்டையைத் தூய்மைப்படுத்து வதைக் குறிக்கும். ஏனெனில் அவற்றிலிருந்துதான் மந்திர உச்சரிப்பு

தொடங்குகிறது. குளிர்ச்சியான நீரினால் ஆச்சமனம் செய்யப்பட வேண்டும். (Manu Samhita, ch. II, v.61)

53. தேவதாசி முறை வழக்கிலிருந்தபோது சுவாமி சன்னதியிலிருந்து அம்மன் சன்னதிக்குப் பல்லக்கு செல்லும் போது நாட்டியப் பெண்கள் தேவாரப் பாடல்களைப் பாடுவர். ஆனால் இம்முறை ஒழிக்கப்பட்டபின் இப்பணியை ஓதுவார்கள் செய்கின்றனர்.

54. ஒவ்வொரு நாளும் அர்த்தசாமப் பூசையில் கலந்து கொள்வதற்காக் விஜயரகுநாதசேதுபதி (கி.பி. 1711-25) பாம்பன் கால்வாயைக் கடந்து குதிரையில் வருவார் என்று மரபு வழியாக நம்பப்படுகிறது. இப்பூசையைக் கண்டுகளித்த பின்பே மன்னர் இரவு உணவு உட்கொள்ளுவார். சில நாட்கள் மழையின் காரணமாகவோ அல்லது வேறு காரணமாகவோ அவர் இப்பூசைக்கு வரமுடியவில்லையெனில் அனுப்புமண்டபத்தில் உள்ள சேதுபதி ஈசுவரர், சேதுபதி ஈசுவரி என்று அழைக்கப்பட்ட இறைவன் இறைவிக்கு நைவேத்தியம் செய்வர். உண்மையில் இவ்வுருவங்கள் இராமநாதர், பர்வதவர்த்தினி, காசிவிசுவநாதர், விசாலாட்சி யுடையதாகும். இந்த இறையுருவங்கள் இன்றும் உச்சிக்காலப் பூசையின்போதும் சாயரட்சை பூசையின்போதும் மரியாதை செலுத்தப்படு கின்றன. இந்த நிகழ்ச்சிகளின் நினைவாக விஜயரகுநாதசேதுபதியின் குதிரை மீதமர்ந்த உருவம், அனுப்பு மண்டபத்தூண் ஒன்றில் பொறிக்கப்பட்டுள்ளது (Somalay, ed. Saga of Rameswaram temple, **op.cit.**, p.442; R.Nagasamy, (1978), **Ramanathapuram**, pp.41-2).

அர்த்தசாமப் பூசைக்குப்பின் பாஸ்கரசேதுபதி இறைவனின் ஊர்வலத்துடன் தங்கக் கைவிளக்கோடு செல்வார். அதன்பின் பைரவரை வணங்குவார். கடற்கரைக்குச் சென்று இறைவன் இறைவிக்குப் படைக்கப்பட்ட நைவேத்திய பிரசாதத்தைப் பெற்றுக் கொண்டு இராமநாதபுரம் திரும்புவார். இதனை இவர் இறக்கும் வரை, 1903 வரை, வழக்கமாகக் கொண்டிருந்தார்.

55. கி.பி. 1640 இல் திருமலை, புளியங்குடி, குமாரக்குறிச்சி, கருமல் ஆகிய கிராமங்களைக் கோயிலுக்கு அளித்ததாகச் சொல்லப்படுகிறது. கி.பி. 1648 இல் இரகுநாதர் முகிழ்த்தகம், நம்புகாழை, மற்றும் ஆத்தூர் ஆகியவற்றைக் கொடுத்தார். இவை செப்புப் பட்டயங்களாகக் கொடுக்கப்பட்டன (I.A. XII, pp 315-26). ஆனால் இந்தப் பட்டயங்கள் தற்போது கிடைக்கவில்லை.

56. இறைவன் திருமேனியின் ஊர்வலத்தின்போது இசைக்கருவிகள் ஒலிக்கப்படும். அவையாவன சங்கு, தாரை, தம்பட்டம், தாகா ஆகியவையாகும். இதன்பின்பு வேதபாராயணம் செய்யப்படும் (**Isvarasamhita**, ch. 11, pp. 299-300; **Jayakhvasamhita**, pat.20, v.191; **Anirud-dhasamhita**, ch.21, v.44).

57. Somalay, **Festivals of the Tamils**, Cultural Heritage of the Tamils, 1978, Feb. 25-7).

58. *மேலது, ப. 25*

59. **Siva Purna, Kotirudra Samhita**, ch.2, p.1263

60. சுத்தி என்பது தூய்மை, துப்புரவு, புனிதத்தன்மை, உண்மை போன்றவையாகும். சில சமயங்களில் இது துர்கா எனவும் அழைக்கப்படுகிறது. (J.F. Seunarine (1977), **Reconversion to Hinduism Through Suddhi**, p.28)

61. கடவுளின் திருவுருவங்கள் ஊர்வலமாக எடுத்துச் செல்லப்படும் போது அவர்களது தேவியரையும் உடனழைத்துச் செல்வது முறையாகும் (Rauravagama, pat. 18, p.201)

62. குறிப்பு எண் 43 ஐக் காண்க.

63. சோமலே, (1974), தமிழ்நாட்டு மக்களின் மரபும் பண்பாடும், ப.135.

64. B.S. Upadyaya, (1947), **India in Kalidasa,** p.2

65. கம்பராமாயணம், யுத்தகாண்டம், செய் 10096-10108

66. Somalay, Saga of Rameswaram temple, **op.cit.,** pp.10-11. இராமலிங்க பிரதிஷ்டை மூன்று நாள் திருவிழாவாகும். அதாவது இராவண்ன் வதம், விபூசணனின் பட்டாபிஷேகம், இலிங்க பிரதிஷ்டை ஆகியவையாகும். முதலாவது திட்டக்குடியிலும், இரண்டாவது கோதண்டராமசாமி கோயிலிலும், மூன்றாவது இராமேசுவரம் கோயிலிலும் நடைபெறும் (Somalay, **Festivals of the Tamils,** Cultural Heritage of the Tamils, **op. cit.** p.12.

67. மேலது ப.13

68. மேலது பக். 11-13.

69. Burgess and Natesa Sastri - **op.cit.,** pp. 72-4

70. சிவன் கோயில்களில் பஞ்சமூர்த்தி என்பவர்கள் கணபதி, சுப்பிரமண்ணியர், சிவன், பார்வதி, சண்டிகேசுவரர் ஆகியோராவர். இவர்கள் பூசையின் அனைத்து நிலையிலும் மரியாதை செய்யப்படுவர்.

71. சோமலே, தமிழ் நாட்டு மக்களின் மரபும் பண்பாடும், முன்னது, ப.33.

72. மேலது, ப.54.

# 7. கோயில் நிர்வாகமும் வழக்கும்

தமிழகத்துப் பழைமையான கோயில்கள் ஒவ்வொன்றும் அக்காலத்தில் மன்னர்களின் கொடைகளால் ஏராளமான நிலங்களையும் பிற செல்வங்களையும் பெற்றிருந்தன. அவற்றில் வரும் வருமானங்களைக் கோயில் பூசைக்கும் விழாக்களுக்கும் செலவிட்டனர். இதனைச் சரிவர நிர்வகிக்க அதிகாரிகளும், குருக்களும் நியமிக்கப்பட்டனர். அவ்வகையில் இராமேசுவரம் கோயிலிலும் அதற்கென்று ஒரு நிர்வாக அமைப்பு தொன்றுதொட்டுநிலவிவந்துள்ளது.

இந்து கோயில்கள் சமய நிறுனங்களாக மட்டுமல்லாது மக்களின் பொருளாதார வாழ்வினை மேம்படுத்தும் இடமாகவும் கல்விக்கூடமாகவும், கிராமப் பொதுவழக்குகளைத் தீர்க்கும் நீதிமன்றமாகவும், விளங்கிவந்துள்ளன. குருக்களுக்குப் பயிற்சி கொடுக்கவும், ஆன்மீக வழிகாட்டவும், கோயில்கள் பள்ளிகள் மூலமும் கல்லூரி மூலமும் கல்விப்பணிஆற்றிவந்தன. கோயிலில் மடங்கள் கல்விப் பணியாற்றின. இதற்கான செலவுகள் கோயில் பணத்திலிருந்து ஏற்றுக்கொள்ளப்பட்டது. இந்தக் கோயில் நிறுவனங்கள் வேத, சாத்திர, புராணக்கல்வியையே வற்புறுத்தின. அவை ஏழைகளுக்கு உணவளித்தன. நல்ல காரியங்களுக்கு பண உதவியளித்தன. உள்ளூர் மக்களுக்கு வேலைவாய்ப்பளித்தன, அவர்கள் கோயிலில் பணியமர்த்தப்பட்டனர். பொருளாதார வளர்ச்சியில் ஈடுபட்டன. கோயில் நிர்வாகத்திற்காக நிலங்கள் பெறப்பட்டன.[1] பிறகோயில்களைப் போன்றே இராமேசுவரம் கோயிலுக்கும் மன்னரும் பிறரும் ஊர்களையும் நிலங்களையும் தானமாக அளித்துள்ளனர்.

## தொடக்ககாலம்

தொடக்ககாலத்தில் இராமேசுவரம் கோயில் நிர்வாகத்தைத் தனிப்பட்ட சன்னியாசிகளும், அதிகாரிகளும் கவனித்து வந்ததாகத் தெரிகின்றது. அவர்கள் பெரும்பாலும் அப்பகுதியை ஆண்டு வந்த மன்னர் பரம்பரையினரால் பணியமர்த்தப்பட்டுள்ளனர். ஆனால் நாயக்க மன்னர்களின் ஆட்சிக்காலத் தொடக்கம் வரையிலான நிர்வாக முறையைப்

பற்றி அறிய சான்றுகள் கிடைத்தில. தமிழகத்தின் பிற முக்கிய கோயில்களில் கல்வெட்டுச் சான்றுகள் மூலமே நிர்வாகமுறையை சரிவர அறியமுடியும். ஆனால் இங்கு அப்படிப்பட்ட கல்வெட்டுச் செய்திகள் அதிகமாகக் கிடைக்கவில்லை.

## நாயக்கர் காலம்

விஜயநகரப் பேரரசர்கள் தமிழகத்தைக் கைப்பற்றியபோது தென்கோடியில் இராமேசுவரமும் அவர்களது பகுதியானது.[2] இக்கோயிலுக்கு அவ்வரசர்கள் அளித்த கொடைகளிலிருந்து, இக்கோயில் நிர்வாகத்தை அவர்கள், *1529* இல் நாயக்கர் அரசு ஏற்படும் வரை, கவனித்து வந்தார்கள் எனத் தெரிகின்றது. இக்காலகட்டத்தில் கோயில் குருக்கள் ஒருவரே நிர்வாகியாக அல்லது மேலாளராக நியமிக்கப்பட்டார் என அறிகிறோம். இதனைத் தொடர்ந்து நாயக்க மன்னரும் இம்முறையைப் பின்பற்றியுள்ளனர். இதனை உறுதிப்படுத்தும் வகையில் சில கல்வெட்டுச் சான்றுகளும், காணப்படுகின்றன. கி.பி. *1578* ஆம் ஆண்டுக் கல்வெட்டு ஒன்று[3] விசுவநாத நாயக்கர் *(1529-64)* பற்றிக் குறிப்பிடுகிறது. இது அவரது பேரனான வீரப்ப நாயக்கருடையதாகும் *(1572-95)*. துரதிர்ஷ்டவசமாக இதில் உள்ள செய்திகள் சிதைந்து விட்டன. கி.பி. *1581* ஆம் ஆண்டுக் கல்வெட்டு நாயக்கரின் பொக்கிசத்திலிருந்து மதுரை சொக்கநாதசுவாமி கோயிலிலிருந்து இராமேசுவரம் கோயில் கணக்குக்காகப் பெறப்பட்ட வரிகள் பற்றித் தெரிவிக்கின்றது[4]. இது மேலும் இக்கோயிலுக்கு *700* பொன்னை (தங்க நாணயம்) வீரப்பநாயக்கர் கொடையளித்ததாகவும் குறிப்பிடுகிறது. கி.பி. *1582* ஆம் ஆண்டின் கல்வெட்டொன்று விசுவநாதநாயக்கர் பெயரால், வீரப்ப நாயக்கர் இக்கோயிலுக்கு நிலதானமளித்துள்ள செய்தியைக் கூறுகிறது.[5] கோயிலின் மிகப்பெரிய நந்திக்கு முன்பாக நாயக்கர் சிற்பங்கள் வைக்கப்பட்டுள்ளன. இவையனைத்தும் இக்கோயில் நிர்வாகம் நாயக்கர்களின் கட்டுப்பாட்டில் விளங்கிவந்துள்ளதை உணர்த்துகின்றன. கி.பி. *1595* இல்,[6] தஞ்சை அச்சுத நாயக்கர் இராமநாதபண்டாரம்[7] என்பவருக்கு ஒரு பட்டயம் கொடுத்துள்ளார். இதன்படி தஞ்சைப் பகுதியில் பரெயாளத்தூர், சோழதேயபுரம், இராமநாதநல்லூர், சட்டம்பட்டி ஆகிய ஊர்களிலிருந்து கிடைக்கும் வருவாயை இராமேசுவரம் கோயில் கட்டளைகளுக்காகப் (பூசை முதலான செலவுகளுக்காக)ப் பயன்படுத்திக் கொள்ளும்படி அனுமதிக்கப்பட்டது.

திருமலைநாயக்கரின் (1623-59) செப்புப்பட்டயம்[8] ஒன்றில் அவரது மேலாண்மையின் கீழ் இராமநாதபுரத்தில் ஆட்சி செய்த தளவாய்சேதுபதியும், இராமேசுவரம் கோயில் குருக்களும் (priests) கையொப்பமிட்டுள்ளனர். இது இக்கோயில் நிர்வாகத்தில் நாயக்கர்களின் கட்டுப்பாட்டைத் தெரிவிக்கும் முக்கிய ஆவணமாகும்.

இதன்படி, குருக்கள்மார் (அல்லது புரோகிதர்) கோயிலிலும் இதனைச் சேர்ந்த பிறவற்றிலும் எவ்விதத்தடையுமின்றி நித்திய பூசை செய்யவும், திருவிழாக்கள் நடத்தவும் ஒப்புக் கொண்டனர். அவ்வாறு செய்யத் தவறினால் 1200 தங்க நாணயங்களை அபராதமாகக் கட்டுவதோடு பதவி விலகிக் கொள்வதாகவும் உறுதியளித்தனர். அவர்களது சார்பாக கையொப்பமிட்ட குருக்களின் பெயர்களும் இச்சாசனத்தில் கொடுக்கப்பட்டுள்ளது. திருமலைநாயக்கர் காலத்தில் சேதுபதிகள் அவருக்குப் பணிந்து செயல்பட்டதையும் இது குறிக்கின்றது. ஆனால் அவருக்குப்பின் அவரது பேரன் சொக்கநாதர் காலத்தில் அவர்கள் எதிர்க்கத் தலைப்பட்டனர்[9]. இதற்குப்பின் இக்கோயில் மீதான நாயக்கர்களின் மேலாண்மையை அறிய செய்திகள் கிடைக்கவில்லை.

## சேதுபதிகள்

இராமநாதபுரத்தை ஆண்ட சேதுபதி மன்னர்கள் வழிவழியாக இக்கோயில் நிர்வாகத்தில் பங்கெடுத்துக் கொண்டிருக்கின்றனர். விஜயநகர நாயக்க அரசர்களைப் போன்றே கோயில் நிர்வாகத்தைக் கவனிக்க மேலாளர்களை நியமித்தனர். கி.பி. 1609 இல் தளவாய்சேதுபதி இராமநாத-பண்டாரம் என்பவரை கோயில் நிர்வாகப் பொறுப்பில் அமர்த்தினார். அவருக்கு, கோயில் சொத்துக்களை நிர்வகிக்கவும் பணியாளர்களைக் கட்டுப்படுத்தவும், குத்தகைதாரர்களிட மிருந்து வசூல் செய்யவும் தங்களது கடமையிலிருந்து தவறுபவர் களைத் தண்டிக்கவும் அதிகாரம் வழங்கப்பட்டது.[10] இம்மன்னர் தொடர்ந்து, இராமநாதபண்டாரத்திற்கு கி.பி. 1616, 1627 மற்றும் 1631 இல் பட்டயங்கள் வழங்கினார். இதன்படி சந்தனக் காப்பு செய்வதற்காகவும் மஞ்சள் அலங்காரம் செய்யவும், தொடர்ந்து மேலாளர்களை நியமிக்கவும் கட்டளைப்பணத்தைப்

பயன்படுத்தவும் அவருக்கு உரிமை வழங்கப்பட்டது. கோயில் வருவாயிலிருந்து அபிஷேகம், நைவேத்தியம், திருவிழாக்கள் ஆகியவற்றிற்கான செலவுகளைச் செய்து கொள்ளவும் உரிமை வழங்கப்பட்டது.

கி.பி. 1633 இல் ஆண்டோபெரய தொண்டைமான் என்பவரால் சிதம்பரநாத பண்டாரத்திற்கு ஒரு பட்டயம் கொடுக்கப்பட்டது. இது,அபிஷேகம், நைவேத்தியம், மற்றும் நெய் விளக்கெரிப்பதற்காக சில கிராமங்களை தானமளித்ததைத் தெரிவிக்கிறது. இந்த ஆண்டோபெரய தொண்டைமான் ஒருவேளை சேதுபதியின் முக்கிய அதிகாரியாயிருக்க வேண்டும். மதுரை நாயக்க அரசின் குமார முத்துரங்க சொக்கலிங்கதுரை நாயக்கர் என்பவர் இராமேசுவரம் கோயில் பூசைகளும் சடங்குகளும் நடத்துவதற்காக இராமநாதபண்டாரத்திற்கு ஒரு பட்டயம் அளித்தார் (1638). 1639 இல் திருமலை சேதுபதி காத்தத் தேவர் இராமநாதபண்டாரத்திற்கு ஒரு பட்டயம் கொடுத்தார். இதில் ஆனி மாதம் (ஜூன்-ஜூலை) நடைபெறும் கோயில் சடங்குகளுக்கு வேண்டிய வசதிகள் செய்துகொடுப்பது பற்றி கூறப்பட்டுள்ளது. 1648 இல் இரகுநாதசேதுபதி காத்தத்தேவரும் அவருக்கு ஒரு பட்டயம் கொடுத்து பூசைகளும், திருவிழாக்களும் நடத்த உத்தரவளித்துள்ளார்.[11] திருமலைசேதுபதியின் செப்புப்பட்டயம் (கி.பி. 1651) ஒன்று கோயில் வருமானத்தைத் சரியான வழியில் செலவு செய்திடவும், வழிபாடு நடத்திடவும் இராமநாதபண்டாரத்துக்கு அதிகாரமளித்துள்ளது.[12] 1682 – இல் நம்பித்தலை, ஆதனூர் ஆகிய கிராமங்களை நெட்டூர் வெள்ளையபிள்ளையின் மகன் தேவகுன்னேயபிள்ளையின் பெயரில், இரகுநாததேவர் சேதுபதி தானமாகக் கொடுத்துள்ளார். இது கோயில் கட்டளை ஏற்படுத்துவதற்காகவும், கோயில் பணியாளர்களுக்கு அரிசி வழங்குவதற்காகவும் கொடுக்கப் பட்டதாகும்.[13] 1690 ஆம் ஆண்டின் இரகுநாததேவரின் ஆவணம் ஒன்று[14] இக்கோயில் பண்டாரத்தின் பொறுப்பிலிருக்கும் கிராமங்களுக்கு வரிவிலக்கு அளித்துள்ளது.

1772–இல்,[15] இக்கோயில் பண்டாரம், பட்டர்கள், ஸ்தலத்தார், பார்ச்சித்தர்கள் ஆகியோர் தங்கள் பணிகளைச் செய்ய வேண்டுமென ஆற்காடு நவாப்பிடமிருந்து கடிதம் அனுப்பப்பட்டது. மழைக்காக வேண்டும்படி பிராமணர்களுக்கு அறிவிக்க வேண்டியும், வராஹப்பரியிலிருந்து திருடுபோன

பித்தளைப் பாத்திரங்களைக் கண்டுபிடிக்க 1000 ஜபம் பண்ணவேண்டியும் இராமநாதபண்டாரத்துக்கு நவாப் மற்றொரு கடிதம் எழுதினார். மேலங்குடி உள்ளிட்ட இருபத்தி எட்டு கிராமங்களை இராமேசுவரம் கோயிலுக்கு மீண்டும் கொடுத்துவிடும்படி முகம்மது வூலேசன் என்பவருக்கு ஆணை பிறப்பித்தார். இராமநாதபுரத்து அதிகாரிகளில் ஒருவரான மூதுல் வந்த்ரோய் இக்கோயில் நிலங்களை விடுவிக்க வேண்டுமென, நவாப், அவருக்கு ஆணையிட்டார். அம்பலகாரர்கள் (கிராம அதிகாரிகள்), கர்ணம் (கணக்கர்) மற்றும் செட்டிக்குறிச்சி, கூத்தப்பாறை போன்ற கிராமங்களின் மக்கள் ஆகியோருக்கும் ஆணை பிறப்பிக்கப்பட்டது. அவர்கள் அந்த கிராமங்களை இராமநாதபண்டாரத்திடம் ஒப்படைக்க வேண்டுமெனக் கூறப்பட்டனர். சிவகங்கையின் அதிகாரியான நாகப்ப முதலியும் இக்கோயிலுக்குச் சொந்தமான நிலங்களை விடுவிக்கும்படி ஆணையிடப்பட்டார். அனுமந்தங்குடியின் அதிகாரியான ராயலு பண்டிதரும், செயிக் முகைதீனும் அப்பகுதிகளில் இக்கோயிலுக்குச் சொந்தமான கிராமங்களை ஒப்படைக்கும்படி கூறப்பட்டனர்.[16] 1793 இல், முத்துராமலிங்க சேதுபதி, ஐந்து வயதே நிரம்பிய இராமநாதபண்டாரத்தை இராமேசுவரம் கோயில் மேலாளராக நியமித்தார்.[17] இத்தருணத்தில் இராமநாதபுரப்பகுதியில் இன்னல்கள் நிறைந்த சூழ்நிலை நிலவியதாக நெல்சன் கூறுகின்றார்.[18] இதனைத் தொடர்ந்து தமிழகத்தில் ஆங்கில அரசின் நேரடி ஆட்சி ஏற்படலாயிற்று.

1800, ஏப்ரல் 26 இல், இராமநாதபுரம் ஆட்சியாளர் லூசிங்டன் என்பார், இக்கோயிலைச் சேர்ந்த ஈசுவரபட்டர் என்பவருக்குச் கடிதம் ஒன்று எழுதினார். இதன்படி வரிபாக்கியான 500 சுக்ரம் பணத்தை உடனடியாக செலுத்த வேண்டும் என்றும் இல்லையெனில் கிராமங்கள் திரும்பப் பெறப்படும் என்றும் சொல்லப்பட்டது.[19] இவ்வாட்சியாளர், இராமநாத பண்டாரத்திற்கு அனுப்பிய (1802, டிசம்பர், 1) மற்றொரு கடிதத்தில் கோயில் நிலங்களிலிருந்து தரவேண்டிய 300 சுக்ரம் பணம் கொடுக்க வேண்டும் என கேட்டுக் கொண்டார். இப்பண்டாரத்திற்கு அனுப்பிய பிறிதொரு கடிதத்தில் இக்கோயிலுக்கு ஒரு யானை வழங்கப்பட்டுள்ளதென்றும் அதற்கான செலவை கோயில் வருவாயிலிருந்து ஏற்றுக் கொள்ள வேண்டுமெனவும்

கூறப்பட்டிருந்தது. லூசிங்டனுக்குப் பின் வந்த பாரிஸ் என்பார், பண்டாரத்திற்கு 1802, 1803 ஆண்டுகளில் எழுதிய கடிதங்களில் முறையே 450 மற்றும் 300 சுக்ரம் பணம் கட்டும்படி கூறினார். மேலும் அவர் 1803 செப்டம்பரில் இங்குள்ள இறைவனுக்கு வெள்ளி பிரபை செய்து வைக்கும்படி கூறினார். 1804 ஆம் ஆண்டு மார்ச் 3 ஆம் நாள் இக்கோயிலின் மரபு பற்றிய கேள்விகளுக்கு விடையளிக்கப் பணிக்கப்பட்டார். [20]

இந்தக் கடிதப் போக்குவரத்துகள் அனைத்தும், இக்கோயில் நிர்வாகம் தொடர்ந்து பண்டாரங்களின் வாரிசுகளால் நிர்வகிக்கப்பட்டன என்பதைத் தெளிவாக்குகின்றன. அதே நேரத்தில் அவர்கள் அப்பகுதியின் அரசர்களின் அல்லது அதிகாரிகளின் ஆணைகளின்படி செயல்பட்டுள்ளனர் என்றும் தெரிகின்றது. நாயக்கர்களும் சேதுபதிகளும் நவாபும் கிழக்கிந்தியக் கம்பெனியும் பண்டாரங்களின் நிர்வாக அதிகாரத்தை அங்கீகரித்ததோடு அவர்களுக்குப் பட்டயங்களும் வழங்கினர். இப்பண்டாரங்களில் பலருக்கு இராமநாதபண்டாரம் என்று பெயரிடப்பட்டிருக்கிறது. இருப்பினும் பத்தொன்பதாம் நூற்றாண்டின் தொடக்கத்தில் சேதுபதிகளுக்கும் பண்டாரங்களுக்கிமிடையே கோயில் நிர்வாகப் பொறுப்பு பற்றி சச்சரவு ஏற்படத் தொடங்கியது. தொடர்ந்து வரும் பண்டாரங்களை யார் நியமிப்பது என்பதும் நிர்வாகமும் அதிகாரமும் யாருக்குரியது என்பதுமே இதற்கான காரணம். இதற்கான விசாரணையின் போது 1834 இல் மேற்கூறிய ஆவணங்கள்யாவும் கோயில் நிர்வாகியாக இருந்த சேதுராமபண்டாரம் என்பவரால் நீதிமன்றத்தில் சமர்ப்பிக்கப்பட்டது.

## சேதுபதிகளும் பண்டாரங்களும்

1807 - ஆம் ஆண்டுவாக்கில் அன்றைய இராமநாதபுரம் ஜமீன்தாராயிருந்த இராணி மங்களேசுவரி நாச்சியார் தனக்கே இராமேசுவரம் கோயில் பற்றிய நிர்வாக அதிகாரங்களில் மேலான பொறுப்பிருந்ததாகக் கூறினார். இதனை தரம்சேவன் பிள்ளை என்பவர் மறுத்ததோடு நிதிமன்றத்தில் வழக்கும் தொடுத்தார். 1807, ஆகஸ்டு 6 ஆம் நாள், இராமநாதபுரம் மாவட்ட நீதிமன்றம், ஜமீன்தார் கோயில் நிலங்களிலிருந்து வரி வசூல் செய்யலாமே அன்றி கோயில் நிர்வாகத்தில் தலையிட முடியாது என்று அறிவித்தது.[21] 1809, மே 5 இல்[22], இராமேசுவரம் கோயில் நிலங்களை விற்க முடிவு செய்து அறிவிக்கப்பட்ட போது இதனை

இராணி எதிர்த்தார். அந்நிலங்கள் அவரது கட்டுப்பாட்டிலிருப்பதாக உரிமை கொண்டாடினார். விசாரணை நடைபெற்றது. 1809, மே 30 இல் மற்ற ஜமீன்தார்களைப் போன்று வரி பாக்கிக்காக கோயிலுக்கான நிலங்களைக் கைப்பற்ற பண்டாரம் உரிமை பெற்றார். [23]

1810 – இல் கோயில் வழிபாடுகள் பண்டாரத்தால் சரிவர நடத்தப்படவில்லை என்று ஜமீன்தார் முறையிட்டார். உடனடியாக இது பண்டாரத்திற்குத் தெரிவிக்கப்பட்டது. தொடர்ந்து கோயில் வழிபாடுகள் நடத்துவதில் தவறு செய்தால் ஜமீன்தாரின் முறையீட்டின் மீது விசாரணை நடத்தப்படும் என்றும் ஆட்சியாளர் கடிதம் எழுதினார்[24]. இதுவே கோயில் நிர்வாகத்தின்மீது யாருக்கு மேலானஅதிகாரம் உண்டு என்பதில் சேதுபதிக்கும், பண்டாரத்திற்கும் ஏற்பட்ட பிரச்சனையின் முதல் கட்டமாகும்.[25] இதனால் இப்பிரச்சனையில் மாவட்ட ஆட்சியாளர் தலையீடு ஏற்படலாயிற்று. அவர் நிர்வாகமுறை பற்றிய சட்ட திட்டங்களை வகுக்க வேண்டியதாயிற்று. இதன் மூலம் 1810 க்கும் 1864 க்கும் இடையில், நீதிமன்றத்தில் வழக்குப் போடப்படும்வரை பிரச்சனையைத்தீர்க்க வழிவகுக்கப்பட்டது. இப்பிரச்சனைக்கு உடனடிக் காரணம், கி.பி. 1819 இல் பெரிய இராமநாதபண்டாரத்தால், புதியதாக, சேதுஇராமநாத பண்டாரம் நியமனம் செய்யப்பட்டதேயாகும்.

இதுபற்றிய விசாரணைகள் தொடர்ந்தன. 1832 இல், பண்டாரம் கோயில் வருவாயைத் தவறாகச் செலவிட்டதாகவும், பணவிசயத்தில் நிர்வாகத்தவறு ஏற்பட்டதாகவும் கண்டுபிடிக்கப்பட்டது. கிழக்கிந்தியக் கம்பெனிக்கு செலுத்தப்பட வேண்டிய திரைப்பணம் வராததால் மாவட்ட ஆட்சியாளரும் இதில் தலையிட்டு விசாரணை செய்ய வேண்டியதேற்பட்டது. எனவே, கோயில் நிர்வாகம் இராமநாதபுரம் வட்டாட்சியரிடமும், பின்பு உதவி ஆட்சியரிடமும் ஒப்படைக்கப்பட்டது. இந்நிலை இராமசாமி சேதுபதி ஜமீன்தார் ஆகப் பதவியேற்கும் வரை தொடர்ந்தது[26]. இருப்பினும், மாவட்ட ஆட்சியர் வருவாய்க் குழுவிடம் பண்டாரமே கோயில் நிர்வாகியாக உடனடியாக நியமிக்கப்பட வேண்டும் என்றும், ஜமீன்தார் நிர்வாகம் எவ்வாறு நடக்கிறது என்பதனைக் கவனித்து கட்டுப்படுத்த அனுமதியளிக்க வேண்டும் என்றும் பரிந்துரை செய்தார்.[27] 1833 மே 13 இல், இராமேசுவரம் கோயில் பண்டாரம், மதுரை ஆட்சியர் மூலம், திருநெல்வேலி ஆட்சியருக்குக்

கடிதங்கள் எழுதினார். அவற்றில், திருநெல்வேலி மாவட்டம் கீழ்நாட்டுக் குறிச்சிப் பகுதியில் இராமேசுவரம் கோயிலுக்குச் சொந்தமாயிருந்த சர்வமானிய நிலங்களை அப்பகுதி மக்கள் அபகரித்துக் கொண்டனர் என்றும் அபகரிப்புகளை நீக்க ஆட்சியர் தேவையான நடவடிக்கை எடுக்க வேண்டுமெனவும் கேட்டுக்கொள்ளப்பட்டது.[28]

மேலும், இராமேசுவரம் கோயில் நிர்வாகத்தின் மேலான அதிகாரம் யாருக்குரியது என்பதுபற்றி விசாரணை செய்தபின், 1837 ஜனவரி 7 ஆம் நாள் ஆட்சியர் தன் அறிக்கையைச் சமர்ப்பித்தார். விசாரணையின் போது பண்டாரம் தனக்கு சாதகமாக நாற்பத்தி நான்கு ஆவணங்களைச் சமர்ப்பித்தார்.[29] ஜமீன்தாரும் பண்டாரத்தை நியமனம் செய்வதில் தனக்குள்ள உரிமை பற்றிய ஆவணங்களைச் சமர்ப்பித்தார். அவ்வாண்டு மார்ச்சில் இறைவனின் ஊர்வலத்தின் போது, ஒரு பக்தரைக் கொன்றுவிட்டார் என்ற காரணம் காட்டி பண்டாரம் தண்டிக்கப்பட்டார். இதன் பின் கம்பெனியின் அதிகாரி ஒருவர், மாவட்ட ஆட்சியாளரால், கோயில் நிர்வாகியாக நியமிக்கப்பட்டார்.[30] இத்தருணத்தில், செப்டம்பர் மாதத்தில் கோயில் நிர்வாக உரிமை பற்றிய பிரச்சனை குறித்து உடனடியாக முடிவெடுக்கும்படி வருவாய்க் குழுவைத் துரிதப்படுத்தும்படி ஜமீன்தார் முத்துசெல்லத்தேவரும் அவரது பாதுகாவலரான முத்துவீராயி நாச்சியாரும் ஆட்சியாளரைக் கேட்டுக் கொண்டனர்.[31] 1835, ஏப்ரல் 25 இல், மாவட்ட ஆட்சியர் கம்பெனியின் அதிகாரியை நீக்கிவிட்டுப் பண்டாரத்தைப் பதவியில மர்த்தினார்.[32] மேலும் மாவட்ட ஆட்சியர், இந்தப் பண்டாரம், முன்பு போன்றே, அவ்வப்போது நிர்வாகம் பற்றிய பிரச்சனைகளில் தன்னைக் கலந்தாலோசிப்பார் என்றும் இது நிர்வாக உரிமை பற்றி முடிவு செய்யும்வரை தொடரும் என்றும் வருவாய்க் குழுவிற்கு அறிவித்தார். பண்டாரம் அமைதியானவர், குற்றமற்றவர் என்றும், அவருக்கும் பக்தர் ஒருவரின் கொலைக்கும் எந்தத்தொடர்பும் இல்லையென்றும் தெரியப்படுத்தினார். இவரை ஜமீன்தாரின் ஆதரவாளர்களே பழி சுமத்தியிருக்கவேண்டும் என்று இதன் மூலம் உணரமுடிகின்றது. ஆட்சியர் அன்றைய மைனர் ஜமீன்தார் முத்துசெல்லத்தேவருக்குக் கடிதம் எழுதி கோயில் நிலங்களைப் பண்டாரத்திடம் ஒப்படைக்கக் கூறினார். 1837 இல் ஒரு சமாதான உடன்பாடு ஏற்பட்டது. அதன்படி ஜமீன்தாரும் பண்டாரமும் ஒருவரை ஒருவர் எப்படி அழைக்க வேண்டுமென்ற முடிவு ஏற்பட்டது. இதனடிப்படையில் ஜமீன்தாரின் நெறிப்படுத்தலின்படி தேவஸ்தான கோயில் கிராமங்கள்,

சிப்பந்திகள் (பணியாட்கள்), மற்ற பணியாளர்கள் பற்றிய பிரச்சனைகளில் முறையாகச் செயல்படுவதாகவும் அனைத்து ரசீதுகளையும் தனது கையொப்பமிட்டு ஜமீன்தாரின் பார்வைக்கு அனுப்புவதாகவும் மாவட்ட ஆட்சியருக்கு சேதுராமநாதபண்டாரம் கடிதம் எழுதினார். மேலும் அவர், ஜமீன்தாருக்கு எழுதும் கடிதங்களில் தன்னை "இராமேசுவரம் தேவஸ்தானத்து சேதுராமபண்டாரம்" என்று விளிப்பதாகக் கூறினார். எனவே ஜமீன்தார் மாவட்ட ஆட்சியருக்குக் கடிதம் எழுதியுள்ளபடி தன்னை இக்கோயிலின் தேவஸ்தான நிர்வாகியாக நியமிக்கும்படியும் வேண்டினார்.[33] இதனடிப்படையில் சேதுராமநாதபண்டாரம் கோயில் நிர்வாகியாக அமர்த்தப்பட்டு 1854 நவம்பரில் அவர் இறக்கும்வரை தொடர்ந்தார்.

அவர் இறப்பதற்குமுன்பு தனது வாரிசாக சொக்கலிங்கம் பிள்ளை என்பவரை நியமித்தார். அவரும் 1857 பிப்ரவரியில் இறக்கவே தனக்குத் தொடர்ச்சியாக சிதம்பரம்பிள்ளையை நியமித்துச் சென்றார். இவரது வாரிசாக அம்பலவாணபிள்ளை என்னும் பெரியநாயகம்பிள்ளை அடுத்த பண்டாரமானார்.[34] இதற்கிடையில் சேதுராமநாதபண்டாரம் இறந்து பத்து ஆண்டுகள் கழித்து இப்பிரச்சனை மீண்டும் கிளரப்பட்டது. எனவே புதியதாக உருவான சென்னை உயர்நீதிமன்றத்தில்[35] 1864 இல் வழக்குத் தொடரப்பட்டது. இதற்கான தீர்ப்பு 1874 மார்ச் 18 இல் வெளியானது.[36] இது இராஜா முத்துராமலிங்கசேதுபதியும் அவரது ஆதரவாளர்களும் இராமேசுவரம் கோயில் பண்டாரம் பெரியநாயகம்பிள்ளைக்கு எதிராகப் போட்ட மேல் முறையீட்டு வழக்காகும். ஆனால் இவ்வழக்கு, பண்டாரங்களை நியமனம் செய்வதில் தனக்கிருந்த உரிமை பற்றி ஜமீன்தார் சரியான ஆதாரங்களைச் சமர்ப்பிக்கவில்லை என்ற காரணங்காட்டி தள்ளுபடி செய்யப்பட்டது.[37]

மேலும் ஜமீன்தார் ஆய்வுரையாளர்கள்குழுவிடம் (Privy Council) மேல் முறையீடு செய்தார். அவர் பண்டாரத்தைத் தர்மகர்த்தா என்ற பதவியில் அமர்த்தக் கோரினார். தர்மகர்த்தாவாகப் புதியதாக ஒருவர் பதவிக்கு வரும்போது பதவிப் பிரமாணச் சடங்குகள் அவசியம் எனவும் கோரினார்.[38]

ஆய்வாளர்குழு கோயில் நிர்வாகத்தின் பழைய வரலாற்றையும் எவ்வாறு பண்டாரங்கள் தனிப்பட்ட முறையில் இப்பதவியை வகித்தனர் என்றும் ஆராய்ந்தது. அவர்கள் தங்கள் வாரிசுகளைத் தாங்களே நியமித்து வந்ததையும் கண்டறிந்தது. "சென்னை மாநிலத்தில் பண்டாரங்கள் தங்கள் வாரிசுகளை

நியமித்தது பொதுவான ஒன்றுதான் எனினும் அது முக்கியமான கருத்தில்லை என்று ஒதுக்கிடுவதற்கில்லை" எனத் தீர்மானித்தது[39]. இருப்பினும் இந்து கோயில்களுடன் தொடர்புடைய சமய சட்டதிட்டங்களும், வழிமுறைகளும் அனைத்துப் பகுதிகளிலும் ஒரே மாதிரியானவையல்ல, இதற்கான அவசியமுமில்லை. ஆனால் ஜமீன்தார் தனக்குரிய உரிமைக்கான சரியான சான்றுகளைச் சமர்ப்பிக்கவில்லை. சில சமயங்களில் அவர்களே பண்டாரங்களை நியமித்துள்ளனர். வேறு சிலநேரங்களில் பண்டாரங்களே தமது வாரிசுகளை நியமிக்கும் போது ஜமீன்தார் தனது உரிமையைக் கோரவில்லை[40] என்று ஆய்வாளர் குழு கருதியது. அத்தோடு பண்டாரங்கள் இம்மாதிரி நியமனங்களைச் செய்யும் போது சேதுபதியின் ஒப்புதல் பெற்றதற்குக் காரணம் அவரது பாதுகாப்பு வேண்டியே அன்றி அவரது மேலாண்மை கருதியல்ல[41] என்றும் இக்குழு அறிந்தது. தீர்ப்பில், 1793 இல் முத்துராமலிங்கசேதுபதி, ஐந்து வயது நிரம்பிய இராமநாதபண்டாரத்தை நியமனம் செய்தது தவிர்த்த வேறு ஆதாரம் இல்லை என்றும் சரியான ஆதாரம் காட்டப்படவில்லை என்றும் கூறி, வழக்கு தள்ளுபடி செய்யப்பட்டது.

இதற்குப்பின் பண்டாரம் தனது அலுவலைத் தொடர அனுமதிக்கப்பட்டார். ஆனால், சேதுபதி ஜமீன்தார்கள், சேதுராமநாத பண்டாரத்தை நீக்க தக்கத் தருணத்தை எதிர்பார்த்திருந்தனர். அவரைப் பற்றிய ஏராளமான குற்றங்குறைகளைக் கொண்ட செய்திகளைச் சேகரித்து மாவட்ட நீதிபதியின் நீதிமன்றத்தில் சமர்ப்பித்தனர். இதனடிப்படையில் நீதிமன்றம் அவரை 1883 மார்ச் இரண்டாம் தேதி பதவிநீக்கம் செய்தது. இவ்வேளையில் அப்பண்டாரம் தனது வாரிசாக இராமலிங்கம்பிள்ளை என்பவரை நியமித்தார். ஆனால் நீதிமன்றம் இதனை ஏற்க மறுத்துவிட்டது. அத்தோடு இராமேசுவரத்து ஆரிய மகா ஜனங்களோ (பிராமணர்களோ) அல்லது பழைய பண்டாரத்தின் குடும்பத்தினர் எவருமோ எந்தத் தனிமனிதனையும் கோயில் மேலாளராக நியமிக்கும் உரிமை பெற்றிருக்கவில்லை என்றும் நீதிமன்றம் அறிவித்தது.[42] பண்டாரம் கோயில் நிர்வாகத்தில் பல தவறுகளைச் செய்துள்ளதாகக் கூறி, நிர்வாகம், 1863 ஆம் ஆண்டைய சட்டம் XX இன்படி, மாவட்ட நீதிபதியிடம் ஒப்படைக்கப்பட்டது.

ஆனால் நீதிபதியின் அதிகாரிகள் தங்களது கடமைகளை சரிவரச் செய்யத்தவறினர். அவர்கள் கோயில் கட்டடத்தின் நிலை பற்றியும் பயணிகளின் வசதி பற்றியும் எந்த நடவடிக்கையும்

எடுக்கவில்லை. மாவட்ட நீதிபதியின் துணையதிகாரி திருஞானபண்டாரம்சன்னதி என்பவர் இந்து சாத்திரங்களைக் கைவிட்டதோடு கருவறையின் மேல்தளங்களில் செடி கொடிகள் வளர்வதைத் தடுக்கவில்லை, இதனால் அங்குள்ள சிற்பங்கள் உடையலாயின.[43] எனவே நீதிபதியால் நியமிக்கப்படும் அதிகாரிகள் மீது தங்களுக்கு நம்பிக்கை இல்லை என பொதுமக்கள் நீதிபதிக்கு எழுதினர். [44] தீரவிசாரித்தபின் 1893 மே 20 ஆம் தேதி, நீதிபதி, இராஜா பாஸ்கரசேதுபதியை இராமேசுவரம் கோயில் தேவஸ்தான நிர்வாகியாக நியமித்தார். அவ்வாண்டு செப்டம்பர் 22 இல் அவர் நிரந்தர நிர்வாகியானார்.[45] இதனைப் பாஸ்கர சேதுபதி தனது நாட்குறிப்பில் (1853, செப்டம்பர் 22) இந்நாளை " "இராமநாதபுரம் வரலாற்றில் சிவப்பு எழுத்து நாள்" என்று குறிப்பிட்டுள்ளார்.[46] அவர் "கடந்த ஒன்றரை நூற்றாண்டு காலம் சேதுபதிகள் வெறும் பெயரளவில் மட்டுமே சேதுபதிகளாக இருந்துள்ளனர் என்பது உண்மையில் துரதிர்ஷ்ட வசமானதாகும். பரம்பொருளான இராமநாதப்பெருமான் தொடர்ந்து சேதுபதிகள் இக்கோயிலின் நிர்வாகிகளாக அமைய அருள்புரியட்டும்"[47] என்றும் எழுதியுள்ளார்.

இருப்பினும் மக்கள் கூட்டத்தின் ஒருசாரார் பாஸ்கரசேதுபதி மீது குற்றங்களைச் சுமத்தி அவரைப் பதவிநீக்கம் செய்யும்படி மாவட்ட நீதிபதிக்கு எழுதினர். [48] 1895, O.S எண் 9 இன் படி இராமேசுவரம் கோயில் நிர்வாகத்தில் பற்றுக்கொண்ட சில ஆரிய மகாஜனங்கள் இதன் நிர்வாகப் பொறுப்புக்கு இராமலிங்கம் பிள்ளை என்பவரே தகுதியானவர் எனக்கூறினர். அவர்கள், பரமக்குடி முனிசிப் நீதிமன்றத்தில் கோயில் ஆபரணங்களை பாஸ்கர சேதுபதியிடம் ஒப்படைக்கக் கூடாது என முறையிட்டனர். இதனை ஏற்ற போதும், 1895 இல் மீண்டும் முன்சீப் இதனைத் தள்ளுபடி செய்தார். ஆபரணங்களையும் நகைகளையும் பாஸ்கரசேதுபதியிடம் ஒப்படைக்குமாறு ஆணை பிறப்பிக்கப்பட்டது.[49] இப்பிரச்சனை 1901 வரை தொடர்ந்தது. இதன்பின்பு தேவகோட்டை ஜமீன்தார் கோயில் நிர்வாகியானார். அவர் 1910 வரை இப்பணியில் தொடர்ந்தார். இக்காலகட்டத்தில் முதல் பிரகாரத் திருப்பணியும், கிழக்குகோபுரம் கட்டும் பணியும் முடிக்கப்பட்டது. [50] இதனைத்

தொடர்ந்து 1911 இல் நிர்வாகமுறை ஒன்று நீதிமன்றத்தால் பரிந்துரைக்கப்பட்டது.[51] 1912 இல் புதிய நிர்வாக அமைப்புமுறை ஒன்று கொண்டு வரப்பட்டு ஐந்து உறுப்பினர்களைக் கொண்ட நிர்வாகக் குழு அமைக்க உத்தரவிடப்பட்டது.[52]

ஐந்து உறுப்பினர்களில் இருவர் பரம்பரை உறுப்பினர்களாக சேர்க்கப்பட்டனர். அவர்களில் ஒருவர் மன்னர் குடும்பத்திலிருந்தும் மற்றொருவர் தேவகோட்டை ஏ.எல்.ஏ. ஆர். செட்டியார் , குடும்பத்திலிருந்தும் தேர்ந்தெடுக்கப்பட்டனர்.[53] மற்ற மூன்று உறுப்பினர்கள் நியமன உறுப்பினராவர். இக்குழு ஒரு டிரஸ்டியை, மாதம் ரூ.400 சம்பளத்தில் அமர்த்தியது. அவர் கோயில் நிலங்களையும், கிராமங்களையும் தேவஸ்தான சொத்துக்களையும் நிர்வகித்தார். இவர் மதுரையிலிருந்து கொண்டு நிர்வாகத்தைக் கவனித்து வந்தார்.[54] முத்துராமலிங்க சேதுபதி 1928 இல் இறந்ததும் அவர்மகன் சண்முகராஜேசுவர சேதுபதி நிர்வாகக் குழுவின் தலைவரானார். 1930 – இல், இந்த ஜமீன்தார், கோயில் வருமானத்தைத் தன் சொந்த வங்கிக் கணக்குகளுக்கு மாற்றினார் என்றும், கோயில் நகைகள் மார்வாடிக் கடைக்குச் சென்றன என்றும் சொல்லப்பட்டது.[55] ஆனால், இவர் காலத்தில் தான் 1974 பிப்ரவரி 27 இல் கும்பாபிஷேகம் நடந்தது. அதன் பின்னர் 1975 இல் மற்றுமோர் கும்பாபிஷேகம் நடைபெற்றது. தற்போது 2001 ஜனவரியில் கும்பாபிஷேகம் நடைபெறவுள்ளது. 1959 – இல் இக்கோயில் நிர்வாகம் இந்து அறநிலையத் துறையிடம் ஒப்படைக்கப்பட்டது.

## குறிப்புகள்

1. C.J.Baker and D.A.Washbrook, (1975), **South India - Political Institutions and Political Change (1800 – 1940)** p.8.
2. E.C., V. pt.1., 175
3. ARE. 98/1903
4. ARE 340/1918
5. ARE 97/1903
6. தஞ்சை சரஸ்வதிமகால் நூல்நிலையத்தில் உள்ள செப்புப் பட்டயங்கள்.
7. பாண்டியர் காலத்தில் பண்டாரம் என்ற சொல் ஒரு கோயிலின் பொருளாளர் மற்றும் கருவூலம் என்று பொருள் பெற்றிருந்தது. ( ARE 323/1908; 39/1929)
8. ARE 24/1946-47

9. J.Bertrand, **La Mission du Madura,** III, p.158 (taken from R.Sathyanatha Aiyar, (1980) **History of the Nayaks of Madura**,) (Appendix A, Letter No-3, Letter of Proenza to Paul Oliva, Cangoupatti, 1665)
10. A.R.E. 34/1946-47
11. Madura District Records, Vol. 4682 (to the President and members of the Board of Revenue), pp. 14-39.
12. A.R.E. *36/1946-47 இங்கு ஆண்டு 1573 க்குப் பதிலாக தவறுதலாக 1653 என்றுள்ளது.*
13. Madura District Records, Vol.4682, pp.14
14. Madura District Records, Vol.4682, pp.14-139 (to the President and the members of the Board of Revenue) dated Jan.1834. *இங்கு பட்டயத்தின் காலம் 1891 என்று கூறப்பட்டுள்ளது. (சாலிவாகன 1813), ஆனால் இதில் கொடுக்கப்பட்டுள்ள தமிழ் ஆண்டுடனும் இரகுநாத தேவரின் ஆட்சிக் காலத்துடனும் ஒத்துப் போகவில்லை. எனவே தமிழ் பரமோதூத ஆண்டிற்கு உரித்தான ஆங்கில ஆண்டு 1690 ஆகும்.*
15. *1772 இல் ஆங்கில கிழக்கிந்தியக் கம்பெனியின் ஆதரவு பெற்ற நவாப் முகமது அலி இராமநாதபுரம் சிவகங்கைப் பகுதிகளைக் கைப்பற்றினார். முத்துராமலிங்க சேதுபதியும் அவரது மனைவியும் கைது செய்யப்பட்டனர்.* (K.Rajayyan (1982) **History of Tamil nadu** (1565 -1982), pp.146- 7)
16. Madura District Records. Vol.4682, pp-14 -39
17. *ஆய்வாளர் குழுவின், நீதிக்குழு தீர்ப்பு, 1874 மார்ச் 18 ஆம் தேதியாகும். கலந்து கொண்ட நீதிபதிகள் சர் பார்னஸ் பீகாக், சர் மாண்டேகு ஸ்மித், மற்றும் சர் ராபர்ட் பிகாலியர்.*
18. J.H.Nelson, 1868, **Madura District Manual**, IV.p.154.
19. Madura District Records, Vol.4682, pp.14 - 39,
20. *மேலது.*
21. *மேலது.*
22. *மேலது, தொகுதி 1197, ப.109.*
23. *மேலது, தொகுதி 1155, ப.38.*
24. *மேலது, தொகுதி 1157, ப.49.*
25. *இராமநாதபுரம் ஜமீன்தார் பண்டாரங்களை நியமிக்கும் உரிமையைக் கோரினார். பண்டாரங்களோ தங்களது வாரிசுகளை நியமிக்கும் உரிமையைக் கோரினர்.*
26. Madura District Records, Vol.4680, pp.268-70.
27. *மேலது.*
28. *மேலது, தொகுதி 4682, பக் 14–39.*
29. *மேலது.*
30. *மேலது, பக் 4423, இராமநாதபுரம் ஆட்சியருக்கு இராமநாதபுரம் ஜமீன்தார் எழுதிய கடிதம்.*
31. *மேலது.*
32. *மேலது, தொகுதி 4683, ப.129.*
33. The Revenue Register, 15 June 1874, Vol.8
34. *ஆய்வுக்குழுவின், நீதிக்குழு தீர்ப்பு 18, மார்ச் 1874.*

35. உயர்நீதிமன்றச் சட்டம், 1861 படி 1862 இல் சென்னை உயர்நீதிமன்றம் தொடங்கப்பட்டது.
36. ஆய்வாளர் குழுவின், நீதிக்குழு தீர்ப்பு 18, மார்ச் 1874.
37. Burton Stain, ed. (1978), **South Indian Temples,** p.98.
38. ஆய்வாளர் குழுவின், நீதிக்குழு தீர்ப்பு, 18 மார்ச், 1874.
39. Norton's leading case pp.592 to 3 (noted) in the judgement.
40. உதாரணமாக 1793 இல் முத்துராமலிங்கசேதுபதி ஐந்து வயதான இராமநாதபண்டாரத்தை (1793 லிருந்து 1815) நியமித்தார். இவர் பண்டாரத்திடம் ஒரு கடிதம் வாங்கினார். அக்கடிதம் முக்கிய சான்றாக நீதிமன்றத்தில் சமர்ப்பிக்கப்பட்டது. அதில் "தாங்கள் என்னை இராமேசுவரம் கோயில் நிர்வாகியாக நியமித்திருப்பதால், நான் தினந்தோறும் தவறாமல் பூசைகளை நடத்துவேன். நான் ஜமீன்தாரின் எதிரிகளுடன் நட்புக்கொண்டால் நீங்கள் என்னை பதவிநீக்கம் செய்யலாம். மற்றொருவரை என்னிடத்திற்குப் பதவியமர்த்தலாம். நான் இவ்விசயத்தில் தவறு இழைத்தால் நான் ஜமீன்தாரின் ஆணைக்குக் கட்டுப்படுகிறேன்" என எழுதப்பட்டிருந்தது.
41. ஆய்வாளர் குழுவின், நீதிக்குழு தீர்ப்பு, 18 மார்ச் 1874.
42. The Madura Mail (Weekly News paper) 6 th January, 1894 and 11 th May, 1895.
43. மேலது, 2 ஜூன், 1894 (Editorial)
44. மேலது 9, ஜூன் 1894.
45. மேலது, 6 ஜனவரி, 1894.
46. பாஸ்கர சேதுபதியின் நாட்குறிப்பு, 1893, செப்.22, தமிழ்நாடு ஆவணக் காப்பகம், சென்னை.
47. மேலது, 20, மே 1893.
48. The Madurai Mail, dated 4 the August, 1894.
49. மேலது, 22 ஜூன் 1895.
50. இராமநாதசுவாமி கோயில் தேவஸ்தான அலுவலக ஆவணங்கள், இராமேஸ்வரம்.
51. இராமநாபுரம் துணை நீதிபதி நீதிமன்ற அறிக்கை, மதுரை, 323/1910.
52. சென்னை உயர்நீதிமன்ற அறிக்கை 31/1912.
53. இதன்படி இராமநாதபுரம் முத்துராமலிங்க , சேதுபதி மற்றும் எம்.ஆர்லை.ஏஎல். ஏஆர். ஆர்எம். நாராயணன் செட்டியார் ஆகியோர், அவர்கள் செய்த தொண்டின் பயனாக, பரம்பரை தர்மகர்த்தாக்களாக நியமிக்கப்பட்டனர்.
54. Brief Notes: Traditional and Historical Relating to the Rameswaram temple (Ganapathy Vilas press), 1914, (தமிழ்நாடு ஆவணக் காப்பகம், சென்னை)
55. C.J.Baker and A.S.Washbrook, **op.cit.,** p. 77.

## 8. தீர்த்தப்பெருமை

இராமேசுவரம் தீவில் சுமார் நாற்பது தீர்த்தங்கள் உள்ளன. அவற்றில் இருபத்திரண்டு தீர்த்தங்கள் கோயிலுக்குள்ளேயே உள்ளன.[1] ஒவ்வொரு தீர்த்தமும் தத்தமக்குரிய புனிதத்துவத்தையுடைய கதைகளைக் கொண்டு விளங்குகின்றன. அவை சுவையும் கனிமச்சத்தும் மருத்துவகுணமும் கொண்டிருப்பதாக நம்பப்பட்டு வருகின்றன. இத்தீர்த்தங்களில் நீராடுவதால் சிறந்த பலன்கள் கிடைக்கின்றன என்று கருதுகின்றார்கள். பாவங்கள் தீர்ந்து, உடலும் ஆன்மாவும் தூய்மை அடையும் என்று நம்புகின்றனர். இத்தீர்த்தக் கிணறுகள், சதுரம், நீள்சதுரம், பல பக்கங்கள் (polygonal), எண்பட்டை, வட்டம் ஆகிய வடிவங்களைக் கொண்டவையாகும். சதுரம், எண்பட்டை, வட்டம் ஆகியவை இந்தியக் கட்டடக் கலையின் மூன்று முக்கிய பிரிவுகளான நாகரம், திராவிடம், வேசரம் என்ற பாணிகளை நினைவூட்டுகின்றன. ஆனால், இப்பிரிவுகளுக்கும் தீர்த்தக் கிணறுகளின் அமைப்புக்களுக்கும் இங்கு தொடர்புபடுத்திப் பார்க்க எந்தவித ஆதாரமும் இல்லை. இந்திய புராண இலக்கியங்களில் இத்தீர்த்த மகிமைகள் பற்றி விளக்கப்பட்டுள்ளன. சேதுபுராணம், தேவையுலா, அக்னிபுராணம், வால்மீகி இராமாயணம், ஆனந்த ராமாயணம், பாகவதபுராணம், சிவபுராணம், ஸ்கந்தபுராணம், மனுஸ்மிருதி, கௌதமஸ்மிருதி, தேவலாஸ்மிருதி போன்றவை இராமேசுவரம் கோயிலிலும் அதனைச் சுற்றியுள்ள இடங்களிலும் உள்ள தீர்த்தங்களின் ஆன்மீகப் புனிதத்தன்மையையும், மகிமையையும் பற்றிச் சிறப்பாகக் கூறுகின்றன.

ஸ்கந்தபுராணத்தில்[2] "அனைத்துப் புனிதக் கடவுளரும் தேவியரும் மற்றும் அனைத்துப் புனிதநீர் நிலைகளும் கந்தமாதனபர்வதத்தில் நிலைத்து வாழ பெரிதும் விரும்புவர்" என்று குறிப்பிடப்பட்டுள்ளது. ஆனந்தராமாயணம், சீதையை மீட்டுச் சென்ற இராமபிரான் மீண்டும் இங்கு வந்து தீர்த்தமாடிய பெருமையைச் சுட்டுகிறது. அவர் இங்கு பைரவதீர்த்தம், இலட்சுமணதீர்த்தம், அக்னிதீர்த்தம், ஜடாயுதீர்த்தம், கோடித்தீர்த்தம் ஆகியவற்றில் நீராடிச் சென்றார் என்று கூறுகின்றது.[3]

"எவனொருவன் சேதுபந்தத்திற்குச் சென்று உண்மையான பக்தியோடு சிவ இராமேசுவரரைக் காண்கின்றானோ, அல்லது எவன் பனாரசுக்குச் (காசிக்கு) சென்று கங்கைநீர் எடுத்துவந்து இராமேசுவரரை நீராட்டுகின்றானோ அவனது பாவங்கள் தொலைந்து கடலில் வீசப்படும், அவன் எவ்விதச் சந்தேகமுமின்றி முக்தியடைவான்" என்று அத்யாத்மராமாயணம் கூறுகிறது.[4] மகாவிஷ்ணுவின் பத்து அவதாரங்களில் ஒருவரானவரும் கிருஷ்ண பரமாத்மாவுக்கு அண்ணனாக அவதரித்தவருமான பலராமன் வேங்கடமலையையும் (திருப்பதி) மதுரையையும் கண்டுகளித்தபின் தெற்கே உள்ள பாவங்களை நீக்கும் கடல் பாலத்திற்குச் சென்று நீராடினார் என்று பாகவதபுராணம் குறிப்பிடுகிறது.[5] இங்கு கடல்பாலம் என்று சொல்லப்பட்டிருப்பது இராமனால் கட்டப்பட்டதாக நம்பப்படுகின்ற சேதுவையே குறிக்கும்.

## கோடித்தீர்த்தம்

இராமேசுவரம் கோயிலுக்குள் உள்ள புனிதம் வாய்ந்த **கோடித்தீர்த்தம்**[6] பற்றி மச்சயபுராணத்தில் மிகச் சிறப்பாகச் சொல்லப்பட்டுள்ளது. அதன்படி, எவனொருவன் கோடித்தீர்த்தத்தைச் சுற்றி வருகின்றானோ, அவன் வளமை வாய்ந்த மன்னனாகிறான். அங்கே இறப்பவன் ருத்ரனுடைய திருப்பாதம் அடைந்து அடுத்த பிறவியில் சிறந்த அரசனாக அவதரிப்பான்.[7] சேதுபுராணமும் ஸ்கந்தபுராணமும் கோடித்தீர்த்தத்தில் நீராடுவதற்கு முன்பு பிறதீர்த்தங்கள் அனைத்திலும் நீராடிவிட்டு வரவேண்டும் என்கின்றன. எனவே பாவங்களை நீக்க புனித நீராட வேண்டும் என்று விளக்கமாக உரைக்கின்றன.[8] பகவான் கிருஷ்ணரே தனது மாமன் கம்சனைக் கொன்ற பாவம் தீர்க்க இத்தீர்த்தத்தில் நீராடியதாக நம்பிக்கை உள்ளது.[9] நாரதீய (நாரத) புராணம் கோடித்தீர்த்தத்தின் மகிமை பற்றி விளக்குகிறது.[10] மற்ற தீர்த்தங்களில் குளிப்பதால் கிடைக்கப் பெறாத அனைத்து வகை இன்பங்களையும் கோடித்தீர்த்தம் கொடுப்பதாக சேதுபுராணத்தில் கூறப்பட்டுள்ளது.[11] இன்று இராமேசுவர தீர்த்தயாத்திரைக்கு வரும் புனிதப்பயணிகள் பிற தீர்த்தங்களுக்குச் செல்லாமல் கோடித்தீர்த்தத்தில் மட்டுமே நீராடி அனைத்துப் பலன்களையும் பெறலாம் என்ற வழிவழியாகவந்த நம்பிக்கையைக் கடைப்பிடிப்பதைக் காண முடிகிறது.

## சர்வதீர்த்தம்

முதலாவது பிரகாரத்தில் இருக்கும் அடுத்த முக்கிய தீர்த்தம் சர்வதீர்த்தமாகும். இது மானசதீர்த்தமென்றும் அழைக்கப்படுகிறது. ஏனெனில் இறைவன் தனது மனச்சக்தியில் அனைத்துத் தீர்த்தங்களிலும் உள்ள புனித நீரையும் இதில் கொண்டு செலுத்தியுள்ளார் என்று கருதப்படுகின்றது.[12] இத்தீர்த்தம் எவ்வாறு உண்டானது என்பது ஒரு புதிராகவே உள்ளது. பிருகு வம்சத்தைச் சேர்ந்த வயதான முனிவர் ஒருவர் சுச்சரிதர் என்று பெயர் பெற்றிருந்தார். அவர் அனைத்துப் புனித நீர்நிலைகளிலும் நீராட வேண்டும் என்ற அவாவுடன் இருந்தார். ஆனால் முதுமையின் காரணமாக அவர் அனைத்துப் புனிதத் தலங்களுக்கும் செல்ல இயலவில்லை. எனவே அவர் இராமேசுவரத்தில் உள்ள இராமநாதப்பெருமானை வணங்கினார். அவரது ஆசியின் காரணத்தால் அனைத்துப் புனிதநீரும் இவ்விடத்தில் வந்து சங்கமமானது. இவ்வாறு சர்வதீர்த்தம் தோன்றியது. முனிவர் இதில் நீராடி மீண்டும் இளைஞரானார்.[13] மற்றொரு கதையில் பிருகுமுனிவர் ஒரு மகனைப் பெற்றிருந்தார் என்றும் அவன் பிறவியில் குருடன் 'எனவும் கூறப்பட்டுள்ளது. இவன் இராமேசுவரத்து சிவபெருமானை வணங்கி இறைவனின் அருள் பெற்றான். குருடு நீங்கப் பெற்றான். அதன்பின் அனைத்துத் தீர்த்தங்களிலும் நீராட வேண்டும் என விரும்பி இறைவனை யாசித்தான். எனவே இறைவன் இத்தீர்த்தத்தை உருவாக்கினார் என்று தெரிகின்றது.[14]

## சந்தியாமிர்த தீர்த்தம்

முதல் பிரகாரத்தில், நவசக்தி மண்டபத்திற்கருகில், சந்தியாமிர்த தீர்த்தம் உள்ளது. இத்தீர்த்தம் அனைத்துப் பாவங்களையும் தீர்ப்பதாகும். புரூரவன் என்னும் அரசன் இத்தீர்த்தத்தில் குளித்ததன் பயனாக, தெய்வீக இசைமேதை தும்புருவின் சாபத்தால் இழந்த ஊர்வசியைத் திரும்பப் பெற்றான் என்று ஸ்கந்தபுராணம் கூறுகிறது.[15] எவனொருவன் மீண்டும் பிறப்பதைத் தவிர்க்க விரும்புகின்றானோ அவன் இத்தீர்த்தத்தில் நீராடினால் நினைத்த பயனடைவான் என்று ஒரு நம்பிக்கை நிலவுகிறது.[16]

## சிவ தீர்த்தம்

நந்தி மண்டபத்தின் தெற்குப்புறத்தில் சிவ தீர்த்தம் உள்ளது. இது சிவபெருமானால் உருவாக்கப்பட்டதாகும். சிவபெருமான் ஒரு காலத்தில் காலபைரவர் ரூபமெடுத்து பிரம்மாவின் தலையைக் கொய்தார். இதனால் இப்பாவம் நீங்க காலபைரவர் தீர்த்தமாடி, பிரம்மாவின் கபாலத்தைப் புதைத்ததன் மூலமும் காசிக்குச் சென்று கங்கையில் நீராடியும் நான்கில் மூன்று பங்கு பாவத்தை நீக்கிக் கொண்டார்[17]. மீதமுள்ள கால் பங்கு பாவத்தை இராமேசுவரம் சிவதீர்த்தத்தில் குளித்து நீக்கிக் கொண்டார்.[18]

## கங்காதீர்த்தம்

இராமேசுவரம் கோயிலின் இரண்டாவது பிரகாரத்தில் **கங்கா தீர்த்தம், யமுனா தீர்த்தம், கயதீர்த்தம், சந்திரதீர்த்தம், சூரியதீர்த்தம், பிரம்மஹத்தி விமோச்சனதீர்த்தம், சக்கரதீர்த்தம், சங்கதீர்த்தம்** ஆகியவை உள்ளன. இவற்றில் முதல் மூன்றும் ரைக்வர் என்ற முனிவரின் வேண்டுகோளுக்கிணங்கிய சிவபெருமானால் உண்டாக்கப்பட்டதாகும். இம்முனிவர் முடமாக இருந்ததால் அவரால் நடக்கமுடியவில்லை. எனவே அவர் இராமேசுவரத்து இறைவனை வேண்டி, கங்கை, கயை, யமுனை தீர்த்தங்களை இத்தலத்திற்குக் கொண்டுவரும்படி வேண்டினார். சிவபெருமானும் அப்படியே செய்தார். முனிவர் அவற்றை இங்கே தங்கியிருக்க வேண்டிப் பணித்தார்.[19] சூரிய, சந்திர தீர்த்தங்கள் சூரியனாலும் சந்திரனாலும் உருவாக்கப்பட்டவையாம். பிரம்மஹத்தி விமோச்சனதீர்த்தம், பிராமணனைக் கொன்ற பாவம் தீர்க்குமாம். இராமேசுவரத் தலத்தைப் பார்ப்பதாலேயே பிராமணனைக்கொன்ற பாவமும், அனைத்துத் துன்பங்களும் நீங்கப் பெறலாம் என்று பத்மபுராணம் கூறுகிறது.

## சக்கர தீர்த்தம்

விஷ்ணுவின் சக்கரத்தின் பெயரால் உருவான சக்கரதீர்த்தம் உடைக்கப்பட்ட அல்லது இழக்கப்பட்ட அனைத்து உடற்பாகங்களையும் திருப்பித்தரவல்லதென நம்பப்படுகிறது.[20] அசுரர்களை வெற்றி கொள்வதற்காக இந்திரன் இச்சக்கரதீர்த்தத்தின் கரையில் சூரியனை நோக்கி யாகம்

செய்தான். அச்சமயம் மிகவும் வெப்பமான புகையினால் சூரியன கைகள் செயலிழந்தன. சூரியன் இத்தீர்த்தத்தில் நீராடி தமது கைகளை மீண்டும் சரிவர இயங்கப் பெற்றார் என சேதுபுராணம் கூறுகிறது.[21] சங்கு என்ற பெயருடைய முனிவர் ஒருவர் விஷ்ணுவை நோக்கித் தவமிருந்தார். அதன் காரணமாக உருவான சங்க தீர்த்தத்தில் நீராடினால் பெற்றோரையும், ஆசிரியரையும், நிந்தித்தது உட்பட்ட அனைத்துப் பாவங்களும் நீங்கப்பெறுவர்.[22]

## மாதவ தீர்த்தம்

மூன்றாம் பிரகாரத்தில் சேதுமாதவர் சன்னதிக்கு அருகில் மாதவதீர்த்தம் அமைந்துள்ளது. இது சதுரவடிவமான பெரியகுளமாகும். ஆனந்தராமாயாணம், இராமன் இங்கு வந்து நீராடி தனது பாவங்களைத் தொலைத்துச் சென்றதாகக் கூறுகிறது.[23]

மூன்றாவது பிரகாரத்தில், வடக்கு மற்றும் மேறகுப் பகுதிகளில் நள, நீலா, கவய, கவக்ச, கந்தமாதன, காயத்திரி, சாவித்திரி, சரஸ்வதி தீர்த்தங்கள் உள்ளன. முதல் ஐந்து தீர்த்தங்கள் வான்ரத் தலைவர்களாலும் அவர்தம் படையினராலும் உருவாக்கப்பட்டவையாகும். இவை அனைத்துப் பாவங்களையும், நோய்களையும் தீர்ப்பவையாகும்.[24] மற்ற மூன்று தீர்த்தங்கள் முறையே காயத்திரி, சாவித்திரி, சரஸ்வதியால் ஏற்படுத்தப்பட்டவை. அவர்கள் இவற்றைத் தாங்கள் நாள்தோறும் நீராடுவதற்காக உண்டாக்கினர் என்று கூறுகின்றனர். இவற்றில் நீராடினால் பாவங்கள் நீங்குவதோடு, விருப்பங்களும் நிறைவேறும் என்று நம்பப்படுகிறது. காசியப்பன் என்னும் பிராமணன் தக்சகன் என்னும் பாம்பு அரக்கனிடம் கையூட்டுப் பெற்றான். பரிச்சித் என்னும் அரசனைக் காக்கத் தவறினான். எனவே காசியப்பன் பாவத்தைச் சுமக்கலானான். பின்பு அவன் இராமேசுவரத்தில் சிவபெருமானை வணங்கி, காயத்திரி, சாவித்திரி, சரஸ்வதி தீர்த்தங்களில் நீராடி பாவம் நீங்கப் பெற்றான்.[25]

## இலட்சுமி தீர்த்தம்

இங்கு அனுமன் சன்னதிக்கு முன்பு இலட்சுமிதீர்த்தம் உள்ளது. இது அனைத்துப் பாவங்களையும் நீக்கிச் செல்வத்தைத் தருவதாக

நம்பப்படுகிறது. இத்தீர்த்தத்தில் நீராடியபின் குபேரன் தனது செல்வங்களைப் பெற்றதாகக் கருதப்படுகிறது. யுதிஷ்டிரர் தனது இராஜசூய யாகத்திற்காகப் பெருஞ்செல்வம் வேண்டுமென கிருஷ்ணரைக் கேட்டபோது கந்தமாதனத்திற்குச் சென்று இலட்சுமிதீர்த்தத்தில் நீராடிவரும்படி அவர் ஆலோசனை கூறியதாகவும், யுதிஷ்டிரரும் இதனை ஏற்று அவ்வாறே செய்து செல்வத்தையும் சக்தியையும் பெற்றதாகவும் தெரிகின்றது.[26] பாண்டவசகோதரர்கள், சூதாட்டத்தில் தங்களது செல்வங்களை யெல்லாம் இழந்தபோது பாண்டவசகாயனான கிருஷ்ணரின் ஆலோசனைப்படி இலட்சுமிதீர்த்தத்தில் வந்து நீராடினர்.[27]

## அக்னி தீர்த்தம்

இத்தலத்தில் அக்னிதீர்த்தம் மிக முக்கியமான ஒன்றாகும். இங்கு கிழக்கு கோபுரத்திற்கு எதிரில் அமைந்துள்ள வங்காள விரிகுடாக் கடலுக்கு இப்பெயர் வரக்காரணம், இங்குதான் இராமர் இலங்கையிலிருந்து வந்த சீதா தேவியின் தூய்மையைச் சோதித்தார். இந்தத் தீர்த்தம், அக்னி சீதாவை தீப்பிளம்பிலிருந்து வெளியே கொண்டுவந்த இடத்திலிருந்து தொடங்குகிறது.[28] இந்தத் தீர்த்தத்தின் உதவியால்தான், அகத்தியரின் சீடரான சுதெக்சனன் ஒரு இளம் வணிகனைக் காத்தார் என்று நம்பப்படுகிறது. அவ்வணிகன் ஒரு முனிவரின் மகனை குளத்தில் மூழ்கடித்து விட்டான்.[29] நாரதபுராணமும் அக்னிதீர்த்தத்தின் மகிமையைக் கூறுகிறது.[30] இந்தியா முழுவதும் உள்ள மக்கள் இந்தத் தீர்த்தத்தில் வந்து நீராடுகின்றனர். பொதுவாக இந்தியாவில் ஆறுகளிளோ அல்லது கடலிளோ நீராடுவது புண்ணியமானதென நம்பப்பட்டு வருகின்றது. ஆனால் குறிப்பாக இராமேசுவரக் கடலில் மூழ்குவது மிகவும் சிறப்பானதாகும். (இதற்கான விரிவான விளக்கம் இயல் 1 இல் உள்ளது.) குழந்தையில்லாதவர்கள் இத்தீர்த்தத்தில் நீராடி சிவபெருமானை வணங்கிச் சென்றால் குழந்தை வரம் கிடைக்கும் என்ற அசைக்க முடியாத நம்பிக்கை நிலவுகிறது. பௌர்ணமி நாளிலும் அமாவாசையிலும் இங்கு நீராடுவதால் சகல சௌபாக்கியங்களும் கிட்டும் என்பதில் ஐயமில்லை. இது பற்றிய பக்தர்களின் அசைக்க முடியாத நம்பிக்கை நாளுக்கு நாள் ஆலமரம் போல் வளர்ந்து வருவதைக் காணலாம்.

## தனுஷ்கோடி

முடிவாக தனுஷ்கோடி[31] பற்றி குறிப்பிடுவது இங்கு மிகவும் அவசியமானதாகும். இவ்விடம் இராமாயணக் கதையோடும், இராமேசுவரம் கோயிலின் தொடக்கத்தோடும் தொடர்புபடுத்தப்பட்டுள்ளது. இதுவும் ஒரு முக்கிய தீர்த்த தலமாகும். ஆனால் தற்போது கடலால் அழிக்கப்பட்டுள்ள காரணத்தினால் பொலிவிழந்துவுள்ளது.[32] இவ்விடம் வங்காள விரிகுடாவும் இந்து மகாசமுத்திரமும் கலக்கின்ற சிறப்பினைப் பெற்றுள்ளது. இங்கு நீராடினால் திறமையும், செல்வமும், புகழும், அறிவும், ஞானமும், ஆசைகளை அகற்றும் எண்ணமும், மனத்தூய்மையும் ஏற்படும் என்று மரபுவழிச் செய்திகள் கூறுகின்றன. வியாசரின் மகாபாரதக் கதையில் வரும் அசுவத்தாமன் (துரோணரின் மகன்) வேதவியாச முனியைச் சந்தித்து பலர் தூங்கிக் கொண்டிருந்தபோது அவர்களைக் கொன்று விட்டதாகவும் அதற்கான பரிகாரத்தைக் கூறும்படியும் வேண்டினான். முனிவரோ தனுஷ்கோடிக்குச் சென்று தீர்த்தமாடச் சொன்னார். அசுவத்தாமனும் அவ்வாறே செய்து பாவம் நீங்கப் பெற்றான்.[33] இத் தனுஷ்கோடிதீர்த்தம் இராமேசுவரம் கோயில் வளாகத்திலுள்ள சேதுமாதவர் சன்னதியின் தோற்றத்துடன் தொடர்புப்படுத்தப்படுகிறது. இத்தலம் எல்லாக் காலங்களிலுமே புனிதமானதாகும். ஆனால் மாசி மாதத்தில் இது சந்தோஷத்தையும் மோட்சத்தையும் கொடுக்கின்றது என நம்பப்படுகிறது. புனித காலங்களான அர்த்தோதயம், மஹோதயம் மற்றும் சூரிய, சந்திர கிரகண புண்ணிய காலங்களில் இங்கு நீராடுவதால் புண்ணியம் கிட்டும்.[34]. பத்மபுராணம் மற்றும் நாரதபுராணம் ஆகியவை தனுஷ்கோடியின் மாண்பையும் அங்கு நீராடுவதன் பயன்களையும் மிகச் சிறப்பாக விளக்குகின்றன.[35]

இராமேசுவரம் தீர்த்தங்களைப் பற்றிய 'புராணச் செய்திகளிலிருந்து இத்தலத்தின் பெருமையும் கோயிலின் சிறப்பும் தீர்த்தமாடலின் பயனும் நமக்குத் தெளிவாகத் தெரியவருகிறது. இந்தியத் துணைக் கண்டத்துக் கோயில்களில் எந்த ஒரு கோயிலும் இதுபோன்று பல தீர்த்தங்களைத் தனது வளாகத்திற்குள் பெற்றிருக்கவில்லை என்பது வரலாற்றாளர்களுக்கும் கலை ...

வல்லுனர்களுக்கும், பிறருக்கும் தெரிந்த உண்மையாகும். இத்தீர்த்தங்கள் இருக்கிற காரணத்தினால் கோயிலினுள் எப்போதும் நீர் இருந்து கொண்டே இருக்கிறது. எப்படி ஒரு புரோகிதர் பூசை சாமான்களையும் மற்றவற்றையும் தூய்மைப்படுத்த நீர் தெளிக்கின்றாரோ அது போன்று ஒவ்வொரு நிமிடத் துளியும் இக்கோயில் தூய்மையாகிக் கொண்டிருப்பதைக் காணலாம். இக்கோயிலின் புனிதத் தன்மையும் வழிபாடும் எப்பொழுதுமே காசியோடு ஒப்பிடப் படுவதைக் காணலாம். வடக்கிலிருந்து வரும் பயணிகள் கங்கை நீர் கொண்டு வந்து இங்கு பூசிப்பதும் இங்கிருந்து கோடித்தீர்த்தம் எடுத்துச் சென்று காசியில் வழிபடுவதும் வழக்கமாகக் கொண்டிருக்கும் மக்கள் தேசிய ஒருமைப்பாட்டை மறைமுகமாக உணர்த்துகின்றனரோ. இராமேசுவரம் கோயில் தீர்த்தங்கள் ஒன்றுக்கொன்று அருகே அமைந்திருந்த போதும் ஒவ்வொன்றும் ஒவ்வொரு சுவையைப் பெற்றிருப்பது அதிசயமன்றோ. இதற்கான அறிவியல் பூர்வக்காரணம் எதுவென்று நமக்குப் புலப்படவில்லை. வங்காள விரிகுடாக் கடலும் இராமேசுவரத் தீவில் மற்ற இடங்களில் இருக்கின்ற நீரும் உப்பாக இருக்கின்றபோது இக்கோயிலுக்குள் உள்ள தீர்த்தங்களில் உள்ள நீரின் சுவை வேறுபடுவதேன் என்பது வினாவாகவே உள்ளது.

பெரும்பாலான இந்துப் புராணங்கள் இராமேசுவரம் மற்றும் அதன் தீர்த்தங்கள் பற்றிச் சிறப்பாகக் குறிப்பிடுகின்றன. காலத்தால் பிந்திய ஸ்கந்தபுராணமும், சேதுபுராணமும் இக்கோயிலில் உள்ள ஒவ்வொரு தீர்த்தத்தைப் பற்றியும் விளக்கமாகக் கூறுகின்றன. இங்கு நீராடுவதால் ஏற்படும் பலனை மக்களுக்கு உணர்த்த இதிகாசப் புராணக் கதைகளிலிருந்து உதாரணங்களை எடுத்துச் சொல்கின்றன.

இவை மிகைப்படுத்திக் கூறுவனவாக இருந்தபோதிலும் அவற்றை முற்றிலும் கட்டுக் கதையென்றோ அல்லது தவறான செய்தியென்றோ முற்றிலும் ஒதுக்கிவிட முடியாது. பொதுவாக ஒவ்வொரு கோயிலும் திருச்சபையும் மசூதியும் தனக்கென ஒரு தொடக்கக்கதையை வைத்திருக்கும். மத்திய காலத் தமிழக வரலாற்றைப் பார்த்தால் ஒவ்வொரு கோயிலுக்கும் தலவரலாறு என்ற ஒன்று இருப்பதைக் காணலாம். ஒவ்வொரு கடவுளும்

ரதேனும் ஒரு அற்புதத்தை நிகழ்த்தியதாக சொலலப்படுவது மரபு வழியாகக் கடைப்பிடிக்கப்பட்டுவரும் கருத்தமைதியாகும். இக்கதைகள் எல்லாம் மனிதனால் உருவாக்கப்பட்டிருந்த போதிலும் அவை மனிதனை மனிதனாக்கப் பயன்படுத்தப்பட்டன என்று உணரலாம். புராணக் கருத்துக்களும் மனிதனின் மேம்பாட்டைக் கருதியே வழி வழியாக எழுதப்பட்டு வந்துள்ளன. அவை புனித தீர்த்தத் தலங்களில் நீராடுவதால் ஏற்படும் பயன்களை மனித வாழ்வின் அனுபவங்களை அடிப்படையாகக் கொண்டே எழுதின என்பதில் ஐயமில்லை. எனவே மனித வாழ்வின் அனுபவத்தினால் கண்டு களிக்கப்பட்ட இராமேசுவர தீர்த்தயாத்திரை அனைவருக்கும் நன்மையாக அமையும் என்பது அனுபவப் பூர்வமான உணர்வாகும்.

## குறிப்புகள்

1. இக்கோயிலுக்கு வெளியே உள்ள தீர்த்தங்களாவன கபி தீர்த்தம், பைரவ தீர்த்தம் (பாம்பன்), வில்லுணி மற்றும் சீதா குண்ட தீர்த்தங்கள் (தங்கச்சி மடம் அருகில்), ரண விமோச்சன தீர்த்தம், பஞ்ச பாண்டவ தீர்த்தம், மங்கள தீர்த்தம் மற்றும் அமிர்தவாபி (ஏகாந்த ராமேஸ்வரம் அருகில்), ஜடாயு தீர்த்தம், (தனுஷ்கோடி) இராம தீர்த்தம் மற்றும் இலட்சுமண தீர்த்தம் (கோயிலுக்கு ஒரு கல் தொலைவில் உள்ளன); அனுமன் குண்டம் (கோயிலுக்கு வடக்கில்), அகத்திய தீர்த்தம் (கோயிலுக்கு வடகிழக்கு), அக்னி தீர்த்தம் (கடல்), நாகதீர்த்தம் (கோயிலுக்கு வடகிழக்கு), சுக்ரீவ, வாலி, கஜ, குமுத, அங்கத, ஜாம்பவான், சாரத, பீம, நகுல, சகாதேவ, திரௌபதி மற்றும் பரசுராம தீர்த்தங்கள் (இவை கந்தமாதனபர்வதம் செல்லும் வழியிலுள்ள சிறு குளங்களாகும்).
2. ஸ்கந்தபுராணம், இயல் 43, (சேது மகாத்மியம்)
3. ஆனந்தராமாயணம், யுத்த காண்டம், இயல் IX, பாரா 28.
4. அத்யாத்மராமாயணம், யுத்தகாண்டம்
5. **Bhagavata Purana,** Skanda X, canto 49.
6. கோடித்தீர்த்தம் விசாலாட்சியம்மன் சன்னதிக்கு அருகில் உள்ளது. இராமன் தன் வில்லினால் இதனை உருவாக்கி சிவலிங்க பிரதிஷ்டையின் போது பயன்படுத்தியதால் புனிதமாகியது.
7. **Matsya Purana**, ch.191, vv. 7-13
8. சேதுபுராணம், கோடித்தீர்த்தச் சருக்கம், பாரா 70 - 9 மற்றும் ஸ்கந்த புராணம், சேதுமகாத்மியம்.
9. சேதுபுராணம், கோடித்தீர்த்தச் சருக்கம், பாரா 81
10. **Naradiya Purana, Uttarakanda,** ch.76.
11. சேதுபுராணம், கோடித் தீர்த்தச் சருக்கம். பாரா.82.

12. சேதுபுராணம், சாவதீர்த்தச் சருக்கம்.
13. ஸ்கந்தபுராணம், சேது மகாத்மியம்.
14. சேதுபுராணம், சர்வதீர்த்தச் சருக்கம், பாரா, 34 - 7.
15. ஸ்கந்தபுராணம், சேது மகாத்மியம்.
16. சேதுபுராணம், சத்யாமிர்தத் தீர்த்தச் சருக்கம், பாரா, 1 - 8.
17. பிரம்மாவின் கபாலத்தை காலபைரவர் புதைத்த இடம் கபால தீர்த்தம் எனப்படுகிறது. (சேதுபுராணம், சிவதீர்த்தச் சருக்கம், பாரா 114)
18. மேலது.
19. மேலது, முத்தீர்த்தச் சருக்கம், பாரா 1 - 13
20. **Padma Purana,** Srishti Kanda, Canto 38.
21. சேதுபுராணம், சங்கதீர்த்தச் சருக்கம், பாரா 24 - 6
22. மேலது; சங்கதீர்த்தச் சருக்கம், பாரா, 24 - 6.
23. ஆனந்தராமாயணம், யுத்த காண்டம், இயல் IX, பாரா 28.
24. ஸ்கந்தபுராணம், சேது மகாத்மியம்.
25. சேதுபுராணம், காசியப்ப சருக்கம், பாரா 70 - 92.
26. ஸ்கந்தபுராணம், சேது மகாத்மியம்.
27. சேதுபுராணம், இலட்சுமி தீர்த்தச் சருக்கம், பாரா 30 - 2.
28. மேலது; அக்னி தீர்த்தச் சருக்கம், பாரா. 12 - 3.
29. ஸ்கந்தபுராணம், சேது மகாத்மியம்; சேதுபுராணம், அக்னி தீர்த்தச் சருக்கம், பாரா 102 - 3.
30. **Naradiya Purana, Uttarakanda** ch.76.
31. இது தனுஷ்கோடி என்று அழைக்கப்படுவதற்குக் காரணம் இராமன் தன் வில்லின் முனையால் இங்கு கட்டிய பாலத்தை உடைத்ததாலாகும். இதனை உடைக்குமாறு விபூடணன் இராமனை வேண்டிக் கொண்டான். இல்லையெனில் எதிரிகள் படையெடுப்பு எளிதாகிவிடும் என்று கூறினான்.
32. 1964 டிசம்பரில் ஏற்பட்ட புயலில் இவ்விடம் அழிவுற்றது.
33. சேதுபுராணம், அசுவாத்தமச் சருக்கம், பாரா 90 - 6.
34. மேலது; தனுஷ்கோடிச் சருக்கம், பாரா 50 - 6,
35. **Padma Purana,** Uttarakanda, ch.35; **Naradiya Purana,** Uttarakanda, ch.76.

# துணை நூற்பட்டியல்

## முதன்மைச் சான்றுகள்

### கல்வெட்டு:


**South Indian Inscriptions** – eds., Hultzsch, E.and others, Government Press, Madras, 1890-1964, 20 Vols.

**South Indian Temple Inscriptions** – Subramaniyan, T.N. and others, Government Oriental Manuscript Library, Madras, 1953-57 3.Vols.

**Epigraphia Carnatica** – ed., Lowis, Bangalore, 1886-1905, 10 Vols.

**Epigraphia Indica** – Calcutta, 1894 - 1956, 31 Vols.

**Indian Antiquary** – Bombay, 1872-1953, 62 Vols.

**A Topographical List of the Inscriptions of the Madras Presidency (Collected till 1915)** – Rangachariya V., Madras, 1919.

**Chronological List of the Inscriptions of the Pudukkottai State** – Pudukkottai, 1929.

**Topographical List of the Travancore Inscriptions** – eds., Gopinatha Rao, T.A. and others, Travancore Archaeological Series, 1916 - 41.

**Travancore Inscriptions – Topographical List** – Vasudeva Poduval, R, Trivandrum, 1941.

**Copper Plate Inscriptions Belonging to the Sri Sankaracharya of the Kamakoti pitha** – ed., Gopinatha Rao, T.A, Law Printing House, Madras, 1916.

**Tirumalai Tirupati Devasthanam Epigraphical Series** – eds., Sadhu Subramanya Sastri and Pandit V.Vijayaragavacharya, Tirupati Tirumalai Mohant's Press, Madras, 1930 - 37, 5 Vols.

**Historical Inscriptions of South India Collected till 1925** – Sewell, Robert, ed., by S.Krishnaswamy Iyengar, University of Madras, 1932.

Copper Plate Records Preserved in the Office of the Ramnad Samasthanam

Annual Reports of the Archaeological Survey of Southern India

Annual Reports on South Indian Epigraphy

Annual Reports on Indian Epigraphy

## வெளிநாட்டுக் குறிப்புகள்


**The Travels of Ibn Batuta** – tr.Lee.Rav. Samuel. The Oriental Translation Committee, London, 1829.

**The Travels of Marcopolo** – Forman Warner & Burland Cottie A.Michael Josephi Ltd; London, 1971.

**The Book of Sar Marcopolo (II)** – ed., & tr., Sir,Henry Yule, Cornol, London, 1903.

**History of the Jesuit Mission in Madura, South India.** – Chandler J.S., Madras, 1909

**Seventy Five years in the Madura Mission** – Chandler, J.S., nd.

**The History of India as Told by its own Historians** – ed. & tr., Elliot, H,N., & Dowson, John, Kitab Mahal (P) Ltd., Allahabhad, 1964, 7 Vols.


## தமிழ் மற்றும் வட மொழிச் சான்றுகள்


அகநானூறு – *விளக்கம். சோமசுந்தரம், பி.வி. கழகம், சென்னை, 1940.*

காமீகாகமம் (பூர்வம்) – *பதி.மொ.பெ. சுவாமிநாத சிவாச்சாரியார்; சி.தென்னிந்திய அர்ச்சகர் கழகம், சென்னை, 1977.*

சகலாகம சரசங்க்ரஹம் – *தென்னிந்திய அர்ச்சகர் கழகம், சென்னை, 1974.*

இராமப்பையன் அம்மானை – *தஞ்சை சரஸ்வதிமகால் நூல் நிலையம், தஞ்சாவூர், 1978.*

இராமப்பையன் அம்மானை – *பதி.வையாபுரிப்பிள்ளை எஸ். சென்னைப் பல்கலைக்கழகம், 1951.*

பலபட்டடைச் சொக்கநாதரின் தேவையுலா – *பதி. சாமிநாதய்யர், உ.வே. சன் தமிழ் பதிப்பகம், சென்னை, 1911.*

தேவாரம் (ஏழு திருமுறைகள்) – *தருமபுர ஆதீனம், தருமபுரம் 1953– 64.*

தாயுமானவர் பாடல்கள் – *பதி.இராமநாதபிள்ளை பி., கழகம் பதிப்பகம், சென்னை. 1966.*

திருமூலரின் திருமந்திரம் – *விளக்கம். இராமநாத பிள்ளை, பி., மற்றும் சிதம்பரநாதன், அ., கழகம், சென்னை 1974 – 75, 2 தொகுதிகள்.*

அருணகிரிநாதர் திருப்புகழ் – *பதி.கந்தசாமிக் கவிராயர் எம்.ஆர்.; இ.எம். கோபாலகிருஷ்ண கோன், பதிப்பகம், மதுரை, 1956.*

| | | |
|---|---|---|
| The Dharam Sastras Hindu Religious Codes | – | tr., Manmath Nath Dutt., Cosmo pub. New Delhi, 1971, VI. |
| Koil Olugu (anonymous) | – | ed., Hari Rao, V.N., Madras, 1961. |
| Madhura Vijayam of Gangadevi | – | ed., & tr., S.Tiruvenkatachari. |
| Rig Veda Samhita | – | Tr., Wilson H.H.,Cosmo Publ., New Delhi, 1977, 6 Vols. |
| Sri Lalithasahasranama | – | Commt. Suryanarayanamurty, Chaganty, B.V.B., Bombay, 1975. |
| Sri Vishnusahasranama - the commentaries of Sri Sankaracharya & Sri Prasarabhatta | – | ed., Parthasarathy, R.E., (With Ganesh & Co., Madras, nd ) |

**புராணங்கள்**

| | | |
|---|---|---|
| Bhagavata Purana | – | ed. & tr., Ganesh Vasudev Tagore, Motilal Banarsidass, Delhi – 1976. |
| Kurma Purana | – | tr., Adhivirarama Pandyan, Thanjavur Saraswati Mahal Library, Thanjavur, 1963. |
| Kurma Purana | – | ed., Rama Govindasamy Pillay, Thanjavur, 1961. |
| Linga Purana | – | ed., & tr., Shastri, J.L. and others, Indological Pub., New Delhi, 1973. |
| Markandeya Purana | – | tr., Pargiter, F.E., Indological Book House, Delhi, 1969. |
| Matsya Purana | – | ed., Akhotar, Jamna Das, notes by Majumdhar B.C., Oriental Public., Delhi, 1972. |
| Naradiya Purana | – | ed. & tr., Srinivasacharya V. Kaliyalam, Bangalore, 1891. |
| Sarabha Purana | – | ed., Sokkalingam, V., T.S.M. Library, Thanjavur, 1972. |
| Setu Purana of Nirambavalakiya Desikar | – | ed., Arumuganavalar, Madras, 1873. |
| Siva Purana | – | Shastri, J.L., Motilal Banarsidass, Delhi, 1977 (Rep). |
| Skanda Purana | – | Gurumandal Series, Calcutta, 1959. |
| Tiruttondar Purana or Periya Purana of Sekkilar | – | Commt. Subramanya Mudaliyar C.K. Kovai Tamil Sangam Pub., Coimbatore, 1949 - 68, 6 Vols. |

**காவியங்கள்**

ஸ்ரீவால்மீகி இராமாயணம் – *வவ்வில்ல ராமசாமி சாஸ்திரி சன்ஸ், சென்னை, 1947.*

கம்பராமாயணம் – *உ.வே.சாமிநாதய்யர் நூல்நிலையம் வெளியீடு, சென்னை 1959 – 67.*

ஆனந்தராமாயணம் – *மொ.பெ. சுப்பிரமணிய பாரதி., அ.வைத்தியநாதய்யர் வெளியீடு, சென்னை, 1911.*

அத்யாத்மராமாயணம் – *பதி. & மொ.பெ. சீத்தாராம சாஸ்திரி. வி.பாலகிருஷ்ண முதலியார் பதி. சென்னை, 1909.*

மகாபாரதம் – *பதி. & மொ.பெ. ஸ்ரீனிவாசாச்சாரியார் மற்றும் இராமானுஜாச்சாரியார். எம்.வி., சென்னை, 1910.*

**சிற்ப சாத்திரங்கள்**

**Brahmiyacitrakarmasastra (with Tamil translation)** – ed., & tr., Sundara Sharma, V. & G.Nagaraja Rao, Thanjavur Saraswathi Mahal Library, Thanjavur, 1960.

**Manasara (with Tamil translation)** – ed. & tr., Venkata Subramanya Sastri, N.V., T.S.M. Library, Thanjavur, 1963, 2 Vols.

**Mayamata (with Tamil translation)** – ed.& tr., Subrahmanya Sastri, K.S., T.S.M. Library, Thanjavur, 1966 - 68, 2 Pts.

**Sakaladhikara of Agastya (with Tamil translation)** – ed. & tr., Vasudeva Sastri, K., T.S.N. Library, Thanjavur, 1961.

**Sakaladhikara of Agastya (with English translation)** – ed., tr. Gopala Iyengar, V., T.S.M. Library, Thanjavur, 1960.

**Silparatna of Sri Kumara (With Tamil translation)** ed.& tr., Devanadacharya, T.S.M. Library, Thanjavur, 1961.

**Sri Kasyapasilpasastra (Kasyapiya) (With Tamil translation)** – ed., & tr., Subrahmanya Sastri, K.S.,T.S.M. Library, Thanjavur, 1960 (Pt. I) and 1968 (Pt.II)

**Sritatvanidhi (with Tamil translation)** – ed & tr., Subrahmanya Sastri, K.S., T.S.M. Library, Thanjavur, 1964 - 66, 3 Vols.

**ஆவணக் காப்பகச் சான்றுகள்**

Madura District Records – relevant Volumes.

The Judgement of the Lords of the Judicial Committee of the Privy Council, 18 th March, 1874.

Government G.Os. for the years 1904, 1905 & 1906.

The Revenue Register for A.D. 1874 (Vol.8)

Declaration of the High Court of Madras under No. A.S.31/1912.

Sri Ramanathasvami temple Devasthanam Records.

Records of the temples and choultries under the control of Ramnad Samasthanam.

## இரண்டாம் தரச் சான்றுகள்

### ஆங்கிலம்

**Acharya P.K.** – **A Dictionary of Hindu Architecture,** London, 1927.

**Ahmed, E.** – **Coastal Geomorphology of India,** Orient Longman, New Delhi, 1972.

**Aiyengar, P.T. Srinivasa** – **Bhoja Raja,** Annamalai University, Madras ,1931.

**Ananthalwar M.A. & Alexander Rea** – ed. **Indian Architecture,** Indian Book Gallery, Delhi, 1980, 3 Vols.

**Arunachalam, M.** – **Peeps into the Cultural Heritage of Hinduism,** Tiruppanandhal, 1982.

**Barnett ,L.D.** – **Antiquities of India,** Calcutta, 1977.

**Balasubramanyan, S.R.** – **Early Chola Temples (Parantaka I to Raja Raja I),** Orient Longman, Bombay 1971.

**Baktay Ervin** – India, Budapest, 1932.

Baker, C.J. & Washbrook, D.A. – **South India, Political Institutions** – and Political Change, Meerut, 1975.

**Banerjee, J.N** – **Religion in Art and Archaeology (Vaishnavism & Saivism),** University of Lucknow, 1968.

– **Development of Hindu ,Iconography,** University of Calcutta, Calcutta, 1941.

**Barth, A.** – The Religions Of India, New Delhi, 1978.

**Barrett, Douglas.** – **Early Chola Bronzes,** Bhulabhai Memorial Institute, Bombay, 1965.

– **Early Chola Architecture and Sculpture,** London, 1974.

**Basham A.L.** – **The Wonder that was India,** Rupa & Co, Calcutta, 1971.

– ed., **A Cultural History of India,** Clarendon Press, Oxford, 1975.

**Basil Gray,** – ed., **The Arts of India,** Phaldon Oxford, 1981.

**Bhattacharya, Dipak Chandra** – **Tantrik Buddhist Iconongraphic Sources,** Munshiram Manoharlal Pub., New Delhi, 1974.

**Bhattacharya, Tarapada.** – **The Canons of Indian Art or A study on Vastuvidya,** Calcutta, 1963.

**Bon, G.Le** – **The World of Ancient India,** Tutor Publishing Company, New Work, 1974.

**Brown, Percy** – **Indian Architecture (Buddhist and Hindu Periods),** D.B.Taraporevala Sons, Bombay, 1959.

**Buddha Prakash** – **Aspects of Indian History and Civilization,** Shivalal Agrwala & Co. (P) Ltd., Educational Pub., Agra, 1965.

**Buhel, G.** – ed., **Vikramankadevacharita,** Bomabay, 1875.

**Carter, John Ross** – ed., **Religiousness in Sri Lanka,** Marga Institute, Colombo, 1979.

**Chakravarthi, Mahadev** – **The Concept of Rudra Siva,** Motilal Banarsidass, Delhi, 1994.

**Coomaraswamy, A.K.** – **Dance of Siva,** Bombay, 1956.

**De, S.C.** – **Historicity of Ramayana and the Indo Aryan Society in India and Celyon,** Ajantha Pub., Delhi, 1976.

**Denison Ross, E.** – **An Alphabetical List of the Feasts and Holidays of the Hindus and Muhammadans,** Calcutta, 1914.

**Desai, Kalpana, S.** – **Iconography of Vishnu** (in North India upto the Medieval Period), Abinav Pub., New Delhi, 1973.

**Desai, P.B.** – ed., **A History of Karnataka,** Dharwar, 1970.

**Dhaky M.A.& Meister** – ed., **Encyclopaedia of Temple Architecture, South India, Lower Dravidadesa,** 1983.

**Donald and Jean Johnson** – **God and Gods in Hinduism,** New York, 1972.

**Dubreuil, Jouveau** – **Dravidian Architecture,** Madras, rep. 1987.

Dubois, J.A. Abbe – **Hindu Manners, Customs and Ceremonies**, Oxford, 1906, Rep.1972.

Dutt, R.C. – **History of Civilization in Ancient India Based on Sanskrit Literature**, Vishal Pub., Delhi, 1972, II.

Eliade, Mircea – **The Sacred and Profane,** New work, 1959.

Fergusson, James – **History of Indian and Eastern Architecture,** Munshiram Manoharlal, New Delhi, 1972.

Flaherty,O. – **Hindu Myths**, Penguin Books, 1975.

Ganapathi Vilas Pub. – **Brief Notes: Traditional and Historical Relating to the Rameswaram Temple,** Madurai, 1914.

Gerini, G.E. – **Ptolemy's Geography of Eastern Asia,** Royal Asiatic Society, London, 1909.

Ghurye, G.S. – **Religious Consciousness,** Popular Prakashan, Bombay, 1965.

Goetz, Hermann – **Art of the World – India,** Mograw Book Company INC., New York, 1959.

Gopinatha Rao, T.A. – **Elements of Hindu Iconography**, Motilal Banarsidass, Delhi, 1968 and Indological Book House, Varanasi, 1977, 4 Vols.

Government of India – ed., **Temples of South India,** Delhi, 1973.

Gupta S.P. – ed., **Aspects of India's History and Culture** (Prof. K.A.Nilakanta Sastri's Felicitation Volume), Oriental Pub., Delhi, 1974.

Harle, James C. – **Temple Gateways in South India,** Bruno Cassirer, Oxford, 1963.

– **Art and Architecture of Indian sub–Continent,** Penguin Books, 1986.

Havell, E.B. – The Ancient and Medieval Architecture of India, John Murray, London, 1915 and S. Chand & Co., New Delhi, 1972.

– ed., **The Art Heritage of India**, Bombay, 1964.

Heras, The Rev. Henry – **The Aravidu Dynasty of Vijayanagar,** Madras, 1927.

Hopkins, E. Washburn – **Epic Mythology**, Motilal Banarsidass, Delhi, 1915, Rep. 1974.

Hugo Munster Berb – **Art of India and South East Asia**, Harry N. Abrams, INC., Pub., New Delhi, 1970.

Iyengar, S. Krishnaswamy – **A History of the Holy Shrines of Sri Venkatesa in Tirupathi**, Madras, 1940, I.

– **South India and Her Muhammadan Invaders**, New Delhi, 1921.

Jagadisa Iyer, P.V. – **South Indian Shrines**, New Delhi, 1982.

Jeyachandrun, A.V. – **Madurai Temple Complex,** M.K. University, Pub., Madurai, 1985.

Kandaiya Pillai, N.C – **Tamil India**, Madras, 1959.

Khaliq Ahamed Nizami – **Some Aspects of Religion and Politics in India during the 13 th Century** A.D., Delhi, 1974.

Kinsely, David – **Hindu Goddesses**, Motilal Banarsidass, Delhi, 1987.

Kramrisch, Stella – **The Hindu Temple**, Motilal Banarsidass, Delhi, 1976, 3 Vols.

Krishna Saṣtri, H. – **South Indian Images of Gods and Goddesses,** Madras Government, Madras, 1916.

Krishnaswami, A. – **The Tamil Country under Vijayanagar,** Annamalai University, Annamalai Nagar, 1964.

Lakshmanan, N. – ed., **India the Fountain of Peace,** Coimbatore, 1937.

Mahalingam T.V. – **The South Indian Temple Complex,** Kannada Research Institute, Dharwar, 1970.

Mahalingam, T.V. & Others – ed., **Transactions of the Archaeological Society of South India,** 1965-68, Archaeological Society, Madras, 1978.

Majumdar, R.C. – **The Classical Accounts of India,** Calcutta, 1960.

Majumdar and others – ed., **History and Culture of the Indian People,** Bharadiyavidya Bhavan, Bombay, 1967, VI.

Mallaya, N.V. – **Studies in Sanskrit Texts on Temple Architecture** (with Special Reference to Tantrasamudaya), Annamalai , nagar, 1947.

Margaret & James Stutley – A Dictionary of Hinduism (Its Mythology, Folklore and Developments 1500 B.C. – A.D. 1500) Great Britain, 1977.

Margaret Stutley – **The Illustrated Dictionary of Hindu Iconography,** London, 1985.

Meijer, Gerda Hoekveld – **Koils in Colamanadalam,** Amsterdam, 1981.

Mendis, G. C. – **The Early History of Ceylon** (or the Indian period of Celyon History) Calcutta, 1940.

Michell, George – **The Hindu Temples,** London, 1977.

– **Architecture and Art of Southern India,** Cambridge University Press, 1995.

Monod Bruhl Devi – Indian Temples, Oxford 1955.

Motichandra – **Trade and Trade Routes in Ancient India,** Abhinav Pub., New Delhi, 1977.

Munsterberg, Hugo – **Art of India and South East Asia,** Horry N. Abrams, INC, New york, 1970.

Munshi, K.M. – **Indian Temple Sculpture,** Rupa & Co., Calcutta, 1959.

Nagasamy, R. – ed., **South Indian studies,** Madras, 1979, II.

– ed, **Thirutani and Velanjeri Copper Plates,** Government of Tamil Nadu, Madras, 1979.

– **The Art of Tamil Nadu,** State Department of Archaeology, Madras, 1972.

– **Ramanathapuram** (An Archaeological Guide), Madras, 1978.

Nambi Arooran, K. – **Glimpses of Tamil Culture based on Periyapuranam,** Koodal Pub., Madurai, 1977.

Navaratnam, C.S. – **A Short History of Hinduism in Ceylon and Three Essays on Tamils,** Jaffana, 1964.

Nieuhoff, J. – **Travels and Voyages in the East Indies,** 1703.

Oppert, Gustav – **On the Original Inhabitants of India,** Oriental Pub., Delhi, 1972.

Pathy, T.V. – **Ellura Art and Culture,** Sterling Pub., New Delhi, 1980.

Pillay, K.K. – **South India and Sri Lanka,** University of Madras, 1975.

– **The Suchindram Temple,** Kalashetra Pub., Madras, 1953.

Pratima Bowes – **The Hindu Religious Tradition** ( a Philosophical approach), New Delhi, 1976.

Radhagovinda Basak – ed., **Pravarasena's Ravana Vadhamahakavyam**, Sanskrit College, Calcutta, 1959.

Radhakrishnan, S. – **A General History of the Pudukkottai State,** Pudukkottai, 1916.

Raghavan, M.D. – **India in Ceylonese History, Society and Culture,** Bombay, 1969.

Rajayyan, K. – **Rise and Fall of the Poligars of Tamilnadu,** University of Madras, Madras, 1974.

Rajukalidoss – **Temple Cars of Medieval Tamilagam,** Madurai, 1989.

Ramakrishna Aiyar, V.G. – **The Economy of a South Indian Temple,** Annamalainagar, 1946.

Raman K.V. – **Some Aspects of Pandyan History in the Light of Recent Discoveries,** Madras University, Madras, 1971 - 72.

– **Sri Varadarajaswamy Temple** – Kanchi, Abinav Pub., New Delhi, 1975.

Sahai, Bhagawant – **Iconography of Minor Hindu and Buddhist Deities,** Abhinav Pub., New Delhi, 1975.

Saletore, B.A. – **Social and Political Life in the Vijayanagar Empire,** P.G. Paul & Co., Madras, 1934, 2 Vols.

Saletore, R.N. – **Vijayanagara Art,** Sundeep Prakasan, Delhi, 1982.

Santosh N.Desai – **Hinduism in Tai Life,** Bombay 1980.

Sathyanatha Aiyar, R. – Tamilaham in the 17 th Century, University of Madras , 1956.

**History of the Nayaks of Madura,** University of **Madras**, 1980.

Sethuraman, N. – **The Cholas** (Mathematics Reconstructs the Chronology) Kumbakonam, 1977.

– **The Imperial Pandyas** (Mathematics Reconstructs the Chronology), Kumbakonam, 1977.

– **The Medieval Pandyas** (Mathematics Reconstructs the Chronology), Kumbakonam, 1980.

Sethuraman, G. – **Facets of Indian Art and Culture,** J.J. Publications, Madurai, 1995.

Swell, Robert – **List of the Antiquarian Remains in the Presidency of Madras**, Madras, 1882.

– **List of Inscriptions and Sketch of the Dynasties of Southern India,** Madras, 1884.

– **A Forgotten Empire (Vijayanagar),** National Book Trust, New Delhi, 1970.

Shankaranarayan, S. – **Glory of Divine Mother** (Devimahatmyam), Pondicherry, 1968.

Sharma, Brijendra – **Festivals of India,** Abhinav Pub., New Delhi, 1978.

Sircar, D.C. – **The Sakta Pithas,** Delhi, 1973.

Sivaramamurti, C. – **Nataraja in Art, Thought and Literature,** National Museum, New Delhi, 1974.

– **Satarudriya – Vibhuti of Siva's Iconography,** Abhinav Pub., New Delhi, 1976.

– **Royal Conquests and Cultural Migrations in South India and Deccan,** Indian Museum, Calcutta 1955.

– **Indian Paintings,** New Delhi, 1976.

– **Sanskrit Literature and Art Mirrors of Indian Culture.**

– **Kalugumalai and Early Pandyan Rockout Shrines**, Bombay, 1961.

Sivaratnam, C. – **The Tamils in Early Ceylon,** Colombo, 1968.

Slater, Gilbert – **South India,** London, 1936.

Somalay – **Folklore of Tamilnadu** – National Book Trust, New Delhi, 1973.

Somerest Playne, Comp. – ed., by Arnold Wright, **Southern India (Its History, People, Commerce and Industrial Resources)** London, 1914 - 1915.

Soundararajan, K.V. – **The Art of South India – TamilNadu and Kerala,** Sundeep Prakhasan, Delhi, 1978.

Srikantha Sastri, S.'s Felicitation Volume – Srikanthika, Geetha Book House, Mysore, 1973.

Srinivasan, T.N. – **A Hand Book of South Indian Images,** Tirupati, 1982.

Srinivasachari, C.S. – **A History of Gingee and its Rulers,** Annamalai University, Annamalainagar, 1943.

Stein, Burton – ed., **South Indian Temples**, Vikas pub., New Delhi, 1978.

– ed., **Essays on South India**, Vikas pub., New Delhi 1976.

Subrahmanyan, S.V. – e.d., **Heritage of the Tamils,** International Institute of Tamil Studies, Madras, 1983.

Suresh, B.Pillai – **Introduction to the Study of Temple Art**, Equator and Meridiam, Thanjavur, 1976.

Surinder Mohan Bhardwaj – **Hindu Places of Pilgrimage in India,** Delhi, 1973.

Susan L.Huntington – **The Art of Ancient India,** Weather Hill, New York, 1993.

Swami Harshananda – **Hindu Gods and Goddesses,** Mysore, 1981.

Sydney Bailey, D. – **Ceylon,** New York, 1952.

Thiruvenkatachari, S. – **The Setupatis of Ramnad,** Karaikudi, 1959.

Thomas, P. – **Hindu Religious Customs and Manners,** 1960.

Thurston, Edgar – **Castes and Tribes of Southern India,** Madras Government Press, Madras, 1909, 8 Vols.

Upadhyaya, Padma – **Female Images in the Museums of Uttrapradesh and their Social Background,** Chaukhambha Orientalists, Varanasi, 1978.

Upadhyaya, B.S. – **India in Kalidasa,** Allahabad, 1947.

Vanamamalai, N. – **The Setu and Rameswaram**, Madras, 1929.

Venkataraman, S.R. – **Temple Entry Legislation**, Bharatdevi pub., Madras, 1946.

Venkataraman, K.R. – **Hoysalas in the Tamil Country,** Annamalainagar, 1950.

Venkataramanayya, N. – **Studies in the History of the Third Dynasty of Vijayanagar,** Madras, 1935.

Venugopala Pillai, – ed., **Kuttanul of Sattanar,** (commt) S.T.S. Yogiyar, Madras, 1968.

Veronica Ions – **Indian Mythology,** Paul Hamlyn, London, 1967.

White Head, Henry – **The Village Gods of South India,** Sumit Pub., Delhi, 1976.

Willkins, W.J. – **Hindu Mythology, Vedic and Puranic,** Rupa & Co., Calcutta, 1973.

– **Modern Hinduism,** Kanpur, 1975.

Wilson, H.H. – **Religions of the Hindus,** Asian Pub., New Delhi, 1976.

– Descriptive Catalogue of the Mackenzie Collections, 1982.

Yazdani, G. – ed., **The Early History of the Deccan,** Oxford University Press, London, 1960, I – XI.

Yusuf Hussain – **Indo – Muslim Polity (Turko Afghan Period),** Simla, 1971.


## தமிழ் நூல்கள்


அருணாச்சலக் கவிராயர் – *இராமநாடகக் கீர்த்தனை, சென்னை ஆண்டு இல்லை.*

அருணாச்சலக் கவிராயர், எம்.ஆர்., – *சேதுபர்வதவர்த்தினி பிள்ளைத்தமிழ், மதுரை, 1906.*

ஆறுமுகவாத்யாயர் – *பதி.மகாலிங்கம் பிள்ளை, ஸ்ரீ இராமேஸ்வரம் என்னும் சேது ஸ்தல புராண வசன காவியம், சென்னை, 1934.*

பாலசுப்பிரமணியன் எஸ்.ஆர். – *முற்காலச்சோழர் கலையும் கட்டடக்கலையும், தமிழ் பியூரோபதி., சென்னை, 1966.*

பாலசுப்பிரமணிய ஐயர் – *இராமநாதமாலை, இராமநாத மகிமை, இரமேசுவர மான்மியம்.*

தண்டபாணி தேசிகர், எஸ். – *இராமேசுவர யாத்திரை, தருமபுர ஆதீனம், தருமபுரம், 1952.*

மகாலிங்கதம்பிரான் சுவாமிகள்– *இராமேசுவரம், திருப்பனந்தாள் மடம், திருப்பனந்தாள், 1959.*

நாகலிங்கம் பிள்ளை – *பதி. இராமேசுவரமென்னும் சேது ஸ்தல புராண வசன காவியம், மதுரை, 1926.*

பக்தல நரசிம்மலு நாயிடு – *தட்சிண இந்திய சரித்திரம், சென்னை, 1919, 2 தொகுதிகள்.*

பழனி கோயில் தேவஸ்தானம் – *தென்னாட்டுக் கோயில்கள், பழனி, 1943.*

பிள்ளை, கே.கே. – *சோழர் வரலாறு, தமிழ்நாட்டுப் பாட நூல் நிறுவனம், சென்னை, 1979.*

பூர்ணலிங்கம் பிள்ளை – *தமிழ்நாடு, திருநெல்வேலி, 1945.*

ராதாகிருஷ்ணன், கே.என். – *திருமாலிருஞ்சோலை மாலை ( அழகர் கோயில் ஸ்தல புராணம்), மதுரை, 1942.*

இராகவய்யங்கார், எம். – *ஆராய்ச்சித் தொகுதி, சென்னை, 1938.*

இராஜகோபாலாச்சாரி, கே. – *பதி.வில்லிபாரதம், சென்னை, 1970, பகுதி 1.*

இராமன், கே.வி. – *பாண்டியர் வரலாறு, தமிழ்நாட்டுப் பாடநூல் நிறுவனம், சென்னை, 1977.*

இராமசாமி, எம்.ஏ. – *தமிழ்நாட்டு செப்புத் திருமேனிகள், தமிழ்நாடு அரசு, தொல்லியல் துறை, சென்னை, 1976.*

சம்பந்தம், பி. – *இந்தியாவிலும் அதற்கப்பாலும் உள்ள சிவாலயங்கள், பகுதி V அருட்பெருஞ்சோதி அச்சகம், சென்னை, 1948.*

செங்கல்வராய பிள்ளை. வி.எஸ். – *தேவார ஒளிநெறி, கழகம், 1963.*

சேதுராமன், ஜி (கு). – *தமிழ்நாட்டு சமுதாயப் பண்பாட்டுக் கலைவரலாறு ,ஜே.ஜே.பப்ளிகேஷன்ஸ், மதுரை, 1997.*

சோமலே – *தமிழ்நாட்டு மக்களின் மரபும் பண்பாடும், டெல்லி, 1974.*

*இராமநாதபுரம் மாவட்டம், சென்னை, 1972.*

*பதி.இராமேசுவரம் கோயில் கும்பாபிஷேக மலர்,* (Saga of

Rameswaram temple), *இராமேசுவரம், 1975.*

சுப்பிரமணிய பிள்ளை, தி. – *சிவஸ்தல மஞ்சரி, மொகந்து அச்சகம், சென்னை, 1931.*

சுப்பிரமணிய பிள்ளை, கே. – *பதி.தனிப்பாடல் திரட்டு, இரத்தினநாயகர் சன்ஸ், சென்னை, 1939.*

சுப்பிரமணிய சாஸ்திரி, கே.எம்.– *மொ.பெ. அகோர சிவாச்சாரியாரின் பரார்த்த நித்திய பூஜைவிதி, தேவகோட்டை, 1930.*

*மொ.பெ. அப்பைய தீட்சதரின் சிவார்ச்சனை சந்திரிகா, தேவகோட்டை, 1927.*

சுவாமிநாத சாஸ்திரி என். – *மொ.பெ. சேதுமகாத்மியம், சென்னை, 1901.*

சாமிநாதய்யர், உ.வே. – *பெரும்பற்றப்புலியூர் நம்பியின் திருவிளையாடற்புராணம், சென்னை, 1927.*

சுவாமிநாதசிவாச்சாரியார் – *பதி.நித்தியபூஜை லச்சன சங்கரஹம், தருமபுர ஆதீனம், 1951.*

திருநாவுக்கரசு, க.த. – *இலங்கையில் தமிழ்ப்பண்பாடு, சென்னை 1978.*

வேங்கடசாமி, மயிலை, சீனி – *தமிழர் வளர்த்த அழகுக் கலைகள், பாரிநிலையம், சென்னை, 1969.*

வெங்கட்ராமன், ஆர். – *இந்திய கோயில் கட்டடக்கலை வரலாறு, என்.எஸ். பப்ளிகேஷன்ஸ், மதுரை, 1985.*

## மாவட்டக் கையேடுகளும் ஆட்தொகைக் கணக்கறிக்கையும்

**Baliga, B.S. and Ramasamy A.** – **Madras District Gazetteers**, Madras, 1960 - 72.

**Nagam Aiya, V.** – **Travancore State Manual**, Trivandrum, 1906.

**Nambiyar, P.K.** – **Census of India**, 1961, IX, pt. XI – D Madras, 1969.

**Nelson, J.H.** – **Madura District Manual**, Madras, 1868, 5 pts.

Pharoach & Co – **A Gazetteer of Southern India**, Madras, 1975.

RajaRam Rao, T. – **Ramnad Manual**, Madras, 1933.

Ramasamy, A. – **Ramanathapuram District Gazetteer**, Madras, 1972.

Velupillai, T.K. – **The Travancore State Manual**, Trivandrum, 1940, 4 Vols.

Venkatrama Ayyar, K.A. – A Manual of the Pudukkottai State I (1938) II Pt.I (1940) & II (1944)


## ஆய்வுக் கட்டுரைகள், ஆய்வேடுகள், செய்தித்தாள்கள்


Seshadri, K. – Setupatis of Ramnad (unpublished Ph.D. Thesis, Madurai Kamaraj University)

Harle, James, C. – **The Early Chola temple at Pullamangai** in ORIENTAL ART.

Raman, K.V. – **Architecture in Vijayanagar** – Nayak Period – in South Indian Studies, 1990.

Sethuraman G. and Kannan, S. – **Two Chola temples in Pandya Country,** in PANCHALA, 1996.

Sethuraman, G. – **Religious Harmony as reflected in Indian Sculpture** in UNITE, Vol 4. Nos 1 & 2 1995.

Sivaramamurti, C. – **Geographical and Chronological factors in Indian Iconography,** in ANCIENT INDIA, No. 6.

Soundararajan, K.V. – **Tamil Temple Architecture and Art, in MARG** (Splendours of Tamilnadu)

Proceedings of the South Indian History Congress, Madurai, 1980 - 83.

"Sentamil Selvi" Relevant Volumes.

The Hindu Daily

The Madura Mail Weekly.

Tirukkedichuram Tirukkudaththiruman jnanamalai, Tirukkedichuram, 1976.

Journal of the Andhra Historical Research Society, 1975 - 76, XXXV.

Asiatic Researches, Calcutta, 1799, VI.

Kalaikkalanjiam, Tamil Valarchikkalaham, Madras, 1955, II.

Tamil Lexicon, Tamil Valarchikkalaham, Madras, 1954 - 63, 9 Vols.

Quarterly Journal of Mythic Society, II.

# கலைச்சொல் விளக்கம்

***அபயஹஸ்தம்*** – அபயம் அளிக்கும் முத்திரை.

***அதிட்டானம்*** – விமானம், மண்டபம், கோபுரம் போன்றவற்றின் அடித்தளம்.

***அலிதாசனம்*** – போர்வீரன் அம்பு எய்யும்போது ஒருகாலைச் சற்று மடித்துத் தூக்கி வைத்திருக்கும் நிலை. இது திரிபுராந்தகருக்கு உகந்த ஆசனம்.

***அஞ்சலிஹஸ்தம்*** – இருகை கூப்பி வணங்கும் முத்திரை.

***அபஸ்மாரன்*** – மாயையைக் குறிக்கும் பூதகணம். முயலகன் என்பர்.

***ஆரம்*** – கழுத்தணி (ஹாரம்)

***பாதம் அல்லது பித்தி*** – விமானத்தில் அதிட்டானத்திற்கு மேலுள்ள சுவர்ப்பகுதி.

***பிரம்மகாண்டம்*** – சதுரக் கம்புடைய தூண்.

***சன்னவீரம்*** – போர்வீரனைப் போன்று தோள்பட்டையின் இரு பக்கங்களிலும் போடப்படும் அணிகலன். இவை மார்பின் மத்தியில் சந்திக்கும்.

***சின்முத்திரை, ஞான முத்திரை*** – வியாக்கியானம் அல்லது விளக்கமளிக்கும் முத்திரை (தட்சிணாமூர்த்திக்குரியது).

***தேவகோஷ்டம்*** – சுவரின் மத்தியில் இறையுருவம் வைப்பதற்காக அமைக்கப்படும் மாடம்.

***எழுதகம்*** – சுவருக்கு மேல் கபோததத்திற்குக் கீழுள்ள உத்திரம்.

***கஜஹஸ்தம், தண்டஹஸ்தம்*** – யானையின் துதிக்கை போன்று கையைத் தொங்க விடும் முத்திரை.

***கண்டம்*** – அதிட்டானத்தில் குமுதம் மற்றும் பட்டிகைக்கு இடைப்பட்ட கழுத்து போன்ற பகுதி.

***கலபாதம்*** – கண்டத்தில் உள்ள சிற்றுரு சிற்பத் தொகுதிகள்.

***கருடஹஸ்தம்*** – பருந்தைக் குறிப்பது போன்று கைச் சைகை செய்வது.

***கிரீவம்*** – விமானத்தின் கழுத்துப் பகுதி. இதற்கு மேல் சிகரமும், ஸ்தூபியும் அமையும்.

***ஹாரம்*** – விமானத்தின் ஒவ்வொரு தளத்தின் மேலே, உள்ள சிற்றாலயம் போன்ற அமைப்பு வரிசை. இதில் கூடு, சாலை, பஞ்சரம் ஆகியன இடம்பெறும்.

***ஜகதி*** – அதிட்டானத்தின் அடிப்பாகம்.

***சடைபாரம்*** – சடையைக் கட்டு போன்று முடிவது.

***சடைமகுடம்*** – சடைமுடி மகுடம் போன்று அமைந்திருப்பது.

***ஜீவாலாகேசம்*** – முடியானது தீப்பிளம்பு போன்று அமைந்திருப்பது.

***கமண்டலம்*** – அமிர்தகலசம்.

**கண்ணாடிக் கட்டம்** — விமானத்தின் சிகரத்தின் மீதுள்ள அலங்கார வேலைப்பாடு.

**கம்பம் அல்லது ஸ்தம்பம்** — தூண் அல்லது அரைத்தூண்.

**கபோதம்** — உத்திரத்தின் மேல் மழைநீர் வடிவதற்காக நீட்டிக் கொண்டிருக்கும் கூரைப்பகுதி.

**கரண்டமகுடம்** — தாய்த்தெய்வங்களுக்கும், சிறு தெய்வங்களுக்கும் பயன்படுத்தப்படும் சிறு மகுடம்.

**கர்ணக்கூடு** — விமானத்தின் ஒவ்வொரு தளத்திலும் நான்கு மூலைகளில் வைக்கப் பெறும் சிறுகோயில் போன்ற அமைப்பு.

**கடகஹஸ்தம்** — மலர் அல்லது திரிசூலம் தாங்கும் விரலமைப்பு.

**கடிசூத்திரம்** — அரைக்கச்சைய·

**கேயூரம்** — மேற்கையில் அணியும் ஆபரணம்.

**கொடிக்கருக்கு** — செடிகொடிகள் போன்ற அலங்கார அமைப்பு.

**கூடு** — குதிரை லாயம் போன்ற சிறிய மாட அமைப்பு.

**கும்ப பஞ்சரம்** — கலசத்தின் மீது அமைக்கப்படும் சிறு கோயில் போன்ற (பஞ்சரம்) அமைப்பு.

**குமுதம்** — அதிட்டானத்தின் பூ வேலைப்பாடு கொண்ட பகுதி. இது வட்டமாக இருப்பின் விருத்தக் குமுதம் எனவும், பட்டையாக இருப்பின் முப்பட்டைக் குமுதம் எனவும் அழைக்கப்படும்.

**லலாத பிம்பம்** — நெற்றிச்சுட்டி (ஆபரணங்களால் அலங்கரிக்கப்பட்ட நெத்திப் பட்டை) — நுழைவாயிலின் அல்லது கதவு உத்திரத்தின் முன்பக்கத்தில் அமையும் அலங்கார உருவம்.

**மாலஸ்தானம், கலசம், தாடி, குடம், பத்மம், பலகை** — இவை அரைத்தூணின் கம்புக்கு மேல் செங்குத்தாக (ஒன்றன் மேல் ஒன்றாக) அமைக்கப்படும் பாகங்களாகும்.

**மோதகம்** — கணபதியின் கையிலிருக்கும் ஒருவகை இனிப்புப் பண்டம்.

**நாகபந்தம்** — தூணின் அடித்தளத்திற்கு மேல் நாற்புறமும் வைக்கப்பெறும் நாகத்தலை போன்ற அமைப்பு.

**நாசி** — நீட்டிக் கொண்டிருக்கும் வளைந்த திறப்பு.

**நாடகச் சட்டம்** — விஜயநகர — நாயக்கர் மண்டபங்களில் தூணின் மேற்பகுதியில் கூரைக்குக் கீழ் அமைந்துள்ள செங்குத்துச் சட்டங்கள்.

**நிரந்தர விமானம்** — கருவறையைச் சுற்றி ஒரே ஒரு சுவர் அமைக்கப்படுகின்ற பொதுவான முறை.

**பாதபந்தம்** — அதிட்டானத்தின் ஒருவகை. எளிமையான இவ்வமைப்பு உபானம், ஜகதி, குமுதம், கண்டம், பட்டி என்னும் செங்குத்துப் பாகங்களைக் கொண்டிருக்கும்.

**பத்மபந்தம்** — அகலமான தலைப்புப்பட்டை. தூணின் உச்சிப் பகுதியிலும், அதிட்டானத்திலும் அமைவது. தாமரை இதழ்களின் வரிசைக்கு இடையில் அலங்காரமான பட்டைபோல் இருக்கும்.

**பத்ரகுண்டலம்** — காதணி. இலைச்சுருள் போன்றமைப்பு.

**போதிகை** — தூண் மற்றும் அரைத்தூண்களின் மேற்பாகம். நாயக்கர் காலத்தில் வாழைப்பூ போன்று அமைந்திருக்கும்.

**பிரஸ்தரம்** — விமானத்தின் சுவர்ப்பகுதிக்கும் கண்டத்திற்கும் இடைப்பட்ட பகுதி.

**சாலை** — வண்டிக்கூடு போன்ற கூரையமைப்பு.

**சாலைசிகரம்** — எண் பட்டை வடிவ வண்டிக்கூடு போன்ற கூரை.

**சிகரம்** — கிரீவத்தின் மேலுள்ள விமானத்தின் கூரைப்பகுதி.

**சம்ஹாரம்** — வதம் செய்தல்.

**சமபங்கம்** — நேராக நிற்றல்.

**சதுர தாண்டவம்** — நாட்டியத்தின்போது கால்கள் சதுரவடிவில் அமைந்திருக்கும் பாணி.

**சாந்தாரவிமானம்** — கருவறையைச் சுற்றி, திருச்சுற்றுப்பாதையுடன் கூடிய இரண்டு சுவர்கள் அமைக்கப்பட்டிருக்கும் விமானம்.

**சிம்மநாசி** — சிங்கத்தின் தலையை உச்சியில் கொண்டுள்ள நாசி (பலகணி).

**சிம்மகர்ண முத்திரை** — சிங்கத்தின் காதினைப் போன்ற கைவிரல் முத்திரை.

**சுசி முத்திரை** — ஆள்காட்டி விரலால் சுட்டுதல்.

**தோரணம்** — மாடம் அல்லது தேவகோஷ்டத்தின் மேல் அமையும் அலங்காரப்புனைவு.

**உதரபந்தம்** — வயிற்றைச் சுற்றி அமையும் ஆபரணம்.

**உபானம்** — அதிட்டானத்தில் ஜகதிக்குக் கீழுள்ள பாகம்.

**உபபீடம்** — அதிட்டானத்திற்குக் கீழுள்ள உப அடித்தளம்.

**ஊர்த்துவபத்மம்** — மேல்நோக்கி விரிந்துள்ள தாமரை இதழ் வரிசை.

**ஊர்த்துவ தாண்டவம்** — சிவபெருமானின் நடன வகைகளில் ஒன்று இதில் ஒரு காலை காதுவரை அல்லது நெற்றி வரை தூக்கியாடுவார்.

**வாஜனம்** — உத்திரத்திற்கு மேலுள்ள பகுதி. பூதவரி.

**வரதம்** — வரம் அளிக்கும் முத்திரை.

**வரி அல்லது வேதி** — அதிட்டானத்தின் உச்சிப்பாகம்.

**வீரகண்டம்** — தூண் மற்றும் அரைத்தூண்களில் பலகைக்கு மேல் அமைந்துள்ள எளிமையான பகுதி.

**வீராசனம்** — தட்சிணாமூர்த்தி அமர்ந்துள்ள ஆசன முறை. இதில் ஒரு கால் தரையில் ஊன்றியும், மற்றொரு கால் மடக்கி முந்திய காலின் முட்டியின் மீது வைக்கப்படுவதும் ஆகும்.

**விஸ்மயமுத்திரை** — ஆச்சரியத்தைக் குறிக்கும் முத்திரை.

**யக்ஞோபவிதம்** — பூணூல்.

**யாளிவரி** — அதிட்டானத்திலும், பிரஸ்தரத்தின் மேற்பரப்பிலும் அமையும் மிருக வரிமானம்.